
குமுதம்
8.9.94
112 பக்கங்கள்
ரூ.2.25
இரண்டு ரூபாய்
இருபத்தைந்து காசு
எம்.ஜி.ஆர்.
எழுதிய
கடிதம்!

## ங்கூ...ங்கூ...கா...கா...
## என்னும் மழலை
## விரைவிலேயே அ ஆ இ
## என்று கூறிடும் வழி.



உங்கள் சின்னஞ்சிறுசு. நாட்கள் போனதே தெரியாது, உரக்க கூச்சலிட்டுக் குப்புத்துக்-கொண்ட குழந்தை, களகளவென சிரித்து தத்தித்தத்தி நடக்கத் துவங்கும். சீக்கிரமே, அவன் உங்களிடம் அது என்ன... இது என்ன என்று ஆயிரம் கேட்கத் துவங்குவான். ஆகாயம் ஏன் நீலமாயிருக்கிறது ? வான வில் எப்படி வருது ? அந்த மாமாவுக்கு மீசை எங்கிருந்து வந்தது ?

அவனுடைய அறிவுப் பசிக்கு அளியுங்கள் அன்றாடம் ஒரு முட்டை. ஏனெனில் முட்டையில் உன்னத தரமுள்ள புரதமும் ஃபாஸ்பரஸும் அடங்கியுள்ளன : சுறுசுறுப்பான மூளை வளர்ச்சிக்குத் தேவையானவை இவைகள்தான்.



முட்டை ஊட்: இலவச ஊட்டச்சத்து வழிகாட்டி மற்றும் 30-க்கும் மேலான முட்டை சமையல் குறிப்புகள் அடங்கிய சிறு புத்தகத்திற்கும் எழுதவும்: NECC, அஞ்சல் பை எண் 833, புனே-411-004.

அவனுக்கு இன்னும் ஏராளமானவற்றை அளிக்கவல்லது முட்டை. ஆரோக்கியமான சருமத்திற்கும் நல்ல கண் பார்வைக்கும் வைட்டமின் 'A' செறிந்துள்ளது. நல்ல ஜீரண சக்தியையும் நிலையான நரம்புகளையும் பெற்றிட உதவும் வைட்டமின் 'B' சத்துகளின் அனைத்து வகைகளும் உள்ளன. வலுவான எலும்புகளைப் பெற வைட்டமின் 'D' அடங்கியுள்ளது. அதோடுமட்டுமா, நல்ல ஆரோக்கியமான இரத்தத்திற்கு அத்தியா-வசியமான இரும்புச்சத்து மிகுந்துள்ளது.

ஆகவே உடைத்திடுவீர் அன்றாடம் தவறாமல் ஒரு முட்டை.

அதனால் உருவாகும் குழந்தையின் திண்மையான உடல் வளர்ச்சி.

## நித்தம் ஒரு முட்டை.

NEC

நேவ
கோ-ஆர்டி

# மைவிழி மயக்கம்

மைவிழி மயக்கம்
மைவிழி மயக்கம்
மைவிழி மயக்கம்
மைவிழி மயக்கம்

## 1

அடர்ந்து நீண்ட கூந்தல் ஜெயவாணிக்கு. அதைப் படிய வாரி, ஓர் இழை கூடப் பிரியாமல் இறுகக் கட்டி, கொண்டையிடுவது எந்நாளுமே அவளுக்கு ஒரு போராட்டம்தான். மனதுக்குப் பிடித்தமான வேலை என்றால் வேலையின் சிரமம் கூட அவ்வளவாகத் தெரிவது இல்லை. ஆனால் அழகிய கூந்தலை அழுத்தமாகக் கட்டி, அவள் முகத்துக்கு ஐந்து வயதைக் கூட்டும் இந்த வேலை அவளுக்குப் பிடிக்காதது என்பதால் என்றைக்குமே இந்தக் கொண்டை விவகாரம் அவளுக்குக் கஷ்டமான காரியம்தான்.

முடிந்த அளவு கண்ணாடியைப் பாராமலே கொண்டையிட்டு முடித்தபோது அவளுடைய தங்கை சுபா வேறு வந்து சேர்ந்தாள். சுபவாணி. ப்ளஸ் டூ. அடுத்த ஆண்டு கல்லூரிக்குள் நுழையும் தகுதிக்காக உழைத்துப் படித்துக் கொண்டிருந்தவள். கல்லூரிப் பட்டாம்பூச்சியாக இப்போதே தன்னை எண்ணத் தொடங்கியிருப்பவள்.

கொண்டையிட்டு முடித்து, அது அலுங்கி விடாமல் இருப்பதற்காகக் கொண்டை ஊசிகளைச் சொருகிக் கொண்டு இருந்த தமக்கையைப் பார்த்து முகத்தைச் சுளித்தாள். ''என்னக்கா, தினமும் இப்

ரமணிசந்திரன்

படி ஒரு கோரம்... கொஞ்சம் நீளத்தை வெட்டி, 'டாப்கி டெயில்' போட்டால் 'மிஸ் மெட்ராஸ்' ஆகி விடுவாய். வலைப்பின்னல், சாதாப் பின்னல்... ஏன், அப்படியே விட்டுப் பாதியில் ஒரு 'ரப்பர்பான்ட்' போட்டால்கூட எவ்வளவோ அழகாக இருக்கும். ஏன்தான் இப்படிக் கொடுக்கிறாயோ?'' என்றாள் குறையோடு.

பெருமூச்சை அடக்கிக் கொண்டு, ''எங்கள் அலுவலகத்தில் 'மிஸ் மெட்ராஸ்' போட்டி நடத்துவதில்லை தெரியுமோ?'' என்று தங்கையிடம் லேசாக முறுவலித்தாள். ''குரைத்தாக வேண்டிய கட்டாயம் இருக்கும்போது நாய் வேடமும் போட்டுத்தான் ஆகவேண்டும்.''

''ஆங்... அதெல்லாம் சும்மா. ஆஃபீஸ் போகிற எல்லாருமே உன்னைப் போலப் பழையகால மடிசஞ்சியாகவா வேலைக்குப் போகிறார்கள். ஆனாலும் நீ செய்வது அநியாய அதிகப்படியாக்கும்,'' என்று உதட்டைக் குவித்தாள் தங்கை.

ஒருகணம், அப்படித்தானோ என்று ஜெயவாணியின் மனம் மயங்கியது. ஆனால் இதற்குமுன், மூன்று இடங்களில் சூடுபட்ட ஞாபகம் சுலபத்தில் மறப்பதாக இல்லையே!, இந்த நாலாவது இடத்தில் மட்டும் என்ன வித்தியாசம் வந்துவிடப் போகிறது?

அதிலும் இப்போது இவளுக்கு நேர் மேல் அதிகாரி ஓர் இளைஞன்.





## நியூஸ்பேப்பரும் ஈஸிசேரும் போதும் அவருக்கு, ஞாயித்துக்கிழமை வேற எதுவும் வேணாம்னு சொல்றீங்களா?

டிடிகே வெர்மிஸிலி

**விண்டர் வீட் புரியும் அற்புதம்**

நியூஸ்பேப்பர்ல வர பரபரப்பான செய்திகளை விட நீங்க செய்யப்போற சண்டே ஸ்பெஷல் சிற்றுண்டிலதான் அவருக்கு கூடுதல் இண்டரஸ்ட் தெரியுமா?

ஆமா, சண்டே ஒரு நாள் தானே புது தினுசு செய்ய உங்களுக்கும், ருசிச்சு சாப்பிட அவருக்கும் நேரம் கெடைக்குது !

உங்க சண்டே ஸ்பெஷலுக்காகவே டிடிகே கம்பெனி அறிமுகப்படுத்தறதுதான் டிடிகே வெர்மிஸிலி. "விண்டர் வீட்" - ல தயாரிச்ச ஸ்பெஷல் சேமியா இது.

"விண்டர் வீட்" பத்தி சின்ன விளக்கம் - வட இந்தியாவுல குளிர்காலத்துல விளையற செழுமையான கோதுமை இது. இந்த விண்டர் வீட்-ல தான் டிடிகே வெர்மிஸிலியோட மாஜிக்கே இருக்குது. இதுல தயாரிக்கற உணவுல இருக்கற அமோக ருசி ... அப்பப்பா .... அனுபவிச்சாதான் தெரியும் !

அப்புறம் என்ன? உடனே டிடிகே வெர்மிஸிலி வாங்கி உங்க கைவரிசையைக் காட்ட வேண்டியதுதானே! அந்த கைமணத்துல மயங்கி நியூஸ்பேப்பரையே மறந்துடுவார், பாத்துகிட்டே இருங்க ! இனிமே சண்டே எல்லாம் நியூஸ்பேப்பர், ஈஸிசேர் இருக்காது, டிடிகே வெர்மிஸிலி சண்டே ஆயிடும் !!

TTK Vermicelli

டிடிகே வெர்மிஸிலி – "சண்டே ஸ்பெஷல்" அனுபவம்.

வரம்பற்ற அதிகாரம் உடைய எம்.டி. இவனுக்குப் போய்க் கண்ணுக்குக் குளிர்ச்சியாய்க் காட்சி அளித்தால் தேளிடம் விரலை நீட்டுவது போலத் தான். வேறு வினையே வேண்டாம்.

எண்ணும்போதே அவளுக்கு உள்ளூர இடித்தது. தினகரன் அப் படிப்பட்டவன் இல்லையே!

அதிலும், இப்போதெல்லாம் அவள் அழகு ரதியாகவே காட்சி யளித்தாலும் கூட அவன் நின்று திரும்பிப் பார்ப்பது அதிசயம்தான். சட்டென்று எரிச்சல் மூள, ''என்ன சுபா, உனக்கு ஸ்கூலுக்கு நேரமாக வில்லை? ஆயிரம் வேலை. அதை விட்டுச் சும்மா என்னிடம் வந்து வம்பளந்து கொண்டு நிற்கிறாயே. நீ ரெடியாகிவிட்டால், அப்பாவின் காப்பியையேனும் சூடு பண்ணி ஃப்ளாஸ்கில் ஊற்றி வைக்கலாமில் லையா? போ, போய் அதைச் செய்,'' என்று தங்கையை விரட்டினாள்.

புருவ மத்திக்குச் சற்று உயரத் திலேயே வட்டமான ஸ்டிக்கர் பொட்டை அழுத்தினாள். ''ஓடும்மா. சீக்கிரம் செய். இந்தக் கொண்டைச் சனியனால் எனக்கும் நேரமாகி விட்டது.''

கழுத்திலிருந்து இடை வரை மூடிய பிளவுஸ், கைத்தறிச் சேலை, முகத்தில் பாதியை மறைத்த 'ப்ளே யின் கிளாஸ்', சுபவாணி அவ்வப் போது கேலியாய்க் குறிப்பிடுகிற 'சாமியாரிணி' அவுட்பிட் அணிந்து கண்ணாடியில் பார்க்கும்போது கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந் தது. ஆனால் இந்த மூன்று ஆண்டு களாக அவளை யாரும் சினிமா வுக்கோ, ஓட்டலுக்கோ, மாமல்ல புரத்துக்கோ அழைக்கவில்லையே. அது பெரிய நிம்மதியில்லையா? அதற்குக் கொடுத்து வரும் சிறிய விலை!

புன்னகையுடனேயே தந்தை யிடம் சொல்லிக் கொண்டு கிளம்பி னாள்.

அனுப்புவோர் முகவரியைப் பார்த்து, அன்றையத் தபாலை, ரகம் வாரியாகப் பிரித்து வைத்துக் கொண்டு இருந்தவளுக்கு, அந்த உயர் ரக 'க்ரீம்' கலர் உறையைப் பார்த்ததுமே புரிந்து போயிற்று.

இது மூன்றாவது.

கொல்லன் பட்டறையில் ஈ மாதிரி, இந்த போல்ட், நட் தயா ரிக்கும் நிறுவனத்துக்கும் நகைக் கடை பில்— அது பில்லாகத்தான் இருக்கும் என்பது முன் அனுபவத் தினால் வந்த அனுமானம்— வர அவசியம் கிடையாது என்பது வாணி யின் எண்ணம். ஆனால் அவளுக்குச் சம்பளம் கொடுக்கிறவன் நினைப்பு வேறு மாதிரி இருக்கிறதே!

தபாலைப் பிரித்தானதும் அடுத்த வேலை தொடங்கினாள்.

உறைகளைச் சீராக வெட்டி, உள்ளிருந்தவற்றில், அவளாக 'டீல்' பண்ணக் கூடியவை தவிர, மற்றவை களைத் தினகரனின் பார்வைக்கு வரிசைப்படுத்தி வைப்பது.

அந்த 'க்ரீம்' கலர் உறையைப் பிரிக்காமலே வைத்துவிடத்தான் அவளுக்கு ஆசை. ஆனால் முந்திய தடவை அதுபோல வைத்துவிட்டு, ''இந்தக் கவர் பிரிக்கிற வேலையெல் லாம் நானே செய்வது என்றால், எனக்கு ஒரு செகரட்டரி அவசியமே இல்லையே!'' என்று ஒரு குட்டு வாங்கினாள்.

பொதுவாகத் தினகரன் மோச மான முதலாளி இல்லை என்



றாலும், கொஞ்சகாலமாக– மூன்று மாதங்களாக அவ்வப்போது இந்த மாதிரிச் சிடுசிடுப்பை வாணி தாங்கிக் கொள்ள வேண்டியிருந்தது.

அனாவசியமாய் வாங்கிக் கட்டிக் கொள்ள மனமற்று, க்ரீம் உறையிலிருந்த காகிதத்தை எடுத்துப் பிரித்தவளுக்கு ஒரு வேகமான மூச்சு உள்ளிருப்பை அடக்க முடியவில்லை.

இருபதாயிரம் ஐம்பதாயிரம் ஆகி, இப்போது ஒன்றரை லட்சமாக உயர்ந்து விட்டிருந்தது. விலைவாசி உயர்வா என்று கிண்டலாக எண்ணி விட்டு நாக்கைக் கடித்துக் கொண்டாள் அவள். ஒன்றரை லட்சமா, ஒன்றரைக் கோடியா? அது அவன் பணம். அவன் கொடுக்கிறான். கொடுத்து வைத்தவள். வாங்கிக் கொள்கிறாள்.

இடையிலே எரிச்சல் பட இவள் யார்?

அவனது நேரடிப் பார்வைக் கானவற்றை அடுக்கி வைத்துவிட்டு, அவளாகக் கவனிக்க வேண்டியவைகளுக்கான பதில்களை டைப் ரைட்டரில் வேகமாகத் தட்டத் தொடங்கினாள் ஜெயவாணி.

சற்று நேரத்தில் பழக்கப்பட்டு விட்ட சத்தம்– கதவில் ஒரு சின்னத் தட்டு கேட்டது.

அந்தத் தட்டல் அவளுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று. சாத்திய கதவின் பின்னே இருப்பவர், எந்த நிலையிலும் இருக்கலாம்.

> *இரகசியமாக வைத்துக் கொள்கிறேன் என்று மற்றவர்களிடம் உறுதி அளித்தவர்களிடமிருந்து நான் வழக்கமாகச் செய்திகளைச் சேகரிக்கிறேன்.*
>
> *–வால்டர் வின்செல்*

ஆடை நெகிழ்ந்தோ, அலட்சியமாகவோ, அலங்கோலமாகவோ, தனியேதானே இருக்கிறோம் என்று எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். என் நிறுவனம். என் விருப்பம் போல எப்போது வேண்டுமானாலும் எங்கே வேண்டுமானாலும் வருவேன் என்று இல்லாமல் கதவைத் தட்டி, நியதி எடுத்துக் கொள்ள ஒரு சிறு அவகாசம் கொடுத்து, அதன் பின்னரே உள்ளே வரும் தினகரனின் பண்பு அவளுக்கு மிகவும் பிடித்தமானது.

உள்ளே வந்ததும், சிறு முறுவலுடன் 'குட்மார்னிங்' சொல்வதும் கூடத்தான்.

எதிரொலியாய் அவள் முகத்தில் மலரும் புன்னகையையும், குட்மார்னிங்கையும் ஒரு தலையசைவால் ஏற்றபடி, தன் பகுதிக்குள் சென்று அமர்வான்.

அன்றைய வேலை தொடங்கும்.

அன்றும் அதுபோலத் தினகரன் அவனது இருக்கையில் அமர்ந்ததும், அவன் பார்வைக்கானவற்றை, அவன் முன் வைத்துவிட்டு, எதிர்ப்புறமிருந்த இருக்கையில் அமர்ந்து, நோட் பேடையும் பென்சில்களையும் தயாராக எடுத்து வைத்தாள்.

அவன் பார்வை கூர்மையுடன் ஒருகணம் அவள் முகத்தில் படிந்து மீண்டது.

தன் வழக்கமான வேகத்துடன், முன்னிருந்த காகிதங்களைப் பார்வையிட்டபடி, டிக்டேஷனைத் தொடங்கினான்.

கடிதங்களையும், குறிப்பு

---

''என்ன இது? பிராலே அங்கங்கே வட்டமாக் கறுப்புப் புள்ளி?''

''லேட்டஸ்ட் டிசைனுங்க. ஆம்பளைங்க கண்பட்டுத் திருஷ்டி பட்டுடக்கூடாதுன்னுதான்.''

– எஸ்.எஸ். சாதிக் அஹ்மத்

களையும் திரட்டிக் கொண்டு அவள் கிளம்புகையில், ''மிஸஸ் வேதா விடம் ஒரு விஷயம் கற்றுக்கொள்ளா மல் விட்டுவிட்டாய், ஜெயவாணி,'' என்றான் தினகரன்.

''எ..., என்ன சார்?''

''முகபாவனையைக் கட்டுப் படுத்துவது. ஒருவேளை உன் கண் ணாடி அதை மறைத்துவிடும் என்று நீ நினைத்திருக்கலாம். ஆனால் 'ப்ளெயின் கிளாஸ்' மாதிரி அது எல்லாவற்றையும் காட்டி விடுகிறது.''

உதட்டைக் கடித்துக் கொண்டு அவள் பேசாமல் நிற்கவும், தின கரன், நகைக்கடை பில்லை அவள் புறம் நகர்த்தினான். ''இதற்கு என் சொந்தக் கணக்கு செக்கில் வேண்டி யது நிரப்பிக் கையெழுத்துக்குக் கொண்டு வா. என் பணத்தை நான் எப்படிச் செலவிடுகிறேன் என்பதைப் பற்றி விமரிசனம் பண்ண யாருக்கும் உரிமை கிடையாது என்பது நினை விருக்கட்டும்.''

ஒன்றும் இல்லாதது போல நடிப்பது முடியாத காரியம். அத் தோடு அவன் சொல்வதும் சரிதானே.

சிறு தயக்கத்தின் பின், ''சாரி சார்,'' என்று, நகைக்கடை பில்லை எடுக்கக் கையை நீட்டினாள் அவள்.

''பெரிதாக எதையும் மனதில் வைத்துக் கொள்ள வேண்டாம். உன் வயதுக்கு இந்த வேலையைச் சிறப் பாகவே செய்கிறாய். ஆனால் உன் எல்லை தெரியவில்லை. அவ்வளவே. பழகப்பழக அதுவும் சரியாகிவிடும்,'' என்று தட்டிக் கொடுத்தே அனுப்பி னான்.

அவளுக்கான பகுதிக்குள் சென்று கதவைச் சாத்துகையில் தின கரன் டெலிஃபோனில் பேசுவது கேட்டது. ''...இல்லை, டார்லிங்... இன்று...''

கதவைச் சாத்திவிட்டுத் திரும் பியவளுக்கு நெஞ்சு ஏனோ படபட வென்று அடித்துக் கொண்டது. யார் அந்த 'டார்லிங்'?



இனிமேல் ஜாலிதான். லீவு வி டாச்சு. குஷியாய் விளையாடலாம் ஊருக்குப் போகலாம்.

அந்தக் கேள்வி தோன்றிய துமே தலையில் ஓங்கி ஒருதரம் குட்டிக் கொண்டாள் ஜெயவாணி. இப்போதுதானே 'எல்லை' தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவ னிடம் 'நொட்'டென்று ஒரு குட்டு வாங்கியிருக்கிறாள். அதற்குள் மறந் தால் எப்படி?

வழக்கம் போல தினகரனின் பேச்சை மீண்டும் அசை போடுகை யில், வயதையும் வேலையையும் குறிப்பிட்டு அவன் பேசியதை எண் ணிப் பார்த்தாள்.

அவளது இருபத்து மூன்று வயதுக்கு மானேஜிங் டைரக்ட ருடைய காரியதரிசி– அதுவும் இந்த அளவு பெரிய நிறுவனத்தின் எம்.டி யுடைய செகரட்டரி எனும் பதவி கிடைத்திருப்பது அதிசயம்தான்.

சும்மா என்றால் இன்னமும் அவள் அந்த நிறுவனத்தின் டைப்பிங் பூலில், அறுவரில் ஒருத்தியாகத்தான் இருந்திருப்பாள்.



ஏன் தான் லீவு விட்டதோன்னு இருக்கு. இந்த ஒரு மாசத்துக்கும் ஏதாவது ஒரு கோச்சிங் கிளாஸ்ல சேத்து விட்டுடுவாங்களே. —க. கணேசன்

ஆனால், மானேஜிங் டைரக்டருடைய செயலாளராக அப்போது பணிபுரிந்த மிஸஸ் வேதா திடுமென நோய்ப்படவும், புதிதாக ஆள் எடுப்பதைவிட இருப்பவர்களில் கெட்டிக்காரியை அவசரத்துக்குத் தேடினார்கள். ஏற்கெனவே வேதா சில வேலைகளை இவளிடம் ஒப்படைத்து, இவளும் அதைச் சரியாகவே செய்திருந்தபடியால் வேதாவின் சிபாரிசில் ஜெயவாணி அந்த வேலையைச் செய்யத் தொடங்கினாள். வேதாவால் தொடர்ந்து வேலை செய்ய முடியாது போகவும், ஜெயவாணியின் வேலையில் குறை கூற எதுவும் இல்லை என்பதால் தினகரன் அவளையே அந்தப் பதவியில் நியமித்தான்.

ஒருவர் துன்பத்தில் வந்த உயர்வுதான். ஆனால் வேதாவுக்கும் பண விஷயத்தில் நிறுவனம் தாராளமாகச் செய்யவும், யாரும் குறைப்பட இடமில்லாது போயிற்று.

டைப்பிங் பூலில், கூட இருந்தோரின் நட்பை இழக்க நேர்ந்தது. ஆனால் முன் போல அவர்களோடு சேர்ந்திருக்க நேரம் இல்லாததால், அவளை அது பெரிதாக உறுத்தவில்லை. கூடவே வேலை உயர்வினால் வந்த எழுநூறு ரூபாய் அதிகப்படி பணமும் குடும்ப நிலையில் பெரிய உதவியாக இருந்தது.

இதெல்லாம் இல்லாவிட்டாலும், மற்றவர் செயல் பற்றி எடை போடுவதோ, குற்றம் காண்பதோ சரியில்லைதான். அதிலும் முதலாளி விவகாரங்களில் மூன்று குரங்குகளின் நிலையில் இருப்பதுதான் நல்லது. ஒருவேளை அவன் சொன்ன அந்த 'எல்லை தெரியாத' குற்றம், முதிர்ச்சியின்மையாலேயே நேர்ந்திருக்கலாம். இனி எச்சரிக்கையோடு இருக்க வேண்டும் என்று முடிவு செய்தாள் அவள்.

தினகரனின் சொந்த விஷயம் பற்றிய எண்ணங்களைச் சிரமப்பட்டு ஒதுக்கிவிட்டு வேலையில் இறங்கினாள் ஜெயவாணி.

தொடர்ந்து இருந்த வேலை அதற்கு உதவியாகவும் இருந்தது.

அன்று தினகரன் இரண்டு பேருக்கு 'அப்பாயின்ட்மெண்ட்' கொடுத்திருந்தான்.

ஒவ்வொருவராக வரவர அழைத்துச் சென்று உட்கார வைத்துவிட்டு, வந்தவருக்குக் குளிர்பானம் வரவழைத்துக் கொடுத்துவிட்டு, பேச்சு வார்த்தை முடிந்து வந்தவர் சென்றதும், அது பற்றி அவன் கொடுத்த குறிப்புகளை எடுத்து, அதற்கு வரி வடிவம் கொடுப்பதும், இடையே மற்ற கடிதங்களை டைப் செய்வதுமாய் நேரம் பறந்தது..

பதினொன்று முப்பதுக்கு தினகரனுக்கு வழக்கமான காப்பியை வருவித்துக் கொடுத்தாள்.

ஆனால், கூடவே தனக்கும் ஒரு காப்பி சொல்லலாமா என்று தோன்றிய சபலத்தை அடக்கிக் கொண்டாள். ஒன்று, இந்த நேரத்

தில் இப்படி பானம் பழகிக் கொண்டால் தொல்லை. அடுத்து, இனி சுபாவுக்காக நிறையப் பணம் சேமிக்க வேண்டும். மடமடவென்று வளர்ந்து வருகிறாளே!

பன்னிரண்டு மணிக்கு மீண்டும் தினகரன் அறைக்குள் சென்று, மதிய உணவு பற்றிக் கேட்டாள்.

அன்று வெளியே செல்லப் போவது இல்லையாதலால் வரவழைத்துவிடும்படி அவன் கூறவும், அவன் அருந்தி முடித்து ஒதுக்குப்புறமாய் வைத்திருந்த காலி காப்பிக் கோப்பையை எடுத்துக் கொண்டு வெளியேறினாள்.

இதுவும் கூட அவனிடம் ஜெயவாணிக்குப் பிடித்தமான விஷயம் தான். காப்பி அருந்துகிறவன், காப்பிக் கோப்பையை மேசை மேலேயே போட்டு வைக்க மாட்டான். அவள் அல்லது ஆபீஸ் பையன் நாகரத்தினம் வந்து எடுக்கட்டும் என்று விட்டுவிடமல் தானே எடுத்துக் கண் மறைவாய் ஒதுக்கி வைத்து விடுவான்.

தினகரனைப் பிடித்திருப்பதால், இது போலச் சின்னச் சின்ன விஷயங்களில் எல்லாம் நல்லதைத் தேடுகிறோமோ என்று ஜெயவாணி அவ்வப்போது யோசிப்பது உண்டு. ஆனால் சின்னச் சின்ன விஷயங்கள்




தானே ஒரு மனிதனின் தன்மையைத் தெளிவாக விளக்குபவை? அத்தோடு அவள் ஒன்றும் கண்மூடித்தனமாகத் தினகரன் செய்வதெல்லாம் சரி என்று ஒப்புக் கொள்ளவில்லையே! இப்போது இந்த நகைக்கடை பிஸ் விஷயம் அவளுக்குத் தப்பாகத்தானே தோன்றியது?

சுமார் நாலு மணி வரையும் எல்லா நாட்களையும் போலவேதான் அன்றைய தினமும் சென்றது.

நாலு மணிக்குத் தினகரன் அவளை அழைத்தான். மறுநாளைக்கான தயாரிப்பாகச் சில வேலைகளைத் தந்துவிட்டு, ''மீண்டும் நான் சொல்லும் வரை, டெலிபோனிலோ நேரிலோ யாரும் என்னைத் தொந்தரவு செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும், ஜெயவாணி,'' என்று உத்தரவிட்டுவிட்டு, டெலிஃபோன் ரிசீவரை எடுத்து பட்டன்களைத் தட்டினான்.

மீண்டும் ஏதேனும் 'டார்லிங்' பேச்சு காதில் விழுந்துவிடுமோ என்று வேகமாக நடந்து கதவைச் சாத்திக் கொண்டாள் அவள்.

சுமார் பதினைந்து நிமிடங்கள் அவள் தன் வேலையில் ஆழ்ந்திருந்திருப்பாள். மனதை மயக்கும் மணம் ஒன்று குப்பென அவளைச் சூழ்ந்தது.

ஜெயவாணி, திகைப்புடன் நிமிர்ந்து, ஓர் அழகிய பெண், பியூட்டி பார்லரிலிருந்து நேரே இங்கேதான் வருகிறவள் போலக் கதவைத் திறந்து கொண்டு, கேபினுக்குள் வருவதைக் கண்டாள். கதவைத் தட்டி அனுமதி பெறாமலே வருகிறாளே என்ற எண்ணம் அவளது அழகினால் நேர்ந்த பிரமிப்பை மீறிக் கொண்டு ஜெயவாணியுள் எழுந்தது.

இது போன்ற திகைத்த பார்வைகள் சகஜம் போல எழிலாக முறுவலித்தபடி, ஜெயவாணியை நெருங்கினாள் அவள்.

(தொடரும்)

லாகட்டும்; உணர்ச்சிவசப்பட்டு முத லில் கோபித்துக் கொண்டதன் விளை வாய், ராதிகா தனிப் படுக்கை யில் முறுக்கிக்கொண்டு படுத்ததும், 'லஷ்மி, இப்ப என்ன சொல்லிட் டேன்னு இப்படிக் கோச்சுகிட்டே?' என்று பட்டும் படாமல் தொட்டுத் தடவிச் சமாதானப்படுத்துவதிலா கட்டும் நாஸரின் மாறுபட்ட கோணம் தெரிகிறது.

மைலாப்பூர், பெருந்துறை... ஸாரி நகைச்சுவைத் தேர்தலில் வடி வேலு முதலிடத்தைப் பெறுகிறார். இரண்டாம் இடத்தை நல்லவரா கெட்டவரா என்று புரிந்து கொள்ள முடியாத கவுண்டமணி தட்டிச் செல் கிறார். கடைசி வேட்பாளரான செந் திலுக்கு டெபாஸிட் காலி.

தேனொழுகப் பேசும் வினுசக்ர வர்த்தி ஆரம்பத்தில் கவுண்டமணி யின் பிடியில் இருக்கும் அப்பாவி எம்.எல்.ஏ. என்றும், அப்புறம் ஏழ்மை கண்டு இறங்கும் உத்தமர் என்றும் நம்ப வைத்துக் கட்டக் கடைசியில் தன் உண்மைச் சொரூ பத்தை வெளிப்படுத்தும் இடத்தில் அதிர்ச்சியூட்டும் திருப்பம் தந்திருக் கிறார்.

ஊர் தலைவர் என்ற பேரில் வரும் நிஜமான பெரியவர் ஜெய்சங் கர், இதமான படைப்பு. அவர் வாயில் வைத்துத்தான் மானாவாரியான நீதி போதனைகளைத் திணித்திருக்கிறார் கதாசிரியர், டைரக்டர். அத்தனை யும் அந்தந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற தாய்ப் பொருந்துவதால் உறைக் கிறது.

காமெராப் புதியவர் யாரோ? ஸ்ரீராம் ஜாடை.

வீடு செட்டிங்குகளில் ஓட்டை அதிகம். ஐந்நூறு ரூபாய் வாடகை யில் எங்கே இத்தனை விஸ்தாரம் இருக்கிறது? கதையமைப்பு, பேச்சு இவற்றின் யதார்த்தத்தை இந்தக் காட்சியமைப்புக்கள் சாப்பிட்டுவிடு கின்றன.

டைட்டில் சாங் பாடுபவர் யார் என்று கேட்கத் தோன்றுகிறது.

வி. சேகர் என்பதன் முதல் எழுத்து முன்பெல்லாம் விறுவிறுப்பு என்று இருந்தது.

## உதவும் உள்ளங்கள்!

கரூரைச் சேர்ந்த அன்பர்கள்:

ஏ. சண்முகம் – 51.

எம். கென்னடி – ரூ. 50.

டி. சாமுவேல் சுந்தரபாண்டியன் – ரூ. 15.

ரூ. 10: சி. பாரதிதாசன், எஸ்.பி. நடே சன், எஸ். சிவகுருநாதன், பி. தர்மராஜ், ஆர். முத்துசாமி, எஸ். பிச்சுமணி, வீரப்பன், கே. ராமையா, பி. அய்யாசாமி, எம். சங்கர், குப்புசாமி, என். சந்திரன், எஸ். சந்திரசேக ரன், முருகன், எம். நாராயணமூர்த்தி, எ. நீலமேகக்கண்ணன், சீதாலட்சுமி நீலமேகக் கண்ணன், என். காமராஜ், ஏ.என். சுபாஷ் சந்திரபோஸ், ஆர். ராணி.

ரூ. 100: மீனா செல்வராஜ், விருதுநகர்; பி. சேகர், காளியப்பன், நாமக்கல்; எஸ். வைர வன், பேர்வூரணி; வி. ராமசுப்ரமணியன், திருப்பூர்; டி. சிவக்குமார், ராணிப்பேட்டை; ஆர். காமாட்சி, பழனி; ஜே. முத்தையா, தூத்துக்குடி; என். குணசேகரன், குன்னூர்; எ. பகவதி, எஸ். ஜெயலட்சுமி, திருச்சி; டி. கோபாலகிருஷ்ணன், சேலம்; கே. அரிஃப் உசேன், கோவை; ஆர். திவாகர், பெசன்ட் நகர்.

ரூ. 50: ஆர். வையாபுரி, நாமக்கல்; எஸ். ரவிராஜன், நாமக்கல்; ஆர்.கே.ஆர், ஆர்.கே.ஜி, வி.யு. திருப்பூர்; ஆர். விஜயக் குமார், மதுரை; மணிமாலா, வடபழனி; கே.ஆர். ராமச்சிந்திரன், திருச்சி; எஸ். கிருஷ் ணன், புதுக்கோட்டை; வடக்கு மாசி வீதி நண்பர்கள், மதுரை; ஜி. ராஜேஸ்வரி, எஸ். மீனா, சீர்காழி; எஸ். ஆறுமுகம், திருச்சி; எம். சுந்தரம், சேலம்; அரசு பெண்கள் உயர் நிலைப் பள்ளி, 10ம் வகுப்பு மாணவிகள், வளவனூர்; டி. கற்பகமணி, நங்கநல்லூர்; கே. கணேசன், திருச்சி; அவ்வை ஆதர்ஷ் ஹிந்தி வித்யாலயா மாணவர்கள், மதுரை; டி. ராமகிருஷ்ணன், தர்மபுரி; எஸ்.ஜெ.ஒய். காஜா ஜபூர், அயன்புரம்; வி. ராஜகோபால், புதுவை.

# மயக்கம்

**விலை உயர்ந்த வைரமாலையை இவளுக்குச் சும்மாவா கொடுத்திருப் பான்?**

<u>முன்கதைச் சுருக்கம்</u>

ஜெயவானி இளைஞி. கம் பெனி மேனேஜிங் டைரக்டருக்கு காரியதரிசி. மேனேஜிங் டைரக்டர் தினகரன். இளைஞன். இருவருக் கும் சற்று மோதல். போனில் 'டார்லிங்' என்று பேசுகிறான். அதைத் தொடர்ந்து ஓர் இளம் யுவதி அவனைத் தேடி வருகிறாள்.

**2**

கதவிலிருந்து வாணியின் மேசைக்கு நாலைந்து எட்டு கள் இருக்கக் கூடும். அதற்குள் உடம்பின் வளைவு நெளிவுகளை இப்படி எடுத்துக் காட்ட முடியுமா? அப்படிக் காட்டுவதற்காகவே தைக் கப்பட்டது போல அந்த மயில் கழுத்து வண்ண ஆடையும், ஒவ்வோர் அசை வுக்கும் வண்ணங்களை வாரி இறைத்த வைர... வைர நெக்லஸும்...

சட்டெனச் சுதாரித்துக் கொண்டு எழுந்து, ''மன்னிக்க வேண் டும். உங்களுக்கு இங்கே முன்னமே ஏதாவது அப்பாயின்ட்மெண்ட் இருக் கிறதா? முதலில் உங்கள் பெயரைச் சொல்கிறீர்களா?'' என்று முயன்று வருவித்த செயலாளர் குரலில் வின வினாள் ஜெயவாணி.

''என்னைத் தெரியாது?!'' என்று கேட்டபோது அவள் முகத்தில் லேசான வியப்புடன் ஏமாற்றமும் இருந்தது.

அவளை ஏற இறங்கப் புதி யவள் பார்த்த ஒரு பார்வையில் குன்றிப் போனாள் ஜெயவாணி. இயல்பாக இருந்தாலும்கூட வந்த வள் முன் நிற்க முடியாதுதான். அப்படியிருக்க இந்தக் 'கோலம்' வேறு.

''அந்த மாதிரி உயர்ந்த ஓட் டல்களுக்கு நீ வந்திருக்க வாய்ப் பில்லை. அதனாலேயே என்னைத் தெரியவில்லை என்று நினைக்கிறேன்.

ரமணி சந்திரன்

நான்தான் சாயா. சாயா ஸ்ருதி. சாயா. தினு எங்கே? அவரிடம் என்னை அழைத்துப் போ,'' என்று உத்தர விட்டாள்.

உள்ளூரச் சுருசுருவென்றது ஜெயவாணிக்கு. நிமிர்ந்து, ''இப்போது அவரைப் பார்க்க முடியாது,'' என்றாள் தெளிவாக.

துணி கொண்டு துடைத்தாற் போல அந்தச் சாயாவின் புன்னகை, ஒய்யாரம் எல்லாம் மறைந்தது. ''உளறுகிறாய் என்று நினைக்கிறேன்...'' என்றவளின் பார்வையில் அந்த அறையிலிருந்த அடுத்த கதவின் மேல் இருந்த எழுத்துக்கள் படவும், ஜெயவாணியைப் பார்த்து ஏளனமாய்த் தோளைக் குலுக்கிவிட்டு, அவளது நோக்கம் புரிந்து வாணி தடுக்க விரையுமுன், அந்தக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றுவிட்டாள்.

''யார்?'' என்று சினத்துடன் திரும்பிய தினகரனின் முகச் சுளிப்பு, சாயாவைக் கண்டதும் மறைந்தது.

''நீ எங்கே இங்கே?'' என்று அவன் வினவ, சாயாவின் பின்னேயே உள்ளே வந்துவிட்ட ஜெயவாணி, ''இப்போது பார்க்க முடியாது என்று சொல்லிக் கொண்டு இருக்கும் போதே உள்ளே வந்துவிட்டார்கள் சார்,'' என்று விளக்கம் தந்தாள்.

ஒரு சிறு பொழுது அங்கே ஒரு சங்கடமான அமைதி நிலவியது.

நியாயமாகப் பார்த்தால், தன் உத்தரவு மீறப்பட்டிருப்பது குறித்து, தினகரன் ஆத்திரப்பட வேண்டும். ஆனால் மீறியவளோ, வைர நெக்லஸ் பரிசளிக்கும் அளவுக்கு அவனோடு நெருங்கியவள்! இருந்திருந்து அவளை எப்படித் தண்டிப்பது? அல்லது கண்டிப்பது? அவன் கொடுத்த பணியைச் செய்த ஜெயவாணியையும் ஒன்றும் சொல்வதற்கில்லை.

அங்கே எதுவும் நிகழாதது போன்ற பாவனையுடன், ''நீங்கள் வாங்கித் தந்த வைர நெக்லஸுக்குப் பொருத்தமாய்த் தைக்கச் சொல்லியிருந்த டிரெஸ் இப்போதுதான் வந்தது, டார்லிங். அதைக் காட்டத்தான் ஓடோடி வந்தேன். ஏதேனும் முக்கிய வேலையைக் கெடுத்து விட்டேனா? சாரிம்மா,'' என்றாள் சாயா கொஞ்சலாக.

''இல்லை. அந்த வேலை முடிந்துவிட்டது. ஜெயவாணி, நானே உன்னை அழைத்து, 'வேலை முடிந்துவிட்டது, இனி யாரையும் உள்ளே வரவிடலாம்,' என்று சொல்வதற்கிருந்தேன். சாயா, இவள் என் செகரட்டரி. ரொம்பவும் கெட்டிக்காரி. ஜெயவாணி, ஸிங்கர் சாயா,'' என்று அறிமுகம் செய்து வைத்தான்.

எப்படியோ சமாளித்து ஒரு கும்பிடு போட்டுவிட்டு அவளது இடத்துக்கு ஓடிவிட்டாள் ஜெய



''ஏ.ஸி. தியேட்டர்லே படம் பார்த்துட்டு வர்றீங்களே?''

''ஆமா. எப்படி கண்டுபிடிச்சீங்க?''

''சட்டையெல்லாம் நனைஞ்சு போய் வேர்வை கொட்டுதே!''

—பா.து. பிரகாஷ்

வாணி. உள்ளூர அவள் மனம் ஆக்ரோஷத்துடன் துடித்தது. ஆக, அந்த வைர நெக்லஸ் பற்றி அவள் நினைத்தது சரிதான். விலை உயர்ந்த அந்த வைர மாலையை அவன் இவளுக்குச் சும்மாவா கொடுத்திருப்பான்? ஆக, அவனும் இவ்வளவுதானா?

வேலை நேரம் முடியுமுன்னரே, தினகரன் சாயாவோடு கிளம்பிச் சென்றுவிட்டான்.

ஆனால் வேலையில் மனம் பதியாத காரணத்தால், அவன் மறுநாளைக்குத் தேவை என்று கொடுத்திருந்த வேலையைச் செய்து முடிக்க வெகுநேரம் ஆயிற்று. ஒரு வழியாக அந்தப் புள்ளி விவரங்களைத் தயார் செய்து வைத்துவிட்டுக் கிளம்பி அவள் வீடு சென்று சேர்ந்தபோது பொழுது இருட்டிவிட்டது.

தினகரனை மறக்கடிக்கிற அளவு வீட்டில் ஓர் அதிர்ச்சியும் அவளுக்காகக் காத்திருந்தது.

**மா**லையில் வீட்டை நெருங்க நெருங்க வித்தியாசமாக உணர்ந்தாள் ஜெயவாணி.

இன்னமும் ஒரு தரம் கூடச் சுபா வெளியே எட்டிப் பார்க்கவில்லையே? அப்பாவும் கூடத்தான்.

பொதுவாக, ஜெயவாணி வருகிற நேரம் அந்தச் சிறுவீட்டில் ஆவலோடு எதிர்பார்க்கப்படுகிற நேரம்தான். பள்ளியில், வழியில் பார்த்த எத்தனையோ விவரங்களைச் சொல்ல, சுபவாணிக்கு அக்கா வேண்டும். பகல் முழுவதையும் தனிமையிலேயே கழிக்கும் வாகீசனுக்கும் பழைய கதை ஏதேனும் அளக்க, அதைப் பொறுமையோடு கேட்கும் பெரிய மகள் வேண்டும்.

தங்கை தரும் காப்பியை அருந்தியவாறு, இருவர் பேச்சையும் கேட்டுக் கொண்டிருக்கும் இந்த நேரம் ஜெயவாணிக்கும் பிடித்தமானதுதான். குடும்பம், இதன் அங்கத்தினர் ஒருவருக்கொருவர் என்ற ஓர் உணர்வு தலை தூக்கி நிற்கும் நேரம்.

அலுவலக வேடம் கலைத்து, இலகுவாகப் பேசிக் கொண்டு இருக்கும் இந்த நேரத்தில் மற்ற இறுக்கங்கள் தளர்ந்து விடக் காண்பாள் அவள்.

ஒருவேளை, மறுநாள் ஏதேனும் தேர்வு என்று சுபா படித்துக் கொண்டு இருக்கிறாளோ என்று எண்ணியபடி கதவைத் தட்டக் கை உயர்த்தினாள் ஜெயவாணி.

அதற்குள், ''ஜெயா...'' என்று



அடிக்குரலில் அழைத்து, உதட்டில் விரல் வைத்து, சத்தம் வேண்டாம் என்பது போல ஜாடை காட்டினான் பக்கத்து வீட்டு சந்திரன்.

''என்ன?'' என்றவளிடம், மெல்லிய குரலில் கூறினான். ''இன்று சாயங்காலம் உன் வீட்டில் ஏதோ தகராறு ஜெயா. யாரோ வந்து பணம் கேட்டார்களாம். பெரிய தொகை என்று அம்மா சொல்கிறார்கள். காதில் விழுந்ததாம். அவர்கள் போகவும் உன் அப்பா விழுந்துவிட்டார். அடுத்த தெரு கணேசன் டாக்டரை அழைத்து வந்தேன். ஐம்பது ரூபாய் வாங்கிக் கொண்டு, 'மைல்ட் ஸ்ட்ரோக்,' என்றார். அவர் கொடுத்த மருந்து பதினைந்து ரூபாய்தான் ஆயிற்று. ஆனால் மாமாவுக்கு அமைதி தேவை; கவலை கூடாது என்றார். சுபா ரொம்பவும் பயந்து விட்டாள் என்று நினைக்கிறேன்,'' என்று முடித்தான்.

''இப்போது அப்பா...'' என்று பயந்து கொண்டே கேட்டாள் ஜெயவாணி.

''தூங்குகிறார். அதுதான் சொன்னேனே, கவலை கூடாது, அமைதி தேவை என்று. அதைப் பார்த்துக் கொண்டால் போதும். பயப்படத் தேவையில்லை என்றார் டாக்டர்.''

பையைத் திறந்து அறுபத்தைந்து ரூபாய் எடுத்து அவனிடம் நீட்டினாள் அவள். ''ரொம்பவும் நன்றி, சந்திரன். சமயத்தில் பெரிய உதவி செய்திருக்கிறீர்கள்,'' என்று உளமார உரைத்தாள்.

பணத்தை வாங்காமல், ''உனக்காக நான் இவ்வளவு செய்யமாட்டேனா?'' என்றான் அவன் உருக்கமாக.

கண்களில் அதிகப்படி ஆர்வம் தான். ஆனால் இருபது பவுனாவது இல்லாமல் மருமகளா! அவன் அன்னைக்குப் பெரிய 'ஸ்ட்ரோக்'கே வந்து விடும். அதற்காகவே இவனோடு அநாவசியமாய் வார்த்தை வைத்துக்

# ஒரே ஒரு நாள்

ஒரே ஒரு நாள் உயிர் இருக்கும் என்று தெரிந்தால்... என்ற கேள்விக்கு அரசு அளித்த பதில் அன்று ரசிக்க வைத்தது. இன்றோ அழ வைத்து விட்டது. தன் முகத்தை அடையாளம் காட்டாமல், அன்பையும், அறிவையும் மட்டுமே வாசகர்களோடு பகிர்ந்து கொண்ட அந்த ஜாம்பவானின் மரணம் இன்னமும் ஜீரணிக்க முடியவில்லை.

– சேலம் கே. ராஜபாலு

மரணம் நிச்சயக்கபட்ட ஒன்று அதை கண்டு மனிதன் எந்த சூழ்நிலையிலும் பயப்படக் கூடாது என்பதை நாசூக்காக தன் பதில்கள் மூலம் கூறிய திரு எஸ்.ஏ.பி.யின் துணிவு, மெய்சிலிர்க்க வைத்தது!.

– சீர்காழி எஸ். நடராஜ்

இன்னாதான் சோகம் மன்சில் கெடந்து ஆடினாலும் உன்னாண்ட பேசிக்கினு (படிக்கையில்) இருக்கும் போது மாத்திரம் தெம்பா இருக்கும். 'டபக்'னு எழ்ந்திரிச்சு வந்துட மாட்டியான்னு கீதுப்பா...

– பெசன்ட் நகர் ஸ்ரீநிவாஸ் பிரபு

எஸ்.ஏ.பி. அவர்களின் காதலெனும் தீவினிலே தொடர் திரும்பவும் பிரசுரிப்பது அறிந்து மகிழ்ச்சி.

– மணியக்காரன்பாளையம்
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்

எஸ்.ஏ.பி.யின் 'டயலாக்' சிறுகதையைப் படித்துவிட்டு வியந்தேன்.

– பாப்பிரெட்டிபட்டி வீ. வெங்கடேசன்

**அவசியம்**

ஆலய சொத்துக்களைக் காப்பாற்ற தாங்கள் தலையங்கம் மூலம் அரசுக்கு வழங்கிய ஆலோசனை அற்புதம். அவசரமும், அவசியமும் கூட!

– கும்பகோணம் எஸ்.கே. மூர்த்தி

அழியாப் புகழ் பெற்ற கோயில்கள் பற்றிய தலையங்கம் மிக அருமை. புரிந்து கொள்ள வேண்டியவர்கள் புரிந்து கொண்டு செயல்பட்டால் பாராட்டலாம்.

— திருவெண்ணெய்நல்லூர்
தி.சி. ஆனந்தகுமார்

**ஷொட்டு**

இருபத்தோராம் விளிம்பில் அனைவருக்கும் புரியும்படி டங்கல் (காட்) ஒப்பந்தம் பற்றி விளக்கிய சுஜாதாவுக்கு ஒரு ஷொட்டு!

— சென்னை கி. சிவா

**சூப்பர்ப்**

ரமணி சந்திரன் எழுதுகிற மைவிழி மயக்கம் மனதை மயக்கும் என்பதில் சந்தேகமேயில்லை—சூப்பர்ப்.

— போத்தனூர் ஏ. செந்தில்

**நடப்பதே வேறு!**

இந்த வார பயோ டேட்டாவில் ரஜினிகாந்தைப் பற்றி ஒழுங்காகப் போட்டதால் தப்பினீர்! இல்லையேல் நடப்பதே வேறு!

— சா. அய்யம்பாளையம் செ. விஸ்வநாதன்

**'கிள்'லாடி**

ராஜகுமாரியைக் கிள்ளி பாக்யராஜ் அதிலும் தான் 'கிள்'லாடி என நிரூபித்து விட்டாரே! சபாஷ்!

— வடக்கருந்தல் எஸ்.பி. புதியா

**பாட்டி வைத்தியம்**

மன வளத்தை ஏற்படுத்திக் கொள்ள டாக்டர் மாத்ருபூதம் வழங்கிய எளிய அறிவுரைகள் பாட்டி வைத்தியம் போல் பாராட்டும்படியாக இருந்தது.

— சென்னை ந. இரவிச்சந்திரன்

கொள்வது இல்லை அவள்.

சற்றுக் கட்டாயப்படுத்திப் பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டு, ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து, ''சுபா,'' என்று மெல்ல அழைத்தாள்.

அவள் குரலுக்காகவே காத்திருந்தவள் போல ஓடிவந்து, ஓசைப்படாமல் கதவைத் திறந்தவள், தமக்கை உள்ளே வந்ததும், அவள் கரத்தைக் கட்டிக் கொண்டு அழத் தொடங்கிவிட்டாள். ''அக்கா, நாம் என்ன செய்யப் போகிறோம்? அப்பாவை ஜெயிலுக்கு அனுப்பி விடுவார்களா? முதலில் அப்பா பிழைப்பாரா?'' என்றாள் விசிப்புக்கிடையே.

''ச்சீ. பைத்தியம். அதெல்லாம் ஒன்றும் நடக்காது. அப்பா நல்ல குணமாகி நன்றாக இருக்கப் போகிறார் பார்,'' என்று தங்கையைத் தேற்றினாள் ஜெயவாணி.

ஆனால் முழுவிவரங்களையும் அறிந்தபிறகு என்ன செய்வது என்று அறியாமல் அவளும் திகைத்துத் தான் போனாள்.

வாகீசன் என்றைக்குமே 'ஓஹோ' என்று வாழ்ந்தவர் இல்லை. முன்னே கடை நடத்திக் கொண்டு இருந்த காலத்தில், ஓரளவு வளமாக—வீட்டுச் செலவு போக ஸ்கூட்டர் பெட்ரோலுக்கும், குடும்பத்தோடு செல்ல டாக்சிக்கும் செலவு செய்கிற அளவுக்கு நன்றாகவே இருந்தார். நண்பர்கள், உறவினர்கள் எல்லோருக்குமே முடிந்த அளவு செய்வார்.

அப்புறம் அவரது கடை அருகிலேயே அதே மாதிரிப் பொருள்களை விற்கும் கடை ஒன்று பல மடங்கு பெரிய அளவில் வந்துவிடவே வாகீசனின் வியாபாரம் படுத்துவிட்டது. சேமிப்பு, நகைகள், வீடு, மனைவியின் உயிரோடு, உடம்பின் தெம்பை இழந்து அதன் பிறகே தொழிலைக் கை கழுவினார்.

நல்லவேளையாக ஜெயவாணி அப்போது படிப்பை முடித்திருந்தாள். தந்தையின் தொழில் போகிற போக்கை உணர்ந்து படிப்புடன்

கூடவே ஒரு கோர்ஸும் செய்தாள். வேலையும் கிடைத்தது.

இந்த மூன்று ஆண்டுகளாக அவளது சம்பளத்தில் கணிசமான ஒரு பகுதி கடனுக்குத்தான் சென்றது. அவசரத்துக்கு என்று குறைந்த தொகைக்கு எடுத்த சீட்டுக் கடன்கள். சென்ற இரண்டு மாதங்களுக்கு முன்பாகத்தான் கடைசித் தவணை முடிந்தது.

தன் எதிர்காலம் பற்றி ஜெயவாணி ஒரு முடிவுக்கு வந்து விட்டிருந்ததால், தங்கைக்காக என்று சேமிக்கத் தொடங்கியிருந்தாள்.

ஈடுகட்ட முடியாத தாயாரின் இழப்புத் தவிர, மற்றப்படி மூவருமே அன்றைய நிலைக்குப் பழகி, அதிலேயே மகிழ்ச்சியோடு இருக்கவும் பழகி விட்டார்கள்.

வாகீசன் நன்றாயிருந்த நாட்களில் மற்றவர்களுக்கு நன்றாக உதவி செய்தார். ஒருவகையில், அப்போது அவரிடம் பெற்ற உதவியால்தான் உதவி மானேஜர் ஜெயவாணிக்கு வேலை கொடுத்ததே. ஆனால் அதே போல இன்னொருவருக்குச் செய்த உதவி இப்போது இடியாய் இறங்கியது.

வாகீசனுடைய பிறந்த ஊர்க்கார நண்பர் சொக்கலிங்கம். சிறுவயதில் இருவரும் இணைபிரியாத் தோழர்கள். வீட்டில் ஒரு திருமணத்துக்காக ஐம்பதாயிரம் ரூபாய்க்கு அலையாய் அலைந்து, வாகீசனிடம் வந்து சேர்ந்தார். வாகீசனால் அவ்வளவு பணம் புரட்ட முடிந்திருந்தால் அவரே கொடுத்திருப்பார். முடியாத காரணத்தால், ஜாமீன் கையெழுத்திட்டு ஒரு பைனான்ஸ் கம்பெனியில் வாங்கிக் கொடுத்தார்.

கடன் தொகை பாதியாகும் வரை ஒழுங்காகப் பணம் கட்டிக் கொண்டிருந்த சொக்கலிங்கத்திடமிருந்து கடந்த ஓர் ஆண்டாக ஒரு தகவலும் இல்லை. அவரைத் தேடி அலைந்துவிட்டு, கண்டுபிடிக்க முடியாத போகவே, ஜாமீன் கையெழுத்துப் போட்ட வாகீசனிடம் வந்து நிற்கிறது அந்த பைனான்ஸ் கம்பெனி.

(தொடரும்)

---

**அன்றும்**

சினிமா பார்த்து பையன் ரொம்ப கெட்டுப் போயிட்டான்.



**இன்றும்**

டி.வி. பார்த்து பையன் ரொம்ப கெட்டுப் போயிட்டான்.

— நிவேதா



# ...மைவிழி மயக்கம்

3

சற்று ஒரு மாதிரிப் பெண்ணிடம் இவனும் ஒருமாதிரிப் பழகுகிறானே என்று எரிச்சல்பட்டது தவறாகி, தினகரன் அவளை மணந்து கொள்ளவே போகிறான் என்றால், அதற்காக அவனைப் பாராட்ட வேண்டும்.

ரமணி சந்திரன்

வட்டியும் முதலுமாக முப்பதாயிரம் ரூபாய். உடனே கேட்கிறார்கள். தராவிட்டால் மேலே நடவடிக்கை எடுக்கப் போகிறார்கள்.

''இவ்வளவு நாள் கழித்துக் கொஞ்சம் நிம்மதியாக இருந்தால் அதற்குள் என்னப்பா நீங்கள்...'' என்று ஜெயவாணி தன்னை மீறிச் சொல்லிவிட்டு, தந்தை முகம் போன போக்கில், ''பரவாயில்லப்பா. எப்படியாவது சமாளித்து விடலாம்,'' என்று தானே அவரை ஆறுதல்படுத்தவும் வேண்டியிருந்தது.

இந்த வீட்டில் எதைச் செய்வது என்றாலும் அதை அவளேதான் செய்தாக வேண்டும். ஆலோசனை செய்வது என்றாலும் சரி, அலைந்து திரிவது என்றாலும் அவள்தான். சமாளித்துப் பழகிவிட்ட அந்தச் சுமை இப்போது தாளமாட்டாததாய்த் தோன்றியது.

வெளியே விசாரித்ததில், பணம் வாங்கியவர் கட்டாவிட்டால் ஜாமீன் கொடுத்தவர்தான் பணத்துக்குப் பொறுப்பு என்றார்கள். பைனான்ஸ் கம்பெனிக்குப் போய் விசாரித்தாள். பணம் கட்டத் தவறியவர்களுக்குச் சலுகையே கிடையாது. உடனடி நடவடிக்கைதான் என்றார்கள். மனோதத்துவம் அறிந்த அவர்கள் அந்த நடவடிக்கையை விவரித்தார்கள். பத்திரிகையில் படமும் முகவரியும் போட்டு, 'எங்களிடம் கடன் பட்டவர்கள், வேறு யாரும் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொண்டால் செல்லாது, முதல் உரிமை எங்களுடையது,' என்று விளம்பரம் போடுவோம் என்று சொன்னதைக் கேட்கும்போதே அவளுக்கு நெஞ்சு உலர்ந்தது.

சற்றுப் பரிதாபப்பட்ட ஒரு

வர், 'வேணுமானால் மானேஜரைப் பாருங்கள்,' என்று அனுப்பி வைத்தார்.

உள்ளே சென்று பார்த்தவள், ஒரு வார்த்தை பேசாமல் திரும்பி நடந்தாள். அவளது இரண்டாவது வேலையை விடக் காரணமாக இருந்த ராஸ்கல்! இவன்களுக்கெல்லாம் எங்கே வேணுமானாலும் வேலை கிடைக்கிறதே!

தமக்கையின் இறுக்கத்தைக் கவனித்துவிட்டு, ''என்னக்கா, என்ன நடக்கிறது என்று எனக்கும் சொல்லு அக்கா. சும்மா உள்ளேயே வைத்துக் கொண்டு மறுகாதே. இன்னமும் நான் ஒன்றும் சின்னப் பிள்ளை இல்லை,'' என்று கேட்டாள் சுப வாணி.

சொன்னால் ஒருவேளை தவிப்புக் குறையுமோ என்று ஓரளவு சொல்லுமுன் தமக்கையின் மடியில் விழுந்து கண்ணீர் வடித்தாள் தங்கை. ''இனி நம் கதி என்ன ஆகும், அக்கா? அய்யோம்மா, உலகத்தில் இந்த மெட்ராஸில் இவ்வளவு பணம் புழங்குகிறது, நமக்குத் தர மட்டும் யாருமே இல்லையே!'' என்று புலம்பினாள்.

சட்டென நிமிர்ந்தாள் ஜெயவாணி. தரக்கூடும்! ஓர் ஓட்டல் பாடகிக்கு அநாயாசமாய் ஒன்றரை லட்சத்துக்குச் 'செக்' வெட்டுகிறவன், உண்மையான அலுவலாளுக்கு ஏன் தர மாட்டான்? அவளிடம் செல்வது அப்படியே அமுங்கி விடும். இவளானால் சம்பளத்தில் மாதாமாதமாய்த் திருப்பித் தந்துவிடுவாளே! அத்தோடு தினகரன் தன்னிடம் பணிபுரிவோரை மதிக்கத் தெரிந்தவன்.

தங்கையின் முதுகில் தட்டி, ''அதற்குள் ஊளுஊளு என்று அழுகிறாய், நீ சின்னப் பிள்ளை இல்லாமல் பெரிய ஆளாய் வள்ர்ந்து விட்டவளாக்கும்! ரொம்பவும் கவலைப் படாதே. உடம்புக்கு ஆகாது,'' என்று சிரித்தாள் ஜெயவாணி.

''அக்கா...?!'' நம்பிக்கையும் பயமுமாகத் தமக்கையை நோக்கினாள் தங்கை.

''இன்னும் ஓர் இடம், நமக்கு உதவுகிற ஆள் இருக்கிறார். அநேகமாகக் கிடைத்துவிடும். தைரியமாய் இரு,'' என்று புன்னகை செய்தாள் பெரியவள்.

ஆனால் மறுநாள் அலுவலகம் சென்று தினகரனிடம் கேட்டபோதே, அவன் அவளை விசித்திரமாக நோக்கினான். ''நம் கம்பெனி ரூல்ஸ் நீ படித்தது இல்லையா?'' என்று கேட்டான்.

பக்கென்று இதயத்தை மீண்டும் பயம் சூழ்ந்து கொள்ள, ''சா... ர்...'' என்றாள் அவள் அழாக் குறையாக.

''எப்போதாவது நேரம் கிடைத்தால் படித்துத் தெரிந்து கொள்,

> ''சாரி சார்! வீட்டுல கொஞ்சம் வேலை இருந்ததால ஆபீஸ் வர லேட்டாயிடுச்சு.''
>
> ''நாசமாப் போச்சு. முதல்ல கரண்டியை கீழே போடுங்க!''
>
> – வெ. செந்தில்குமார்

ஜெயவாணி. நம் நிறுவனத்து அலுவலர்களுக்குக் கொடுக்கும் கடன் தொகையை ஓர் ஆண்டுக்குள் கட்டி முடித்துவிடவேண்டும். முப்பதாயிரம் கேட்கிறாய். உன் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்ச் சம்பளத்தில் அப்புறம் சாப்பாடு, மற்றச் செலவுகளுக்கு என்ன செய்வாய்? இதனாலேயே வருடச் சம்பளத்தில் இருபத்தைந்து சதவீதத்துக்கு மேல் கடன் வழங்குவதும் இல்லை,'' என்றான் தினகரன்.

ஜெயவாணி திகைத்தாள். இப்படிச் சொன்னால் எப்படி? இந்தப் பணத்துக்காக அவள் நம்பியிருந்த ஓரே ஆள், கடைசி நம்பிக்கை, அவனும் தரவில்லை என்றால், அவள் வேறே எங்கே போவாள்? அவளுக்குப் பணம் கட்டாயம் வேண்டுமே!

அவன் பேசுகிற பாஷையே புரியாததுபோல அவள் மலைத்து நின்ற தோற்றம். அவனைப் பாதித்ததோ, ஏதோ சொல்ல வாயெடுத்தவன் ஒரு விநாடி தயங்கிவிட்டு, ''ஜெயவாணி, நீ கேட்கும் மொத்தப் பணத்தையும் தருவது இயலாது. ஆனால் அலுவலகத்தில் நீ வாங்கக் கூடிய கடனோடு என் சொந்தப் பொறுப்பில் ஓர் ஐயாயிரம் ரூபாய் தருகிறேன். அதை நீ மெல்லத் திருப்பித் தரலாம். இதுதான் என்னால் சாத்தியம்,'' என்றான் அமைதியான குரலில், சற்று அழுத்தமாகவே.

சொந்தப் பொறுப்பில் ஐயாயிரம்தான் சாத்தியமா?

குப்பென்று ஒரு கொதிப்பு



ஜெயவாணியின் உடல் முழுவதும் விநாடியில் பரவியது.

உள்ளே இருப்பதை அப்படியே காட்டுகிற மாதிரி உடை அணிகிறவள்; ஓர் ஓட்டல் பாடகி. இவள் என்ன மாதிரிப் பாடக்கூடும், எப்படிப் பட்டவளாக இருக்கக் கூடும் என்று எத்தனை படங்களில் காட்டிவிட்டார்கள்! இப்படிப்பட்ட ஒருத்திக்கு ஒன்றரை லட்சத்தில் வைர நெக்லஸ் வாங்கிக் கொடுக்க முடிகிறது, உண்மையாய் உழைக்கும் நேர்மையான ஒருத்திக்கு ஒரு பெரும் இக்கட்டில் உதவ ஐயாயிரம்தான் சாத்தியமா?

கட்டுப் படுத்த முடியாமல் அவளது கண்கள் அனலைக் கக்கின.

''அரைக் கிணறு தாண்ட உதவுவதற்கு ரொம்ப நன்றி,'' என்றாள் குத்தலாக.

அதற்கு மேல் அங்கே நின்றால், பிற்காலத்தில் நினைத்து வருத்தப்படும்படியாக எதையும் தன் நாவு சொல்லிவிடக்கூடும் என்று அஞ்சியவளாய் அவனது அறையைவிட்டு வெளியேறிவிட எண்ணித் திரும்பி நடக்கத் தொடங்கினாள் ஜெயவாணி.

''நில்.'' என்று கடுமையான குரலில் உத்தரவிட்டான் தினகரன். ''நீ அந்த ஒன்றரை லட்சம் செக்கை நினைக்கிறாய். அப்படித்தானே? அது என் வருங்கால மனைவிக்கு. அதையும் இதையும் ஒன்றாக எடை போட வேண்டாம். அத்தோடு என் சொந்தப் பணத்தைச் செலவு செய்வதில் என் உரிமை பற்றி முன்பே சொல்லியிருக்கிறேன். மறந்து போயிருந்தால் நினைவுபடுத்திக் கொள். இனி நீ போகலாம்.''

விழுந்தடித்துக் கொண்டு வந்து, தன் சீட்டில் அமர்ந்த ஜெயவாணிக்குச் சற்று நேரம் மூச்சுக்கூட விட முடியவில்லை.

தினகரனின் கடுமையான குரலோ, அவன் சொன்ன சேதியோ, அல்லது இரண்டுமோ அவளை மிகவும் பாதித்தன.

குரலாகவே கூட இருக்கலாம். அவனது நேரடிப் பார்வையில் வேலை செய்யத் தொடங்கிய இந்த ஆறு மாதங்களில் அவனிடம் ஒருதரம் கூட ஜெயவாணி இந்தக் குரலைக் கேட்டதில்லை.

. அவன் சொன்ன சேதி... அது காரணமாய் இருப்பதும் சாத்தியமே. சற்று ஒரு மாதிரிப் பெண்ணிடம் இவனும் ஒருமாதிரிப் பழகுகிறானே என்று எரிச்சல்பட்டது தவறாகி, தினகரன் அவளை மணந்து கொள்ளவே போகிறான் என்றால், அதற்காக அவனைப் பாராட்ட வேண்டும்.



அறிமுகப்படுத்துகிறோம்!
தமிழகமெங்கும்.
gala
எத்தனை இன்பம்... இயற்கையின் சுவை!
பல விதக் கனிகளின் நறுமணம், சுவையுடன்.
ஜாம் :
●பைனாப்பிள்
●ஸ்ட்ராபெர்ரி ●மாங்கனி
●பல்வேறு கனிகள்
ஸ்க்வாஷ் :
● ஆரஞ்சு ● மாங்கனி
● எலுமிச்சை
க்ரஷ்:
● பைனாப்பிள்
● திராட்சை
● ஸ்ட்ராபெர்ரி
ஸாஸ்:
● தக்காளி ● பூண்டு
● மிளகாய்
gala
TOMATO SAUCE
gala
gala
gala
gala
கருத்துடன் தேர்ந்தெடுத்த
கனிகளின் அளிப்பு!
என்ன சுவை...... எத்தனை வகை.
தயாரிப்பாளர்கள் :
கர்னாடகா அக்ரோ இண்டஸ்ட்ரீஸ்
கார்ப்பொரேஷன் லிமிடெட்,
பெங்களூர் - 560 024.
விற்பனையாளர்கள் :
MSIL
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்,
பெங்களூர் - 560 052.
Ak Bg/KAIC/1 Tam.

ஆனால் முடியவில்லை.

ஒருவேளை, அந்தப் பெண் அவனுக்குத் தகுந்தவள் அல்ல என்று அவளுக்குத் தோன்றுவதாலோ?

எது காரணமாக இருப்பினும் 'அவள் மனம் சோர்ந்தது மெய். அதன் காரணம் இன்னதென்று தெரியாமல் அவள் தளர்வதும் மெய் தான்.

ஓங்கி மண்டையில் ஒன்று போட்டுக் கொண்டாள் ஜெயவாணி. அவளுக்கு மனம் சோர்வதற்குப் புதிதாக ஒரு காரணம் வேண்டுமாக் கும்? இந்தப் பணப் பிரசினை ஒன்றே போதுமே!

வேலையில் தீவிரமாக ஈடு பட்டு, உடனடிப் பிரசினையை மறக்க முனைந்து வெற்றியும் கண்டாள் அவள்.

அவனது கையெழுத்துக்காகக் கடிதங்களைக் கொண்டு வைக்கையில் அமைதியாகவே இருப்பதாகக் காட்டிக் கொள்ளவும் முடிந்தது.

கையெழுத்திடு முன் அவளை ஒரு பார்வையால் அளந்தான் தின கரன். ''என்ன, ஆத்திரம் எல்லாம் அடங்கியதா? இப்போது போய்த் தனியே அமர்ந்து யோசித்தால் உனக்கு எல்லாம் புரியும்; என் நியாயமும் தான்.''

கையெழுத்திட்ட காகிதங் களோடு அவள் கிளம்புகையில், அவள் தந்தை சிக்கிக் கொண்டிருந்த பைனான்ஸ் கம்பெனியின் பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அனுப்பி னான்.

கொண்டு சென்றவை எல்லாம் மறுநாள் 'டெஸ்பாச்சிங்'கிற்கானவை தான். எனவே அவற்றை மறக்காமல் ட்ரேயில் பத்திரமாக வைத்துவிட்டு அவன் சொன்னது போல யோசித் துப் பார்த்தாள் ஜெயவாணி. இப் போது அவன் பேச்சு எல்லாமே நியாய மாகப்பட்டது.

அலுவலகப் பணத்தை அளவு மீறி, வட்டியில்லாக் கடனாகக் கொடுத்



தால் அப்புறம் கம்பெனி திவாலாக வேண்டியதுதான். அத்தோடு, பெருந் தொகைகளைக் கடன் பெற்றுக் கொண்டு கண்மறைவாய் ஓடி விடு கிறவர்களை என்ன செய்ய முடியும்? அவர்களைத் தேடி, பணத்தை வசூல் பண்ணுமுன் எவ்வளவு காலம், பணம் விரயமாகும்?

அவனது சொந்தப் பணம் பற்றி அவன் சொன்னதும் சரிதான். அது அவனது உரிமை. அத்தோடு அவனுடைய வருங்கால மனைவிக்கு அவன் எத்தனை லட்சம் வேண்டு மானாலும் கொடுக்கலாம். ஆனால் அதேபோல் கேட்டவர்களுக்கெல்லாம் கொடுத்தால் அப்புறம் அவன் என்ன ஆவது?

அரை வேக்காடு மாதிரித் தின கரனை மனத்தில் எப்படித் திட்டி விட் டாள்! 'அரைக் கிணறு தாண்ட' என்றாளே! முகபாவனையில் காட்டு வதையே கட்டுப்படுத்தத் தெரிய வில்லை என்றான். இப்போது வாய் வார்த்தையாகவும் கொட்டியாயிற்று!

அவன் குறிப்பிட்டது போல, இந்தப் பதவிக்குத் தேவையான அனு பவமும், வயதும் போதாததுதான் காரணமோ? பழகப் ப்ழக அது சரி யாகி விடக் கூடுமோ? சரியாக்கிக் கொள்ள வேண்டும். கட்டாயமாய்.

ஆனால் முதலில் செய்ய வேண் டிய வேலை வேறு ஒன்று இருக் கிறது.

மீண்டும் தினகரன் முன்னே சென்று நின்றாள். தான் யோசித் தது பற்றிக் கூறி, தன் துடுக்கான பேச்சுக்கு மன்னிப்பும் கேட்டாள்.

லேசாக முறுவலித்தான் தின கரன். ''உன்னிடம் ஒரு நேர்மையை நான் எப்போதும் கண்டு வந்திருக் கிறேன், ஜெயவாணி. அது உனக்கு உண்மையை உணர வைத்துவிடும் என்று எனக்குத் தெரியும்,'' என்றான்.

அத்தோடு அந்தப் பேச்சை முடித்துவிட்டு, ''அந்த பைனான்ஸ் கம்பெனி எம்.டி.யிடம் பேசிப் பார்த் தேன். கம்பெனி விதிகளுக்கு உட் பட்ட அளவில் உதவி செய்வதாகச் சொன்னார். அங்கே போய்ப் பார்.'' எனுமுன் அவள் அவசரமாகக் குறுக் கிட்டாள்.

''சார், அந்த மானேஜர் ரொம்பவும் ரொம்பப் பொல்லாதவர் சார்,'' என்றாள் கலக்கத்துடன்.

தினகரனின் பார்வை சிறு வியப்புடன் அவள் முகத்தில் படிந்து இதழ்களில் நிலைத்தது.

எந்த வித ஒப்பனையும் இல் லாமலே அழகாகத்தான் இருந்தன. ஆனால்....

ஒரு தரம் தோளைக் குலுக் கினான் அவன். ''எம்.டி.யிடம் நேரடியாகப் பேசத் தொடங்கிய பிறகு, எந்த மானேஜரும் வாலாட் டத் துணிய மாட்டான். ஆனால்... உனக்கு உதவும்படியாக அங்கே ஏதேனும் சலுகைகள் கிடைக்கக் கூடுமா என்றுதான் தெரியவில்லை. 'கம்பெனி விதிகளுக்கு உட்பட்டு' என்று ஒரு கொக்கி வைத்துவிட் டார், பார். எதற்கும் போய்ப் பார். காலையில் அவர் கம்பெனிக்கு வரு வது இல்லையாம். மாலையில் ஓர்

கனடா நாட்டு



அரை மணிநேரம் முன்னதாகக் கிளம்
பிப் போ.''

பலன் ஏதேனும் இருக்கக்
கூடுமோ, என்னவோ! ஆனால் அவ
ளுக்காகத் தினகரன் ஒரு முயற்சி எடுத்
தான் என்பதே ஜெயவாணிக்குப்
பெரும் ஆறுதலாக இருந்தது.

மாலையில் பைனான்ஸ் கம்
பெனிக்குச் சென்று, தினகரனின்
விசிட்டிங் கார்டை நீட்டியவளுக்கு
ஒரு திருப்தி. அந்த மானேஜர் ராஸ்
கல் குனிந்த தலையை நிமிர்த்தக்
கூட இல்லை! அப்படியே இருடா,
கழுதை!

மற்றபடி பிரமாதமான நன்
மைகள் எதுவும் விளைந்து விடவில்லை.
பணம் கட்ட ஒரு மாதம் தவணை
கொடுத்தார் அவர். ''மிஸ்டர் தின
கரன் ரொம்பவும் சொன்னதால் தான்
இந்தச் சலுகை. ரொம்பவும் நம்பக
மான பெண் என்றார். நினைத்தால்
எனக்கும் பாவமாய்த்தான் இருக்
கிறதம்மா. இதில் ஒரு நயா பைசா
நீங்கள் பயன்படுத்தவில்லை என்பது
எனக்கு நன்றாகவே தெரிகிறது.
ஆனால், நம்பக் கூடாதவர்களை
நம்பிய பாவத்தோடு, பிறரையும் நம்ப
வைத்த பாவமும் இருக்கிறதில்லையா?
சொல்லுங்கள், எங்களுக்கு அந்தச்
சொக்கலிங்கம் பற்றி என்ன தெரி
யும்? உங்கள் தகப்பனாரை நம்பித்
தானே கொடுத்தோம்? எங்கள் பணத்
துக்குப் பொறுப்பு அவர்தானே?''
என்று அந்த எம்.டி. கேட்டபோது
ஜெயவாணியால் ஒன்றுமே பதில்
சொல்ல முடியவில்லை.

உள்ளூரக் குன்றியபடியே, தன்
நிலைமையை விவரித்தாள்.

ஆனால், ''சாரிம்மா. என்
னால் இயன்ற சலுகை தந்து விட்
டேன்,'' என்றார் அவர். ஏதோ
யோசித்து, ''வேணுமானால் இன்
னோர் உதவியும் செய்கிறேன். வசூல்
கமிஷன் என்று ஏஜெண்டுகளுக்குக்
கொடுப்போம். மொத்தமாகக் கட்டி
னீர்கள் என்றால் அந்தக் கமிஷனை
உங்களுக்கே தந்ததாகத் தொகையில்
குறைத்துக் கொள்கிறேன். ஆயிரம்
ரூபாய் குறையும்,'' என்றார்.

மீதி இருபத்தொன்பது ஆயி
ரத்துக்கு எங்கே போவேன் என்று
மறுகினாள் அவள். அதைச் சொல்
லாமல் வெறுமனே நன்றி கூறி
விட்டுக் கிளம்பினாள்.

தினகரன் தருவதாகச்
சொன்ன ஐந்தாயிரம், சேமிப்பு இரண்
டாயிரம் அலுவலகக் கடன் எல்லாம்
சேர்த்தாலும் முழுவதாகப் பத்தாயிரம்
துண்டுவிழுந்தது.

தினகரனிடம் குத்தலாகச்
சொன்ன அதே அரைக் கிணறு தாண்டு
கிற அளவுதான் முடியும்.

முதலில் இந்தப் பணத்தை
வாங்கிக் கொண்டு, மீதியைக்
கொஞ்சம் கொஞ்சமாகக் கட்ட அனு
மதிக்குமாறு அந்த பைனான்ஸ் கம்
பெனிக்காரரிடம் பேசும்படி தினகரனி
டம் கேட்க எண்ணி அவன் அறைக்
குச் சென்ற ஜெயவாணி திகைத்தாள்.

(தொடரும்)

---

**ந்தப்பன்**

*கனடாவில் தமிழர்கள் அதிகம். இங்கு உள்ள மிகப்பெரிய நகரம் டொராண்டோ. இதன் அருகில் உள்ள ரிச்மாண்ட் ஹில்ஸ் பகுதியில் ஒரு முருகன் கோயில் உள்ளது. இங்குள்ள முருகனின் உயரம் எட்டு அடி. அமெரிக்கா மற்றும் கனடாவில் உள்ள கோயில்கள் எதிலும் இவ்வளவு உயரமுள்ள முருகன் கிடையாது. இந்த முருகனுக்குச் சிவசுப்பிரமணியன் என்று பெயர். இங்கு பனி அதிகம் பெய்கிறது என்பதால் தட்ப வெட்பநிலையைக் கவனத்தில் கொண்டு ஒரே சமயத்தில் 2000 பேர் உள்ளே நின்று தரிசிக்கும்படி கோயிலை அமைத்திருக்கிறார்கள். செலவு 1,20,000 டாலர்கள்!*

நன்றி: அம்மன் தரிசனம்




அச்சு (இயற்பெயர் சுந்தரலிங்கம். எப்படி 'அச்சு' ஆனது என்பது பெற்றோருக்கே வெளிச்சம்). படிப்பது 'எல்ஸி' கல்லூரியில். மாணவ மாணவிகள் அதை 'லவ் அண்ட் கலர்' கல்லூரி என்பர்.

அச்சு பணக்காரன். அவன் அப்பா, மாருதி வாங்கித் தரும் வசதி படைத்தவர். இருந்தும் அச்சுவிடமிருப்பது பழைய ஆஸ்டின் மாடல் கார். அதுதான் பெண்களைக் கவருமாம். அவனுடைய நெருக்கமான நண்பன் ஜக்கு. தோழியும் உண்டு, யெவனிகா என்கிற பெயரில்.








# 4

**அ**லுமினிய ஃபாயில் சுற்றப் பட்டு இருந்த அவனது மதிய உண திறக்கப்படாமல் அப்படியே இரு தது. ஏன்? காலைக் காப்பியைக்கூட அவன் குடிக்கவில்லை. வேலையில் குடிக்க மறந்திருக்கிறான் என்று ஆறி ஏடு படர்ந்த காப்பியை அகற்றி வேறு வாங்கி வரச் சொல்லி அவள்தான் அவன்முன் வைத்தாள்.

அப்போதும், அருகிலேயே இருந்து அவள் குடிக்கச் சொன்ன தால் இரண்டு வாய் அருந்தியவன் போதும் என்று வைத்துவிட்டான்.

இப்போது இந்தச் சாப்பாடு.. அலுமினிய உறைக்குள் கூட ஆறிப் போயிருக்கும். வேறு வாங்கி வந்தால் சாப்பிடுவானா?

தன் சொந்தத் துன்பம் அடி யோடு மறந்துவிட, அவன் அருகே விரைந்து, ''சார்...'' என்று அழைத் தாள்.

சில விநாடிகள் அவனது பதிலுக் காகக் காத்திருந்துவிட்டு, ''சாப்பிட வில்லையே, சார்! உடம்பு ஏதும் சரி யில்லையா?'' என்று கவலையுடன் கேட்டாள்.

ரமணிசந்திரன்

# விழி மயக்கம்



# ஐந்து நாட்களில் நீ என்னை மணந்து கொள்வாயா?

''உடம்புக்கு ஒன்றும் இல்லை,'' சுருக்கமாகப் பதில் வந்தது.

பின்னே மனதுதான் சரியில்லையா? என்ன கஷ்டம் அவனுக்கு? தினகரனின் துன்பத்தைத் தனதாய் உணர்ந்து, அதைத் தீர்க்க ஏதாவது செய்தாக வேண்டும் என்ற உந்துதலில், ''நான்... நான் ஏதாவது... உதவி... நான் ஏதாவது செய்ய முடியுமா சார்?'' என்று தவிப்புடன் கேட்டாள்.

மெல்லத் திரும்பி அவளைப் பார்த்தான் தினகரன். சிவந்த விழிகள் அவளை வெறித்து நோக்கின. ''முடியும்,'' என்றான் மெதுவாக. ''ஒன்றே ஒன்று செய்ய முடியும்.''

''என்ன சார்? என்ன செய்ய வேண்டும்? எதுவானாலும் சொல்லுங்கள் செய்கிறேன்,'' என்றாள் அவள் ஆர்வத்துடன்.

''ஐந்து நாட்களில் நீ என்னை மணந்து கொள்வாயா?''

தினகரன் அவன் கீழ் பணி புரிகிறவர்களிடம் பந்தா காட்டுகிறவன் இல்லை. ஆனால் அதற்காக அவனிடம் யாரும், என்ன வேண்டுமானாலும் பேசி விட முடியாது. அதே மாதிரி அவனும், அதிகாரத்தில் இருந்தபோதும் அதிகப்படியாகப் பேசமாட்டான்.

முக்கியமாகக் காதல், கல்யாணம் போன்ற விஷயங்களைக் .கோடி கூடக் காட்ட மாட்டான்.

இது ஒருபுறம் இருக்க, அவனிடம் ஒன்றரை இலட்சம் ரூபாய் வைர மாலை வாங்கி அணிந்த 'வருங்கால மனைவி' வேறு இருக்கிறாளே.

எனவே, ஜெயவாணிக்கு முதலில் அவளது சொந்தக் காதுகள் மேல் தான் சந்தேகம் உண்டாயிற்று. ஏதோ உள்ளே ரிப்பேராகிவிட்டது; சொல்லாததெல்லாம் கேட்கிறது என்று முடிவு செய்தாள்.

எனவே, முகத்தை அமைதியாக வைத்துக் கொண்டு, ''நீங்கள் என்ன சொன்னீர்கள், சார்? காதில் என்னவோ அடைத்துக்



கொண்டு சரியாக விழவில்லை என்று நினைக்கிறேன்,'' என்று சமாளிக்க முயன்றாள்.

தினகரன் அவளையே நோக்கி, ''வந்து உட்கார்,'' என்று அவளது இருக்கையைக் காட்டிவிட்டுத் தானும் சென்று அமர்ந்தான்.

ஜெயவாணி உட்கார்ந்து, பேசத் தொடங்கு முன், ''கட்டு

வதற்குப் பணம் சேர்ந்ததா?'' என்று விசாரித்தான்.

பணமா? என்ன பணம்?..

அவன் எதைப் பற்றிப் பேசுகிறான் என்று உணர, ஜெயவாணி சற்று சிரமப்பட வேண்டியிருந்தது.

எதிலிருந்து எதற்குத் தாவுகிறான் என்று உள்ளூர அலுத்துக் கொண்டபடி, ''அதில்லை சார். முதலில் நீங்கள்...'' என்று மீண்டும் தொடங்க முயன்றாள் அவள்.

ஆனால், ''முதலில் அந்தப் பணவிஷயம் சொல்லு,'' என்று அவன் முதலாளி பாவனை காட்டவும், அதற்குப் பணிந்து, அவசர அவசரமாகத் தன் விவரம் சொல்லி முடித்தாள். ''ஆனால்...''

''அப்படியானால் பணம் உன்னளவில் அதிகப் பணம் கட்டாயம் தேவைப்படுகிறது?''

''ஆ... ஆமாம் சார். ஆனால், நீங்கள் அப்போது என்ன சொன்னீர்கள் என்று... வந்து, என் காது...''

''உன் காதுகளில் எந்தவிதக் கோளாறும் இல்லை. நீ சரியாகத்தான் கேட்டாய்,'' என்றான் அவன் தெளிவாக.

அவளது விழிகள் விரியவும், ''உனக்கு என்ன 'பவர்?' '' என்று விசாரித்தான்.

அவள் புரியாமல் விழிக்க, ''உன் கண்ணாடி 'பவர்' என்ன என்று கேட்டேன். கண்ணாடிக்குப் பின்னாலேயே கண் இவ்வளவு பெரிதாகத் தெரிகிறது. கண்ணாடி கழற்றினால் இன்னமும் பெரிதாக இருக்குமோ என்று நினைத்தேன்,'' என்று விளக்கினான் தினகரன்.

இப்போதும் பதில் சொல்ல மாட்டாமல் திணறினாள் ஜெயவாணி. 'பவர்' கிடையாதே! ''அது... அது...''

''மறந்துவிட்டதா? பரவாயில்லை. குறுக்கிடாமல் என் பேச்சைக் கவனி, ஜெயவாணி. உனக்கு இப்போது பணம் வேண்டும். அதுவும் உன்னால் எந்த வகையிலும் புரட்ட முடியாத பெரிய தொகை வேண்டும். கரெக்ட்?''

அவள் ஒப்புதலாய்த் தலையசைத்தாள்.

அந்தப் பணத்தை, முழுவதுமாக முப்பதினாயிரத்தையுமே நானே தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. நான் செய்யும் உதவி இலவசம் அல்ல. பிரதி உபகாரமாக நீ என்னை மணந்து கொண்டாக வேண்டும். அதுவும் இன்னமும் ஐந்து நாட்களில். என்ன சொல்லுகிறாய்?'' என்று அவளிடம் கேட்டான் அவன்.

எங்கெங்கோ அவன் தாவிய காரணம் ஒருவாறு புரிந்தபோதும் அவளுக்குத் திகைப்பாகத்தான் இருந்தது.

இப்படிப் பணத்தைக் காட்டி,

---




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு

ஒரு சினிமா வில்லனைப் போலக் கிடுக்கிப் பிடி போட்டுதான் ஒரு பெண்ணை மணந்தாக வேண்டும் என்கிற நிலை இவனுக்கு எப்படி வந்தது?

படிப்பு, பணம், அழகு, அந்தஸ்து என்று எதிலும்தான் இவனுக்குக் குறை ஏது?

ஏற்கனவே இவனை மணக்க முன்வந்திருந்த அந்தப் பெண்— ஒன்றரை இலட்சம் ரூபாய் வைர மாயப் பரிசு பெற்ற வருங்கால மனைவி— அவள் என்ன ஆனாள்?

இந்த நிலைமைக்கு அவன் தான் காரணமா?

தினகரனைக் கூர்ந்து நோக்கி விட்டு, ''என்ன சார் ஆயிற்று?'' என்று குரலில் பரிவுகாட்டி விசாரித்தாள் ஜெயவாணி.

அவன் முகம் இறுகிப் போயிற்று. சற்று நேரம் எதுவும் பேசாமல் அமர்ந்திருந்தான். பின்னர், எதுவும் முடியாதவன் போல் எழுந்து சென்று மீண்டும் ஜன்னல் வழியே வெளிப்புறம் வெறித்தான். தோள் விடைத்து மீண்டும் முது விறைத்துப் போயிற்று.

அவன் மிகவும் வேதனைப் படுகிறான் என்பது ஜெயவாணிக்குப் புரிந்தது. இந்தப் பேச்சு அவன் வேதனையை அதிகப்படுத்துகிற என்பதும் புரிந்தது.

அவன் வேதனைப்படுவதை கண்டு சகிப்பதும் அவளுக்கே சகிக்க முடியாத துன்பமாகத் தோன்றியது.

அதனாலேயே இந்தப் பேச்சை விட்டுவிடலாமா என்று கூடத் தோன்றியது.

ஆனால் இது முக்கியமான விஷயம். வாழ்க்கைப் பிரசினை. அவளுடையதை மட்டுமின்றி அவன் வாழ்வையும் கால முழுமையுமாகப் பாதித்து விடக் கூடியது.

இதைக் கண்ணை மூடிக் கொண்டு அரைகுறை விவரங்களோடு நிர்ணயிப்பது சரியில்லை.

அவன் மீண்டும் வந்து அமர்ந்தான்.

அவள் பொறுமையுடன் காத்திருப்பது உணர்ந்து, ''நீ சாயாவைப் பற்றிக் கேட்கிறாய் என்று நினைக்கிறேன். அவளைப் பற்றி... அவள் விஷயம் பேசாமலே ஒதுக்கி விடலாம் என்று நினைத்தேன்...'' என்று நிறுத்தினான்.

இத்தோடு விடு என்பதுபோல அவன் குறிப்பு காட்டுவது வாணிக்குப் புரிந்தது. ஆனால் அது அவனுக்கே கெடுதலாக முடியக் கூடும். அத்தோடு... அவளுக்கும் ஓர் உரிமை உண்டுதானே?

ஆனாலும் அதைக் குரலில் காட்டாமல், ''வருங்கால மனைவி என்றீர்களே, சார்,'' என்றாள் மென்குரலிலேயே.

மேசை மேல் எதையோ இலக்

ராமு: தமிழ்நாட்டுல இருக்கற எல்லா ஜவுளிக் கடையிலயும் ஏறி இறங்கிட்டேன்!
சோமு: டிரெஸ் செலக்‌ஷனுக்கா?
ராமு: ஊஹூம். என் மனைவியைக் கண்டு பிடிக்கத்தான்.



...த்தியாசங்கள் உள்ளன. விடை: 87'ம் பக்கம்

கவிதை மூலை

**எப்படிப் பிறந்தேன்?**
**இப்புவியில்...**
**சோதிடர் தவறாய்ச் சொன்னதாலா**
**ஸ்கேன் பார்க்க வசதியில்லாததாலா**
**எனக்குப்பின்**
**''தம்பி,'' பிறப்பான் என்ற**
**நம்பிக்கையாலா?**

**– ஆர். ரத்தினசாமி,**
**'ஓர் அவசரத்திருத்தம்' தொகுப்பிலிருந்து.**



கற்று வெறித்துவிட்டு அவன் மீண்டும் பேசினான். ''ஆமாம். சொன்னேன். அதனாலேயே விளக்கமும் தந்துதான் ஆக வேண்டும். சாயாவை நான்... நான் முதலில் பார்த்த போது, 'லவ் அட் ஃபர்ஸ்ட் ஸைட்' பற்றி ஏதோ பாடிக் கொண்டிருந்தாள். பாடியபடியே என்னைப் பார்த்தாள். இரண்டு பேருமே குறைந்த பட்சம் நான் அப்படித்தான் உணர்ந்தேன். அவளும் அதையேதான் சொன்னாள். அவ்வப்போது சந்தித்தோம். என் பரிசுகள் ஓரளவு உனக்குத் தெரியும். திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தோம். இன்னமும் ஐந்து நாட்களில், வரும் புதனன்று திருமணம் நடப்பதாக இருந்தது.''

''நேற்று என்னிடம் சொல்லி விட்டாள். இந்தக் கல்யாணம் நடக்காதாம். அப்படி எனக்கு இந்தத் திருமணம் நடந்தாலும் கல்யாணப் பெண் அவளாக இருப்பது சாத்தியம் இல்லையாம். வேறு பெண் கிடைத்தால் நான் இதே தேதியில் திருமணம் செய்து கொள்வதுபற்றி அவளுக்கு எந்தவித ஆட்சேபணையும் இல்லையாம். அர்த்தம் புரிகிறதா? எனக்கு வேறு பெண் கிடைக்க மாட்டாள் என்கிறாள். அதுவும் அந்தத் தேதிக்குள் கிடைப்பது அசாத்தியமாம்.''

''ஏன் சார்?''

மேஜைமேல் கிடந்த அவனது கைகள் அழுந்த மூடி முஷ்டியாய் இறுகின.

''என் தகப்பனார். அவருக்குப் பிடிக்காத பெண்ணை நான் மணந்தால் எனக்குச் சொத்து கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டார்.''

''புரியவில்லை.''

''என்ன புரியவில்லை?''

''இதற்கும் அதற்கும், சொத்து கொடுக்காததற்கும் திருமணம் செய்வதற்கும் என்ன தொடர்பு என்று புரியவில்லை.''

சட்டென அவன் பார்வை உயர்ந்து அவள் முகத்தில் பதிந்தது.

''அப்பா சொத்து தராவிட்டால் நான் 'பாப்பர்' ஆகி விடுவேன் இல்லையா? இந்தக் கம்பெனி, கார், வீடு என்று எல்லாம் அப்பாவின் உடைமைகள்தான். நினைத்தால் பிடுங்கிக் கொள்ளக் கூடியவை.''

''அவரால் பிடுங்கிக் கொள்ள முடியாததாகவும் எத்தனையோ உங்களிடம் இருக்கிறதே சார்?''

அவன் பேசாமல் பார்த்துக் கொண்டு இருக்கவும், அவள் அடுக்கினாள். ''அறிவு, தொழில் நடத்தும் திறமை, ஆரோக்கியம், கல்வி, இளமை, வலிமை, உழைப்பு...''

''ஒரு பெண் ஒருவனை மணந்து கொள்ள இவை அனைத்தையும்விட பணம் இருப்பது முக்கியம் இல்லையா?''

''பணம் மட்டும் இருந்து இவை இல்லாவிட்டால் அந்தப்

பணம் எத்தனை நாள் தங்கும், சார்? அத்தோடு உங்களிடமும் பணமும் அடியோடு இல்லை என்று இல்லையே! உங்கள் கடனுக்கு முப்பதாயிரம் ரூபாய் தருவதாகச் சொன்னீர்களே!''

பொதுவாக, தினகரன் உணர்ச்சிகளை முகத்தில் கொட்டுகிறவன் இல்லைதான். இப்போது மேலும் ஒரு கனமான திரை விழுந்தது. ''உண்மை. தருகிறேன் என்றேன்தான். அதனால் அந்த முப்பதாயிரத்தோடு, இத்தனை தகுதிகளும் எனக்கு இருப்பதால் என்னை மணந்து கொள்ள நீ தயார். அப்படித்தானே?''

மீண்டும் ஜெயவாணி சற்றுத் திகைத்தாள். இவனிடம் இப்போது என்ன சொல்வது?

தினகரன் எந்த அளவுக்கு உணர்ந்து பேசுகிறான் என்பதிலேயே சந்தேகம் வந்தது வாணிக்கு. ஒரு வேகத்தில் செய்துவிட்டுப் பிறகு வருத்தப்படக் கூடாதே!

அவசரத்தில் திருமணம் செய்து அவகாசத்தில் அழு என்று பழமொழியே இருக்கிறதே.

ஆனால் இந்தப் பணம் அவளுக்கு மிகமிக அவசியமே. அத்தோடு, தினகரனை மணப்பதற்கு அவளுக்கு இன்னொரு வலுவான காரணம் இருந்தது. ஆனாலும்...

நிமிர்ந்து அவனை நோக்கி, ''திருமணம் இல்லாவிட்டால் இந்தப் பணம் தர மாட்டீர்களா சார்?'' என்று கேட்டாள் ஜெயவாணி.

''உனக்கு எப்படித் தோன்றுகிறது?''

கேட்டிருக்கக் கூடாது. அவன் தரமாட்டான் என்பது தெரிந்த பிறகும் கேட்டது மடத்தனம். அவனுடைய வருங்கால மனைவிக்குக் கொடுக்கக் கூடாதது என்று அவனிடம் எதுவும் இல்லாமல் இருக்கலாம். மற்றபடி... ஊகூம் எதிர்பார்ப்பது கூடத் தப்பு; நியாயமில்லை என்பது அவளும் ஏற்றுக்கொண்ட விஷயம்தானே.

''யோசி ஜெயவாணி. உனக்கு இப்போது மிகமிகத் தேவையான பணம் கிடைக்கும். அத்தோடு, ஓர் ஆண்மகனுக்கு அவசியம் என்று நீ அபிப்பிராயப்படுகிற குணங்களை உடைய கணவனும் செலவில்லாமல், அலையாமல், திரியாமல் கிடைப்பான். எவ்வளவு பெரிய லாபம் எண்ணிப் பார்.''

''உண்மையே. ரொம்பப் பெரிய ஆதாயம்தான். ஆனால் எல்லா அனுகூலங்களும் எனக்கே என்றாகிற ஒன்றை நீங்கள் வலியுறுத்துவானேன்? அதுதான் புரியாத புதிராக இருக்கிறது!'' என்றவள் அவனைக் கூர்ந்து நோக்கினாள்.

அவன் முகம் லேசாகச் சிவந்தது.

(தொடரும்)

குமுதம்

நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.

நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்

பொறுப்பாசிரியர்
சுஜாதா

பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி

துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்

உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்

நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்

நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி

அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்

தலைமை நிருபர்
பால்யூ

ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா டாவின்ஸி

# தமிழில் ஒ



விஷ்ணு சகஸ்ரநாமத்தைத் திருமாலின் ஆயிரம் நாமங்கள் என்று பெயரளித்துத் தூய தமிழில் சமஸ்கிருதத்தின் 'அனுஷ்டுப்' சந்தத்திலேயே மொழிபெயர்த்து பாம்பே சிஸ்டர்ஸ் அதைத் தெளிவாக உச்சரித்துப் பாடி காஸட்டாக வெளியிட்டிருக்கிறார்கள். இந்தச் சாதனையைப் புரிந்த திரு ஆர். நரசிம்மன் ஓர் இன்ஜினியர் என்பதை அறியும் போது நமக்குப் பெருமையாக இருக்கிறது. விஷ்ணு சகஸ்ர

# உங்விளிம்பு

டோம். மூன்று நாட்களுக்குப் பிறகு, பேப்பர்காரர் ஒரு கத்தியை எடுத்து வந்து கொடுத்து, ''பழைய பேப்ப ரோடு வந்துடுச்சு,'' என்றார்.

'இதுக்காகவா இவ்வளவு தூரம் வந்தீங்க?' என்று கேட்டேன்.

''அம்மா! இது தேய்ஞ்சு போன கத்திதான். பழகிப்போன கத்தியில காய்கறி வெட்டினால் சுலபமாக இருக்கும். ரொம்ப வருஷமா புழக்கத்தில் இருந்த கத்தி காணாமல் போய்ட்டா வீட்டுல புருஷன் பொண்டாட்டிக்குள்ள தகராறு வந்து டும்,'' என்றார் அவர்.

— ஹேமா கே. மூர்த்தி, சென்னை–17.

## ஜாம்... ஜாம்...

அடையார் பஸ் ஸ்டாண்ட் அருகே மோட்டார் பைக்கில் வரும் போது ஏகப்பட்ட டிராபிக் ஜாம். 'சே சே' என்று அலுத்துக் கொள்ளத் தோன்றும். சடாரென்று பக்கவாட் டில் தலையைத் திருப்பினால், நமக்குச் சிரிப்பு வரும்! என்ன காரணம்?

அங்குள்ள ஓர் ஓட்டலின் பெயர்: 'டிராபிக் ஜாம்!'

— என். சுரேந்திரன்

## G.H. = God Here

தமிழ்நாட்டில் உள்ள மருத் துவமனைகளில் இல்லாத சிறப்பு, சென்னை அரசு பொது மருத்துவ மனைக்கு உண்டு. இந்து, முஸ்லீம், கிருஸ்துவர்கள் வழிபடும் வகையில் ஒரு பிள்ளையார் கோவில், ஒரு தர்கா, இரண்டு சர்ச்சுகள் எல்லாம் மருத்துவமனை வளாகத்தினுள் ளேயே இருக்கின்றன. நோயாளி களும், அவர்களது குடும்பத்தினரும் எல்லாக் கடவுள்களையும் வேண்டிக் கொள்கிறார்கள்.

— எஸ். ஸ்ரீதர், கோடம்பாக்கம்.

தொகுப்பு: எஸ்.ஜி.

ரமணி சந்திரன்

# மைவிழி மயக்கம்



ஒரு தரம் சூடு பட்டு விட்டவன், இன்னொரு பெண்ணிடமும் அதே அடியை எதிர்பார்க் கிறான்.

## 5

ஜெயவாணியின் பேச்சில் ஏதோ உண்மை இருந்து அவனைத் தாக்கியது என்பதை அவன் முகச் சிவப்பிலிருந்து அவளுக்குப் புரிந்தது. ஆனாலும் அவன் நிமிர்ந்து, ''எனக் கும் ஆதாயம் உண்டு ஜெயவாணி. ஒன் றல்ல. இரண்டு. ஒன்று, 'உன்னை விட்டால் யாருமில்லை என்று



இல்லை; என்னை மணந்துகொள்ள வேறு பெண் இருக்கிறாள் என்று என்னைவிட என் சொத்தைப் பெரி தாக நினைத்த அந்தச் சாயாவுக்குக் காட்ட வேண்டும். அடுத்ததாக, அழையா விருந்தாளியாகச் சாயா விடம் சென்று கண்ட பேச்சு பேசி, அவளை என்னிடமிருந்து பிரித்த என் தந்தைக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்.'' என்று உரைக்கையில் அவனது கண்கள் பளபளத்தன.

மெல்லத் தலையசைத்தாள் ஜெயவாணி. ''திருமணத்தின் அடிப் படை, வஞ்சம் இல்லை ஸார். அன்பு. அது இல்லாவிட்டால்...''

''வரும் ஜெயவாணி. உன் நேர்மை, நாணயம் எனக்குத் தெரி யும். நானும் நேர்மை தவறுகிறவன் அல்ல. இந்த நேர்மையை வேற்றிடம் பார்க்க விடாமல் நம்மைத் தடுத்து, கணவனிடம் காட்ட வேண்டிய தன்மை உன்னுள்ளும், மனைவியிடம் காட்ட வேண்டிய பிரியத்தை என் னுள்ளும் வளர்த்து விடும். நம் நாட் டுத் தாலிக் கயிற்றுக்கு அந்தச் சக்தி நிச்சயம் உண்டு. கொஞ்ச காலம் பிடிக்கலாம். ஆனால் நிச்சயமாய் நடந்தே தீரும். ஆனால், இப்போது நான் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்பதுதான் உடனடித் தேவை. என் கவுரவம் காப்பாற்றப்பட வேண்டும். அதற்காக வாழ்நாளெல்லாம் கடன் பட நான் தயார்.''

கடன்படுவதா? நன்றிக் கடனா? செலுத்தவா கணவன்? ஆனால் அவனுக்கு என்றேனும் புரியக் கூடுமா?

ஒன்று தோன்றவும், ''சார்,'' என்றாள் பரபரப்புடன். ''சாயா வைப் பிடிக்காத உங்கள் தந்தைக்கு என்னை மட்டும் எப்படிப் பிடிக்கும்? அதுவும் அழகியான, அழகைப் பன்மடங்காக்கிக் காட்டத் தெரிந்த சாயாவையே மருமகளாகக் கொள்ள மனம் இல்லாதவர், இருக்கும் கொஞ்ச நஞ்சத்தையும் இல்லாததாக்கிக் காட்டும் ஒருத்தியை எப்படி ஏற் பார்?'' நிச்சயம் மாட்டார் என்று

## கவிதை மேலை

பயணம் முடிந்த பின்பு
நழுவவிட்ட பஸ் டிக்கெட்
டைப்ரைட்டர் உருளையிலே
படபடக்கும் கார்பன் தாள்
மழைச்சாரல் சாய்ந்திறங்கி
நனைக்காத சாலை ஓரம்
அசைகின்ற வைப்பர் நுனி
துடைக்காத மழைப் புள்ளி
நிராகரிப்பின் சின்னச் சின்ன
விசும்பல்கள் எனக்குள்ளே

தி. சந்தானம்
(அகரம், சிவகங்கை)



# தற்போதுள்ள வெண்டி நிலையங்கள்:

● அபிராமபுரம்: ICA (மெட்ராஸ்) பிரைவேட் லிட். எண் 67, சி.பி. ராமசாமி சாலை, (ஹாட் பிரட் அருகில்) ஆழ்வார்பேட்டை ● அமைந்தகரை: திவ்ய லக்ஷ்மி எண்டர்பிரைஸ், நெ. 248, பூவிருந்தவல்லி நெடுஞ்சாலை, (ஐ.ஓ.பி. காம்பவுண்டின் உள்ளே), போன்: 642606 ● அண்ணாநகர் (மேற்கு): ஸ்ரீ ராகவேந்திரர் எண்டர்பிரைசஸ், A.P - 723, 'H' ப்ளாக், முதல் தெரு, 12வது மெயின் ரோடு ● அண்ணா நகர்: ஜெயமாருதி எண்டர்பிரைசஸ் 105, 'Q', ப்ளாக், 6 வது அவென்யூ, (அண்ணா நகர் போலீஸ் ஸ்டேஷன் எதிரில்), போன்: 619848 ● அடையாறு: வாங்கல் ஏஜென்சீஸ், 6, முதல் பிரதான சாலை, காந்தி நகர் (கெனால் பேங்க் பஸ் ஸ்டாப் அருகில்) போன்: 410480 ● அம்பத்தூர், லக்ஷ்மி எண்டர்பிரைசஸ், 16-D. வடக்கு பூங்கா தெரு, (இந்தியன் வங்கி எதிரில்) ● அயனாவரம்: ஸ்ரீ வெங்கடேஷ் எண்டர்பிரைசஸ் 17-D, கொன்னூர் நெடுஞ்சாலை, போன்: 4936015 ● ஆதம்பாக்கம்: விஸ்வசாரதி எண்டர்பிரைசஸ், 5 சாந்தி நகர் 4வது தெரு, போன்: 2349046 ● ஆவடி: தேவகீஸ் ஷாப், 750 எம். டி. எச். ரோடு, (அண்ணா சிலை, ஆவடி சர்க்கிள் அருகில்) ● இராயப்பேட்டை: நேஷனல் டிரேடர்ஸ், 109, பைகிராஃப்ட்ஸ் ரோடு, (அமீர் மஹால் அருகில்), போன்: 833839 ● கிண்டி: சத்தியநாராயணா ஸ்டோர், 6, வண்டிகாரன் பாதை, நேரு நகர் ● குரோம்பேட்டை: ஆர்.பி.எஸ். எண்டர்பிரைசஸ், 51-D, ஹஸ்தினாபுரம் மெயின் ரோடு, நேரு நகர், (எம்.ஐ.டி. மெய்ன் கேட் எதிரில்) போன்: 403716 (பி.பி.) ● கொடுங்கையூர்: ஸ்ரீ பாலாஜி ஏஜென்சீஸ், 30, மீனாம்பாள் சாலை, விவேகானந்தா நகர், M.K.B. நகர் பஸ் நிலையம் அருகில் போன்: 575053 ● கொரட்டூர்: ஸ்வேதா எண்டர்பிரைசஸ், 1&2, 49 வது தெரு, ● கே. கே. நகர்: சூரஜ் என்டர்பிரைசஸ், 358-A, லக்ஷ்மணசாமி சாலை (பத்மா சேஷாத்திரி ஸ்கூல் அருகில்), போன்: 427735 ● கோடம்பாக்கம்: தெய்வா ஆயில் ஸ்டோர்ஸ் 37, ரங்கராஜபுரம் மெயின் ரோடு, போன்: 8284465 ● ஜவஹர் நகர்: எம் எஸ் பிரியா ஸ்டோர்ஸ், 23, ஜவஹர் நகர் கம்ப்ளக்ஸ் போன்: 611586 ● ஜாபர்கான்பேட்டை: ஸ்வாதி எண்டர்பிரைசஸ், 90, காசி எஸ்டேட், (காசி தியேட்டர் அருகில்) ● சாலிகிராமம்: ஸ்ரீ கற்பகம் ஏஜென்சீஸ் 20, அருணாசலம் மெயின் ரோடு, தசரதபுரம், (ஜெனரல் கரியப்பா ஸ்கூல் எதிரில்) ● கிழக்கு சி.ஐ.டி. நகர்: உமா ஆயில்ஸ், 59/2, கெனால் பேங்க் ரோடு, போன்: 459862 ● சிந்தாதிரிப்பேட்டை: ஸ்ரீ ராகவேந்திரா எண்டர்பிரைசஸ், 27, அக்ரஹாரம் தெரு, (பொடிக்கடை பஸ் ஸ்டாப் அருகில்), போன்: 834430 ● சூளைமேடு: கோமல் பிரித் ஏஜென்சீஸ், 27, கான் சாலை, லயோலா கல்லூரி அலுவலர்கள் குடியிறுப்பு எதிரில், போன்: 8278658. ● சைதாப்பேட்டை: S.K. புரவிஷன்ஸ் ஸ்டோர்ஸ், 61, ஜீனீஸ் சாலை, போன்: 459683 ● டிரஸ்ட்புரம்: அர்விந்த் டிரேடர்ஸ், 6, 2வது குறுக்கு தெரு, (விளையாட்டு மைதானம் எதிரில்), போன்: 422873. ● தாம்பரம் கிழக்கு: ஜிந்தா ஸ்டோர்ஸ், 6-A, நால்வர் தெரு, போன்: 403592. ● திருவான்மியூர்: ரிலையன்ஸ் எலெக்ட்ரானிக்ஸ், 7, திருவள்ளுவர் சாலை, (ஹாட் சிப்ஸ் அருகில்) போன்: 414456 ● திருவொற்றியூர்: ஸ்ரீ விநாயகா டிரேடர்ஸ், ஸ்ரீ குமரன் சில்க் ஹவுஸ் பில்டிங் (திருவொற்றியூர் மார்க்கெட் அருகில்) 802, திருவொற்றியூர் நெடுஞ்சாலை ● தி. நகர்: சரவணா எண்டர்பிரைசஸ், 6, வெங்கட நாராயணா சாலை, JYM கல்யாண மண்டபம் பின்பக்கம், போன்: 445479. ● நங்கநல்லூர்: ஸ்ரீராம் எண்டர்பிரைசஸ், 12, 39வது தெரு, (மார்க்கெட் குளம் அருகில்) போன்: 2348324 ● நந்தனம்: சுபமங்களா எண்டர்பிரைசஸ் 1, டர்ன்புல்ஸ் ரோடு, 2வது குறுக்குத்தெரு, (நியூ நந்தனம் டவர்ஸ் கீழ்புறம்) போன்: 412225. ● நுங்கம்பாக்கம்: விஜய் எண்டர்பிரைசஸ், 21, நாகேஸ்வரா சாலை, (ஸைல்டு ட்ரஸ்ட் ஹாஸ்பிடல் அருகில்), போன்: 8270547 ● பம்மல்: R.C. ஏஜென்சீஸ், ப்ளாட் எண் 24, நல்லதம்பி சாலை, அண்ணா நகர் ● பல்லாவரம்: ஸ்ரீபுஷ்பா மில்க் பார்லர், 37, ரயில்வே ஸ்டேஷன ரோடு ● புரசைவாக்கம்: ஜோதி எண்டர்பிரைசஸ், 194, வெள்ளாளத் தெரு, போன்: 4992552 ● புது வண்ணாரப்பேட்டை: ஸ்ரீ விநாயகா டிரேடர்ஸ், 745, திருவொற்றியூர் நெடுஞ்சாலை (ஸ்ரீ வெங்கடேஷ்வரா கல்யாண மண்டப கட்டிடம்) போன்: 551673 ● பெரம்பூர்: வெக்காளி அம்மன் எண்டர்பிரைசஸ் 37, ராகவன் தெரு, சி.எஸ்.ஐ நடுநிலைப்பள்ளி எதிரில், செம்பியம் ● பெசன்ட்நகர்: பொன்மணி ஸ்டோர்ஸ், கடை எண் 4, தமிழ்நாடு வீட்டு வசதி வாரியக் கட்டிடம், (பஸ் நிலையம் அருகில்) போன்: 4919141. ● மடிப்பாக்கம்: ப்ரசாந்தி சூப்பர் மார்க்கெட் 155, மேடவாக்கம் மெயின் ரோடு, ● மந்தைவெளி: ரிலையன்ஸ் ஏஜென்சீஸ், 212/5, செயின்ட் மேரிஸ் ரோடு, (முக்தா கல்யாண மண்டபம் அருகில்) போன்: 4942134 ● மின்ட்: பிரியகாந்த் & பிரதர்ஸ், 385, மின்ட் தெரு, (சௌகார்பேட்டை தபால் நிலையம் எதிரில்), போன்: 5225790 ● முகப்பேர் கிழக்கு: அம்பிகா ஏஜென்சீஸ் 1/575, எம். எம். டி. ஏ. வளையாபதி தெரு, ● மூலக்கடை: பா. துரைராஜ் டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸ், (நியாய விலை கடை அருகில்), 72&73, தண்டையார்பேட்டை நெடுஞ்சாலை, போன்: 5376125 ● மேற்கு மாம்பலம்: ஸ்ரீ ஸ்கந்தர் மெடிக்கல்ஸ், நெ. 2 எ, ஸ்டேஷன் ரோடு, போன்: 421339 ● மைலாப்பூர்: அன்னை ஏஜென்சீஸ், 12/2 பரிபூர்ணவினாயகர் (P.V) கோயில் தெரு ● வடபழனி: குப்புசாமி சேல்ஸ் இன்கார்ப்பொரேஷன், 49 எ, கங்கை அம்மன் கோயில் தெரு. சென்னை 26. போன்: 4831173 (பி.பி). ● வளசரவாக்கம்: ஓம் ஸ்ரீ சாய் ராம் ஆயில்ஸ், 49, ஆர்க்காட் ரோடு, (பஞ்சாயத் போர்டு பஸ் ஸ்டாப் அருகில்), போன்: 4827035 (பி.பி). ● விருகம்பாக்கம்: ஸ்வர்ணா ஆயில் ஸ்டோர் 320, காளியம்மன் கோயில் தெரு, ஜே. ஜே. ஹாஸ்பிடல் எதிரில், ● வில்லிவாக்கம்: செல்வி ஏஜென்சீஸ், 30-C, ஸ்டேஷன் ரோடு, (டாக்டர் பிரபாகர் கிளினிக் எதிரில்), போன்: 6216878 ● வேளச்சேரி: அஸ்வின் ஏஜென்சீஸ் ப்ளாட் எண் 33, 3 வது பிரதான சாலை, தன்டீஸ்வரம், ● பாண்டிச்சேரி 8: A.K.R. எண்டர்பிரைசஸ், 158, பிரதான சாலை, பாக்குவுடையான்பேட்டை. ● பாண்டிச்சேரி 1: A.K.R. எண்டர்பிரைசஸ், 37, நீடராஜப்பய்யர் தெரு.

**பொன்னான தூய்மை இங்கே கிடைக்கும்**



''என் பசங்க ரெண்டு பேரும் தொழில் கத்துக்கிறாங்க.''
—எஸ். மாரியப்பன், திருவரம்பூர்.

ஏக்கத்துடன் எண்ணினாள்.

ஆனால், ''பிடிக்காது,'' என்று ரொம்பவும் சாவதானமாக, அதுவே திருப்திபோலச் சொன்னான் தினகரன். ''அவருடைய நண்பர், காஃபி எஸ்டேட்காரருடைய மகளைத் தவிர வேறு யாரையும் அவருக்குப் பிடிக்காதுதான்.''

''பின்னே?''

''என்னது பின்னே? என் திருமணத்தில் அவருடைய பிடித்தம், பிடித்தமின்மை பற்றிய பிரசினை எங்கே வந்தது? ஓ, இப்போதும் சொத்து தரமாட்டாரே என்பதா? அவரது சொத்து இல்லாவிட்டால், நீ சொன்ன மற்ற தகுதிகள் எல்லாம் உனக்கும் ஒன்றுமில்லைதானா?''

அன்றுவரை அவனிடம் அறிந்திராத படபடப்பு.

ஒரு தரம் சூடுபட்டு விட்டவன், இன்னொரு பெண்ணிடமும் அதே அடியை எதிர்பார்க்கிறான்.

ஆனால் அப்படி ஒரு வேதனையை அவனுக்குக் கொடுக்க அவளால் எப்படி முடியும்?

''நான் அப்படிச் சொன்னேனா சார்?'' என்று அழுத்தத்துடன் கேட்டாள்.

''உன் கேள்விக்கு வேறு என்ன அர்த்தம்?''

''பின்னே, பிடிக்காமலே நம் திருமணத்தை நடத்தி வைப்பாரா?... அல்லது, அவருக்குப் பதில் வேறு பெரியவர்கள் யார் இருந்து திருமணத்தை நடத்தி வைப்பார்கள் என்று... அதைத்தான் கேட்டேன். என் அப்பாவுக்கு இன்னமும் நடமாடுவதே சிரமப்படுகிறதே... வந்து... என் வகையில் வேறு பெரியவர்களும் இல்லை,'' என்று வாயில், மனத்தில் வந்ததையெல்லாம் கூறிச் சமாளிக்க முயன்றாள் ஜெயவாணி.

அவளது விளக்கத்தைத் தினகரன் ஏற்றுக் கொண்டதற்கு அறிகுறியாக அவன் முகம் தெளிந்தது. லேசாக முறுவலித்து, ''நீ எந்த யுகத்தில் இருக்கிறாய், ஜெயவாணி? உடையைப் போலவே மனத்திலும் கொஞ்சம் பழங்காலம்தானா? இந்தக் காலத்தில் திருமணம் நடக்கப் பெரியவர்கள் எதற்கு? ஓர் ஆண், ஒரு பெண், இரண்டு மாலைகள், இந்தப் பக்கத்து வழக்கமாய் ஒரு தாலி, இரண்டு சாட்சிகள், அவ்வளவே. வடபழனி கோயிலில் திருமணத்தை நடத்தி, உடனே அங்கேயே பதிவு செய்துவிட்டால், சுப்ரீம் கோர்ட் கூட அதை அசைக்க முடியாது, தெரியுமா? நம் திருமணமும் அப்படித்தான் நடக்கப் போகிறது,'' என்றான் அவன்.

நம் திருமணம் என்று அவன் சொன்னது மனத்தினுள் இனித்தது. இதை இவன் உணர்ந்து சொல்லியிருப்பானா?

அவனது பாணியிலேயே, ''ஓகோ, அப்படியா? ஆனால் நமது இந்தப் புதிய காலத் திருமணத்தில் ஆசி வழங்கவேணும் யாராவது பெரியவர்கள் மூக்கை நீட்டலாமா, அதுவும் கூடாதா?'' என்றாள் லகுக் குரலில்.

சிறு வியப்புடன் அவளை நோக்கியவன் முகம் சட்டெனப் பிரகாசமுற்றது. ''மைகாட்! இந்த விஷயத்தில் நான் குறிப்பறிய மாட்டாத நன்மரம் என்றல்லவா தோன்றுகிறது! உனக்குச் சம்மதம் என்பதை, அப்பாவுக்குப் பிடிக்குமா என்று ஜாடையாகச் சொல்லியிருக்கிறாய். அது புரியாமல் ஆத்திரப்பட்டு விட்டேனே. கடைசியாக, நீ ஆசி வழங்கப் பெரியவர் தேடிய பிறகுதான், புத்தியில் உறைக்கிறது,'' என்று கூறி நகைத்தான் அவன்.

வாணி உள்ளூரத் திகைத்தாள்.

தினகரன் சொன்னதுபோல, அவள் திட்டமிட்டு, குறிப்பு காட்ட எண்ணி எதையுமே பேசவில்லை. ஆனால் மறுக்கும் எண்ணம் மனத்தில் எழவே இல்லையாதலால் தன்னையறியாமலேயே ஒப்புதலாகவே பேசியிருக்கிறாள் போலும்!

இப்போதும் மறுக்கத் தோன்றவில்லை அவளுக்கு. அவன் இறுக்கம் அகன்று நகைக்கையில் அதை மறுக்க மனம் வரவில்லை.

சொற்கள் தேவையற்ற சம்மதம், மௌனம்.

அதற்கு மேல் தினகரன் திட்டமிடத் தொடங்கினான்.

அன்றைக்கு ஐந்தாம் நாள், புதனன்று காலையில் ஒன்பது மணிக்கு வடபழனியில் திருமணம். திருமண ஏற்பாடுகள், சாட்சிகளை அவன் பார்த்துக் கொள்ளுவான்.

''உன் அப்பா எந்த அளவு குணமாகி இருக்கிறார்? நடமாட முடியவில்லை என்றாயே, திருமணத்துக்கு வர ஆம்புலன்ஸ் ஏற்பாடு பண்ணவா? அல்லது காரில் ஏறி வர முடியுமா? பேசுகிறாரா? அதில் ஒன்றும் பாதிப்பு இல்லையே?''

''இல்லை. ஆனால் அதிகம் பேசுவது இல்லை. என்னைப் பார்த்தாலே குற்றச் சுமையில் குன்றிப் போகிறார். சும்மாவே சுமக்கிறவருக்கு மேலும் தாங்க முடியாத சுமை ஏற்றி விட்டேனே என்று மறுகுவது தான் பெரும் பாதிப்பு என்று எனக்குத் தோன்றுகிறது,'' என்றாள் ஜெயவாணி.

''அதை முதலில் அகற்றுவோம்.'' என்றான் தினகரன் உற்சாகத்துடன். ''நம் ஒப்பந்தத்தில் என் பங்கை முதலில் நிறைவேற்றி விடுகிறேன். அதன் பிறகு மகளின் சுமை பற்றிய கவலை மறைந்து விடுமல்லவா? அதன் பிறகு சீக்கிரம் அவர் நன்றாகி விடுவார் என்று நினைக்கிறேன்.''

தந்தையைப் பற்றிய பேச்சு, அவளது கடமையை அவளுக்கு நினைவுபடுத்தியது. ''நான் ஒன்று சொல்ல வேண்டும் சார்.'' என்று தொடங்கினாள்.

பின்னொரு காலத்தில் அவள் பேராசைக்காரி, பணம் பிடுங்கி என்று குற்றம் சாட்டப்படப் போவது அறியாமல், அதற்கு இந்தப் பேச்செல்லாம் சான்றாகப் பயன்படப் போவது தெரியாமல் சொன்னாள். ''என் குடும்பம் என் சம்பாத்தியத்தில்தான் வாழ்கிறது, சார். இனியும் அவர்கள் பொறுப்பை நான் விட்டு விட முடியாது,'' என்றாள்.

''அவசியமே இல்லை.'' என்றான் தினகரன். ''உன் பொறுப்பு, இனி நம் பொறுப்பாகிறது. அவ்வளவே.'' என்று அவன் கூறவும் அவளது கவலை அகன்றது.

''ரொம்பவும் நன்றி சார்.''

ஆறு வித்தியாசங்கள் விடை

6. ஜடை
5. தண்ணீர்
4. மின் விளக்கு
3. நாற்காலி
2. ஜாக்கெட்
1. வளையல்

# அனுபவம் பேசுகிறது

நடவுவேலை முடிந்து, ஆட்கள் ஒவ்வொருவராக மேடேறத் தொடங்கிய போது, பொழுது சாய்ந்திருந்தது. எப்போதும், சிரிப்பும் கும்மாளியுமாக இருக்கும் நடவாட்கள், அன்று அமைதியாக இருந்தனர். அதன் காரணம், 'பெரியய்யா' என்று அழைக்கப்படும் பெரியவர் ரங்கசாமி அங்கே இருந்தததது தான். 'எல்லோரும் மசமசன்னு நிக்காம, கூலி வாங்கறதுக்கு வரிசையில வந்து நில்லுங்கப்பா! பெரியய்யா காத்திருக்காரங்கல்ல !' என்று சின்னான் குரல் கொடுத்தான். உடனே பெரியவர் அமர்ந்திருந்த கயிற்றுக் கட்டிலுக்கு அருகே ஒரு ஒழுங்கற்ற வரிசை உருவானது.

தன் மடியில் இருந்த பணத்தை எண்ணி எண்ணி தனக்கு முன்னே நீண்ட கரங்களில் அவர் போடத் தொடங்கியபோது வேக வேகமாக வந்த பொன்னன், 'எசமான்! பட்டணத்திலிருந்து சின்னய்யா வந்திருக்காருங்க! அம்மா உங்களை வெள்ளென வர சொன்னாங்க' என்று மூச்சிரைத்தபடி சொன்னான்.

'அப்படியா' என்று நெற்றியை சுருக்கியவர் 'எலேய் சின்னான் ! கூலியை பட்டுவாடா பண்ணிட்டு வீட்டு பக்கமா வா! நான் முன்ன கிளம்பறேன்' என்று புறப்பட்டார்.

முருகேசன்... அவரது ஒரே மகன். நன்றாக படித்து இப்போது சென்னையில் பெரிய பொறுப்பில் இருக்கிறான். ஒவ்வொரு முறை ஊருக்கு வரும்போதும் பெற்றவர்களை தன்னோடு வந்து விடுமாறு அவன் அழைப்பதும், விவசாயத்தை விட்டு விட்டு வர முடியாது என்று இவர் மறுப்பதும், வாடிக்கையாக நடப்பவை.

'வாப்பா முருகேசு! எப்ப வந்தே' என்ற குரல் கேட்டு, பணிவாக எழுந்துநின்ற மகனை பார்த்து 'மருமக வரலையா'? என்று வாஞ்சையோடு விசாரித்தார். 'இல்லீங்கப்பா நான் மட்டும் தான் வந்தேன்' என்றவனிடம் 'எல்லாரும் சவுகரியந்தானே' என்று கேட்டபடியே ஊஞ்சலில் உட்கார்ந்தார் ரங்கசாமி!

'சவுகரியந்தாம்பா ! நான் தான் ஒரு விஷயமா யோசனை கேட்டுட்டு போலாம்னு வந்தேன்.' என்றதும் என்ன விஷயம் என்று கேட்பது போல ஏறிட்டு பார்த்தார்.

'கையில இப்ப கொஞ்சம் பணம் சேர்ந்திருக்குது. அதை பயனுள்ள முறையில முதலீடு செய்யலாம்னு நனைச்சேன். அப்பதான் கூட வேலை பார்க்கிறவங்க, அனுபவ் தேக்கு பண்ணைகளை பற்றி நிறைய சொன்னாங்க. அதுல முதலீடு செய்யலாம்னு யோசனை. எதுக்கும், உங்களைக் கேட்டுட்டு முடிவு செய்யலாம்னு வந்தேன்' என்றான்.

தேக்கின் பெயரைக் கேட்டதும், பெரியவரின் முகம் பிரகாசமானது. உற்சாகத்தோடு சொல்லத் தொடங்கினார். 'முருகேசு, ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க ! நானும் நாப்பது வருசமா பார்க்கிறேன். என் அனுபவத்தில, தேக்கு மரம் எப்பவும் தேவைப்படற ஒண்ணு. அதுவும் வர்ற நாட்களில தேக்கோட மதிப்பு அதிகமாயிட்டே போகும். அனுபவ் தேக்கு



பண்ணைகளைப் பத்தி நானும் கேள்வி பட்டிருக்கேன். தேக்கு மரம் நல்லா விளையற இடங்களா பார்த்துதான் தேக்கு பண்ணைகளை அமைச்சிருக்காங்க. ரொம்ப நவீனமான விவசாய முறைகளை எல்லாம் பயன்படுத்தறாங்க. இருபது வருஷம் கழிச்சி 1440 கன அடி தேக்குக்கு உத்திரவாதம் உண்டாம். அதோட மதிப்பே பல இலட்சங்களுக்கு குறையாம இருக்குமே' என்றதும் முருகேசன் நம்பிக்கையோடு பேசத் தொடங்கினான்.

'அது மட்டும் இல்லப்பா! முதலீடு பண்ணினதும் தேக்கு வளர்ற நிலமும், நமக்கே சொந்தமாயிடுது. ஆறாவது, பன்னிரண்டாவது வருஷங்களில இடைக்கால வருமானமும் கிடைக்குமாம். இதுவரைக்கும் 12,000 பேர் அனுபவ் தேக்குப் பண்ணைகளிலே முதலீடு செய்திருக்காங்க' என்றான்.

'அப்புறம் என்னப்பா யோசனை? நீ எடுத்த முடிவு சரிதான்! நல்ல படியா முதலீடு பண்ணு! எப்படியோ... நீயும், நேரடியா இல்லாட்டியும், அனுபவ் மூலமாகவாவது விவசாயத்துக்கு வர்றியே! ரொம்ப சந்தோஷம்...!' என்றார் ரங்கசாமி.

அவரது குரலில் இருந்த மகிழ்ச்சியில், விவசாயத்தின் மீது அவருக்கு இருக்கும் பிடிப்பு மட்டுமின்றி மகனின் மீது இருக்கும் வாஞ்சையும் வெளிப்பட்டது.

கதாசிரியர் குறிப்பு: இது போன்ற இன்னும் பல அனுபவங்களை அறிய, தொடர்பு கொள்ளுங்கள்:

அனுபவ் பிளான்டேஷன்ஸ் லிமிடெட்
11, சோமசுந்தரம் தெரு, தி.நகர்,
சென்னை 600 017.
தொ.பே. 8254155, 8282833, 8283316, 8282629
ஃபேக்ஸ்: 044-8284967

கிளைகள்: மதுரை: 119, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, 2வது மாடி, மதுரை 625 001. திருச்சி: ஜென்னி பிளாசா, 5, பாரதியார் சாலை, திருச்சி 621 001. சேலம்: சேலம் பிளாசா (சாரதா காலேஜ் எதிரில்), பேர்லான்ட்ஸ், சேலம் 636 016. கோவை: 101–105, D.B. ரோடு, R.S. புரம், கோவை 641 002. வேலூர்: 8, ராமகிருஷ்ணபுரம், கொசப்பேட்டை, வேலூர் 632 001. திருநெல்வேலி: 49C / 11, பாவா பில்டிங், கைலாசபுரம் வடக்கு தெரு, நெல்லை ஜங்க்ஷன் நெல்லை 627 001.

–ADVT.

என்றாள் முகம் மலர.

முகத்தில் யோசனை படிந்தது. ''இனியும் நீ 'சார்' என்று அழைப்பது சரியாய் இராது. என் பெயர் உனக்குத் தெரியும். அதை நீ சுருக்கியோ நீட்டியோ, எப்படி அழைத்தாலும் எனக்குப் பரவாயில்லை. ஆனால்... ஆனால், 'தினு' மட்டும் வேண்டாம்.''

அது– சாயாவின் செல்ல அழைப்பு!

உள்ளூரச் 'சுருக்'கென்று தைத்த போதும் காட்டிக் கொள்ளாமல் கல்லாய் அமர்ந்திருந்தாள் ஜெயவாணி.

இதுவே– இப்படி வேதனையை உள்ளே அடக்கி, சகித்து வாழ்வதே வாழ்க்கை என்று ஆகிவிடப் போகிறதா?




தினகரன், சாயாவின் 'தினு'வில் ஆழ்ந்து நோவதை ஜெயவாணியால் தடுக்கவும் முடியவில்லை. அதைப் பார்த்து அவளது மனம் வெகுவாக வேதனைப் படுவதைத் தவிர்க்கவும் முடியவில்லை. அத்தோடு, அந்த வேதனையை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவும் முடியாமல், ஒரு கையாலாகாத்தனத்துடன் கல்லாய் நின்று சகிக்க வேண்டியதாயிற்று.

இதுவே வாழ்க்கை என்று ஆனால் எப்படித் தாங்குவாள்?

இந்தத் திருமணத்தை மறுத்து ஒதுங்குவதும் இனி முடியாத காரியம். இந்த நிலையிலும் அதை மறுக்க மனமும் இல்லை.

எனவே செய்யவேண்டியதில் கவனத்தைச் செலுத்தினாள்.

தினா, தினகர், கரன், தினகரன்.. தினகர் கொஞ்சம் நன்றாகத் தோன்றியது. ஆனால் அது, பத்துப் பேரோடு இவளும் அழைப்பதுபோலத் தோன்றுமே தவிர தனியாக ஒன்றும் தோன்றாது. அத்தோடு, இவைகளுள் எதுவும் 'தினு'வை மிஞ்சாததோடு, இன்னமும் முதலாளி முதலாளியாகவே தோன்றும் இவனைப் பெயரிட்டு அழைப்பதும் எளிதில் முடிகிற காரியமாக அவளுக்குத் தோன்றவில்லை.

கடவுளே, எவ்வளவு நேரம் தான் அடிபட்ட புலியாய் இவன் தன் காயங்களை நக்கிக் கொண்டிருக்க விடுவது?

வேகமாக யோசித்தாள் ஜெயவாணி. அவளது உதடுகளும் பல்வரிசைகளும் அழகானவை என்று அவளுக்குத் தெரியும்.

''பெயரைச் சொல்லித்தான் அழைக்க வேண்டுமா, பாஸ்?'' என்று சாதுவாய்க் கேட்டாள் அவள்.

(தொடரும்)

---

இ.ப. சிரிப்பு: அஸ்வின்
புகைப்படப் பூரிப்பு: தந்தை ராஜன்

# உயர் வரிசைகளிலே!

## பாம்பே டையிங் பள்ளிச் சீருடைத்துணிகள் அவர்களது எதிர்காலம் போலவே ஒளிமிகுந்தவை.

ஒயிலான உமது சின்னஞ்சிறு ''நிபுணர்களுக்கு'' மிகச்சிறந்ததே தேவை. எனவே, முன்னைவிடச்சிறந்த பள்ளிச்சீருடைத் துணிவகைகளைத் தருகிறது பாம்பே டையிங்.

- பாலியெஸ்டர் ப்ளெண்டெட் - சுருக்கம் விழாது, குறைந்த பட்ச இஸ்திரியே போதும்.
- நீடிப்பவை - நீடித்துழைக்கும், நிறம் மங்காது
- கடுமையான தினத்திற்கு மென்மையாக, வசதியாக இருக்கும்.
- எளிதில் துவைக்கலாம்.

**உங்களுக்குத் தேவையான அதே நிறத்தில் கிடைக்கும்**



பாம்பே டையிங் பள்ளிச் சீருடை அணிவரிசைக்கு உட்பட்டவை :

**துணிகள்**

தூய பருத்தி மற்றும் பாலியெஸ்டர் ப்ளெண்டுகளில் சூட்டிங்ஸ் மற்றும் ஷர்ட்டிங்ஸ்

**ரெடிமேட்கள்**

ரெடிமேட் பள்ளிச் சீருடை ஷர்ட்ஸ் மற்றும் டிரெஸஸ்ஸ். டைஸ், ஸாக்ஸ் மற்றும் பள்ளி பைகள்



**பாம்பே டையிங்**

ஸ்தாபிதம் 1879

SEASONS/BD/154/TAM

# மைவிழி மயக்கம்

## 6

ஜெயவாணி பெயர் சொல்லி அழைக்க வேண்டுமா, என்று கேட்டதைத் தினகரன் கவனியாமல், ''அப்படிக் கட்டாயம் ஒன்றும் இல்லை. டார்லிங், டியர், ஹனி, கண்ணா, ராஜா... ச்சு. ஏதோ ஒன்று. எதுவானாலும் எனக்குப் பரவாயில்லை,'' என்றான் விட்டேற்றியாகவே.

பிடிவாதமாய், அந்தக் குரலைக் கண்டுகொள்ளாமல் ஒதுக்கி, ''எஸ் பாஸ்,'' என்றாள் அவள் பணிவான, ஆனால் தெளிவான குரலில்.

ஒருவழியாகத் தினகரனும் வேறுபாட்டைக் கண்டுகொண்டான்.

''நீ... நீ என்ன சொன்னாய்? பா... பாஸ் என்றா?''

''ம்ம்,'' என்று முறுவலித்தாள் ஜெயவாணி. ''பாருங்கள் சார், உங்களைப் பெயர் சொல்லி அழைப்பது என்றால் எனக்கு ஏதோ ஒரு மாதிரியாய்— உரிமையற்ற காரியம் எதையோ செய்வது போல இருக்கிறது. 'சார்' சரிவராது என்கிறீர்கள் நீங்கள். 'பாஸ்' என்றால் முதலாளியாகவும் கொள்ளலாம். அதே சமயம் ஏதோ அந்தரங்...க... வந்து கொஞ்சம் சொந்தம் போலத் தெரியும் என்று நினைத்தேன். நமக்குள் ஒரு ரகசிய ஜோக் மாதிரி... தனிப்பட்ட குறிப்பு மாதிரி மற்றவர்களுக்குத் தோன்றக் கூடும் என்பது என் எண்ணம். வந்து... உங்கள் விருப்பமும் அதுதான் என்று தோன்றியது. உங்களுக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லையே... வ...வந்து... பாஸ்?''

புகைப்படம் எடுக்கும்போது 'சீஸ்' என்று சொல்லச் சொல்லு வார்கள். அதிகப்படி இளிப்பு இல்லாமல், உம்மென்றும் இல்லாமல் உதடுகள் இளஞ்சிரிப்பில் மலர்வது போல் காட்ட அந்த வார்த்தையைச் சொல்லும்படி கூறுவது.

இப்போது ஜெயவாணியின் இந்த 'பாஸ்' முடிவிலும், அவளது ரோஜா இதழ்கள் லேசாகப் பிரிந்து, முத்துப் பற்கள் மின்னலடிப்பதை வியப்புடன் நோக்கினான் தினகரன்.

பார்வை அவளது உதடுகளிலேயே நிலைத்துவிட, ''இ...இல்லை,'' என்று அவனது வாய் தன் பாட்டில் முணுமுணுத்தது.

சில விநாடிகளே என்றாலும் சாயாவை மறக்கடித்துவிட்ட மகிழ்ச்சியில் மிதந்தாள் அவள்.

அவளையே வென்று விட்ட உணர்வு!

ஆனால் சாயாவை ஜெயிப்பது அவளது சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம் என்பதை, ஜெயவாணி பட்டுத்தான் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தது.

மறுநாள் வருவதாக அந்த பைனான்ஸ் கம்பெனிக்குத் தினகரன் டெலிபோன் செய்ததை அறிந்திருந்த போதும், அது தொடர்பான காகிதங்கள் அனைத்தையும் எடுத்து வருமாறு அவளிடம் அவனே சொல்லியிருந்தபோதும், ஜெயவாணி வீட்டில் எதையும் மூச்சுகூடக் காட்டினாளில்லை.

ஒருவேளை, தினகரன் மனம்

ரமணிசந்திரன்

மாறிவிட்டால்? அல்லது அந்தச் சாயாவுக்கே புத்திவந்து விட்டால்?

ஆசைகாட்டி ஏமாற்றினாற் போல ஆகிவிடக்கூடாது என்றே ஒன்றும் சொல்லக் கூடாது என்று முடிவு செய்திருந்தாள்.

வீடு சேர்ந்ததும் ஏக்கமும், நிராசையுமாக நோக்கிய தந்தையிடம், ''பணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டேன். அனேகமாக நாளைக்கே கட்டிவிடுவேன்,'' என்று மட்டும் சொன்னாள்.

வாசீசன் தூங்கிவிட்ட பிறகு, ''அப்பாவிடம் சும்மா தானே அக்கா, சொன்னாய்?'' என்று கண்களில் நீர் மல்கக் கேட்ட தங்கையிடம் மட்டும் சொல்லிவிடலாமா? என்று ஒரு கணம் நினைத்தாள். ஆனால் அவளும்தான் ஏமாந்து விடக்கூடாது. அத்தோடு என்ன, ஏது என்று துருவவும் இடம் கொடுக்கக் கூடாது.

எனவே, அவள் தோளைத் தட்டி, ''காட் ப்ராமிஸ், சுபா. நாளைக்குப் பணத்தைக் கட்டிய ரசீதைக் கொண்டு வந்து காட்டுகிறேன், பாரேன்,'' என்று ஆறுதலாகப் பேசி அவளை உறங்கவைத்தாள்.

தினகரனின் மனம் மாறிவிடக் கூடாது கடவுளே, என்று வேண்டிக் கொண்டு அதன் பின்னரே அவளும் படுத்துக் கண்ணயர்ந்தாள்.

மறுநாள் விடிந்து எழும் போது ஜெயவாணியின் உதடுகளில் அதே பிரார்த்தனைதான். எழுந்ததும் குளித்து விட்டு தாயின் படத்துக்கு முன் நின்று ''அம்மா கடவுளிடம் சொல்லி என் கோரிக்கையை நிறைவேற்றுங்கள்,'' என்று வேண்டினாள்.

உள்ளே ரயில் ஓடுவதைத் தந்தையும் தங்கையும் அறியாதபடி மறைத்து முறுவலித்தபடியே விடை பெற்றுக் கிளம்பினாள்.

இந்த இக்கட்டுகள் எல்லாம் சுபாவின் லீவு நாளில் நேர்ந்திருப்பதே பெரிய உதவி, அதுவே கடவுளின் கருணை இருக்கிறது என்பதற்கு அடையாளம். அதனால் தினகரனும் மனம் மாறவேமாட்டான் என்று தனக்குத்தானே தைரியம் சொல்லிக் கொண்டாள்.

'தினகரன் மாறிவிட்டால் இந்தப் பணத்தைக் கட்ட முடியாது என்பதற்காக மட்டுமா இந்தப் பயம் பயப்படுகிறோம்' என்று உள்ளூர அதிகப் பிரசங்கித்தனமாக எழுந்த கேள்வியை மண்டையில் தட்டி



அடக்கினாள். இருக்கிற தொல்லைகளுக்கு மத்தியில் இருந்த கேள்வி வேறா என்று அலுத்துக் கொண்டபடியே அலுவலகப் படியேறினாள்.

அங்கே, அவளது அச்சங்கள் எல்லாம் அனாவசியம் என்று சொல்லாமல் சொல்வது போலத் தினகரன் முன்னதாக வந்து அவளுக்காகக் காத்திருந்தான். அவளைக் கண்டதும், லேசாகப் புன்னகை செய்தான்.

அந்தச் சிறு புன்னகையில், அவ்வளவு நேரம் அனுபவித்த அச்சங்களும், அலுப்பும் கரைந்து மறையக் கண்டாள் ஜெயவாணி.

''வா, ஜெயவாணி. இன்று பெரும்பாலும் நாம் இருவரும் வெளியே சுற்ற வேண்டியிருப்பதால், காலையிலேயே வந்து முக்கியமான வேலைகளை முடித்துவிட்டேன். இனி மற்றது மானேஜரிடம் சொல்லி விடலாம். பைனான்ஸ் கம்பெனி பேப்பர்கள் கொண்டுவந்திருக்கிறாயல்லவா?''

பேசமாட்டாமல் தலையசைத்து விட்டு, அந்தக் காகிதங்களை எடுத்து அவனிடம் கொடுத்தாள் அவள்.

கடன் பத்திரத்தின் ஜெராக்ஸ், கூடவந்த கடிதம் இரண்டையும் படித்துப் பார்த்துவிட்டு, அவனது ப்ரீஃப் கேசினுள் வைத்தான்.

''வா வா. பைனான்ஸ் கம்பெனி எம்.டி. வரதன் எனக்காக வந்து காத்திருப்பார்,'' என்று அவசரப்படுத்தி அவளைக் கிளப்பிக் கொண்டான்.

அவன் சொன்னது போல வரதன் வந்திருந்தார்.

''காலையில் பொதுவாக நான் இங்கே வருவதில்லை, மிஸ்டர் தினகரன். பெரிய இடங்களில் சீட்டு பிடிக்க, வசூல் பண்ண என்று போய் விடுவேன். மாலையில் என்றால்

# ஒற்றைக் கண்ணாடி

தகுந்த மாப்பிள்ளை அமையாமல் தடைப்பட்டுக் கொண்டே வந்த திரைப்பட கவர்ச்சி நடிகை ஜெயமாலினியின் திருமணத்தை நிச்சயிக்க தமிழக முதல்வர் முயற்சி எடுத்து வெற்றியும் பெற்றுள்ளாராம். முதல்வரின் பாதுகாப்புப் படையைச் சேர்ந்த காவல் அதிகாரி பார்த்திபன் என்பவர் மாப்பிள்ளையாம். திருப்பதியில் திருமணம் நடைபெறுமாம்.

அ.தி.மு.க. அமைச்சர்களைக் கிண்டலடிப்பதில் நாட்டமுள்ள வாழப்பாடியார், ''திராவிடர் இயக்கப் பரம்பரையில் வளர்ந்ததாகக் கூறிக் கொள்ளும் அமைச்சர் எஸ்.டி.எஸ். தன்மானத்தை விட்டு முதல்வரின் பிரசார வண்டியில் தொத்திக் கொண்டு போகலாமா? என்று சில நிருபர்கள் மத்தியில் சொல்லப் போக, ஒரு நிருபர், ''திராவிடர் இயக்கத்தின் மீதுள்ள அசைக்க முடியாத பற்றினால்தான், தன் பிடியை விடாமல் இறுகப் பற்றிக் கொண்டு போனார் என்றும் சொல்லலாம் அல்லவா?'' என்று திருப்பிக் கேட்கவும் சிரித்துக் கொண்டே நகர்ந்தாராம் வாழப்பாடியார்.

உயர்நீதிமன்ற வளாகத்தில் போஸ்டர் ஒட்டிய சம்பவத்தில் இளமுருகன் பெயர் கொண்ட நகர அரசு வக்கீல் சம்பந்தப்பட்டிருப்பதாக உளவுத் துறை மூலம் மத்திய அரசுக்குத் தகவல் போய்விட்டது என்பதையறிந்த மாநில அரசு, அவசரம் அவசரமாக ஓய்வு பெற்ற நீதிபதியொருவரை மரபை மீறி அந்தப் பதவியில் நியமித்துள்ளதாம்.

வசூலைக் கணக்குப் பார்ப்பது, சீட்டு ஏலம், அப்புறம் கணக்கு முடிப்பது என்று இரவு வரை அசைய மாட்டேன்,'' என்று அடக்கமாகவே பெருமை அடித்தார் அவர். சொன்ன பேச்சு தவறாமல் ஆயிரம் ரூபாயைக் கமிஷன் என்று திருப்பியும் கொடுத்தார். ''இனிமேலாவது யாரையும் நம்ப வேண்டாம். அதிலும் பண விஷயத்தில் அடியோடு நம்ப வேண்டாம் என்று உன் அப்பாவிடம் சொல்லம்மா.'' என்று இலவசமாய் அறிவுரை வழங்கி வழி அனுப்பி வைத்தார்.

ரத்து செய்த கடன் பத்திரத்தைக் கைப்பையுள் வைத்தபோது அவளுக்கு அப்பாடி என்றிருந்தது. என்றைக்காவது அந்தச் சொக்கலிங்கம் அங்கிளைப் பார்க்க முடிந்தால் அவர் முகத்தில் இதை விசிறி அடிக்க வேண்டும்.

பைனான்ஸ் கம்பெனியில் திருப்பித் தந்த ஆயிரம் ரூபாயை தினகரன் அவளிடமே கொடுத்துவிட்டான். ''உனக்குச் சில்லறைச் செலவுகள் எவ்வளவோ இருக்கக் கூடும். எப்படியும் நான் உனக்கு முப்பதாயிரம் தருவதாகத்தானே சொன்னேன்? அது அப்படியே இருக்கட்டும்.'' என்று கூறி அதை அவள் பையினுள் அவனே வைத்தான்.

சற்று நேரம் பேசாமலே காரை ஓட்டிய தினகரன், ''உன் வீட்டில் உன் அப்பா, தங்கை இருவரும் சேதியை எப்படி எடுத்துக் கொண்டார்கள்?'' என்று வினவினான்.

''இ... இன்னமும் சொல்லவில்லை சார்,'' என்றாள் அவள் தயக்கத்துடன்.

''ஏன்?''

''அது... வந்து, ஒருவேளை சா... சாயா மனம் மாறித் திரும்பி வந்தால்... என்று...''

காரை சாலை ஓரமாகச் செலுத்தி நிறுத்தினான் அவன். ஸ்டியரிங் வீலில் கை அழுந்தச் சற்று

## அறிவியல்

ஜெனட்டிக் இன்ஜினியரிங் செல் ப்யூஷன் ரிகாம்பினண்ட் டி.என்.ஏ. போன்ற இயல்களினால் எதிர்காலத்தில் சாத்தியங்கள் இவை. விவசாயத்தில் அமோக விளைச்சல் கொடுக்கும் பயிர்களைக் கொண்டு வரலாம். பழைய பேப்பரை சர்க்கரையாக மாற்றக் கூடிய பாக்டீரியா கண்டுபிடிக்கப்படலாம். எண்ணெயை உறிஞ்சும் பாக்டீரியா ஒன்று கண்டு பிடிக்கப்பட்டு கடலில் எண்ணெய் கொட்டிவிட்டால் மீன்களுக்கு மூச்சு திணறாமல் கரைத்துவிடலாம். மருத்துவத்தில் வியாதிகளே இல்லாது நீக்கப் படலாம். போர் அடிக்காதோ?

பேட்ஸியன் மிமிக்ரி என்று ஒரு சங்கதி உண்டு. விஷமில்லாத பூச்சிகள் விஷமுள்ள பூச்சிகள் போல வேஷம் மாறிக் கொள்வது. குறிப்பாக வண்ணத்துப் பூச்சிகளில் இது சகஜம். மனிதர்களில் கூட இப்போது பேட்ஸியன் மிமிக்ரி வந்து கொண்டிருப்பது அறிவியலுக்கு அப்பாற்பட்ட விஷயம்.

சர்வைவல் ஆஃப் தி ஃபிட்டஸ்ட் 'மிகுதகுதியாளர்கள் பிழைப்பது' என்னும் சித்தாந்தத்தை முதலில் சொன்னது டார்வின் அல்ல, ஹெர்பர்ட் ஸ்பென்ஸர். இது அரசியலிலும் வந்துவிட்டதை ஸ்பென்ஸர் தெரிந்திருக்கவில்லை.

நாம் குரங்கிலிருந்து எழுந்து ஹோமா ஸேப்பியன்ஸ் என்னும் மனித ஜாதியானது எப்போது என்பதைப் பற்றி விவரங்கள் வேறுபடுகின்றன. லட்சத்து இருபதாயிரம் வருஷங்களிலிருந்து நாற்பதாயிரம் வருஷம் முன் வரை சொல்கிறார்கள். இவ்வளவு வருஷமாகியும் குரங்கு புத்தி போகவில்லை.

—எஸ்

நேரம் அப்படியே அமர்ந்திருந்தான்.

சாயாவின் நினைவில் இருக்கிறான் என்பது நன்றாகவே புரிந்தது. அந்த நினைவின் தாக்குதல் எவ்வளவு பலமாக இருந்தால் கார் ஓட்டுவதைக்கூட நிறுத்தியிருப்பான்!

அவளது நினைவைத் தினகரனிடம் அவளே கிளப்பிவிட்டு விட்டாளே! இனி எந்தக் காரணம் கொண்டும் அவன் முன்னிலையில் சாயாவின் பெயரை உச்சரிக்கவே கூடாது என்று உறுதி செய்துகொண்டாள் ஜெயவாணி.

சற்றுப் பொறுத்து, ஒன்றும் பேசாமலே, ஒரு பெருமூச்சுடன் தினகரன் காரை எடுக்கவும் ஜெயவாணி மேலும் சோர்ந்தாள்.

பெரிதாக, 'என்னை மணந்து கொள்ள வேறு ஆள் இருக்கிறது' என்று காட்டப் போவதாகச் சொன்னானே, அந்த வீராப்பெல்லாம் அவளைக் கண்டாலே மறைந்துவிடும் என்று அர்த்தமா?

இந்த நாலு நாட்களில் எப்போது வேண்டுமானாலும் அது நடக்கக் கூடும்தானே? இவனை நம்பி இந்தத் திருமணம் பற்றி வீட்டில் எப்படிச் சொல்வது?

முதலில், என்னவென்று சொல்வது?

உண்மையைச் சொல்வது முடியாத காரியம். ஒன்று, பணத்துக்குப் பலியாகிறாயா என்பார்கள். அடுத்து, எவளோ ஒருத்தி வேண்டாம் என்றதைப் பொறுக்க நீ என்னக்கா மட்டம் என்று சுபா சீறுவாள்.

காதல் அது இது என்று சொல்லவும் இப்போது தயக்கமாக இருந்தது. அந்தச் சாயா வந்து, சுண்டுவிரல் அசைத்தால் பின்னாலே ஓடிவிடுவான் போலிருக்கிறதே! இவனை நம்பி எப்படிச் சொல்வது?

இந்த நாட்டில் பிறந்ததை நினைத்தே ஜெயவாணி எரிச்சல் பட்டாள். இதுவே மேல்நாடு என்றால் சொல்லியாக வேண்டிய கட்டாயமே கிடையாது. அவள் பாட்டில் போய்த் திருமணம் செய்து கொண்டு வந்து, இவன்தான் கணவன் என்றால் ஆகாவென்று சந்தோஷமாய் வாழ்த்தி விடுவார்கள்.

இங்கேயானால் ஊருக்குச்

---



பரிசோதனைக் கூடம்: முதலிரவு அறை.

கோவில் மாடு: பெண்கள் கல்லூரிகளைச் சுற்றுபவர்.

அழகிப் போட்டி: பகிரங்கமாக 'ஜொள்' விடுவது.

இடைவேளை: இடுப்பில் முத்தமிடும் வேளை.

பத்திரிகை: இரவல் வாங்கிப் படிப்பது.

எவரெஸ்ட்: விலைவாசி.

புருஷ லட்சணம்: சமைப்பது, துவைப்பது?

சொல்ல வேண்டும், உறவுக்குச் சொல்ல வேண்டும், குறைந்தபட்சப் குடும்பத்தினருக்காவது சொல்லியே ஆகவேண்டும்.

லேசாகத் தொண்டையைச் செருமிக்கொண்டு, ''நீ வீட்டில் சொல்லாவிட்டாலும், நான் என் தந்தையிடம் சொல்லி விட்டேன்,'' என்றான் தினகரன்.

ஒருவழியாய்ச் சமாளித்து முடித்து, இவனுக்குப் பேச்சு வர இவ்வளவு நேரம் ஆகியிருக்கிறது!

உள்ளே பொருமியதை ஒதுக்கி, அவன் பேச்சைக் கவனித்தாள் ஜெயவாணி.

''இப்போது அவரைப் பார்க்கத்தான் போய்க் கொண்டு இருக்கிறோம்,'' என்று உடனேயே அவள் வயிற்றில் புளியைக் கரைத்தான் அவன்.

''இ... இப்போதேயா?'' என்றாள் அவள் ஈன சுரத்தில்.

லேசாகத் திரும்பி, ஒரு பார்வையை அவளிடம் செலுத்தினான் அவன். ''ஏன்? என்ன பயம்? நான்தான் கூடவே இருப்பேனே. அத்தோடு இனி அதிக நாளும் இல்லையல்லவா?''

அது உண்மைதான். இவனும் கூடவே இருக்கக்கூடும்தான். ஆனால் சாயா போன்ற கடினமான வஸ்துவையே விரட்டியடித்த மனிதருக்கு இவள் எம்மாத்திரம்?

உண்மையே. இவன்கூட இருப்பான்தான். ஆனால் சாயா போன்ற கடினமான பெண்ணையே விரட்டிவிட்டவரல்லவா அவனுடைய தந்தை!

''ஒருவேளை சாயாவோடு அவர் பேசியபோது தினகரன் அருகே இல்லையோ? தெரிந்துகொள்ள வேண்டும் போலத் தோன்றிய போதும், அவனிடம் சாயாவின் பெயரை எடுக்க மனமற்றுக் கேளாமல் விட்டாள்.

(தொடரும்)

# மைவிழி மயக்கம்

ரமணி சந்திரன்



7

ஜெயவாணி தினகரனிடம் சாயாவின் பெயரை எடுக்க மனமற்றுக் கேளாமல் விட்டாள்.

ஆனால் இன்னோர் எண்ணம் தோன்றி அவளைத் திடப்படுத்தியது. தகப்பனாரைப் பார்க்கவென்று அழைத்துப் போகிறவன் இடையில் மாறிவிட மாட்டான்.

இந்தத் திருமணம் நடக்காமல் போய்விடுமோ என்று சற்று அதிகப்படியாகவே கவலைப்படுவதை ஜெயவாணி உணர்ந்தே இருந்தாள். ஆனால் ஏதோ, பெரிய புதையல் ஒன்று எதிர்பாராமல் கிடைத்திருப்பது போலவும், அதை யார் எப்போது வந்து பிடுங்கிக் கொள்வார்களோ என்று அஞ்சிக்கொண்டே இருப்பது போலவுமான உணர்வை அவளால் தவிர்க்க முடியவில்லை. எந்நேரமும், விழித்திருக்கும் ஒவ்வொரு நிமிடமும் நெஞ்சுக்குள் ரயில் தடதடத்துக் கொண்டேதான் இருந்தது. சில சமயங்களில் அதிவேகமாய். சில சமயங்களில் மெதுவாய். ஆனால் ஓடுவது மட்டும் நிற்கவே இல்லை.

தினகரன் வேகமாகவே காரை ஓட்டியபோதும் அவன் தந்தையின் வீட்டை அடைய ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாகவே ஆகிவிட்டது. செல்லும்போது அவன் தன்னுடைய தகப்பனாரைப் பற்றிச் சொன்னான்.

பிறந்து சில மணி நேரங்

''போதும், போதும். இனி மேல் வெறித்தால் முழி கழன்று விடப் போகிறது.''

# கவிதை மூலை



## சொரணை

அவனினும் பெரிய உடம்பும்
அவனுக்கதிகமான வலுவான
கால்களும்
அவனுடைய மூளையைப் போன்றே
கூரிய கொம்புகளும்
அவன் உடல் பலத்தில்
பத்துமடங்கிற்கதிகமான பலமுப
பெற்றிருந்தும்;
அதன் மூளையில் இல்லாமல்
சொரணை
மூக்கில் இருப்பதால்
பிழைக்கிறான் அவன்.

–இலக்குமி குமாரன் ஞானதிரவியம்,

களுக்குள்ளாகவே தாயை இழந்தவன் தினகரன். தந்தை தாமோதரன் மறுமணம் செய்துகொள்ளவில்லை. மனைவியை மறக்க முடியாததால் என்பது தினகரனின் ஊகம். மகனிடம் பிரியமாய் இருந்தார். ஆனால் ரொம்பவும் செல்லம் கொடுத்துக் கொஞ்சியது கிடையாது.

மகனின் விருப்பம் போலப் படிக்க வைத்தார். படித்து முடித்து அவன் திரும்பி வந்ததும் தொழிலில் பழக்கி, அவன் கையில் கொடுத்து விட்டு ஒதுங்கிக் கொண்டார். ஒரே நிறுவனத்துக்கு இரண்டு தலைமை அவசியம் இல்லை என்பதோடு வீண் தொல்லைகள் நேரக்கூடும் என்பது அவர் எண்ணம்.

பல ஆண்டுகாலமாகவே அவர் இதைத் திட்டமிட்டிருக்க வேண்டும். சென்னையை அடுத்து நாற்பது கிலோ மீட்டர் தொலைவில் ஒரு பெரிய விவசாயப் பண்ணை ஏற்கெனவே அமைத்து வந்திருக்கிறார். அவ்வப்போது சென்று கவனித்து வந்தது, இப்போது ஓய்வுகால வாழ்க்கை என்று அங்கேயே குடியேறி விட்டார்.

தொழில் விஷயமாகவோ, மற்றதோ நேரில் பேசுவது என்றால் தினகரன்தான் பண்ணைக்குச் சென்று அவரைப் பார்க்க வேண்டும். மற்றபடி அவர் லேசில் நகர்ப் பக்கம் வருவதில்லை. எப்போதாவது...

சொல்லிக்கொண்டே வந்தவன் முகம் சட்டெனக் கறுத்தது.

ஆக, சாயாவைத் தினகரன் தந்தையிடம் அழைத்துப் போகவில்லை. தாமோதரன்தான் நகர்ப்புறம் சென்று அவளைப் பார்த்துப் பேசியிருக்கிறார்! அந்தப் பேச்சு, தினகரனுக்குப் பெரும் இழப்பாக முடிந்திருக்கிறது.

தினகரனைப் பார்த்தால் ஜெயவாணிக்குப் பாவமாகத்தான் இருந்தது. ஆனால் தாமோதரனை ஒரேயடியாகக் குற்றம் சாட்டவும் அவளால் முடியவில்லை. அவரால் தானே சாயாவின் சுயரூபம் வெளிப்பட்டது!

சற்று நேரம் மவுனமாகக் கார் ஓட்டியபின், ''அதனால்தான், சிங்கத்தை அதன் குகையிலேயே சந்திப்பது மேல் என்று உன்னை அவரிடம் அழைத்துப் போகிறேன்,'' என்றான்.

''ஒன்று கேட்கலாமா?''

''என்ன?''

''உங்கள் அப்பாவின் சம்மதம் ங்கள் திருமணத்துக்கு அவசியமே ில்லை என்று நேற்று சொன்னீர் ள். இப்போது...''

''இப்போதும் அவரது சம் தம் பெறுவதற்காக உன்னை ங்கே அழைத்துப் போகவில்லை. வரிடம் உன்னைக் கூட்டிப் போகி றன். ஒரு தட்டு தட்டிவிட்ட ்ரலேயே என் சொந்த வாழ்வை வர் கையில் ஒப்புவித்து விட்டுச் ம்மா இருந்துவிட மாட்டேன் ன்று காட்டப் போகிறேன். அவர் ன்ன முயன்றாலும் அந்தக் காப்பி ஸ்டேட் பெண்களுக்கு என் வாழ் ில் இடம் கிடையாது என்று காட் ப் போகிறேன். என் சொந்த வாழ் ில் தலையிட்டால் திருப்பிக் கொடுப் பன் என்பதைத் தெரிய வைக்கப் பாகிறேன். உன்னிடம் முதலிலேயே சொன்ன மாதிரி பாடம் கற்றுக் கொடுக்கப் போகிறேன்.''

இப்படி ஒரு காரணத்துக்காக வளுக்குத் திருமணமா? ஆனால் பிச்சைக்காரர்களுக்குத் தேர்ந்தெடுக் ும் உரிமை ஏது?

இவன் தந்தை வேறு என்ன சொல்லப் போகிறாரோ? பெரு மூச்சை அவளால் அடக்கமுடிய வில்லை.

''என்ன சொல்லுவார், உன்னை விரட்ட ஏதேனும் சொல்லு வார். சொல்லிப் பார்த்துவிட்டு, நீ அசையாமல் நிற்பதைப் பார்த்து அவர் அசரப் போகிறார்.''

''அதெப்படி அவ்வளவு நிச் சயமாகச் சொல்லுகிறீர்கள்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் ஜெய வாணி.

''இதுவே நீயில்லாமல் வேறு யாராவது என்றால் 'ஃபிஷ்ஷிங் ஃபார் காம்பளிமென்ட்ஸ்' என்று எண்ணுவேன். ஆனால் நீ அப்படிப் பட்டவள் இல்லை. ம்ம்... எப்படிக் கண்டுகொண்டேன் என்று கேட் கிறாயா? முதலில் உன்னைப் பற்றி மிஸஸ் வேதா சொன்னது. அப்புறம் வேலை செய்த விதம் கவனித்திருக் கிறேன்... உன் பதவியின் அதிகாரத் தைக் கொண்டு எத்தனையோ வேலைகளை நீ மற்றவர்களைக்



கொண்டு செய்திருக்க முடியும். வேதாவே உன்னைச் செய்ய வைத்த தில்லையா? ஆனால் நீ அதுபோலச் செய்தது இல்லை. வேலைக்கு டிமிக்கி கொடுப்பதோ சாக்குப் போக்கு சொல்வதோ கிடையாது. செய்து முடிப்பதாக ஒப்புக் கொண்டதை முடிக்காமல் வீடு சென்றது இல்லை. யாரையும் கவர்ந்து இழுக்க முயன்றது இல்லை. புறம் சொன்னது இல்லை. இப்படிப் பல. இந்த நேர்மை காரணமாகவே நீ பின்வாங்க மாட்டாய். அதிலும் பணத்தைக் கொடுத்து ஒப்பந்தத்தில் என் பங்கை நிறைவேற்றிய பிறகு உன் நேர்மை உன்னை மாறவிடாது என்பது எனக்குத் தெரியும்.''

'இதற்காகத்தான் இவ்வளவு அவசரமாகப் பணம் கட்டினானா?' எதிலேயோ ஏமாந்து விட்டதுபோல உணர்ந்தாள் ஜெயவாணி.

இருபுறமும் நெருக்கமான முள்கம்பி வேலி கண்ணுக்கெட்டும் தூரம் வரை ஓட, நடுவில் அமைந்திருந்த அகன்ற கேட்டுக்குள் காரை நிறுத்தினான் தினகரன். கேட்டின் மேல் வளைவில் 'காம்யகம்' என்ற பெயர் அழகாக இணைக்கப்பட்டிருந்தது. மகாபாரதம் பிடிக்கும் போலும் என்று எண்ணிக் கொண்டாள் ஜெயவாணி.

ஹார்ன் அழுத்துமுன் கதவுகள் வேகமாகத் திறந்தன.

முடிந்த அளவு பற்களைக் காட்டி, ''நல்லா இருக்கீங்களா, சின்னய்யா?'' என்றான் கதவைத் திறந்தவன்.

புன்முறுவலோடு கூடிய சின்ன குசல விசாரிப்புடன், காரைக் கிளப்பினான் தினகரன்.

தர்மோதரன், தினகரன் அளவு உயரம் இல்லை. ஆனால் குள்ளமும் இல்லை. கண்கள் கூர்மையாக இருந்தன. அந்தக் கண்களால் அவளை ஏற

இறங்கப் பார்த்தபோது, அவளை யும் அறியாமல் தினகரனிடம் ஒண்டி னாள் ஜெயவாணி.

''சாப்பாட்டுக்கு இருக்கப் போகிறாயா?'' என்று மகனிடம் திரும்பிக் கேட்டார். ''இருப்பதா னால் தவசிப்பிள்ளையிடம் சொல்லி விட்டு, அப்படியே வாய்க்கால் வழியே பத்து நிமிடம் நடந்துவிட்டு வா.''

''சாப்பிடவில்லை. அத னால்...''

''அப்படியானால் சும்மா கொஞ்ச தூரம் போய்விட்டு வா. நான் இவ... இந்தப் பெண்ணுடன் சற்றுப் பேசவேண்டும்...''

ஆனால் தினகரன் அசையா மல் நிற்கவும், ''ஏன்? என்ன தயக் கம்? நான் என்ன புலியா அல்லது சிங்கமா? இவளை அடித்துக் கடித் துத் தின்றுவிட? அல்லது இவள் கழுத்தை நெரித்துக் கொன்றுவிடு வேன் என்று பயப்படுகிறாயா?''

தாமோதரன் பேசப் பேச ஜெயவாணி நிமிர்ந்தாள். இருந் திருந்து இவரும் ஒரு மனிதப் பிறவி தானே? இவரால் அவளை என்ன செய்துவிட முடியும்?

நிமிர்ந்து தினகரனைப் பார்த்து லேசாக முறுவலித்தாள். அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கிவிட்டு, எதிரொலி போல அவன் முகத்திலும் புன்னகை பரவத் திரும்பி நடந்தான் தினகரன்.

தன் நிதான நடையுடன், தினகரன் கம்பீரமாகச் செல்லு வதைப் பார்த்து ரசித்தாள் அவள்.

''போதும் போதும். இதற்கு மேல் வெறித்தால், முழி கழன்று அவன் பின்னே உருண்டு ஓடிவிடப் போகிறது.''

ஓர் இனிய சாரத்தின் இடையே அபஸ்வரம் தட்டினாற்போல அவ ளுக்கு எரிச்சல் வந்தது. அவள், அவளை மணக்கப் போகிறவனைப்

## தெரியாத பெயர் விவரம்



பெயர் : பக்கிரிசாமி

வயது : 42

தொழில் : சைக்கிள் ரிப்பேர் செய்தல்

இடம் : டிரைவ்—இன்—உட்லண்ட்ஸ் ஓட்டல் அருகே. நடை பாதையில்.

வீடு : கிடையாது. (நடைபாதை வாழ்க்கை)

மனைவி : உண்டு. பூ வியாபாரம்

குழந்தைகள் : ஐந்து

வேலைநேரம் : காலை 6 முதல் இரவு 7 மணி வரை

வருமானம் : ரூ. 15 முதல் 20 வரை (ஒரு நாளைக்கு)

(ஐந்து வருடங்கள் முன்பு சைக்கிள் ரிக்‌ஷா ஓட்டியவர். ஒரு விபத்தில் வண்டி போயிற்று. இடுப்பில் அடி. 'ரிக்‌ஷா இப்போது கிடைத்தால் பிழைத்துக் கொள்வேன்.')

— எஸ்.ஜி.

படம்: கே.எஸ். அருணாசலம்

பார்க்கிறாள், இதில் இவருக்கு என்ன வாம்?

அகத்தைச் சற்றும் மறைக் காமல் முகத்தில் காட்டினாள் ஜெய வாணி.

''அவ்வளவு திடமா? இரண்டு நாட்களில் நீ இரண்டாவது! அவனை நம்பியா இந்தச் சிலுப்பல்?'' என் றார் தாமோதரன் ஏளனமாக.

''அது யாரால், ஏன் எப்படி என்று தெரிந்ததாலும் இருக்கலாம் இல்லையா? ஏன் சார் இப்படிச் செய்கிறீர்கள்? அவரது திருமணம் அவருடைய சொந்த விருப்பம். இதில் தலையிட நீங்கள் யார்?'' என்றாள் அவள் துடுக்காகவே.

''ம்ம்... நானா? என்னையா யார் என்று கேட்கிறாய்? சொல் கிறேன், கேட்டுக்கொள். நான் அவ னுடைய அப்பன்; அவன் இந்த உலகத்தில் பிறவி எடுக்கக் காரண மான தகப்பன்; துள்ளித் திரிகின்ற காலத்திலே அவன் துடுக்கை அடக் கிப் பள்ளிக்கு அனுப்பி வைத்த பாதகன்; அவனுக்கென்று அயராமல் உழைத்து, சொத்து சேர்த்து வைத்த பித்தன்! போதுமா விளக்கம்?''

(தொடரும்)



"நீங்க ஓவரா சிகரெட் பிடிப் பீங்களா?"

—பா. ரவிச்சந்திரன்




கருத்து: ப்ரியா

இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. விடை: 109'ம் பக்கம்.






''சோளிக்குள் என்ன இருக்
சோளிக்குள் என்ன இருக்
மாராப்பில் என்ன இருக்
மாராப்பில் என்ன இருக்
சோளிக்குள் தேகம் இருக்
மாராப்பில் மனசு இருக்கு

வைரமுத்துவின் வைரவரிகள் காட் யாகிக் கொண்டிருந்தது.

கல்நாயக், மூன்று துருவங்கள் என் பெயரில் தமிழாக்கப்படுவது தெரியும்தானே?

சுமார் 30 நடனப் பெண்கள் முன்பக்கம் மாராப் இல்லாமல் பின்பக்கம் மட்டும் மறைக்கப்பட்ட கவர்ச் யான வடஇந்திய உடையில் ஆடிக் கொண்டிருந்தா கள். (கண் கொள்ளாக் காட்சி, அதாவது மன கொள்ளாக் காட்சி.)

நடித்துவிட்டு ஜிலுஜிலு உடையில் என்ன நோக்கி வந்தார் சித்தெறும்பு. அவருடைய வழக் மான இதயத்தை ஸ்பரிசிக்கும் புன்னகை வீசினார்.

மேக்கப் ரூமுக்கு நடந்தபடியே எ னுடன் பேசினார். ''சித்... சுகன்யா, உங் ளுக்கும், ஓர் அரசியல்வாதிக்கும்...'' என்று நா ஆரம்பிக்கும்போதே அவருடைய நடை நின்றது.

''பொறாமை, எல்லாம் பொறாமை. ஒ ஆண்டில் சிறந்த நடிகை, கலைமாமணி விருதெ லாம் எனக்குக் கிடைத்ததால் யாரோ வேண் மென்றே புரளியைக் கிளப்பி விடுகிறார்கள்,'' என் கண்ணாடிக்கு அழகு காட்டிக் கொண்டு, லேகியம் மாதி ஏதோ ஒன்றை வாயில் போட்டுக் கொண்டார்.

''ஏதேனும் நாட்டு மருந்தா?''

''இல்லை. இல்லை. நிறைய படப்பிடிப்பில் இர பகலாகக் கலந்து கொண்டதால் கண்கள் எல்லாம் சிவந் விட்டன. அதனால் உடம்புக்கு நல்லது என்று ஒருவர் குல்கந் வாங்கிக் கொடுத்தார்.''

''யார் அந்த அரசி...''

''ச்சே... அந்த அரசியல்வாதியை நான் பார்த்ததுகூட இல்லை. குல்கந்து வாங்கிக் கொடுத்தவர் ஏ. ஜெகநாதன். பெரி வர்,'' என்றபடியே லிப்ஸ்டிக் பூசிக்கொண்டு, 'மாராப்புக்குள்ளே மனசிருக்கு' என்று ஆடத் தயாரானார்.

ஓரமாய் நின்று கொண்டு நான் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தேன், நடனத்தைப் பார்க்கவில்லை. நிச்சயம் நம்புங்கள்.

# தென்கச்சி சுவாமிநாதனின் 'இங்கே சில தகவல்கள்'


மகளுடன் தென்கச்சி

**வானொலியில் 'இன்று ஒரு தகவல்' மூலம் பிரபலமானவரின் அனுபவங்கள்:**

**ப**டித்தால எங்கே விவசாயத் தைக் கவனிக்க மாட்டேனோ என்று என் பெற்றோர் என்னைப் படிக்க வைக்கவே தயங்கினார்கள். பிறகு என் மாமா போன்றோர் சிபாரிசில் படிக்க வைத்தார்கள். எனக்கு மருத்துவம் படிக்க ஆசை. ஆனால், வீட்டின் நிர்பந்தத்தால் விவசாயப் படிப்பை மேற்கொண்டேன். நான் டாக்டராக ஆகாததும் நல்லதாகப் போயிற்று. இன்று பலபேர் உயிரோடு இருப்பதே அதனால்தான்!

**இன்று ஒரு தகவல் பிரபலமானது ஏன்?**

**எ**ன் தகப்பனார் இறந்த பிறகு

தான் வேலைக்கே வர முடிந்தது. அதன்பிறகு திருநெல்வேலியில் விவசாய ஒலிபரப்பு வேலையில் சேர்ந்தேன். 1985'ல் சென்னைக்கு மாற்றலாகி வந்தேன். 'இன்று ஒரு தகவல்' கொஞ்சம் பிரபலமாகப் போய், வெளியே தெரியத் துவங்கியது. ஆனால், என் அலுவலகத்தைப் பொறுத்தவரை என் முக்கியமான பொறுப்பு விவசாய ஒலிபரப்புதான். 'இன்று ஒரு தகவல்' ஒரு சின்ன வேலை அவ்வளவுதான்.

இந்த நிகழ்ச்சி பிரபலமானதற்குக் காரணம் என்ன என்று ஒரு 'சர்வே' நடத்தினோம். பலர் பல காரணங்கள் சொன்னார்கள். ஆனால், அதில் பரவலான கருத்து அதில் இழையோடும் நகைச்சுவைதான்.

### பத்திரிகை ஆசிரியர் என்ன சொல்வாரோ?

'இன்று ஒரு தகவலி'ல் ஆன்மீக விஷயங்கள் எனக்குப் புதுசு. ரொம்ப ஆதாரபூர்வமாக எதில் விஷயங்கள் கிடைக்கும் என்று பார்த்தேன். தெய்வீக விஷயம், 'ராமகிருஷ்ண விஜயம்' என்ற புத்தகத்தில் நிறைய வருவதால், அதிலிருந்து விஷயங்களைத் திரட்டி, 'இன்று ஒரு தகவலில்' சொல்லிக் கொண்டிருந்தேன்.

என்றாவது ஒருநாள் அவருக்கு (பத்திரிகையை நடத்தும் சுவாமி கமலாத்மானந்தா) விஷயம் தெரிந்தால் வம்பாகிவிடுமே என்ற பயமும் இருந்தது.

ஒருநாள் கமலாத்மானந்தாவை நான் சந்தித்தபோது "ஆன்மீக விஷயங்களை நல்லாச் சொல்றீங்க. அதையெல்லாம் கொடுத்தீங்கன்னா, ராமகிருஷ்ண விஜயத்துல போடலாம்னு பார்க்கறேன்," அப்படின்னார்.

அப்புறம் நான் உண்மையைச் சொல்லிவிட்டேன்.

### எம்.ஜி.ஆர். மறைந்தபோது

ஒருநாள் எங்க நிலைய இ[illegible]குனர் காலை 5 மணிக்கே என[illegible] அழைப்பு விடுத்தார். போய்க் கே[illegible] பொழுதுதான் எம்.ஜி.ஆர். அ[illegible]கள் மறைந்த செய்தி தெரிந்த[illegible] வேண்டிய எல்லாவற்றையும் செ[illegible] விட்டோம்.

ஊர்வலம் எங்கிருந்து பு[illegible]படும், எப்படி எங்கு செல்கிறது எ[illegible]பதை நேரடி ஒலிபரப்பு செய்யணு[illegible] என்று தீர்மானித்து வர்ணனையா[illegible]களையும் முடிவு செய்துவிட்டார்க[illegible] நிர்மலா சுரேஷ், இனியன் சம்ப[illegible] கூத்தபிரான் இப்படி ஒவ்வொரு இட[illegible]தில் இரண்டு பேர் வீதம் தே[illegible]தெடுத்து விட்டோம். கடைசிய[illegible] அடக்கம் பண்ணும் இடத்தில் [illegible]ணனை சொல்ல யாரும் இல்லை[illegible]

இயக்குனர் "நீதான் இ[illegible] செய்யணும்," என்றார்.

எல்லாம் முடிந்து மால[illegible] 8, 9 மணிக்கு அலுவலகம் வந்தோ[illegible] இயக்குனர் செல்வம் என்னைக் [illegible]டிப் பிடித்துக் கொண்டு, "ந[illegible] ரொம்பப் பயந்தேன். ஆனால், [illegible]படி இவ்வளவு சோகமாகக் கூட உ[illegible]னால பேச முடியுது,"னு பார[illegible]டினார்.

"அதுக்குக் காரணம் சோ[illegible] மட்டுமில்ல சார். காலையிலிரு[illegible] பட்டினி. 5 மணியிலிருந்து மாலை[illegible] மணி வரை சாப்பிடவேயில்லை,'[illegible] சொன்னேன்.

### யார் வயலினிஸ்ட்?

ஒரு நிகழ்ச்சி சொல்வார்[illegible] சௌடையாவின் வயலின் கச்[illegible]



ாந்தி அதில் கலந்துகொண்டு பேசி ாராம். ''சௌடையா ஒரு பெரிய யலினிஸ்ட். நான் சாதாரண நான்– யலினிஸ்ட் (Non-violinist).''

### விமானநிலையத்தில் கோபம்

மீனம்பாக்கத்தில் ஜப்பான் செல்ல வேண்டிய ஒரு பயணி அமர்ந் ிருக்கிறார். லக்கேஜை வாங்கி விமா ாத்தில் அனுப்ப வேண்டிய தொழி ாளியிடம் மிகக் கோபமாகக் கடுமை ாகப் பேசுகிறார். தொழிலாளியோ ிகப் பொறுமையாக இருக்கிறார். ிதைச் சினம் தவிர்த்தல் பற்றிப் பேசும் ரு நபர் கவனிக்கிறார். நாம் ஊர் ாராய் போய்ச் சினம் தவிர்த்தல் பற் ிப் பேசுகிறோம். ஆனால், நிஜத் ில் இப்படி ஒரு மனிதர் இருக் றாரே என்று அதிசயிக்கிறார். ளேன் வந்தவுடன், பயணி ஜப்பா ுக்குக் கிளம்பிப்போய் விட்டார். தன் பிறகு இவர் அந்தப் பணியாள டம் போய் ''எப்படிக் கோபத்தைத் விர்க்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''அது பாருங்க. அந்தப் பிர ாணி ஜப்பான் போய்க்கிட்டிருக் ாரு. அவர் லக்கேஜ் அமெரிக்கா பாய்க்கிட்டிருக்கு,'' அப்படின் ாரு.

### நம்ம பேசினதையும் கேக்கறாங்களா?

அதேமாதிரி காமராஜர் சேலத் ுக்குப் பக்கத்தில் ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார். மைக் சரி ாக வேலை செய்யவில்லை. அவ ுக்குக் கோபம் வந்துவிட்டது. ''இனி மேல் இந்த மைக் செட்டை யாரும் வைத்துக் கொள்ளாதீர்கள்,''னு சொல்லிட்டார்.

தலைவரே இப்படி சொல்லிட் டாரே, இனி யார் தன்னைக் கூப்பிடு வார்கள்னு மைக்காரன் அழுதான். சாப்பாடு நடக்கும்போது கட்சிக்காரர் கள் அவனுக்காக ''இப்படிச் சொல்லி விட்டீர்களே, இனி யாரும் கூப்பிட மாட்டார்களே, அவன் அழ றான்,''னு சொல்ல, அவர் ''என்ன, ஊர்ல நம்ம பேச்சையும் ஜனங்க கேட்கிறார்களா?''ன்னு கேட்டாராம்.

### குருஷேவ் ஒரு முட்டாள்

ஒருமுறை குருஷேவை நியூ யார்க் டயம்ஸ் நிருபர், 'ரஷ்யாவில் ஆட்சிமுறை சரியில்லை; குருஷேவ் ஒரு முட்டாள்' என்கிற அர்த்தத்தில் எழுதிவிட்டார். பத்திரிகையில் வந்த வுடன், அந்த நிருபரை 11 மாதங்கள் ஜெயிலில் போட்டுவிட்டார்கள். இது அரசியல்ரீதியாய்ப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. ரெண்டு வல்லரசு களுக்கிடையே போர் மூளுமோன்னு சந்தேகம்கூட வந்து விட்டது.

அப்போது ஒரு பத்திரிகை யாளர் குருஷேவைக் கேட்டார், ''என்ன, ஒரு பத்திரிகையாளருக்கு இதை எழுத உரிமை கிடையாதா? உங்களை முட்டாள்னு அர்த்தம் வர்ர மாதிரி ஏதோ எழுதிட்டார். இதற்குப் போயி, 11 மாசம் ஜெயில் தண்டனையா?''னு கேட்டிருந்தார்.

இவர் பதிலை உலகமே எதிர் பார்த்துக்கிட்டிருந்தது.

குருஷேவ் சொன்னார், ''என்னை முட்டாள்னு சொன்ன தற்கு ஒரு மாதம்தான் தண்டனை. பாக்கி 10 மாதம் எதற்குத் தண் டனை என்றால், ஒரு சர்வதேச ரக சியத்தை வெளியிட்டுவிட்டான் அந்த ஆளு,'' என்று சொன்னவுடன், அந்த இறுக்கமான சூழ்நிலை மாறி விட்டது. கென்னடிகூட விஷயத்தை அப்படியே விட்டுவிட்டார்.

–புத்தக நண்பர்கள் நூலகத்தில், பேசியது
தொகுப்பு: ராஜசியாமளா பிரகாஷ்

---

**சின்னச் சின்ன செலவீனங் ளில் அக்கறை காட்டுங்கள்; ஒரு ின்ன ஓட்டைதான் பெரிய கப்ப லையே மூழ்கடிக்கும்.**

*– சோமையா*

# மை விழி மயக்கம்

## ரமணிசந்திரன்

## 8

ஜெயவாணி திகைத்தாள். பெற்று வளர்த்த பெரியவர்! அவருக்கு இல்லாத உரிமை யாருக்கு? அவளுடைய தந்தை மட்டும் இப்படி ஓய்ந்து போகாமல் திடமாய் இருந்திருந்தால், 'இந்தக் கவலைகளை எல்லாம் ஏற்க எனக்குத் தெம்பில்லை மகளே, எதுவானாலும் நீயே பார்த்து ஏதோ செய்,' என்று ஒப்புவித்து, ஒதுங்கியிராவிட்டால், அந்த ஒதுக்கத்தை மதித்து, இந்த மூன்று ஆண்டுகளாக எதையும் தானே யோசித்து, தானே முடிவெடுத்துப் பழகியிராவிட்டால், இந்தத் திருமணம் பற்றி அவரைக் கேளாமல் ஜெயவாணி ஓர் எட்டு எடுத்து வைத்திருப் பாளா? மாட்டாள்!

முன்தினம் தினகரன் சொல்லச் சொல்ல, அவனது கண் பார்த்த விதத்திலேயே பிரசினையை ஆராய்ந்தபோது, அவனுடைய தந்தை பழைய கால வில்லனாக, மகன் வாழ்வைக் கெடுப்பவராக, குறைந்தபட்சம் மகன் வாழ்வில் அனாவசிய

மாய் மூக்கை நீட்டிக் குட்டை குழப்பு கிறவராகத்தான் அவளுக்குத் தோன் றினார்.

ஆனால் இப்போது பிள்ளையின் வாழ்வில் தன் பங்கை அவர் எடுத்துக் கூறவும், தன் அணுகுமுறை தவறு என்று உணர்ந்து தடுமாறினாள்.

பெற்று, பேணி வளர்த்து, படிக்க வைத்து, சமூகத்தில் ஒரு நிலைக்குக் கொண்டு வந்த தந்தைக்கு அடியோடு உரிமை கிடையாது என்று எப்படி மறுப்பது?

ஜெயவாணியின் முகத்தில் திகைப் பைக் காணவும் தினகரனுடைய தந்தை செருக்குடன் நிமிர்ந்தார்.

ஜெயவாணி திகைத்து நிற்ப தைக் கண்ட தாமோதரன் ஒரு தவறு செய்தார்.

'சொத்து சேர்த்து வைத்த பித்தன்' என்ற வார்த்தைகளில் தான் அவள் அயர்ந்து போனாள் என்று எண்ணிவிட்டார்.

அவர் சேர்த்த சொத்து அவ ரது சுயசம்பாத்தியம் அல்லவா? அதை அவர் என்ன வேண்டுமானா லும் பண்ணலாம், யாருக்கு வேண்டு மானாலும் கொடுக்கலாம். அவரது விருப்பத்துக்கு விரோதமாகக் கல்யா ணம் செய்யும் மகனுக்குத் தர மறுக்க வும் அவருக்கு உரிமை உண்டு.

இந்த மாதிரி எண்ணி விலகிய ஒரு பெண்ணைக் கண்டவர், அடுத் தவளிடமும் அதையே எதிர்பார்த்து விட்டார். அந்த அடிப்படையிலேயே மேலே பேசத் தொடங்கினார். ''பரவாயில்லையே, நீ அதற்குள் பிடித்துக் கொண்டுவிட்டாயே! அந் தச் சாயாவா காயாவா, அவளுக்குப் பிட்டுப்பிட்டு வைக்கவேண்டியிருந் தது. அவளை விட நீ கெட்டிக்காரி தான்.'' சிலாகிப்பது போல மட்டம் தட்டினார்.

சோபாவில் வசதியாக அமர்ந்து கொண்டு, எதிரே இருந்த இருக்கை யில் அவளையும் உட்காரச் சொன் னார்.

ஜெயவாணிக்கு உள்ளூர வேதனை.

இவர் தினகரனைப் பெற்ற தந்தையே என்றபோதும் அதற்குரிய மதிப்பை அவருக்குக் கொடுத்து விலகி விட அவளால் முடியாது. அவளது சொந்தக் காரணங்களை அவள் விட் டுக் கொடுத்துவிடத் தயார்தான். ஆனால் தினகரனின் நிபந்தனையை ஏற்றுப் பணம் வாங்கிய பிறகு பின் வாங்குவது முடியாத காரியம். அத் தோடு தினகரன் இன்னொரு தரம் தலைகுனிந்து நிற்கும்படி— அது அவனுடைய தகப்பனார் முன்னே என்றாலும்கூட, அப்படி நிற்கும்படி விட அவளால் அடியோடு முடியாது.

இதை இவர் மனமும் நோகா மல் சொல்வது எப்படி என்று யோசித்த வாறு அமர்ந்தாள் அவள்.

மனம் என்பது ஆடைக்கு வெளியே அப்பட்டமாகத் தெரிகிற விஷயம் இல்லை.

எனவே ஜெயவாணியின் மனத்



''ஒட்டடைக் குச்சி இல்லைம்மா. வேணும்னா என் புருஷனைக் கூட்டிக்கிட்டுப் போ!''

—கு. அருணாசலம், தென்காசி.



சொல்வது அவருக்குச் சுலபமாக இருக்கி
போலும்!

''நான் அவரது சொத்துக்காக அவ
மணக்க முன்வரவில்லை, சார்,'' என்ற
அமைதியாக. ''அதற்கு வேறு காரணங்கள்

''ஆங் ஆங்... அந்தக் கதை என்னி
வேண்டாம்,'' என்று குறுக்கிட்டார் அ
''என்ன, இது காதல் திருமணம் எ
சொல்ல வருகிறாயா? முந்தாநாள் வ
அவன் வேறே ஒருத்தியை மணப்பதா
பிதற்றியவன். எனக்குத் தெரியும்,'' என்ற
ஏளனமாக.

''இன்னும் வேறு காரணங்களும் இ
கலாம், சார்.''

''அவனுக்கு வரக்கூடிய சொத்து த
வேறு என்ன உன் குறிக்கோள்?''

''நன்றி மறவாமை என்று திருக்
ளில் ஓர் அதிகாரமே இருக்கிறது, சார். பத்
குறள்கள். படித்துப் பாருங்கள்!'' என்ற
ஜெயவாணி.

''பள்ளிப் பருவத்திலேயே தேவை
னது அத்தனையும் படித்து முடித்தவன் நா
நான் என்ன படிக்க வேண்டும் என்று
சொல்லத் தேவையில்லை,'' என்று சீறின
தாமோதரன்.

அவரது ஆத்திரம் அளவு மீறிக்கொ

தில் தோன்றிய எண்ணங்களை
அறியாமல் தாமோதரன் பேசி
னார். ''இதோ பார், பெண்ணே!
நீ படித்து வேலை பார்க்கிற
பெண். அங்கே எம்.டி.யாக
இருக்கிறவன், அந்தப் பெரிய
நிறுவனத்தின் உரிமைக்காரன்:
மணம் புரியக் கேட்டான் என்று
உச்சி குளிர்ந்து சரியென்றிருப்
பாய். ஆனால் ஒரு பைசா
கொடுக்காமல் விரட்டி விடுவேன்
தெரியுமா?''

சிறு வியப்பும் யோசனையு
மாக அவரை நோக்கினாள் ஜெய
வாணி. படித்த பாடம் மீண்டும்
படிப்பது எளிதாக இருப்பது
போல, ஒருத்தியிடம் கூறிய
வார்த்தைகளைத் திரும்பச்



இருப்பது அவரது குரலிலும், வார்த்தைகளிலும் நன்றாகவே தெரிந்தது.

காரணத்தை ஊகித்து, உணர்ந்த ஜெயவாணி, உள்ளூர வியப்புற்று நிமிர்ந்து அமர்ந்தாள்.

தாமோதரன் தன்னம்பிக்கை உள்ள மனிதர். தன்னால் எதுவும் முடியும் என்கிற இறுமாப்பை, அவரது பேச்சிலும், பாவனையும் ஜெயவாணியால் உணர முடிந்தது. அவர் பக்கம் ஒரு நியாயமும் இருந்தது என்பது அவள் மனம் ஒப்புக்கொண்ட விஷயம்.

ஆனால், தினகரனை விட்டுக் கொடுக்கக்கூடாது, அவன் மீண்டும் தலைகுனியத் தான் காரணமாகி விடக்கூடாது என்ற உறுதியும் அவளுக்கு இருந்ததால், அதைப் பெரியவரின் மனம் நோகாமல் சாதிக்க வேண்டும் என்று எண்ணிய அவள் சற்றுப் பணிவாகப் பேசி வந்தாள்.

'சொத்து' என்ற ஒரு வார்த்தையால் அவள் சுருண்டு போவாள் என்று அவர் எதிர்பார்த்தது அவளுக்கு ஆச்சரியம்தான். ஒருவேளை முன் அனுபவம் – சாயாவிடம் பெற்றது – அந்த எதிர்பார்ப்புக்குக் காரணமாகவும் இருக்கலாம்.

சொத்து இல்லாது போகும் என்றதுமே அவ்வளவு இலகுவாகச் சாயா விலகினாள் என்றால் அதுவும் அவளுக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது.

ஆனால் செய்திருக்கிறாளே! அவள் அப்படிச் செய்ததால்தான் இவர், இவளிடமும் அதையே எதிர்பார்த்திருக்கிறார்!

ஆனால் அவரது ஒரே ஒப்பற்ற மந்திரத்தில் ஜெயவாணி ஓடுவதாக இல்லை என்றானதும் தாமோதரன் தடுமாறிவிட்டார். அவரிடமிருந்த ஒரே துருப்புச் சீட்டு அதுதான் போலும். அது பலன் தரவில்லை. தோற்கிறோம் என்பது புரியவும் செய்வது அறியாமல் ஆத்திரப்படுகிறார் என்பதை ஜெயவாணி அறிந்து கொண்டாள்.

இதுவே அவளுக்குத் தனி பலம் தர, தைரியத்துடன் நிமிர்ந்தாள். அவரது சினக் குரல் தொடர்வதைக் கவனித்தாள்.

''முதலில் நான் சொல்லும் பாடத்தை நீ கவனி. சொத்து பத்தோடு இவன் வேலையையும் சேர்த்துப் பறித்து விடுவேன். அதையுப் தெரிந்துகொள். அப்புறம், பாவம், அவனுக்கும் நீதான் சோறு போட வேண்டியிருக்கும்,'' என்றார் மிரட்டலாக.

''பரவாயில்லை. என் வேலை இருக்கிறதில்லையா? அது போதும்,'' என்றாள் ஜெயவாணி மிகவும் அமைதியான குரலில்.

''அதையும்தான் என்னால் பிடுங்க முடியும்,'' என்று மார் தட்டினார் தாமோதரன்.

''யூனியன் இருக்கிறது சார். சரியான காரணம் காட்டாமல் உங்களால் அதைச் செய்ய முடியாது,'' என்றாள் அவள் நிதானமாகவே.

''சாக்குப்போக்குக்கு வழியா கிடையாது? உன் வேலையும் போன பிறகு இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு உட்



# ப.கொ.சி.

படுத்துக்கொண்டே ஜெயிப்பேன் என்று யாரோ தலைவர் சொன்னார். இது படுத்துக்கொண்டே சிரிப்பேன்.

பாப்பா: ஸ்நேகிதா.

க்ளிக்: வி. பூபதி.

கார்ந்திருக்க வேண்டியதுதான். உனக்குத் தெரியுமோ என்னவோ? ஈரத் துணியை வயிற்றில் கட்டிக் கொண்டால் பசி தெரியாதாமே!''

என்ன எகத்தாளம்! சீற்றத்தை அடக்கிக் கொள்வது மிகவும் கடினமாக இருந்தது அவளுக்கு. முழுமையாக நிமிர்ந்து, முகவாயை உயர்த்தி அவரை நோக்கினாள் அவள். ''நாங்கள் எப்படி உட்காருகிறோம், எப்படி நிற்கிறோம் என்பதெல்லாம் எங்கள் விஷயம், சார். அத்தோடு நீங்களும் ஒரு விஷயம் கேட்டுக் கொள்ளுங்கள். நாங்கள் இரண்டு பேருமே படித்தவர்கள். ஒருவேலை தேடிக் கொள்வது அப்படி ஒன்றும் சிரமமாய் இராது. அப்படியே சிரமமாய் இருந்தாலும் உங்களிடம் உதவி கேட்டு வரமாட்டோம்,'' என்றாள் உறுதியான குரலில்.

அவளது முகத்தை ஆராய்ந்தார் தாமோதரன். ''ஒருவேளை... பாங்க்கில் அவன் கணக்கில் நிறையப் பணம் இருக்கும் என்று எண்ணிவிட்டாயா? அதையெல்லாம் அந்தப் பாட்டுக்காரி வழித்துத் துடைத்து விட்டாள். தெரியுமோ?''

அவள் மட்டுமா? தன் பங்கு குத் தினகரனிடம் பெற்றுக் கொண் முப்பதாயிரத்தை நினைக்கையி ஜெயவாணியின் முகம் கன்றிய அந்த ஒரு காரணத்துக்காகவே தினகரனுக்கென்று உழைத்துத் தே லாமே! இது ஒன்றும் புரியாமல் மு லுக்கு மூன்றே கால் என்று தாமே தரன் சொத்து பத்திலேயே நிற்ப அவளுக்கு எரிச்சலூட்டியது. மன நோகப் பேசக்கூடாது என்று நினை தால், இந்தப் பேச்சை இத்தோ முடிப்பது உத்தமம் என்று எண் னாள்.

''பரவாயில்லை சார். நீங்க கட்டாயமாய்த் திருமணத்துக் வாருங்கள். வந்து ஆசீர்வாதம் ம டும் தாருங்கள். அது போதும். மற் படி உங்கள் சொத்து பத்து எதுவ எங்களுக்கு வேண்டாம்,'' என் எழுந்தாள் அவள்.

''கொஞ்சம் பொறு பெண்ணே!'' என்று தாமோதர தானும் எழுந்தார்.

(தொடரு

---



*சிவாஜி கணேசனுக்கு, 'வீரபாண்டிய கட்டபொம்மன்' விருது வழங்கப்பட்டது.* —சென்னைச் செய்தி

**தாதாசாகேப் அல்லவா கிடைத்திருக்க வேண்டும்?**



*பாதி விலைக்கு டி.வி., மிக்ஸி, ஃப்ரிட்ஜ் தருவதாக விளம்பரம் செய்த ஒரு கம்பெனியை, 'ஏமாற்றுக் கம்பெனி' என்று போலீசார் தடைசெய்ய, அவர்கள் ஹைகோர்ட்டில் தடைக்குத் தடை வாங்கிக் கடை விரித்துப் பத்தே நாளில் ரூ. 50 லட்சம் சுருட்டிக்கொண்டு கடையைக் கட்டிவிட்டார்கள்.* —காஞ்சிபுரம் செய்தி

**ஏமாந்தது நிதி கொடுத்த மக்கள் மட்டுமல்ல, நீதி கொடுத்தவர்களுமே!**



*'கல்லாமை' விரைவில் 'இல்லாமை' ஆக்குவோம்.* —தமிழகக் கல்வி மந்திரி

**செயலாக்குங்கள். சொல்லாமை நன்று!**



*எயிட்ஸ் நோய் வந்து இதுவரை 50 சிங்கங்கள் இறந்துள்ளன.* —ஒரு செய்தி

**அசிங்கம்!**

—மகரம்

# மௌனப் மயக்கம்

10



ஜெயவாணியின் பார்வையைச் சந்தித்த தினகரன், லேசாக அசடு வழிந்து, ''காலையில் ஒரே இறுக்கமாக இருந்ததால் ஒன்றுமே சாப்பிட முடியவில்லை. ஒரே பசி,'' என்று காரணம் கூறினான்.

''பின்னே, உங்கள் அப்பா வீட்டிலேயே சாப்பிட்டிருக்கலாமே!''

''அங்கேயா? ஊகூம். சாப்பிடும் போதுதான் இல்லாதது பொல்லாதது எல்லாம் அவருக்குச் சொல்ல வரும். அதுவும் இப்போது... ஊகூம். எவ்வளவு காரமாய் இருந்தாலும் இது ஆயிரம் மடங்கு மேல், வாணி... சாரி, ஜெயவாணி,'' என்று அவன் திருத்திக்கொண்ட போது, அவள் தலையசைத்து, ''இல்லை, வாணி என்றே கூப்பிடுங்கள். என் அப்பா, அம்மா இருவருக்குமே வாணிதான் பிடிக்கும்,'' என்றாள்.



''ஓ.கே. வாணி. எனக்கும் இதுவே பிடித்திருக்கிறது,'' என்ற

ரமணி சந்திரன்

வன் கேட்டான். ''வாணி என்றால் சரசுவதிதானே. ஆனால் லட்சுமியோடு ஜெய, விஜய, சுப, வர என்று அடைமொழி சேர்த்து ஜெயலட்சுமி விஜயலட்சுமி என்று அழைக்கக் கேட்டிருக்கிறேன். ஆனால் இப்படி ஜெயவாணி, சுபவாணி என்று– சுபவாணி தானே உன் தங்கை பெயர்? இது போல நான் கேட்டது இல்லையே!''

''வாணி என்றால் சரசுவதி என்று மட்டும் பொருள் இல்லை. வார்த்தை என்றுகூட ஓர் அர்த்தம் இருக்கிறது. அதை வைத்துதான் ஆகாசவாணி என்றதே. அதே மாதிரி தான் மதுரவாணி, கோகிலவாணி...''

''ஜெயவாணி, சுபவாணி!'' என்று முடித்துவிட்டுச் சிரித்தான் தினகரன். ''உன் பெயர் வெற்றி வார்த்தையா? வெற்றியைத் தருகிற வார்த்தைகளைச் சொல்லுகிற பெண் என்பது விரிவாக்கும்? பரவாயில்லை. மாமனார் ரொம்பவும் யோசித்துதான் மகளுக்குப் பெயர் வைத்திருக்கிறார்,'' என்று அவன் பாவனையோடு கூறியபோது அவளுக்கும் சிரிப்பு வந்தது.

இணைந்து நகைத்தபடியே இருவருமாகச் சென்று கை கழுவி விட்டுக் கிளம்பினர்.

கார் கிளம்பியதும் ஜெயவாணிக்கு மீண்டும் மனம் கலங்கியது.

அவனுடைய தந்தைக்குப் புத்தி கற்பிக்க வேண்டும் என்று மட்டும் தினகரன் கூறவில்லை. அந்தச் சாயாவின் முன் தலைநிமிர்ந்து நிற்க வேண்டும் என்றும் சொன்னானே!



'சே! ஆபீசுக்கு ஒரு நிமிசம் லேட்டா வந்தாக்கூட போச்சுங்க.'

— ஹில்கூ

ஒன்றை வெற்றிகரமாக நிறைவேற்றியவன் அடுத்த இடத்துக்கு அழைத்துப் போகிறானா?

சாயாவின் முன் இந்த அலுவலகக் கோலத்தில் சென்று நிற்பதை நினைத்தாலே ஜெயவாணியின் உடல் குன்றியது. அலங்காரம் செய்து கொண்டு இருந்தாலே சாயாவின் அழகில் இவள் பாதி இருக்க மாட்டாள். சாயாவோ உள்ள அழகைப் பன்மடங்காகப் பெருக்கிக் காட்டுகிறவள். ஒளிவு மறைவு இல்லாது காட்டுகிறவளும் கூட. அவள் முன்னே ஜெயவாணி ஆதவன் முன்னே மின்மினிதான். மின்மினி கூட அருகில் இருந்து பார்க்கும்போது பகலிலும் கொஞ்சம் வெளிச்சம் தெரியும்.

வேகமாக வீட்டுக்குச் சென்று, இந்த வேடம் களைந்து, கூந்தலுக்கு 'ஷாம்பூ' போட்டு அலசிக் காய வைத்து, முன்புறம் தூக்கி, க்ளிப் மாட்டி, பின்னவிடாமல் லூசாக விட்டு, ஒவ்வோர் அசைவுக்கும் துள்ளி விழச் செய்ய வேண்டும் போல வந்தது. கண்ணாடியைக் கழற்றி வீசிவிட்டு கண்களில் லேசாக மை இட்டு, உதடுகளுக்குச் செஞ்சாயம் தீட்டி, இந்தப் படுதா(சுபாவின் வர்ணனை)வை அகற்றி, பச்சை வண்ணச் சுரிதார் அணிந்து கொண்டு அப்புறமாய் சாயாவிடம் செல்லலாமே என்று இருந்தது அவளுக்கு.

இரண்டாவது சூரியனாகப் பிரகாசிக்க முடியாவிட்டாலும், ஒரு சந்திரன் அளவாகிலும் தேறுமே!

திடுமெனத் தினகரன் பேசத் தொடங்கினான். ''இன்றும் ஓர் இடத்துக்கு– புரிகிறதல்லவா, சாயாவிடம்தான்– உன்னை அழைத்துப் போக வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அவள் ஊரில் இல்லையாம். கல்கத்தாவில் ஏதோ நிகழ்ச்சியாம். அது முடிந்ததும் அப்படியே வெளிநாடு போய்விடுவாள் என்றார்கள். கொஞ்சம் தாமதமாகச் செல்லுவதாக முன்பு... முதலில் திட்டம்,'' என்றான்.

திருமணத்தை முடித்துக் கொண்டு தாமதமாகப் போவதாக இருந்திருக்கிறாள் என்பது ஜெய வாணிக்குப் புரிந்தது. எப்படியோ, இப்போதைக்கு அவளைப் பார்க்கத் தேவையில்லை என்பதே 'அப்பாடி' என்று நிம்மதியாக இருந்தது. ஆனால் அவனது வேதனையைப் பார்க்கும்போது, அப்படி நிம்மதி யாக உணர்வது தப்பாகவும் தெரிந் தது.

மனதையும் பேச்சையும் மாற்ற விஷயம் தேடி, யோசித்து, ''அது என்ன சார், மைவிழி மயக்கம்?'' என்று விசாரித்தாள்.

அவன் முகம் மேலும் வாடிப் போயிற்று.

முகவாட்டத்துடன் சில கணங் கள் மவுனம் காத்துவிட்டுத் தினகரன் சொன்னான்: ''அப்பாவுக்கு எப் போதுமே இது ஒன்று. பெண்களை ரொம்பவும் நம்பக் கூடாது என்று அடிக்கடி என்னை எச்சரிப்பார். மை, பொய் என்று எதுகை மோனை யோடு ஏதேதோ சொல்லுவார்... தாம் கெட்ட பெண்களிடம் நான் ஏமாந்துவிடக் கூடாது என்பதற் காகச் சுற்றி வளைத்துச் சொல்வார். சாயா விஷயம் தெரிந்ததும், அவ ளது கண்களில் தடவிய மையில்தான் நான் மயங்கிவிட்டேன் என்று பழைய பாட்டை மீண்டும் தொடங்கிவிட் டார். அவள் கொஞ்சம் அதிகமாக அலங்காரம் செய்வாள். ஐ ஷேடோ, மஸ்காரா, லைனர்... என்று அவ ளது தொழிலுக்காகச் செய்துதானே ஆகவேண்டும்! இது புரியாமல் மைவிழி மயக்கம், மண்ணாங்கட்டி என்று ஏதேதோ சொல்லிக் கொண் டிருக்கிறார்,'' என்றான் சினத்தைச் சிரமத்துடன் கட்டுப்படுத்திக் கொண்டு.

எங்கே திரும்பினாலும் சாயா தானா என்று சலிப்புடன் இன்னமும் அவளுக்காகப் பரிகிறானே என்ற





*உழைப்பாளிகள்*
*தோட்டக் காடுகளில்*
*உருகிக் கருகப் போய் விட்டதால்*
*பகலெல்லாம்*
*உயிரற்ற மௌனத்தில்*
*உறைந்து சயனித்த கிராமம்*
*பம்பை குமுகுமுக்க*
*தப்பட்டை தடதடக்க*
*ஆபாசச் சைகையுடன்*
*கரகத்தாட்டம் திமுதிமுக்க*
*சாராய கும்பங்கள்*
*பரிமளிக்க*
*கறிக்குழம்பு கமகமக்க*
*மாரியம்மன் திருவிழாவில்*
*வருஷத்துக்கு*
*ஒருமுறை மட்டும்*
*உயிர் பெற்று விழிக்கும்*
*எங்கள் கிராமம்.*

*—சிற்பி பாலசுப்பிரமணியம்.*

---

வேதனையும் சேர்ந்து கொண்டது அவளுக்கு.

சற்று நேரம் மவுனத்தில் கழிந்தது.

விட்டால் தினகரன் சாயா ஜபத்திலேயே மூழ்கிவிடுவான் என்று ஜெயவாணிதான் வேறு பேச்செடுத்துப் பேசவேண்டியிருந்தது.

''இவ்வளவு காரம் உங்களுக்குப் பழக்கம் இராதே சார். டைஜீன் மாதிரி ஏதாவது வாங்கிப் போட்டுக் கொள்ளுகிறீர்களா?''

வியப்புடன் அவளைத் திரும்பிப் பார்த்தான் தினகரன். ''என் வயிற்றைப் பற்றிக் கவலைப்படுகிற முதல் பெண்!'' என்று புன்னகை செய்தான்.

''கவலைப்படுகிற ஆண், உங்கள் தந்தையாக்கும்!''

''ஆமாம். அவரும் கொஞ்சம் அதட்டிச் சொல்லுவாரே தவிர கவலை என்று... கவலை என்பதை விடக் கவனம் என்பது பொருத்தமாய் இருக்கும்— எதுவும் அதிகம் கிடையாது. இப்போது உனக்கு ஒரு ரகசியம் சொல்லட்டுமா? அப்பா விடம்— சாம்யகத்துக்குச் செல்லும் போதெல்லாம், சமையல்காரன் அவனுக்காகத் தனியாக என்று காரசாரமாகச் செய்து வைத்திருப்பதைத் தான் உண்பேன்... அப்பா கண்டு பிடித்து விட்டால் சரியான மண்டகப் படி கிடைக்கும். அவசரப்பட்டு வேலப்பனை விரட்டி விடக் கூடாதே என்று அவன் தடுக்கத் தடுக்க நான் பிடிவாதமாய் உண்டுவிட்டதாகக் கதை கட்டுவோம்.''

''நம்புவாரா?''

''முழுக்க நம்பமாட்டார். கூட்டுக் கள்ளர்கள் என்று திட்டு வார். ஆனால் எதிலுமே அப்பா என்னை ஒரேயடியாய் அடக்கி மனம் முறித்தது இல்லை. இரண்டு திட்டு திட்டிவிட்டுப் போய்த் தொலை என்று விட்டுவிடுவார். இப்போது தான் சாயாவிடமே போய்...''

இங்கே சுற்றி அங்கே சுற்றி கடைசியில் அதே இடத்துக்கே வந்து நின்றான் தினகரன்.

பொறாமையை இழுத்துப் பிடித்துக் கொண்டு ஜெயவாணி மீண்டும் முயன்றாள். ''நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் வேலப்பனுக்கும் உங்களிடம் தனி அன்பு உண்டு போலத் தெரிகிறதே. அவரைப் பாராமலே வந்துவிட்டீர்களே!''

''அவன் என்று சொல்லு. இந்த மரியாதைப் பன்மையெல்லாம் அவனுக்குப் புரியாது. வருத்தப்படுவான்,'' என்று அவளைத் திருத்திவிட்டுச் சொன்னான். ''நீ அப்பாவுடன் பேசிக் கொண்டு இருந்த போது, நான் அவனிடம்தான் சென்றேன். அவன்தான் சீக்கிரமாகத் திரும்பிவரச் சொன்னான். 'இவங்கதான் சின்னம்மா என்று முடிவு கட்டியாச்சுதுன்னா அதிக நேரம் அப்பாகிட்ட தனியா விடாதீங்க, சின்னய்யா தாங்கமாட்டாங்க' என்றான்,'' என்றவன் நெடுஞ்சாலையில் ஒரு பார்வையைச் செலுத்திவிட்டு அவள் புறம் திரும்பினான். ''ரொம்பவும் கஷ்டமாயிருந்ததா, வாணி!'' என்றான் கனிவுடன்.

அந்தக் குரலே ஜெயவாணியின் மனதை என்னவோ செய்து உருக்கியது. தலையசைத்து, ''பெரிதாக ஒன்றுமில்லை. நீங்கள் முதலிலேயே எதிர்பார்த்தது போல ஏதோ பேசினார்,'' என்று ஒதுக்கிவிட முயன்றாள்.

ஆனால் அவன் முழு விவரமும் கேட்டான்.

அவள் தயங்கியபோது, ''சும்மா சொல்லு வாணி. இதனால் நான் அவரைப் புதிதாக வெறுத்துவிடப் போகிறேனா, அல்லது அப்பாவே இல்லை என்று விட்டுவிடப் போகிறேனா? ஒரு வகையில் அவர் ஏற்கெனவே எல்லை வரைப் போய் விட்டார். இனியும் கெடுப்பதற்குப் புதிதாக என்ன இருக்கிறது?'' என்று அவளைச் சொல்ல வைத்தான்.

முழு விவரமும் கேட்ட பிறகு, ''இவ்வளவு சொல்லியும் நீ உறுதியுடனேயே இருந்தாயா?'' என்றான் ஆச்சரியத்துடன். காரை நிறுத்தி, ''வாணி, இதற்கு எனக்கு அனுமதி உண்டுதானே,'' என்றவன் அவளை மெல்ல அணைத்தான். ''தாங்க்யூ மா,'' என்று அவள் உச்சியில் முத்தமிட்டுவிட்டு அவளை விடுவித்தான்.

மீண்டும் கார் கிளம்பியது. ''ஒன்று தெரிந்துகொள் வாணி. உன்னிடம் மிரட்டியது போலெல்லாம் அப்பாவால் ஒன்றும் செய்ய முடியாது. இந்த நிறுவனத்தில் ஒரேயடியாய் எனக்கு ஒன்றுமில்லை என்று விரட்ட முடியாது. என் பெயரிலும் கொஞ்சம் பங்குகள் இருக்கின்றன. தாத்தா வழி வீடு

இ.வா.சி. என்றால்
இவர்கள் வாரச் சிரிப்புகள்.

இ. வா. சி.



எம். மகேஷ்குமார் கே. சரவணன்
எம். சதீஷ்குமார்

எஸ். சதீஷ், எஸ். கணேஷ்



படம்: ரேவதி

இருக்கிறது. என் வேலையின் சம்பளம் இருக்கிறது. எல்லாமாக நாம் ஓரளவு வசதியாக வாழமுடியும். சில பேருக்குப் பெரிதாகத் தோன்றுகிற மாதிரி, விரும்பிய உடனே வைர நகை வாங்குவது முடியாது. அவ்வளவு தான். மற்றபடி இந்தப் பட்டினி, ஈரத்துணி எல்லாம் சும்மா உன்னை மிரட்டவென்று மட்டுமே சொன்னவை. அதனால் எதிர்காலத்தைப் பற்றி உனக்குப் பயமோ, கவலையோ வேண்டாம்,'' என்றான் தினகரன்.

பயமா, கவலையா? அவன் அணைத்து, 'தாங்க்யூ மா' என்று சொல்லி முத்தமிட்டபோதே அவை யெல்லாம் பின்னங்கால் பிடரியில் பட பாய்ந்தோடி விடவில்லையா! அழகாக முறுவலித்தாள் அவள்.

காலையில் ஒன்றாக வெளியே சென்று மதியம் ஒன்றாக இருவரும் திரும்பி வருவதைப் பார்த்து சில முகபாவனைகள் வேறுபட்டதைக் கண்டபோதுகூட அவளுக்கு அதைப் பெரிதாகப் பொருட்படுத்தத் தோன்ற வில்லை.

பிறகு, உண்மை அறிகிற நேரம், யாரும் எது வேணுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும் என்று தோன்றியது அவளுக்கு.

தினகரனும் அப்படியே உணர்ந்தாற்போலத் திருமணம் முடிந்த பிறகு இங்கே எல்லோருக்கும் சொல்லிக் கொள்ளலாம் என்றான்.

தந்தை, தங்கைக்கும், அவளுக்கும் புத்தாடைகள் வாங்கவென்று பணம் கொடுக்க அவன் முன்வந்த போது, ஜெயவாணி அதைப் பெற்றுக் கொள்ள மறுத்தாள்.

ஏற்கெனவே இவனிடம் எவ்வளவு வாங்கியாயிற்று. இன்னுமா என்றிருந்தது அவளுக்கு. அத்தோடு, திருமணத்தில் பெண் வீட்டுச் செலவும் ஏதாவது இருக்கவேண்டும் அல்லவா? இந்த ஆயிரம், சேமிப்பு என்று அவளிடமும் கொஞ்சம் பணம் இருக்கத்தானே செய்தது! எனவே, தன்

69% இட ஒதுக்கீடு
—அறிஞர்கள்
அலசுகிறார்கள்.

34'ம் பக்கம்

னிடம் வேண்டிய பணம் இருப்பதாக அவனிடம் சொல்லிவிட்டாள்.

தினகரன் சந்தேகமாக நோக்கவும், ''மெய்யாகவே இருக்கிறது சார். அப்படிப் பற்றாக்குறை ஏற்பட்டால் எங்கள் அலுவலகத்தில் திருமணத்துக்கான 'லோன்' போட்டு வாங்கிக் கொள்ளுவேன்,'' என்று குறும்பாகக் கூறி அவனைச் சிரிக்க வைத்தாள்.

விழுந்து விழுந்து நகைத்து விட்டு, ''லோனா? உங்கள் எம்.டி. ரொம்பப் பொல்லாத கஞ்சப் பிசு நாறியாமே. அவர் 'லோனை' நிறுத்திவிட்டால்?'' என்று மிரட்டினான் அவன்.

''எங்கள் எம்.டி. தங்கமானவராக்கும். அவரைப் பற்றி ஒரு வார்த்தை தப்பாகச் சொன்னால்... அவ்வளவுதான். அப்புறம் காது பிய்ந்துவிட்டது என்று என்னிடம் சொல்லிப் பயனில்லை. சொல்லிவிட்டேன், ஜாக்கிரதை,'' என்று பதிலுக்கு மிரட்டவும், மீண்டும் சிரித்தான் அவன்.

சிரிப்பு அடங்குகையில் அவன் முகத்தில் ஒரு பிரமிப்பு பரவியது. ''நானா வாணி, இப்படிச் சிரித்தேன்? இன்று காலையில்கூட இனி என்னால் சிரிக்கவே முடியாது என்று நினைத்திருந்தேனே! ரொம்பவும் நன்றி வாணி,'' என்றான் இதய பூர்வமாக.

உள்ளே பூரிப்பு ஊற்றாய்ப் பெருகுவதை உணர்ந்தாள் ஜெயவாணி.

(தொடரும்)

## 11



# மைவிழி மயக்கம்

பேச்சும் வேலையுமாக நேரம் விரைந்தோடியது. வேலை நேரம் முடிந்தது, இருவருக்கும் அதிசயமாகப் பட்டது. தினகரனுக்குச் சற்று அதிகமாக.

''அதற்குள் மணி ஐந்தாகி விட்டதா! நீ உடனேயே கிளம்பிவிட வேண்டுமா, வாணி?''

''வேலை முடிந்துவிட்டதே...'' என்றாள் ஜெயவாணி.

''ஆ...மாம். வாணி, நீ ஒன்று செய்கிறாயா? திங்கள் செவ்வாய் இரு தினங்களுமே வேலைக்கு வந்துவிடேன். திருமண வேலை எல்லாம் என் பொறுப்பு என்பதால் அதற்காக லீவு போட வேண்டிய அவசியம் எதுவும் இராதே. ஓகோ, உன் துணிமணிகள்... அது வாங்க உனக்கு நேரம் வேண்டுமில்லையா? ஆனால் அதுகூட திங்களன்று மாலையில் நாம் இருவருமாகச் சேர்ந்தே சென்று வாங்கிவிடலாமே. இப்போதுதான் ரெடிமேடு பிளவுஸ் கூடக் கிடைக்கிறதே! அதனால் வேலைக்கு வருவதில் உனக்குத் தடை ஒன்றும் இல்லையே?'' என்று கேட்டான்.

உன் அருகாமை எனக்குத் தேவை என்று அவன் சொல்லாமல் சொன்ன வார்த்தைகளும், அவனது கம்பீரமான குரலில் பழக்கமற்று ஒலித்த கெஞ்சலும் அவள் மனதை உருக்கி மறு பேச்சின்றித் தலையாட்ட

வைத்தன. ''துணிமணி எல்லாம் நான் ஞாயிற்றுக்கிழமை திறந்திருக்கும் கடை பார்த்து அதில் வாங்கி விடுகிறேன் சார்,'' என்றாள் மென் குரலில்.

அவன் முகம் பளிச்சென மலர்ந்துவிட, ''சாரா? என்னவோ என்னென்னவோ உணர்த்துவது போல 'பாஸ்' என்று கூப்பிடப் போகிறேன் என்றாய். அங்கே அப்பா வீட்டில் அந்த வார்த்தை அகராதியிலேயே இல்லாமல் தொலைந்து போயிற்று. என்ன விஷயம்?'' என்று உற்சாகத்துடன் விசாரித்தான்.

''அங்கேதான் அந்த அழைப்புக்கு அவசியமே நேரவில்லையே!''

''ம்ம்... அதுவும் மெய்தான். ஆனால் அதற்காக அந்த வார்த்தையை அடியோடு மறந்துவிடக் கூடாது. இது இந்த 'பாஸ்' இடும் கட்டளை. சரிதானா?''



''யெஸ் பாஸ்,'' என்று அவள் போலிப் பணிவுடன் கூறவும் அவனுக்கு மீண்டும் சிரிப்பு வந்தது.



வீட்டில் திருமண விவரம் பற்றிக் கூறியபோது இருவரும் அதை ஏற்ற விதம் ஜெயவாணி சற்றும் எதிர்பாராததாக இருந்தது.

சோர்வுடன் வாகீசன் சுருண்டு படுத்துவிட, முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே சென்றாள் சுபவாணி.

தந்தை இப்போது பேசப் போவது இல்லை என்று உணர்ந்து, தங்கையின் பின்னே சென்றாள் ஜெயவாணி.

கண்ணைத் துடைத்துக் கொண்டு இருந்த தங்கையின் தோளில் கையை வைத்துத் திருப்பினாள். ''சுபா, என்னம்மா இது?''

''இந்த இக்கட்டிலிருந்து மீள இப்படி எதையாவது செய்து விடு

வாயோ என்று நான் பயந்து கொண்டு தான் இருந்தேன். அந்த 'ஷுகர் டாடி' மாப்பிள்ளைக்கு வயது அப்பாவைவிட... அவர் ரொம்பவும் வயதானவரா அக்கா?'' என்றவள் மீண்டும் கலகலவென்று கண்ணீர் உகுத்தாள்.

தங்கையின் மனம் போன போக்கை உணர்ந்த ஜெயவாணிக்குச் சிரிப்பு வந்தது. எவனோ வயதான கிழவனிடம் தன்னை விற்றுக் கொண்டாள் தமக்கை என்று முடிவே கட்டி விட்டாள்!

''ஆமாம் சுபா!'' என்றாள் முகத்தைச் சோகமாக வைத்துக் கொண்டு. ''என்னை விட ஆ...று வயது பெரீ...ய்ய கிழவர்,'' என்று முடித்துவிட்டுக் கலீரென்று நகைத் தாள்.

ஆவலும் நம்பிக்கையுமாகத் தங்கை நோக்கவும் கண் சிமிட்டி, ''இதெல்லாம் காதல் விவகாரம், சுபா. உன் போலச் சின்னக் குழந்தைகளிடம் சொல்லக் கூடாத விஷயம். ரொம்ப நாள் விவகாரம்தான். இந்தக் கடன் விஷயம் காரணமாய் வருந்தவும், உரிமையோடு பொறுப்பேற்கப் போவதாகச் சொல்லித் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டார் தினகரன். அவருடைய அப்பாவுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவர் வந்து கலாட்டா ஏதும் செய்துவிடக்கூடாது என்று யாருக்கும் சொல்லாமல் திருமணத்தை அவசரமாக வைத்தோம். போதுமா விளக்கம்?'' என்று கூறி ஜெயவாணி மீண்டும் நகைக்கவும் சுபாவின் முகம் சற்றுத் தெளிந்தது.

தங்கை இன்னமும் முழுவதும் நம்பிவிடவில்லை என்று உணர்ந்தாள் ஜெயவாணி. அவள் தோண்டித் துருவத் தொடங்குமுன், ''நீ பாட்டில் அழுதுகொண்டு வந்துவிட்டாயே என்று உன் பின்னோடு வந்தேன். அங்கே அப்பா என்ன ஏது என்று கலங்கியிருப்பார். வா,'' என்று அவளை இழுத்துப் பிடித்துக்



''பிளட் டெஸ்ட், யூரின் டெஸ்ட், ஈ.ஸி.ஜி.ன்னு நீங்க கொடுத்த டெஸ்ட் டுகளோட ரிசல்ட் வந்திருச்சு டாக்டர்.''

கொண்டு முன்னறைக்குச் சென்றாள்.

கொஞ்ச காலமாகவே மூத்த மகளின் முடிவுகளை ஒப்புக்கொண்டு பழகிவிட்டதால் வாகீசனைச் சுலபமாகவே சமாதானப்படுத்த முடிந்தது.

இரவு உணவு முடிந்து, சாப்பிட்ட சாமான் ஒதுக்கியதுமே தூக்கம் கண்ணை சுழட்டுவதாகக் கூறிப் படுத்துவிட்டாள் ஜெயவாணி. ஆனால் இரு கண்களும் இறுக மூடியிருந்தபோதும் தங்கையின் பார்வை அவளைத் துளைப்பதை அவளால் உணர முடிந்தது.

பொல்லாத பெண்! பொதுவாக இரண்டாவது குழந்தைக்கு புத்தி அதிகக் கூர்மையாக இருக்கும் என்பது மெய்யாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணியபடியே ஜெயவாணி கண்ணயர்ந்தாள்.

ஞாயிறன்று திறந்திருந்த ஒரு சில கடைகளில் தேடி, எல்லோருக்கும் துணிகள் வாங்கினாள்.

சுபா முழு மனதோடு கலந்து கொள்ளா விட்டாலும் மறுக்கவும் இல்லை.

திங்களன்றும் சற்று முன்ன

(தொடர்ச்சி 61'ம் பக்கம்)

ாகவே வந்துவிட்டிருந்தான் தின ான். இறுகியிருந்த அவன் முகத் தக் கண்டதும் அவளுக்கு 'திக்' கன்றது.

அவளைக் கண்டதும் அருகே ந்து, ''நேற்று உன் வீட்டுக்கு ரலாம் என்று நினைத்தேன், ாணி. ஆனால் நீ 'ஷாப்பிங்' பாவதாகச் சொன்னாயே என்று...'' ன்றவன் வாக்கியத்தை முடிக்கா லே அவளது கையைப் பற்றினான். வாணி, என்னால் தாங்க முடிய ல்லையே! நள்ளிரவு வரை மாட்டை மாடியில் நடந்து, கால் லுத்துக் களைத்த பிறகுதான்— ந்தக் களைப்பில்தான் என்னால் காஞ்சமாவது தூங்க முடிந்தது... ாணி, சாயா ஏன் இப்படிச் செய் ாள்? அவளால் எப்படி என்னை தற முடிந்தது? இந்த ஏக்கம் எனக்கு ன்றாவது தீரக்கூடுமா? உன்னிடம் தையெல்லாம் இப்போது சொல் து கூடத் தவறுதான் வாணி. னால் உனக்குப் புரிகிறதில்லையா?'' ன்றான் பிடி இறுக.

சனிக்கிழமைச் சிரிப்பை னைத்து மகிழ்ந்திருந்த வாணியின் னம் இப்போது கலங்கிப் போயிற்று. ாண் ஏறுமுன் முழம் சறுக்குகிறதே!

ஆனால் மனித மனம் மாசைய்க் தரையல்ல. தரை டைப்பது போல மனதிலிருந்து தையும் அடியோடு துடைத்துவிட டியாது. தகுதியற்றவள் மேல் வத்த பாசமானாலும் அப்படித் ான்.

அவன் வருந்துவது தாங்கா ல் மறு கரத்தால் அவன் கையை மல்ல வருடினாள்.

ஆனால் அது தினகரனுக்குப் டிக்கவில்லை. ''வேண்டாம். இப் டியே நில், வாணி,'' என்று அவள் ருகே மிக நெருங்கி, அவளது தாளைப் பற்றிக் கொண்டு சற்று நரம் கண்மூடி அசையாமல் நின் ான.

சிறு அமைதிக்குப் பின் அவனே



''தூங்கு மூஞ்சி மரத்துலே சாந்தி கல்யாண கட்டில் செய்தது தப்பு ஸ்வாமி.''

பேசினான். ''நேற்று நான் எப்படி யாவது உன்னைப் பார்த்திருக்க வேண்டும், வாணி. திருமணம் முடிந் ததும் கொஞ்சநாள் எங்காவது போய் வரலாமா? நீயும் நானும் மட்டுமாக ஒரு பத்து நாட்கள். ஊட்டியில் என் நண்பனுக்கு ஒரு சின்ன வீடு இருக்கிறது. அங்கே போகலாம்.''

''சின்ன வீடா?'' என்று சாதுவாய்க் கேட்டாள் வாணி.

மனமற்று முறுவலித்து, ''சிறு வீடு. ஆனால் வசதியாக இருக்கும். எப்போது வேண்டுமானாலும் பயன் படுத்திக் கொள்ளும்படி சொல்லி யிருக்கிறான்,'' என்றான் தினகரன்.

''சீசனுக்கு அவர் அங்கே போகவில்லையா?'' என்று பேச்சுக் கொடுத்தாள் ஜெயவாணி.

''சீசனுக்கு அவன் ஸ்விட்சர் லாந்து போயிருக்கிறான்,'' என்று புருவம் [illegible] முறுவலித்துவிட்டு, ''வா, வாணி. நாம் வெளியூர் செல்லுகிற நாட்களுக்காக ஜி.எம். முக்கு சில குறிப்புகள் எழுதி வைக்க வேண்டும். டைப்ரைட்டரை என் மேஜையிலேயே வைத்துக் கொண்டு

# கவிதை மூலை



நாடு மற்றொரு நாட்டை
ஒரு திடலுக்குள் துரத்தும்,
பகை விலக்கும் பந்து.

கால்களில் சுழலும் கோளம்
பூமியை வேகப்படுத்திவிட்டது,
கடிகாரம் நின்றது திடுக்கிட்டு.

பார்வையாளர் கண்களை
உருட்டிக் கொண்டே போகும் பந்
வலைக்குள் சிக்க வைக்க.

வலையில் வெற்றியைப்
பிடித்துக் கொடுக்கும்
உதைப்பட்டு உருளும் பந்து

ஆகாயத்தில் இரவு கால்பந்தாட்டம்
பந்து பெரியது

காலில் கோலம் போட்டால்
புள்ளியை ஓரிடத்தில் வைக்கவா முடியு

– தமிழன்ப

---

என் அருகிலேயே இருந்து வேலை செய்,'' என்று டைப்ரைட்டரை அவனே தூக்கி வந்து மேஜை மேல் வைத்தான்.

இருவரின் முயற்சியும் காரண மாக, பேச்சும் வேலையும் நடக்க நடக்க முழுக்க முழுக்க இயல்பானான் தினகரன்.

திடீரென்று, ''காரில் வரும் போது பக்கவாட்டுப் போஸில் பார்த் தேன் வாணி. உன் கண் இமை மயிர் அழகாக நீண்டு வளைந்திருந்ததைக் கவனித்தேன். புருவம்கூட நன்றா கவே இருக்கிறது. அதையெல்லாம் மறைத்துக் கொண்டு இந்தக் கண் ணாடி எதற்கு? 'காண்டாக்ட் லென்ஸ்' போட்டால் உன் கண் அழகு பளிச்சென்று இருக்குமே,'' என்றான் தினகரன்.

சற்றே தயங்கிவிட்டு, ஜெய வாணி தன் முதல் ரகசியத்தை வெளி யிட்டாள்.

''ஓகோ! என்னென்னவே பெரிய பெரிய மர்மங்கள் எல்லா இருப்பது போலத் தெரிகிறதே எல்லாவற்றையும் எடுத்துவிடு. சீ கிரம்,'' என்று வேடிக்கையாக விர டினான்.

''மொத்தமாகச் சொன்னா 'த்ரில்' போய்விடும். அதனா ஒவ்வொன்றாக அவ்வப்போதுதா சொல்லப்படும்,'' என்று அவ 'பிகு' காட்டியபோது அடக்கமா டாமல் சிரித்தான்.

சரியாகிவிடும். எல்லாம் ந றாகிவிடும் என்று நம்பிக்கை கொ டாள் ஜெயவாணி.

மாலையில் அவளுடனே கிளம்பி, வருங்கால மாமனாரை கண்டு செல்ல வந்தான் தினகரன்.

உரிய வார்த்தைகளைச் ச

ாகப் பேசி அவன் விடை பெற்ற
ாது தந்தை தென்புற்றிருப்பது
ால ஜெயவாணிக்குத் தோன்றி
து. சுபவாணியின் முகத்திலும்
ர்ச்சி பரவியிருந்தது.

திங்களை விடச் செவ்வாய்
ாஞ்சம் சந்தோஷமாய்த்தான்
ர்ந்தது.

முதலாவதாகத் தினகரன்—
வன் முன் தினம்போல இறுகிப்
ாயிராமல் இயல்பாய் இருந்தான்.

அடுத்து, தாமோதரன் டெலி
போன் செய்தார். மறுநாள் திரு
ணம் நடந்தால், ஆசீர்வதிக்க வரு
தாகச் சொன்னார். சொத்து
ஷயமாய் அவர் மனதில் மாற்றம்
ல்லாவிட்டாலும், ஒரே மகன்
ன்பதால் இந்தச் சலுகையாம்!

திருமணத்துக்குப் பெரியவர்
ா தேவை இல்லை என்று தூக்கி
பறிந்து பேசியிருந்தாலும், தினகர
க்கு இதில் மகிழ்ச்சி என்பது நன்
ாகவே தெரிந்தது.

அவனது மகிழ்ச்சி
வளிடமும் பிரதி
லித்தது.

அவ்வப்போது
னகரனின் கண்
ரில், அடிபட்ட
பதனை மட்டும்
ாணப்படாவிட்
ால், இவனும் ஒரு
தாரண மண
கன் என்றே கொள்
லாம். ஆனால்
வனும் பழசை
துக்கவே முயற்சிக்
றான் என்பதை
ணர்ந்து தன்னால்
ன ஒத்தாசையை
ஜயவாணி செய்
ாள்.

மதிய உணவுக்கு
மல், ஃபாக்டரிக்
ச் சென்று,
டுத்த பத்து

அழகின் புதிய அளவுகள் என்ன?

பக்கம்–90

நாட்களுக்குரிய வேலை பற்றிச் சொல்லிவிட்டு, வருவதாகக் கிளம்பினான் தினகரன். ''நான் வந்த பிறகு உன்னை உன் வீட்டில் கொண்டு விட்டு விடுகிறேன். அதனால் நான் வரும்வரை, சற்று நேரம் தாமதம் ஆனாலும்கூடக் காத்திரு,'' என்று சொல்லிச் சென்றான் அவன்.

ஏதோ பாட்டை முணுமுணுத்தபடியே மீதி வேலையை முடித்துக் கொண்டிருந்தாள் ஜெயவாணி.

டெலிஃபோன் குரல் கொடுக்கவும், 'ஹம்மிங்'கை நிறுத்தாமலே சென்று ரிசீவரை எடுத்தாள். ''ஹல்லோ, தினகரன் இன்டஸ்ட்ரீஸ்,'' என்றாள் இனிய குரலில்.

''அது தெரிந்துதான் இந்த நம்பருக்கு டயல் செய்திருக்கிறேன். தினுவிடம் கொடு,'' என்றது ஒரு பெண் குரல். அந்தச் சாயாவின் குரல்!

(தொடரும்)

## மொட்டை



சமூக விடுதலையும் தாழ்த்தப்பட்டோரும்
(முனைவர் கோ. கேசவன் –சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம்–605 602)

தீண்டாமை என்கிற உலகில் வேறெங்கும் இல்லாத, சமூகக் கொடுமை இந்தியாவில்தான் உள்ளது. இழிசனர், தீண்டத்தகாதார், அட்டவணை சாதியினர், அரிசன், தலித் என்றெல்லாம் அழைக்கப்படும் மக்களைப் பற்றி ஏழு ஆராய்ச்சிக் கட்டுரைகள் இந்தப் புத்தகத்தில் உள்ளன.

அவர்களுடைய வாழ்வியல், அரசியல் ஆதிக்கங்கள், இயக்கங்கள், மதம், சாதிய மோதல்கள், சமூக விடுதலை என்ற பிரிவுகளில் பாரபட்சமின்றி சமுதாய உண்மைகளை ஆராய்ந்து எழுதியிருக்கிறார். நூற்றாண்டுகளாக ஒதுக்கப்பட்ட சமூகத்தின் தொடர் நிலையாக வாழும் இவர்கள் வரலாற்று ரீதியிலும் பண்பாட்டு ரீதியிலும் உளவியல் ரீதியிலும் சிதைக்கப்பட்டுக்கொண்டே வருவதையும் அதை எதிர்த்த சனங்கள் தோன்றி மறைந்து தோன்றிக் கொண்டே இருப்பதும்தான் புத்தகத்தின் அடிநாதம்.

தாழ்த்தப்பட்ட சாதிகளில் கல்லாதோர் 64%லிருந்து 96% வரை இருப்பதும் மாதிரிக் கிராமங்களில் சாதிக்கும் நில உரிமைக்கும் உள்ள தொடர்புகளையும் கொஞ்சம் பழைய (1980) அட்டவணைகளிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

பார்ப்பனரல்லாத உயர் சாதியினருக்கும் தாழ்த்தப்பட்டோருக்கும் இடையிலான முரண்பாட்டை திராவிட இயக்கங்கள் எப்படி கையாண்டன போன்ற ஆராய்ச்சிகள் உள்ளன. தேவாரம், திவ்வியப்பிரபந்த காலத்தில் 'அவர் கண்டீர்யாம் வணங்கும் கடவுளரே' என்று திருநாவுக்கரசரும் அவருடைய 'அடியார்தம் அடியார்எம் அடிகளே' என்று நம்மாழ்வாரும் தாழ்த்தப்பட்ட சாதியினரைப் பற்றிப் பாடியதை பிரமையான மகிழ்ச்சியைத் தரும் ஓர் ஏமாற்று வித்தை என்றும் கருத்தளவில் கற்பிதம் செய்யப்பட்ட ஒரு சமயப் பொதுமை என்றும் சொல்வது மட்டும் ஒப்புக்காள்ள இயலவில்லை. காரணம், கவிதைகளில் மட்டுமின்றி இராமானுசர் போன்றோர் செயலிலும் இந்த வேற்றுமையை எதிர்த்திருக்கிறார்கள். ஆசிரியரின் மற்ற நூல்களையும் தேடிப்பிடித்து படிக்கத் தோன்றுகிறது. மிகச் செறிந்த ஆராய்ச்சி நூல்.

– புத்தகப்புழு




வாழ்க்கைக்கு அவசியமான கடிதங்களை ஆங்கிலத்தில் எழுதும் முறைகள்
(பி.சி. கணேசன் –பக்: 112 –ரூ. 15 –நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, சென்னை–600 017)

விடுப்பு, லோன், நீதி, சம்பள உயர்வு, ரேஷன் கார்டு, பாராட்டு, புகார் போன்ற மாதிரி ஆங்கிலக் கடிதங்கள்.

நூலாசிரியர் ரிட்டயர்டு ஹெட்மாஸ்டருங்க.

தெனாலிராமன் நகைச்சுவை நாடகங்கள்
(அஸ்வகோஷ் –பக்: 192 –ரூ. 30 –மங்கை பதிப்பகம், 30, சுப்ரமணிய சாலை, சென்னை–600 015)

விகடகவியானது முதல் டெல்லி பாதுஷாவிடம் பரிசு பெற்றதுவரை 13 தெனாலிராமன் கதைகள் நாடகமாக்கப்பட்டுள்ளன.

சிரிப்பைச் சிந்தனைமயமாக்கிய கலைவாணருக்கு இந்த நூலை காணிக்கையாக்கியிருக்கார்ங்க.

பணம் கொழிக்கும் காளான் வளர்ப்புத் தொழில்
(சோனா –பக். 64 –ரூ. 8 –சாந்தி நிலையம், 108, உஸ்மான் சாலை, சென்னை–600 017)

வகைகள், வளர்க்கும் விதம் பற்றிச் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளன.

காளான் சூப்லேர்ந்து வடை வரைக்கும் சமையலும் சொல்லியிருக்கு.

நெருப்பு மலர்கள்
(கீழாம்பூர் எம். துரைராசு –பக். 128 –ரூ. 20 –இராஜா பதிப்பகம், 6–11–பி, எல்லப்பா சேத் எஸ்டேட், ஜெரிமெரி (மேற்கு) பம்பாய்–400 072.)

கவிதைத் தொகுப்பு.

நாய்களுக்கும் பேய்களுக்கும்
நாட்டிலிருந்து விடுதலை
தேய்பிறையாம் எளியவரைத்
தீண்டவில்லை விடுதலை.

நூலாசிரியர், பம்பாய் ஜெரிமேரி தமிழ்ச் சங்கத்துல தலைவரா இருந்தவரு.



காயத்ரி பல வீடு மாறியதால், கண்டுபிடிக்கவே எனக்கு இரண்டு நாட்களாயிற்று.

கடைசியில் அண்ணாநகரில் ஒரு தோழியின் வீட்டில் 'கண்டேன் காயத்ரியை'. (இது சினிமா தலைப்பு போல் இருப்பதால், படமெடுக்க விரும்புபவர்கள் டைட்டிலுக்காக ஒரு லட்சம் பொற்காசுடன் என்னை வந்து பார்க்கலாம்.)

நீல தேவதையாய் இருந்தார் காயத்ரி. விஷயத்தைச் சொன்னதும், ''ஐயய்யோ, சௌத்ரி சார் என்னை ஏமாத்தலை. அவர் என்னைத்தான் நடிக்கக் கூப்பிட்டார். எனக்கு அப்ப டைபாய்டு காய்ச்சல் வந்திருச்சு. குடல் வால் ஆபரேஷனும் பண்ணனும்னு சொல்லிட்டாங்க. தவிர, எங்கம்மாவுக்கு வேற இதயத்துல ஒரு ப்ராப்ளம். அதனால, மெட்ராஸ்ல எதுக்குச் சும்மா வாடகை தரணும்னு வீட்டைக் காலி பண்ணிட்டுப் பம்பாய் போய்ட்டோம். இன்னிக்குத்தான் மெட்ராஸுக்கே வந்தோம். நல்ல வீடா ஏதாவது இருந்தா சொல்லுங்க சார்,'' என்றார்.

என்னமோ ஆஸ்பத்திரிக்குப் போய் வந்த மாதிரி இருந்தது எனக்கு. வீட்டுக்குப் போய் டெட்டால் போட்டுக் குளித்தேன்.

கு.செ.பா.

✶ கஸ்தூரி ரங்கன் சாலையில் அம்மா, சகோதரர்களுடன் வசித்து வந்த கார்த்திக், இப்போது போயஸ் தோட்டத்தில் தனிக் குடித்தனம் சென்றிருக்கிறார். (அரசியலில் சேரப் போகிறாரா?)

✶ சத்யராஜின் படப்பிடிப்பு பெரும்பாலும் பொள்ளாச்சியிலேயே நடக்கிறது. (அங்கு நிறைய சொத்தும் அவருக்கு இருக்கிறது.)

✶ குலுக்கின் காதலரான தாடிக்கார டாக்டர் சரியான ரேஸ் பைத்தியம். (கவர்ச்சியான குதிரை மேல்தான் பணம் கட்டுவாரோ?)

✶ சரண்யா படுக்கையறையில் பொம்மைகளையும், தன்னம்பிக்கையூட்டும் பொன்மொழிகளையும் எழுதி வைத்திருக்கிறார். (எப்படித் தெரியும்?)

✶ முரளியின் கால்ஷீட்டை இப்போது கவனித்துக் கொள்பவர், அவருடைய மனைவியே. (கமிஷன் உண்டா?)

✶ குஷ்பூ வீட்டிலிருக்கும் போது ஒற்றைத் தலைவலிக்காக கண்ணாடி அணிந்திருப்பார். (உண்மையைச் சொல்லிடறேன். காமிராவைச் சுத்திக் கலர் கலராப் போட்டோ ஒட்டியாச்சு. ஆனா, விஷயம் சரியாக் கிடைக்கல. சாரி. அடுத்த வாரம் ஜாஸ்தியா அலையறேன்.)

குமுதம்

நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.
நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
பொறுப்பாசிரியர்
சுஜாதா
பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்
உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்
நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்
நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி
அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்
வடிவமைப்பு
டிராட்ஸ்கி மருது
தலைமை நிருபர்
பால்யூ
ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா டாவின்ஸி

 குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக அச்சிடப் பட்டது. முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

12

*ரமணி சந்திரன்*

# மைவிழி மயக்கம்

சப்தநாடியும் ஒடுங்கி என்பார்களே, அ
போல் ஆனாள் வாணி. தொண்டையை
செருமி ''அவர்... அவர் இங்கே இல்லை,
என்றாள் அவள்.

''இல்லையா!'' என்றாள் சாயா ஏமாற்ற
துடன். ''போகட்டும்... இதோ பார், நீ அந்த
செகரட்டரி பெண்தானே? நான் தரும் செய்தி
அப்படியே அவரிடம் சொல்லு. நான் இப்போ
பம்பாய்க்குப் போய்க் கொண்டு இருக்கிறேன். அ
கிருந்து நாளைக் காலையில் வெளிநாடு போ
றேன். அதற்குள் அங்கே– பம்பாய் நம்பர் தி
வுக்குத் தெரியும்– தினு பேசினால் நான் பயண
தையே நிறுத்திவிடுவேன் என்று சொல்லு. இ
போது சொல்லப் போவதை வார்த்தை பிசகாம
சொல்ல வேண்டும். 'திருத்திக் கொள்ள வாய்ப்
தேடிக் காத்திருக்கிறேன். வா, தினு!''

தலையில் இடி விழுந்தால் எப்படி இரு
கும்? ஜெயவாணி அந்தக் கணத்தில் அனுபவித்து
கொண்டிருந்தாள்.

மின்னாமல் முழங்காமல், எந்தவித எச்சரி
கையும் இல்லாமல் நடு உச்சந்தலையிலேயே விழுந்
விட்ட இடி!

என்ன ஏது என்று ஒன்றுமே உணரமாட்
டாமல் மரத்துப் போய் வாணி நின்ற சில விநா
களுக்குள், ''ஹலோ, ஹலோ...'' என்று சாய
பலமுறை படபடத்து விட்டாள்.

ஒருவாறு சமாளித்து, ''எ... என்ன?'' எ
றாள் வாணி ஈனசுவரத்தில்.

''அப்பப்பா! இருக்கிறாயா? செத்துகித்து
போய்த் தொலைந்து விட்டாயோ என்று பயந்தே
போய்விட்டேன். அப்புறம் என் தகவலை யா
தினுவிடம் சொல்வது? ஆமாம், எஸ்.டி.டி.யி
பேசுகிறபோது இப்படி இடையில் தூங்கப் போ
விட்டால் எவ்வளவு பணம் வீணாகும் என்பதுகூட
தெரியாதா? கர்மம்! இதோ பார். இனியாவது க
னமாக என் பேச்சைக் கேள். பம்பாயில் நான் வழ
கமான இடத்தில்தான் தங்கப் போகிறேன். கால

*இந்தப் படம் வரைந்தவர் கோபுலு அல்ல. ஸ்யாம்!*





ட்டு மணிக்கு என் பயணம் தொடங்குகிறது. இருப்பிடத்தை விட்டு ஆறரைக்குக் கிளம்ப வேண் டும். அதனால் அதற்குள் ஃபோன் பேசியாக வேண்டும் என்று சொல்லு. அவர் பேசாவிட்டால் முடிவான முறிவு என்று புரிந்து கொள்வேன். ஆனால் அவரால் பேசாமல் இருக்க முடியாது. அத னால் நான் சொன்னதை அவரிடம் அப்படியே சொல்ல வேண்டும். எல் லாம் நினைவிருக்கிறதா? எதற்கும் திருப்பிச் சொல், கேட்கிறேன்.''

அந்த வார்த்தைகளை அவ ரிடமே ஜெயவாணி தன் வாயால் வேறு கூற வேண்டுமா? சாதாரணப் பேச்சே தொண்டைக்குள் சிக்கு கிறதே. பெருமுயற்சி செய்து, ''இ... இல்லை. எனக்கு நினைவு இருக்கிறது...'' என்று கூறி முடிக்கு முன் தெய்வாதீனமாக அடுத்த டெலிபோனில் மணியடித்தது. ''நான் அடுத்த ஃபோனில் பேச வேண்டும். வைக்கிறேன்,'' என்று அவசரமாகக் கையிலிருந்த ரிசீ வரைக் கீழே வைத்தாள்.

ஆனால் அடுத்ததை எடுக் கத் தோன்றவில்லை.

இனி என்ன? போயிற்று. போயிற்று. எல்லாமே அடியோடு அழிந்து நாசமாகிப் போயிற்று.

ஆசையும் நிராசையும் நம் பிக்கையும் அவநம்பிக்கையுமாக அவளை, அலைமேல் துரும்பாய் அலைக்கழித்த ஐந்துநாள் கனவு.

மெல்ல மெல்ல நிமிர்ந்து வந்த நம்பிக்கைக்கு இப்படிப் பெரிய அடி விழுந்துவிட்டதே! உயிர்த் தெழ முடியாத அறை பலமாகப் பட்டுவிட்டதே!

திடுமென டெலிபோன் மணி

அடிப்பது நிற்கவும் மீண்டும் திகைத்தாள்.

க்காமல் இருந்துவிட்டாளே! ஏதாவது முக்கிய சேதியாக இருக்குமா? ஒருவேளை, தினகரனாய் இருக்குமோ? செய்ய வேண்டிய கடமையில் தவறிவிட்டாளே!

சே! என்ன கடமை! நாலு ரிங் போவதற்குள் இப்படி அவசரமாக யார் வைத்தார்கள்? ஏன் வைத்தார்களோ என்று மனம் ஏதேதோ எண்ணி அலுத்தது. களைத்துச் சோர்ந்தது.

இப்போது அவள் திரும்பி வந்தாலும் ஓர் உடல் உறுப்பைக் கொடுக்கவும் தயார் என்றவன் நிச்சயம் ஓடத்தான் போகிறான்.

இந்த நாலு நாள் வேலைக்கு அந்த முப்பதினாயிரம் கூலி என்று அவன் அளவில் கணக்கு முடிந்து போகும்!

ஆனால் அவள்!

அவளது சொந்த மன வேதனை எப்படியோ போய்த் தொலைகிறது. ஆனால் அப்பா! சுபா! அவர்களிடம் எப்படிச் சொல்வது? என்னவென்று விளக்குவது? அப்பாவின் உடம்பு என்ன ஆகும்?

இவை எல்லாவற்றையும் விடத் தினகரன்! இப்போதைக்கு இந்தச் சேதியில் அவன் இன்பத்தி எல்லைக்கே செல்லக்கூடும்.

ஆனால் டெலிபோனில்ச இவ்வளவு உதாசீனமாகப் பேசு ஒருத்தி, 'நீ செத்துவிட்டால் எ சேதியை யார் சொல்லுவார்க என்கிற அளவுக்கு சுயநலம் பி தவள், அவளை மணப்பது தி கரனுக்கு எந்த அளவு நன்ன யாகும்? முழுத் தீமைதானே? அ தச் சாயா அவனை நாசமாக அரித்து விடுவாளே!

சர்க்கரை வியாதிக்கார இனிப்பு உண்பதுபோல ஆரம் மோகத்தில் சிலகாலம் எல்லா ஒரே இனிமையாகத்தான் தெ யும். பிறகு? எல்லாம் விஷமா விடும்.

இதையெல்லாம் இப்போ அவனிடம் சொன்னால்கூட அ னுக்குப் புரியாதே! புரியாமல் ப குழியில் விழப் போகிறானே இவனை எப்படிக் காப்பாற்றுவது யார் காப்பாற்றுவது?

அவனுடைய தந்தை தண யிடுகிறார் என்று நினைத்தாலே அவரும் மகனைக் காப்பாற்ற தானே முயன்றிருக்கிறார்! பாவம் அவரை எடுத்தெறிந்து பேசியது எ வளவு பெரிய தவறு!

திடீரென்று இன்னொன்




''யாரோ முக்கியமான மந்திரி யாம். இவருக்கு மட்டும் அர சாங்கம் இப்படி சிறப்புச் சலுகை கொடுத்து இருக்காங்களாம்.''

—கடுவை கோபால்சாமி



இவர்களின் பெயர் சுதா, சாந்தா. எதற்குச் சிரிக்கிறார்கள் என்று தெரிய வில்லை.

படம்: கே.எஸ். அருணாசலம்

தோன்றியது. அவள்தான் வெளிநாடு போகிறாள் என்று மூன்று நாட்களுக்கு முன்பே தினகரன் சொன்னானே! இப்போது இங்கே இருந்து எப்படிப் பேசுவாள்? ஒருவேளை எல்லாம் பொய்யாய் இருக்குமோ? யாராவது வாணியின் மனதைக் கஷ்டப்படுத்த என்று சும்மாவேணும் இப்படிக் கதை விட்டார்களோ? வக்கிர புத்திக்காரர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்!

ஆமாம். அப்படித்தான் எல்லாமே பொய்! பொய்! பொய்!

பொய்யென்ற சொல் காதில் விழுந்த பிறகு, தன் வசமிழந்து அவளே அலறியிருப்பது புரிந்து ஜெயவாணி மிரண்டு போனாள். தனியறை என்பதால் கூட்டம் கூடவில்லை! இல்லாவிட்டால்?

இவ்வளவு தூரமா கட்டுப்பாட்டை இழப்பது? இன்னும் கொஞ்சம் விட்டால் பைத்தியம் பிடித்துத் துணியைக் கிழித்துக் கொண்டு அலைவாள் போலிருக்கிறதே!

பெருமுயற்சி செய்து மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு யோசித்தாள்.

நடந்தது எல்லாம் உண்மையே. என்ன காரணத்தினாலோ சாயாவின் மனம் மாறிவிட்டது. அது அதிசயமும் இல்லை. தினகரனை இழக்க யாருக்குத்தான் மனம் வரும்? ஆனால், அவன் மனதிலும் இருப்பதால் இப்போது சாயா ஜெயிக்கப் போகிறாள். ஜெய என்ற அடைமொழி இவளுக்குப் பெயருக்கு மட்டும்தான். வாழ்க்கையில் கிட்டப்போவது தோல்வி மட்டுமே!

என்னதான் சமாளிக்க முயன்றாலும் நெஞ்சுக்குள் தீ பற்றி எரிவதை அவளால் நிறுத்த முடியவில்லை. 'இல்லை' என்று இருந்தது எவ்வளவோ பரவாயில்லை. இப்போது கையில் கொடுத்துப் பிடுங்குவது அவளால் தாங்க முடியாத துன்பமாய் அவளை அரித்தது.

இந்தத் துன்பத்தைத் தடுத்து நிறுத்தவோ ஒரு வழியும் அவளுக்குத் தெரியவில்லை.

இருந்தது. ஒரு வழி இருந்தது. ஒரு குறுக்கு வழி. சாயா சொன்னதைத் தினகரனிடம் சொல்லாமல் இருந்து விட்டால், அவனுக்கு ஒன்றுமே தெரியப் போவது இல்லை. எதுவும் தெரியாதபோது அவன் அவளுக்கு ஃபோன் பண்ணப் போவதில்லை. அவன் பேசாவிட்டால் 'முறிவு' என்று எடுத்துக் கொள்கிறேன் என்றவளும் விட்டு விட்டு வெளிநாடு போய்விடுவாள். அப்புறம் தொடரவும் மாட்டாள். பிறகு பிரசினையே இராது.

ஆனால் இதைச் செய்ய அவளுக்கு மனமில்லை.

அவளை நம்பி, இடிச் செய்தி தாங்கி வந்த அந்த டெலிபோன்

ள்பட அனைத்தையும் விட்
டுப் போயிருக்கும் தினகரனை
எப்படி ஏமாற்றுவது? அவனை
நேர்மைத் திருவுரு என்று
எண்ணுகிறவனை எப்படி
வஞ்சிப்பது? ஊகூம். அவ
ளால் முடியாது! முடிந்தா
லும் கூட அதில் இன்னொரு
சிக்கலும் கூட. பம்பாயிலி
ருந்து நேரடியாகச் சாயா,
தினகரனை வீட்டுக்கே டெலி
போன் செய்து பேசவும்
கூடுமே!

இப்போது இருக்கும் நல்ல
வள் என்கிற பெயரும் பறி
போகும்! அவ்வளவே!

கடவுளாகப் பார்த்து உதவி
னால் ஒழிய அவளுக்கு ஒரு
கதியும் இல்லை.

ரொம்பவும் கடவுள் பக்தி
உடையவள் சரஸ்வதி. பிள்ளை
களுக்கும் பக்தியைப் போதித்திருந்
தாள். ஆனால் அவ்வளவு வேண்டி
யும் கடவுள் சரசுவதியின் உயி
ரையோ, வாகீசனின் தொழி
லையோ காப்பாற்றவில்லை என்
றானதால் அவளுக்குப் பிறகு வீட்
டில் யாருமே கடவுளை அவ்வளவா
கக் கண்டு கொள்வது இல்லை.
சிறுவயதுப் பழக்கத்தில் தன் போக்
கில் கடவுளே என்பதோடு சரி.

கேட்டதை எல்லாம் கடவுள்
தந்தாக வேண்டும் என்று எதிர்
பார்ப்பது தவறு என்று ஓரிரு முறை
வாணி வாதாடியது உண்டு. ஆனால்
பூசைப் படங்களைப் பார்த்தால்
தாயின் நினைவு வெகுவாகத் தாக்
கவும், அவளும் 'வாலறிவன் நற்
றாள்' தொழுவதைத் தினந்தோறும்
ஒழுங்காகச் செய்வது கிடையாது.
நேரமும் நினைவும் இருந்தால்
மட்டுமே.

ஆனால் இப்போது தன்னால்
எதுவும் இயலாது என்று ஆகவும்
மீண்டும் கடவுளிடம் வந்து நின்
றாள்.



''அவங்கதான் நெருங்கி உட்
கார்ந்துக்கிட்டு நமக்கு நிறைய இடம்
தருவாங்க!''

–சீர்காழி வியார்

முருகா காப்பாற்று, ஷண்
முகா காப்பாற்று.

உட்கார முடியாமல் நடக்
கும் போதும், ஜன்னல் வழியே
தினகரன் வந்துவிட்டானா என்று
எட்டிப் பார்க்கும்போதும், அவன்
இட்டுச் சென்றிருந்த வேலைகளை
முடித்துவிடும் பிடிவாதத்துடன்
வேலை செய்தபோதும்கூட முரு
கனையும் ஷண்முகனையும் அவள்
விடவே இல்லை.

வேலையிலும் வேண்டுதலி
லும் முழுமையாக ஈடுபட்டிருந்த
தாலோ என்னவோ, தினகரன்
உள்ளே வந்ததை அவள் கவனிக்க
வில்லை.

''அச்சச்சோ! கல்யாணப்
பெண் இன்னமுமா வேலை செய்து
கொண்டு இருப்பது? வெட்கம்!
வெட்கம்!'' என்ற அவன் குரலில்
தூக்கிவாரிப்போட்டுக் கொண்டு
எழுந்தாள்.

(தொடரும்)

பெயர்:
டியாகோ
மாரடோனா

தொழில்:
பந்து
உதைப்பது

வயது:
பெண்கள் இன்
னும் மொய்க்
கிறார்கள்

பிடித்த
தலைவர்:
பீலே அல்ல



நீண்டக
எரிச்சல்
உயரம்
மறந்து
விட்டது
ஒன்றரை
வருடத் த
மறக்காதது
ஆஸ்த்மா
மாத்திரைக

பொழுது
போக்கு:
கோர்ட் வழக்குகள்

மறைப்பது:
இத்தாலி குழந்தை
யின் தந்தை யார்?

சமீபத்திய எரிச்சல்:
அர்ஜென்டினா
தோல்வி

சமீபத்திய
சாதனை:
தெரிந்த
விஷயம்

நீண்டகால
சாதனை:
'86 உலகக்
கோப்பை
வெற்றி'

பிடிக்காத
தலைவர்:
பிஃபா
தலைவர்

நம்புவது:
'கடவுளின் கை'

நம்பாதது:
டெஸ்ட்
ரிசல்ட்டுகள்

உடனா
தேவை
நல்ல
ஆஸ்த்
டாக்டர்க

—நிரஞ்சன்

# பயோடேட்டா

ரமணி சந்திரன்

# வெளிச்சம்





## 13

வாணியின் தலையை லேசாக வருடிவிட்டு, மேஜை மேல் அவள் முடித்து வைத்திருந்த பைல்களைப் பார்வையிட்டபடியே தினகரன் மேலே பேசினான். ''அதைவிட 'ஷேம்' கல்யாணப் பெண்ணை இன்னமும் வேலை வாங்குவது. என்ன செய்வது? மீனாட்சி மிஷின் ஒர்க்ஸ் நம்பர் போடு வாணி. மூன்று மாதமாகப் பணமே அனுப்பவில்லையாம். கொஞ்சம் 'டோஸ்' விட வேண்டும்,'' என்று கூறியபடி அமர்ந்து கையெழுத்திடத் தொடங்கினான்.

ஏக்கத்துடன் அவனை நோக்கினாள் வாணி. இந்த இலகுப் பேச்செல்லாம் சுடுமணலில் தெளித்த நீர் போலச் சுவடே இல்லாமல் போய்விடப் போகிறது. ஆனாலும் சொல்லித்தான் ஆக வேண்டும்.

ஒரு பெரிய மூச்சை உள்ளிழுத்து, உறுதியோடு அவள் பேசத் தயாரானபோது, முன்னிருந்த காகிதங்களில் பார்வை விலகாமல் தினகரன் அவசரப்படுத்தினான். ''சீக்கிரம், வாணீ. அங்கே அலுவலகம் மூடிவிடப் போகிறார்கள்.''

இருக்கட்டும். இன்னும் சில நிமிடங்கள்!

உள்ளே அடங்கியிருந்த மூச்சை மெதுவாக வெளியிட்டபடி முன்னே வந்து ஒரு ரிசீவரை எடுத்துக் காதில் வைத்தவள் 'டயல் டோன்' வராது போகவே, அதை வைத்துவிட்டு அடுத்ததை எடுத்துப் பார்த்தாள்.

''இரண்டிலுமே ஒரு சத்தமும் இல்லை சார். இரண்டுமே ரிப்பேர் போல் 'டெட்' ஆகத் தெரிகிறது,'' என்றாள். சொல்லவேண்டும். இந்த வேலை முடிந்ததும் சொல்லியாக வேண்டும்.

''இரண்டுமா ரிப்பேர்? ஆச்

சரிய... ஓ காட்!'' என்று நெற்றியில் அறைந்து கொண்டான் தினகரன்.

''எ... என்ன சார்?''

''இன்று நாலு மணியிலிருந்து டெலிபோன் பணியாளர்கள் வேலைநிறுத்தம் அல்லவா? ஞாபகம் இல்லாது போயிற்று. இப்போது... நீ மீனாட்சிக்குக் கொஞ்சம் கடுமையாக ஒரு கடிதம் டைப் பண்ணிக் கொண்டு வா, வாணி. கூரியரில்...''

''நீங்கள்... நீங்கள் எ... என்ன சொன்னீர்கள் சார்?''

''மீனாட்சி மிஷின் வொர்க்குக்கு.''

''அதில்லை சார்,'' என்று அவன் பேச்சில் வாணி குறுக்கிட்டாள். ''என்னவோ, டெ... டெலிபோன் ஸ்ட்ரைக் என்று...''

''ஆமாம். நீ பேப்பரில் படிக்கவில்லை? பேச்சுவார்த்தை வெற்றி பெறாவிட்டால் இன்று நாலு மணியிலிருந்து காலவரையற்ற வேலை நிறுத்தம் என்று அறிவித்திருந்தார்களே!''

ஓகோ! அதனால்தான் இரண்டாவது கால் நாலு மணிச் சத்தங்களுடன் நின்று போயிருக்கிறது! அப்படியென்றால்... பொருள் புரிகையில் சில விநாடிகள் ஜெயவாணியால் மூச்சே விடமுடியவில்லை.

இப்போது யாரும் டெலிபோனில் பேச முடியாது. அதாவது தினகரனால் சாயாவுடன் பேச முடியாது. அவளாலும் இவனோடு பேச முடியாது. நாளைக் காலையானால் அவள் வெளிநாடு போய்விடுவாள். திரும்பி வந்தபிறகுதான், முறிவை ஒத்துக் கொண்டு போகிறவள் திரும்பி வந்த பிறகும்தான், ஏன் நெருங்கப் போகிறாள்! மாட்டாள்.

அதிசயம் என்னவென்றால், இதில் ஒரு சிறு செயலைக்கூட வாணி அவளாகச் செய்யவில்லை! சூழ்ந்துவந்த இருட்டு தானாகவே விலகிவிட்டது. கடவுளாகப் பார்த்து எத்தனையோ பேர் மனதில் புகுந்து ஸ்ட்ரைக் பண்ணத் தூண்டி, தினகரனும் சாயாவும் பேசுவதைத் தடுத்திருக்கிறார். அப்படியானால் சாயாவின் தொடர்பு அவனுக்கு



வேண்டாம் என்பதே கடவுளின் தீர்ப்பும்!

''ஹல்லோ...'' என்று அவன், கையை அவள் முன்னே நீட்டிச் சொடக்குப் போடவும் ஒருவாறு நடப்புக்குத் திரும்பினாள் ஜெயவாணி. ''சாரி...'' என்றவள், மகிழ்ச்சியோடு முறுவலித்தாள்.

சற்று வியந்து நோக்கி, ''சில பேரின் கண்களைப் போல... சொல்லப் போனால் உன் கண்களையும் போலவே உனக்கு உணர்ச்சிகளை மறைக்காத உதடுகள் என்று நான் நினைப்பது உண்டு. ஆனால் இவ்வளவு அழகான சிரிப்பும் இந்த உதடுகளுக்குச் சொந்தம் என்று தெரியாதே!'' என்று அவன் புன்னகையோடு இயம்பவும் அவள் முகம் லேசாகச் சிவந்தது.

அவள் அவனிடம் சொல்லாதது நல்லதுதான். சரிதான். கடவுள் காட்டிய வழியில் செல்வது தப்பே இல்லை.

அதன்பின் எல்லாமே செவ்வனே நடைபெற்றது.

நன்றாக 'கிரீஸ்' இடப்பட்ட இயந்திரம், தங்கு தடையின்றி ஓடுவது போலத் திருமணம் நல்லபடியாக நிறைவேறியது.

கோவில் சிலையோடு மற்றொரு சிலையாக முதலில் விறைப்பாகவே நின்று கொண்டிருந்த தினகரன், மெல்ல மெல்ல இளகிச் சாதாரணமாகப் பேசப் பழகத் தொடங்கினான்.

திருமணத்தைப் பதிவு செய்யச் செல்லும் வரையிலும்கூட அவன் மனம் முழுமையாக அங்கே இல்லை என்பதை ஜெயவாணியால் புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் சாயாவின் நினைவு அடியோடு இல்லாது போவதும் அசாத்தியம் தானே!

அன்று நிறையத் திருமணங்கள்.



''பேண்ட், சட்டைக்கு கொஞ்சம் அதிகமா கஞ்சி போட்டுட்டாராம்.''

– ராதா வாசுதேவன்

பணத்தைப் பயன்படுத்தி, சலுகை பெற்று முன்னே செல்லத் தினகரன் விரும்பாததால், சற்று நேரம் வரிசையில் நிற்க வேண்டியதாயிற்று.

அழுத்தமான கொண்டை மாறி, தழையப் பின்னி நிறையப் பூ வைத்திருப்பதைப் பார்த்ததும், அவள் தலையை விரலால் தொட்டு, ''இரண்டாவது மர்மமா?'' என்று வினவினான் அவன்.

அவள் ஒப்புதலாய் முறுவலிக்கவும், ஆச்சரியமாய் நோக்கி, ''நீ மிகவும் அழகாவே இருக்கிறாய், வாணி. நீ வேடமிட்ட காரணம் இப்போது நன்றாகப் புரிகிறது,'' என்றான் தினகரன்.

மணமக்களுக்குத் திருநீறு பூசிவிட்டு, அவள்புறம் வந்து நாலாய் மடித்த நூறு ரூபாய் நோட்டு ஒன்

றைக் கொடுத்தார் தாமோதரன். ''ஒவ்வொரு கல்யாண நாளன்றும், வருடப் பிறப்பன்றும் நமஸ்காரம் செய்து இப்படி ஒரு நூறை வாங்கி விடுவாள் உன் அத்தை. வற்றாமல் வளருமாம். நீயும் இதைப் பத்திர மாக வைத்துக் கொள்,'' என்றவர் அவளை ஏற இறங்கப் பார்த்தார். '' 'புலியை முறத்தால் அடித்து விரட்டினாள் மறத்தி,' என்று படித்திருக்கிறேன். ஆனால் செம் மறி ஆடும் புலி விரட்டும் என்று தெரியாது...'' என்றார் அவளுக்கு மட்டும் கேட்கும் குரலில்.

அதிர்ந்துபோய் அவரை நோக்கினாள் ஜெயவாணி.

இவருக்கு என்ன தெரியும்? எப்படித் தெரியும்? எப்படித் தெரிய முடியும்?

அவரது கண்களில் ஒரு பளபளப்பு தவிர, ஜெயவாணி என்ன தேடியும் அவர் முகத்தி லிருந்து எதையும் கண்டு கொள்ள முடியவில்லை. வாய் விட்டுக் கேட்க வும் முடியவில்லை. கேட்டால் அவளது தவறையும் வெளியிட் டாக வேண்டுமே! அது தவறே அல்ல; கடவுள் காட்டிய வழி என்று யார் புரிந்து கொள்வார்கள்? முக் கியமாக இந்தத் தடபுடா மனிதர்? ஊகூம். வாய்ப்பே கிடையாது.

அவரும் அதற்குமேல் அவள ருகே நில்லாமல், ''என்னம்மா சின்னப் பொண்ணு...'' என்று கலைவாணியுடன் ஏதோ பேசப் போய்விட்டார்.

'எப்படி நடந்திருக்க வேண் டிய திருமணம்...' என்று அவர் குத்திக் காட்டிப் பேசாததும் ஓர் ஆச்சர்யம்!

திருமணம் முடிந்த கை யோடு, கோவைக்கு விமானத்தில் சென்று, அங்கிருந்து காரில் ஊட்டி செல்ல ஏற்பாடு செய்திருந்தான் தினகரன். முதல் தடவை என்பத தால் விமானப் பயணம் கிளர்ச்சி ஊட்டுவதாக இருந்தாலும், கார்ப் பயணமே வாணிக்குப் பிடித்திருந் தது.

காரை இலகுவாக ஓட்டிய படியே, வழியெங்கும் பல அபூர்வக் காட்சிகளைக் காட்டினான் தின கரன்.

அவன் காட்டிய காட்சி களையே அவள் இன்னமும் விரிவு படுத்தி ரசிக்கவும் – மலையில் நீர் கசிவதைக் காட்டினால் வெள்ளி உருகி வழிவதுபோல் என்பாள். சிவப்பாய்ப் பூத்திருந்த மரக்கூட் டங்களைக் காட்டுத் தீ போல என் பாள். இதுபோன்ற ரசனைகளில் அவனும் மகிழ்ந்து ஈடுபட்டான்.

தினகரன் ஜெயவாணியின் கையை அவ்வப்போது இறுகப் பற்றிக் கொண்டான். மிகவும் நெருங்கி அமர்ந்தான். அவன்





**மண்ணெண்ணெய்:** தொண்டர்கள் தீக் குளிக்கப் பயன்படுத்து வது.

**இயற்கையழகு:** ப்ரா இல்லா தது.

**சிறைச்சாலைக் கதவு:** தமிழ்ச் சினிமா ஹீரோ முதல் காட்சியில் திறந்து கொண்டு வருவது.

பார்வையில் வியப்பும், ரசனையும் பாராட்டும் கூட இருந்தது. ஆனாலும், இது காதலோ, ஆசையோ அல்ல என்பதை அனுபவமற்றவள் என்றாலும் ஜெயவாணி நன்றாக உணர்ந்திருந்தாள்.

உள்ளத்தை உறுத்தும் ஒன்றிலிருந்து – சாயாவின் நினைவிலிருந்து அவனைக் காத்துக் கொள்ளும் கேடயமாக அவள் அடிக்கடி அவனுக்குத் தேவைப்படுவது போல அவளுக்குத் தோன்றியது.

அவனும் அதையே மெய்ப்படுத்தினான்.

இரவின் தனிமையில், ''வாணி, நாம் இருவரும் காதல் கொண்டு மணக்கவில்லை. நம் உறவின் அடிப்படை ஒருவருக்கொருவர் கவுரவம் காப்பது; துன்பம் விலக்குவது. இந்த அடிப்படை இப்போது நட்பாக வளர்ந்திருப்பதாக எனக்கு எண்ணம். இது இன்னமும் வளர்ந்து ஒரு நல்ல உறவாக மலரக் கூடும். அப்படி மலர வேண்டும் என்பதுதான் என் ஆசை. மலரும் என்பது என் நம்பிக்கையும்கூட. ஆனால் அது தானாக நேர்வது நல்லது என்பது என் அபிப்பிராயம். அதற்குள் அவசரப்பட்டுத் தடி கொண்டு அடித்துக் கனிய வைக்கிறேன்னு கெடுத்துவிடக் கூடாது என்று எண்ணுகிறேன். நான் சொல்வது உனக்குப் புரிகிறதில்லையா, வாணி?'' என்றான் அவன்.

புரிந்தது. மனதில் சாயாவை வைத்துக் கொண்டு அவளைத் தொட அவனுக்கு மனமில்லை. அப்படித் தொட்டிருந்தால் அவளுக்கும் அது அவமானம்தான். சாயாவை அவன் மறக்கவில்லையே என்ற ஏக்கம் இருந்தபோதும், ஏதோ தாலி கட்டியாயிற்று. இனி உடம்பு சுகத்தை விடுவானேன் என்று ஆடுமாடுகள் போல இல்லாமல் அவன் பேசிய விதம் அவளுக்கும் இதமாகவே இருந்தது.

அவனை நோக்கி மெல்ல முறுவலித்து, ''எஸ் பாஸ்,'' என்று ஒப்புதல் தந்தாள்.

ஒரு விரலால் அவள் உதட்டை வருடிவிட்டு, ''இவ்வளவு இங்கிதமாய் நடந்து கொள்ள உனக்கு யார் கற்றுக் கொடுத்தார்கள், வாணி? இயல்பாகவே உனக்கு அனுசரணையான சுபாவம் என்று நினைக்கிறேன். அந்த வகையில் நான் மிகவும் அதிர்ஷ்டக்காரன்தான். ஒரு சின்ன வேண்டுகோள். தூங்கும் போது உன் கையை நான் பிடித்துக் கொள்ளலாமா? இல்லை, உனக்குத் தொந்திரவு, தூக்கம் வராது என்றால் சும்மாச் சொல்லிவிடு. பரவாயில்லை,'' என்றான் தினகரன்.

எப்படிச் சொல்லுவாள்?

(தொடரும்)



**தற்கொலை:** லாக்கப்களில் கைதிகள் செய்து கொள்வது.

**ஷாப்பிங் காம்ப்ளக்ஸ்:** வெடிகுண்டு வைக்கப்படும் இடம்.

**பொழுதுபோக்கு:** புதிதாகக் கல்யாணமானவர்கள் விரும்புவது.

**மறதி:** தன் தொகுதியைப் பற்றி எம்.எல்.ஏ.க்களுக்கு வருவது.

**வெப்பநிலை:** மலையாளப் படம் பார்க்கும்போது உயர்வது.

# உங்கள் குழந்தை நன்றாக எடை போடுவதற்கு சமவிகித ஊட்டச் சத்து அத்தியாவசியமானது

குழந்தைகள் சும்மா எடை போட்டால் மட்டும் போதாது. அவர்கள் 'சரியான' முறையிலே எடை போட வேண்டும். குறைவாகவும் கூடாது, மிகவும் அதிகமாகவும் கூடாது. குழந்தைகள் 'சரியான' அளவில் எடை போட வேண்டுமானால் தசைகளையும், திசுக்களையும் வளர்ப்பதற்கும் ரத்த விருத்திக்கும் உதவக் கூடிய **புரோட்டீன்கள்** தேவை.

இந்த புரோட்டீன்களைப் பெறுவதற்குச் சிறந்த வழி **ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த உணவைத் தர** வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு **4 மாதங்கள் ஆன பிறகு** பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு உங்கள் குழந்தைக்குத் தேவைப்படுகிறது.

எனவேதான் தாய்மார்கள் **ஸெரிலாக்கைத்** தேர்ந்தெடுக்கின்றனர். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவான ஸெரிலாக்கில் புரோட்டீன்கள் செறிந்துள்ள இரண்டு முக்கிய பொருட்களான பாலும் கோதுமையும் உள்ளன. கொழுப்புச் சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்களும் சம அளவில் கலந்துள்ளன. மேலும் இதற்கு வைட்டமின்கள் A, D, E, B-காம்ப்ளெக்ஸ் மற்றும் C பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு, ஸெரிலாக் இப்போது நெஸ்லேயின் **புரட்சிகரமான புதிய Z-லைன் என்ஸைமேட்டிக் முறைப்படி** தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகிறது. ஸெரிலாக் மிக எளிதில் ஜீரணமாகிவிடுகிறது.

மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் ஸெரிலாக் கொடுங்கள்.

ஏனென்றால், இதில் 'சரியான' அளவு புரோட்டீன்கள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை 'சரியான' முறையிலே எடை போடுவதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த திட உணவு இது.






**இலவசம். ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்**

உங்கள் குழந்தையின் வயது/பிறக்கக் கூடிய தேதி, உங்களுக்கு விருப்பமான மொழி ஆகிய விவரங்களை எமக்கு எழுதுக: ஸெரிலாக், தபால் பை எண் 21, புது தில்லி - 110 029.

**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்.**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே, தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.

ஒரு சின்ன பேப்பரில் எழுதிக்கொண்டு திறமையான விரல்களும் காலும் ஒத்துழைத்து நெய்ய, மெல்லமெல்ல ஓர் எதிர்கால மயிலாப்பூர் மாமிப் புடவையாகிறது. சிறுமி ரேவதி காதில் ப்ளாஸ்டிக் நகையும் பட்ட னில்லா சட்டையில் சேப்ட்டி பின்னும் காலடியில் பள்ளிப் புத்தகமுமாக, சரிகை இழைகளைப் பட்டில் ஊடுருவு கிறாள்.

முன்காலத்தில் ராஜாக்கள் பெரிய பெரிய கோவில்கள் கட்டி னார்கள். இந்தக் காலத்தில் ராஜாக் களுக்குப் பதில் என்.ஆர்.ஐ.கள்தான் பெரிய அளவுக்குக் கோவில் கட்ட முடிகிறது. அண்மைக் காலத்தில் கட்டப்பட்ட மிகப்பெரிய மந்திரம் அக்ஷரதாம் . ஆமதாபாதுக்கு அருகே காந்தி நகரில் கட்டப்பட்ட சாமி நாராயணனின் கோயில். ஆறு வருஷம், ஆறாயிரம் மெட்ரிக் டன் சிவப்பு நிற தனிப்பட்ட மணற்கல், எண்பது லட்சம் மனித மணிகள், 108 அடி உயரம், 240 அடி நீளம், 131 அடி அகலம் உள்ள இந்தக் கோவில் 'கடவுளின் சாசுவத வாசஸ் தலமாக' கட்டப்பட்டிருக்கிறது. உள்ளே ஏழடி உயர தங்க சாமியாக சுவாமிநாராயணன் பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுவாமி நாராயண் நிறுவி இத்தனை பிரம் மாண்டமாக வளர்ந்த இந்த இயக் கத்துக்குப் பணக்கார குஜராத்திகள் தான் காரணம். இந்தக் கோயிலில் என்னைக் கவர்ந்தது, அதன் 'ஹை டெக்' சமாசாரம். மல்ட்டி மீடியா ஆடியோ அனமேட்ரானிக்ஸ் ரோபாட்டுகள் என்று நவீன கம்ப் யூட்டர் இயலும் கொஞ்சம் டிஸ்னி லாண்டும் ஹிந்து பிலாசபியும் கலந்த வினோதக் கலையைப் பார்த் தால்தான் நம்ப முடியும். அத் தனை பிரம்மாண்டமான கோயில்.

–சுஜாதா

அண்மைக்காலத்தில் கட்டப்பட்ட மிகப்பெரிய மந்திரம் அக்ஷரதாம்

கடவுளின் சாசுவத வாசஸ்தலம்



நான் உன் கணவன்
அல்லவா? அல்லது நான்
உன்னைத் தொட்டதுதான்
இல்லையா? இரவு முழுவதும்
என் அருகிலேயே இருந்
தவளுக்கு இப்போது என்ன?

# மைவிழி

14

பூச்சாண்டிக்குப் பயப்படும் குழந்தை போலிருக்கும் தினகரனை ஆதரவாக அணைத்துக் கொள்ள வேண்டும்போல் அல்லவா ஜெயவாணிக்குத் தோன்றியது. ஆனால் முன்னொரு தரம் ஆறுதலாகக் கையைப் பற்றியதே அவனுக்குப் பிடிக்கவில்லை என்பதும் நினைவுக்கு வந்தது. அடுத்தவரின் பரிவும் இரக்கமும் அவளுக்கும் பிடிக்காது என்பதால் பேசாமல் தலையை அசைத்தாள் அவள்.

தினகரனின் நண்பனின் வீடு சிறிய அளவிலேயே இருந்தபோதும், ஹாலிலும், படுக்கை அறையிலும் கணப்பு போன்ற சகல வசதிகளுடனும் இருந்தது. ஏற்கெனவே தகவல் சொல்லியிருந்ததால் சுத்தமாகவும் இருந்தது.

கையோடு வாங்கிச் சென்றிருந்த உணவை உண்டு விட்டு சீக்கிரமே இருவரும் படுத்துவிட்டனர்.

கோவையிலிருந்து காரை ஓட்டி வந்த அலுப்போ, துணையைப் பற்றிவிட்ட அமைதியோ காரணமாகத் தினகரன் விரைவிலேயே துயிலில் ஆழ்ந்துவிட்டான்.

ஆனால் அவனது ஆழ்ந்த சுவாசத்தின் மெல்லிய சத்தத்தைக் கேட்டபடி வாணி வெகுநேரம் விழித்துக் கிடந்தாள்.

தினகரனின் ஆழ்ந்த மூச்சின் சிறு ஒலிகூட ஜெயவாணிக்கு

ரமணி சந்திரன்





மிகுந்த மனச் சாந்தியையே அளித்தது.

ஜன்னல் திரையின் இடுக்குகளின் வழியே கசிந்து வந்த மங்கிய நிலவொளியில், ஒரு சீராய் ஏறி இறங்கிய அவனது மார்பும், அவளது கையைத் தன்னுள் அடக்கியிருந்த தினகரின் வலிய கரமும் வரிவடிவாகக் கண்ணில் பட்டன.

'சாம்யகம்' சென்று திரும்பியபோதிலிருந்து அடிக்கடி இப்படித்தான். இதே மாதிரி அவள் கையை அவன் கைப்பிடிக்குள் வைத்துக் கொண்டே இருக்கிறான். மனது அலைபாய்வது நிற்கும் வரை லேசில் விடுவதில்லை!

சாயாவை நினைக்கும் வேளைகளில் மட்டுமே இந்தக் கைப்பற்றுதல் என்றிருப்பது வாணிக்கு ஒருபுறம் கலக்கத்தையும் மறுபுறம் தைரியத்தையும் தந்தது.

சாயாவைத் தினகரன் என்றாகிலும் மறக்கக்கூடுமா, மறக்காவிட்டால்? என்பது கலக்கம். அதே சமயம், அவளது நினைவினால் வரும் துன்பத்தை விலக்குவதற்காக, குறைந்தபட்சம் குறைப்பதற்காக வேனும் இவளைத் தேடுகிறான் என்றால் அதற்குரிய ஏதோ ஒன்று இவளது நெருக்கத்தில் அவனுக்குக் கிடைக்கிறது என்பதால்தானே? இது வளர்ந்து, ஒரு நல்ல உறவாக மலரும் என்று நம்புவதாகச் சொன்னானே?

அந்த நம்பிக்கை, பலிக்கும் என்ற நம்பிக்கை, இணைந்திருந்த கைகளைப் பார்க்கையில் அவளுக்கும் உண்டாயிற்று.

அந்தக் கைகளையே பார்த்திருந்தவளுக்கு, லேசாகத் தூக்கம் வருவதுபோலத் தோன்றவும், வழக்கம்போல ஒருக்களித்துப் படுக்கத் திரும்பலானாள். ஆனால் அவன் கைப்பிடியை விலக்காமல் புரண்டு படுக்க முடியாது என்று புரியவும், அப்படியே படுத்துத் தூங்க முயன்று, ஒருவாறு உறங்கவும் தொடங்கினாள்.

காலையில் அவள் கண்

விழித்தபோது ஊட்டியில் கூட வெயில் பரவத் தொடங்கியிருந்தது.

இதமாகப் போர்த்தி இருந்த 'ரஜாய்'க்குள்ளிருந்து வெளி வரலாமா என்று யோசித்தபடி அவள் மெல்ல அசையவும், அவன் குரல் கேட்டது.

''ஒரு வழியாய் விழித்தாயா, வாணி? இவ்வளவு நேரம் தூங்குகிறாயே, உடம்பு ஏதும் சரியில்லையோ என்று பயந்து போனேன். நெற்றியைத் தொட்டுப் பார்த்த பிறகுதான், அப்படி ஒன்றுமில்லை, நம் மனைவி, 'பின் தூங்கிப் பின் எழும் பேதை' என்று தெரிந்தது,'' என்று சிரித்தான் தினகரன்.

அவனது கலகலப்பான பேச்சும் சிரிப்பும், வாழ்நாள் முழுவதும் பழகிவிட்டது போல உணர்ந்தாள் ஜெயவாணி. அவன் குரலிலேயே, ''இப்போதுதான் விடிகிறது! அதற்குள் ப...த்...து... மணி வரை தூங்கிவிட்ட மாதிரி அளக்கிறீர்களே!'' என்று இலகுவாகப் பதிலிறுத்தபடி, போர்வையை விலக்கி மெதுவாக எழுந்து அமர்ந்தாள்.

அவன் 'ஓகோ' என்று நகைத்தான்.

அவள் புரியாமல் விழிக்கவும், ''மணி பத்தேதான்,'' என்று கூறி மீண்டும் சிரித்தான்.

நம்ப மாட்டாமல் கடிகாரத்தைப் பார்த்தவளுக்கு ஒரே ஆச்சரியம். மணி மெய்யாகவே பத்துதான். இளங்காலை போல வெயில் இப்போதுதான் வந்து கொண்டிருக்கிறது! ஆனாலும் அப்படியா


எப்படி வருகிறது
சாட்டிலைட் நிகழ்ச்சி?
பக்கம்: 110

தூங்கினாள்!

''எழுப்பியிருக்கக் கூடாதா? உங்களுக்குப் பசித்...'' என்று பேசியபடியே படுக்கையில் கையை ஊன்றிக் கொண்டு, வேகமாக இறங்க முயன்றவள், சட்டெனக் கை வலுவற்று மடங்கவும், 'ஆ' என்று சிறு கூவலுடன் மீண்டும் அமர்ந்துவிட்டாள்.

''என்னம்மா? என்ன? கை என்ன ஆயிற்று? பிசகிவிட்டதா?'' என்று அவள் அருகே ஓடிவந்தான் தினகரன்.

இரவு முழுவதும் அசையாமல் ஒரேவிதமாய் வைத்திருந்ததால் மரத்துப் போன கையை மறு கையால் தேய்த்துவிட்டாள். ''ரொம்பப் பசிக்கிறதா?'' என்று சிறு கவலையுடன் தன் உடல் துன்பம் மறந்து அவனைக் கேட்டாள்.

''இல்லை. பசிக்கவில்லை. நானும் கொஞ்ச முன்புதான் விழித்தேன். விழித்ததும் காப்பியில் இறங்கினேன். அவ்வளவுதான். அது போகட்டும், கையில் என்ன? நீ கையை ஊன்றியதில் தசை ஏதும் இழுத்துக் கொண்டுவிட்டதா? வாணீ! இது என்னால் நேர்ந்தது. அப்படித்தானே? இரவு முழுவதும் ஒரே மாதிரிக் கையை நீட்டி வைத்திருந்ததால் கை மரத்துவிட்டது. அதுதானே? கையைக் கொடு, அழுத்தி உருவிவிட்டால் சரியாகிவிடும்,'' என்று கையைப் பற்றித் தோள் புறத்தில் அழுத்திப்பிடித்துவிடத் தொடங்கினான்.

''வேண்டாம்... பரவாயில்லை,'' என்று கூச்சத்துடன் கையை இழுத்தாள் ஜெயவாணி.

''என்ன பரவாயில்லை? கையை இழுக்காதே...'' என்று சற்று அழுத்தமான குரலில் கூறியபடி, அவளைப் பார்த்தவன் சிவந்திருந்த அவள் முகத்தைப் பார்த்து, வியந்து, ''என்னிடம் என்ன கூச்சம்

வாணி? நான் உன் கணவன் அல்லவா? அல்லது நான் உன்னைத் தொட்டதுதான் இல்லையா? இரவு முழுவதும் என் அருகிலேயே இருந்தவளுக்கு இப்போது என்ன?'' என்றவன் பிடிவாதமாய்க் கையைப் பிடித்துவிடலானான்.

அருகில் இருப்பதும், கையைப் பிடித்துக் கொள்வதும், லேசாக அணைப்பதும், ஏன் ஓர் ஆறுதலுக்காக முத்தமிடுவதும்கூட அவ்வளவாகப் பாதிப்பை ஏற்படுத்தவில்லைதான். ஆனால், ஒட்டி நின்று, தன் வலிய ஆண் கரத்தால், அழுத்தமாய் அமுக்கி விடுவது என்றால் அது அவளை என்னவோ செய்தது. அவன் பேசிய விதத்தால், அதைக் காட்டிக் கொள்ளாமல் அசையாது நின்றாள்.

தன் வேலையைக் கவனத்துடன் செய்தபடி அவளிடம் கேட்டான். ''இப்படிக் கஷ்டமாக இருக்கையில், கையை இழுத்துக் கொள்வதற்கு என்ன, வாணி?'' என்று கேட்டான்.

''கஷ்டமாக இல்லையே!'' என்று அவசரமாக மறுத்தாள் ஜெயவாணி. ''கொஞ்சம்கூட எனக்கு வலியோ துன்பமோ இல்லவே இல்லையே.''

''ம்ம்? கஷ்டமாக இல்லாவிட்டாலும், ஒரே மாதிரி, கையை நீட்டிப் படுத்தது அப்போதே சங்கடமாகவாவது இருந்திருக்கும் அல்லவா? நீ ஏன் கையை இழுத்துக் கொள்ளவில்லை?'' என்று மீண்டும் துருவினான் அவன்.

இணைந்திருந்த கைகளைப் பிரிக்க மனம் வராததைச் சொல்ல மனமின்றி, ''நீங்க விழித்து விடுவீர்களோ என்றிருந்தது,'' என்று பாதியை மட்டும் சொன்னாள் ஜெயவாணி.

மணிக்கட்டை உருவிவிட்டுக் கொண்டிருந்தவன், அவள் கையை உயர்த்தி, புறங்கையில் முத்தமிட்டுச் சொன்னான். ''கர்ணன் கதை தெரியுமல்லவா? மடியில் தலை வைத்துத் தூங்கிய குருவின் தூக்கம் கலைந்துவிடக் கூடாது என்று தொடையில் வண்டு குடைந்து, ரத்தம் பெருகி, அப்படிப் பெருகிய ரத்தத்தால் நனைந்து குரு விழிக்கும் வரையும் வலியைச் சகித்துக் கொண்டு அசையாமல் இருந்தானாம். நீயும் அதே பரம்பரைபோல் இருக்கிறதே!''

தினகரனின் குரலில் இருந்த



'ஏரியாவுல கொசு அதிகம்! அதான் மொத்தமாக கவர் பண்ணிட்டேன்!'

பெருமிதம் உள்ளத்தைக் குளிர வைக்க, ''அப்படியா? குரு சார்? எனக்கென்னவோ, ரொம்பப் பெரிய விஷயத்தோடு, ரொம்பவும் சின்ன விஷயத்தை ஒத்திட்டுப் பேசுகிறீர்கள் என்றே தோன்றுகிறதே,'' என்றாள் அவள் இலகுவாக.

''விஷயம் பெரியதோ, சிறியதோ? இருவர் செயலின் அடிப்படையும் ஒன்றுதானே?'' என்று பிடிவாதமாகக் கூறி, விரல்களை இழுத்துவிட்டான் அவன்.

''தாங்க்ஸ் பாஸ்,'' என்று கைகளை உருவிக் கொண்டு விலகினாள் வாணி. ''ஆனால் பயங்கர ஐஸ்! இந்த ஊட்டிக் குளிருக்குத் தாங்காது!'' என்று கேலியாகக் கூறியபடியே அவளது பெட்டியைத் திறந்து, குளித்துவிட்டு அணியவேண்டியவற்றை எடுத்தாள்.

அவளையே பார்த்தபடி, கட்டிலில் அமர்ந்து இலகுவாக ஒரு காலை ஆட்டியபடியே பேசினான். ''ஐஸ் என்று ஒதுக்காவிட்டால் இன்னும் ஒன்று சொல்வேன். காலையில் எழுந்ததும், முதல் காட்சியாக உன் முகம் பார்த்த போது மிகவும் அழகாய் இருந்தது. தலையணை மறைத்துப் பரந்து கிடந்த உன் கூந்தலின் நடுவே உன் முகம், நள்ளிரவு சந்திரன்போலப் பளிச்சென்று மனதைக் கவர்ந்தது.''

சிவந்த முகத்தையும், பூரிப்பையும் அவன் காணாமல் மறைக்கப் பெட்டிக்குள் கவிழ்ந்து ஏதேதோ தேடினாள் வாணி. சும்மாவே அழகு என்கிறானே, கொஞ்சம் அலங்காரம் செய்தால்? என்று ஆசைப் பட்டது மனது. பெரிதாகப் பண்ண வேண்டாம். வீட்டில் இருக்கும் போது, அருகில் எங்காவது சென்று வரும்போது செய்யும் அளவுக்கு? சுபா மாதிரி...!

அவளோடு கூடவே குளியலறைக்கு வந்து, வெந்நீர்க் குழாய் குளிர் நீர்க் குழாய்களை எந்த அளவில் எப்படித் திறந்தால் சரியான பதத்தில் வெந்நீர் வரும் என்று கற்றுக் கொடுத்துவிட்டு வெளியேறினான் தினகரன். கதவைத் தாளிடும் போது, ''நான் குருதான், இல்லையா?'' என்று முறுவலித்து விட்டுப் போனான்.

அதையே நினைத்து, சிறு புன்னகையுடனேயே குளித்துக் கொண்டிருந்த ஜெயவாணிக்கு ஏதோ உறுத்தியது.

மகாபாரதக் கர்ணனுக்கு, அவனுடைய குரு பரசுராமர் அன்று அவனது ரத்த தியாகத்துக்குக் கொடுத்த பரிசு, ஏமாற்றுக்காரன் என்ற பட்டமும், கடைசியில் கர்ணன் அழியக் காரணமாய் இருந்த சாபமும் அல்லவா? வேண்டவே வேண்டாம். தினகரன் அந்த மாதிரி குருவாக இராமல் கடவுள் காப்பாற்றட்டும்!

அவளுக்குப் பிடித்தமான



பச்சை வண்ணச் சுரிதார், அதன் சிவப்பு நிற பைப்பிங் கலரில் புருவ மத்தியில் பொட்டு, கண்களின் வடிவம் மாறாமல் லேசாகத் தீட்டிய கண் மை. இயற்கையாகவே இளம் சிவப்பான இதழ்களில் அதே நிறத்தில் லிப்ஸ்டிக், நகங்களிலும் அதே வண்ண பாலிஷ். கூந்தலை உயர்த்தி வாரி, கிளிப் மாட்டி, ஒரு ரப்பர் பான்ட் மாட்டியதும் அலங்காரம் முடிந்தது.

அழகாய் இருந்தாலும், ரொம்பவும் அதிகப்படியோ என்று இரண்டு தரம் கண்ணாடியில் கூர்ந்து கவனித்து, அப்படியொன்றும் இல்லை என்று நிம்மதியுற்று, அறையிலிருந்து வெளியேறி தினகரை நாடிச் சென்றால், அவன் அவளைக் கண்டுகொள்ளவே இல்லை.

வெளியே யாருடனோ பேசிக் கொண்டு இருந்தவன் அவள் வரும் அரவம் உணர்ந்து, லேசாகத் திரும்பினான். பொதுவான நோக்குடன், ''வா, வாணி!'' என்றவன், மீண்டும் முன்னே கம்பளிச் சட்டை, குல்லாயுடன் நின்றவனிடம் திரும்பினான்.

''பெயர் ரங்கையா, வாணி. தோட்டக்காரன். வீட்டைப் பார்த்துக் கொள்வதும் இவனே. சமைக்க வேண்டும் என்றால் உதவிக்கு ஆள் கூட்டி வருகிறேன் என்கிறான். இங்கே காஸ், மைக்ரோவேவ் அவன், கிரைண்டர், மிக்ஸி எல்லாமே இருக்கிறது. நவநீ குடும்பத்தோடு வரும்போது, சமையலுக்கு என்று ஆள் அழைத்து வருவானாம். அதுபோல அழைத்து வரவா என்று கேட்கிறான். அது வேண்டாம் என்று பார்க்கிறேன் வாணி. காலையில் கிளம்பி, தொட்டபெட்டா, பொட்டானிகல் கார்டன், லேக் என்று எங்காவது சுற்றிவிட்டு, இடையில் அங்கேயே சாப்பிட்டுவிடலாம். இரவுக்கு வாங்கி வந்து சூடு பண்ணிக் கொள்ளலாம். அதைவிட்டுச் சாமான் வாங்கிச் சமைத்துக் கொண்டு... வேண்டாம் ரங்கையா. என்ன வாணி, வேண்டாம்தானே?''

அவளுக்கு மறுக்கத் தோன்றாதது மட்டுமின்றி, மறுக்க இவன் இடம் தரவும் இல்லை.

''ஓகே! நீ பால் மட்டும் வாங்கி 'பிரிஜ்'ஜில் வைத்துவிடு ரங்கையா,'' என்று பணத்தைக் கொடுத்துவிட்டு எழுந்தான் தினகரன். ''வா, வாணி, இன்னொரு கப் காப்பி குடித்துவிட்டுக் கிளம்புவோம். முதலில் ஓட்டல். நாம் போய்ச் சேருகிற நேரம் தோசை, இட்லி வகையறா கிடைக்குமோ என்னவோ...'' என்று பேசியபடி வந்தவன், திடீரென்று, ''வாணி, ஏதோ வித்தியாசம். ஏதோ ஒரு மாற்றம் உன்னிடம் தெரிகிறதே!'' என்று அவளை, யோசனையோடு நோக்கினான்.

(தொடரும்)




த்தியாசங்கள் உள்ளன. விடை: 47'ம் பக்கம்
—எஸ்.ஆர்.எம்.

# வாருங்கள் வாசகர்களே!

### சினிமா! சினிமா!

ஒருமுறை மனைவியை அரும்பாடுபட்டுச் சம்மதிக்க வைத்து, இரண்டு மகன்களுடன் போர்பந்தரில் உள்ள ஒரு தியேட்டரில் 'போலீஸ் அகாடமி' ஆங்கிலப்படம் பார்க்கச் சென்றோம். படத்தின் இடை இடையே முத்தமிடும் காட்சிகள் வரத் தொடங்கின. மனைவியின் முணுமுணுப்பும் துவங்கியது. ''பிள்ளைகளைக் கெடுத்துவிடுவீர்கள்.''

திடீரென்று ஒரு காட்சியில் நீண்டநேர முத்தக்காட்சி திரை முழுக்க வியாபித்திருந்தது. நான் நெளிந்து கொண்டிருந்தேன். படம் பார்த்துக் கொண்டிருந்த என் இரண்டு வயது மகன் சட்டெனத் திரும்பி, என் மனைவியின் இதழில் முத்தமிட்டுவிட்டான்.

''போதும் படம் பார்த்தது. பார்த்தீர்களா சின்னக் குழந்தையின் ரியாக்ஷனை,'' என்ற வசவுடன் எழுந்து கொண்டாள் என் மனைவி.

அப்புறம் என்ன? பாதிப் படத்தில் இருட்டில் மெதுவாக வெளி வந்து விட்டோம். அன்று கிடைத்த 'டோஸில்' ஆங்கிலப் படம் பேரையே சொல்வதில்லை.

– ம. செல்வராஜ், குஜராத்.

# அறிவியல்

## உலகம் உங்கள் விரலில்

உலகின் மிகப்பெரிய கம்ப்யூட்டர் வலைப்பின்னல் நெட்வொர்க் இண்டர்நெட். உலகெங்கும் பரவிய வியாபார நோக்க கணிப்பொறிகளையெல்லாம் ஒருங்கிணைத்து ஆயிரக்கணக்கான கல்லூரிகளையும் பல்கலைக்கழகங்களையும் அரசாங்க கார்ப்பரேட் செய்தி இணைப்புக்களையும் ஒன்றியமைக்கும் ஒரு சூப்பர் செய்திப்பாட்டை என்று இதைச் சொல்லலாம். சுமார் இரண்டரை கோடி கம்ப்யூட்டர் பயனீட்டாளர்களை இது இணைக்கிறது. அதில் 'புல்லடின் போர்டு' என்னும் சேவை இருக்கிறது. அதன் மூலம் ஒரு கல்லூரி அறிவிப்புப் பலகையில் அறிவிப்பை வைப்பதுபோல உலகளவு விரிந்த நோட்டீஸ் போர்டில் வைக்கலாம். இதனுடன் கனெக்‌ஷன் பெற மோடம் வசதியும் ஒரு கம்ப்யூட்டரும் வேண்டும். அந்தக் கணிப்பொறியில் டிஸிபிஐபி TCPIP என்னும் நெட்வொர்க் வசதி வேண்டும். உலகே உங்களுடன் இணைக்கப்படுகிறது.

இண்டர்நெட்டில் கிடைக்கக்கூடியது 'ஈ மெயில்' உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து மிகுவேகத் தபால் இணைப்பு.

முகமறியா பல்லாயிரக்கணக்கான கம்ப்யூட்டர் சொந்தக்காரர்களுடன் திரை மூலம் 'பேசலாம்'. வெகுதூரத்தில் உள்ள கம்ப்யூட்டர்களிலிருந்து ப்ரொக்ராம்களை வரவழைத்து உங்கள் கம்ப்யூட்டரில் அவைகளை ஓட்டலாம்.



'டெலிநெட்' என்று ரிமோட் கண்ட்ரோல் வசதி மூலம் வாஷிங்டனில் உள்ள கம்ப்யூட்டரை வந்தவாசியிலிருந்து இயக்கலாம். நெட்வர்க்கிலுள்ள மிகப்பெரிய தகவல் வெள்ள லைப்ரரியில் புத்தகங்களையும் ரிப்போர்ட்டுகளையும் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் மேயலாம்.

'யூஸ்நெட்' என்று உலகில் உள்ள அத்தனை தலைப்புகளிலும் மாலிக்யுலர் பயாலஜியிலிருந்து நிர்வாண நங்கைகள் வரை எந்த சப்ஜெக்டிலும் சங்கங்கள் உள்ளன. அவைகளைப் பயன்படுத்தலாம். துணுக்குகள் எழுதி அனுப்பலாம், விவாதம் செய்யலாம், திட்டலாம், காதல் செய்யலாம். அனைத்தும் இந்த இண்டர்நெட் மூலம் கிடைக்கும்.

மார்ஷல் மக்லூஹன் என்னும் எதிர்கால இயலாளர் 'குளோபல் வில்லேஜ்', உலக கிராமம் என்னும் சித்தாந்தம் சொன்னார். இண்டர்நெட் போன்ற சர்வதேச வலைப்பின்னல்கள் மக்லூஹனை மெய்ப்பிக்கின்றன. தற்போது வியாபாரிகள் சிலர் கண்டமேனிக்கு இண்டர்நெட்டை கெட்ட பயன்படுத்துகிறார்கள் என்கிற குற்றச்சாட்டு கிளம்பியிருக்கிறது. எந்த நல்ல விஷயத்திலும் கொஞ்ச காலத்தில் நஞ்சு கலந்து விடும் என்பது இருபத்தோராம் நூற்றாண்டின் ஆரம்ப சித்தாந்தமாக இருக்கும்.

—சுஜாதா

# மையெழுதி மயக்கும்

## 15

"வாணி, நான் கொஞ்ச நேரம் உன்னை அணைத்துக் கொண்டு நிற் கட்டுமா? நீ என் கைக்குள் இருந் தால் வலியெல் லாம் போய் விடும்."

"ஆமாம். நான் உஜ் ஜாலாவுக்கு மாறிட்டேன்," என்று அவ்வளவு நேரம் தினகரன் தன்னைக் கவனிக் காத உறுத்தலை மறைத்துக் கொண்டு இயம்பினாள் ஜெய வாணி.

சிரித்துக் கொண்டே, "உஜ்ஜாலாவுக்கு அல்ல, சுரிதாருக்கு. இவ்வளவு அழ கான உடல் அமைப்பை அப் படிப் படுதாவுக்குள் மறைக்க உனக்கு எப்படித்தான் மனம் வந்ததோ? ஆச்சரியம்!" என் றவன், உடனே நினைவு கூர்ந்து, "அதன் காரணம்



சொன்னாயில்லையா? ஒருவகையில் அது வும் சரிதான்," என்றான்.

சமையலறைக்குள் வந்து, காப்ப மிஷினில், காப்பி போடவும், பாலை மைக்ரோ அவனில் சூடு பண்ணவும் கற்று கொடுத்துவிட்டு, "நான் குருதான் இல் லையா? கர்ணன் மாதிரி மரியாதையாக நடந்துகொள்ள வேண்டும்," என்று மிரட் டினான். "இதையெல்லாம் காஸ் அடுப்ப லேயே செய்யலாம். ஆனால் வேறு எப்படி குரு பதவியைத் தக்க வைத்துக் கொள்வது அதனால்தான்," என்று விளக்கவும், அவ னோடு சேர்ந்து அவளுக்கும் சிரிப்பு வந்தது

காப்பியை அவனே கலந்தான். "பர வாயில்லை. என் காப்பியைவிட நன்றாகவே இருக்கிறது. ஆனால், இந்த வேலையெல் லாம் நீங்கள் யாரிடம்... நீங்கள் எப்படி ஏன் கற்றுக் கொண்டீர்கள்?" என்று வின வினாள் ஜெயவாணி.

"இல்லாவிட்டால் ஸ்டேட்சில் பட் டினி கிடந்தாகவேண்டும். அங்கே சமைய லுக்கு, வீட்டைப் பார்த்துக்கொள்ள என்று ஆள் வைப்பது என்றால் இங்கே நம் பாக் டரியை விற்று, அந்தப் பணத்தைக் கொண்டு போய்ச் செலவு பண்ண வேண்டியதாகி விடும்," என்று வேடிக்கை போல விளக்கி

## ரமணி சந்திரன்

ளான் தினகரன்.

தினகரனுக்கும் ஜெயவாணிக்கும் இடையே ஒருவிதமான நட்பு— துன்பத்தால் ஒருவருக்கு ஒருவர் தோள் கொடுத்ததால் உண்டான தோழமை இருந்தது. அந்தத் தோழமையை முயன்று உண்டாக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

ஆனால், அதற்குமேல் ஒரு கணவனின் தன்மையோடு அவளோடு பழக அவனால் முடியவில்லை என்று ஜெயவாணிக்குத் தோன்றியது. அதற்கு அவன் மிகவும் முயற்சிக்கிறான் என்றும் அவளுக்கு ஓர் ஐயம். முடிந்த அளவு ஏதேனும் பேசுவதும், சின்னச் சின்ன ஜோக்குகளுக்குக் கூட விழுந்து விழுந்து சிரிப்பதும் அவளது ஐயத்தை உறுதிப்படுத்தின.

ஆனால், இது அவள் எதிர்பார்த்தே ஏற்றுக் கொண்ட ஒன்று. இதற்காக வருத்தப்படலாகாது என்ற பிடிவாதத்துடன் வாணியும் அவனது முயற்சியில் கலந்து கொண்டாள்.

சென்னை, பழைய கதைப் பக்கம் திரும்புவதுகூடக் கிடையாது. அதை அப்படியே மூட்டைக் கட்டிப் போட்டுவிட்டு, வேறு ஏதேதோ எதையாவது பேசினார்க்ள். ஒரு பூ, ஒரு மரம்கூட விடாமல், அதைப் பற்றிக் கொஞ்சம் ரசனையோடு பேச ஏதாவது இருக்குமானால் அதையும்



பேசினார்கள்.

விரைவிலேயே முயற்சி இல்லாமலே அப்படிப் பேச முடிந்தது.

ஊட்டியின் இயற்கை எழில் அதற்குப் பேருதவி செய்தது எனலாம். இயற்கை அன்னையின் செல்லப் பிள்ளையிடம் பார்க்கவும், ரசிக்கவும் அழகுக்கா பஞ்சம்?

காப்பி குடித்த இடத்தில் கடலையும், பழங்களும் வாங்கிக் கொறித்தபடி நடந்தார்கள். ஓடு, தோல் என்ற கழிவுகளைக் கீழே போடாமல் கையிலிருந்த பையிலேயே வாணி சேகரித்து வந்ததைக் கவனித்துவிட்டுப் பாராட்டினான் தினகரன். ''நீயெல்லாம் சிங்கப்பூரில் இருக்க வேண்டியவள், வாணி. அங்கே குப்பையை வெளியே போட்டால் அபராதம் உண்டு தெரியுமா?''

இரவு உணவை, வரும் வழியில் கண்ணில் பட்ட பெரிய ஓட்டலில் முடித்தார்கள். உணவுக்குச் செல்லும்போதே, வாணிக்கு என்ன பிடிக்கும் என்று கேட்டு, இன்னும் ஒரு செட் பார்சலுக்கும் ஆர்டர் கொர்டுத்தான் தினகரன்.

தவறாக ஊகித்து, ''அய்யோ, இங்கே சொல்லியிருப்பதே வயிறு டொம்மென்று ஆகிவிடும். இன்னும் எதற்கு? இதற்கு மேல் இரவில் சாப்பிட முடியாது,'' என்றாள் அவள்.

பார்சல் மறுநாள் காலைக்கு என்று அவன் முறுவலிக்கவும், மீண்டும் ஆட்சேபித்தாள் அவள். ''குருமாவையாவது ப்ரிஜ்ஜில் வைத்து சூடு பண்ணிக் கொள்ளலாம். சப்பாத்தி சகிக்காது''

''அங்கேதான் இந்தக் குருவின் திறமை பிரகாசிக்கப் போகிறது. நாளைக்கு இதை உனக்குப் புதுச் சப்பாத்தியாக ஆக்குவது எப்படி என்று கற்றுத் தருகிறேன், பார். என் இட்லியைக்கூட.''

இலகுவான பேச்சு வார்த்தை யோடு உணவு முடிந்தது.

வெயிட்டர், தட்டில்

---

## அன்றும் இன்றும்

''அக்கா இன்னிக்கு உன் புடவையைக் கட்டிக்கிட்டுப் போறேன்.''



''அண்ணா, இன்னிக்கு உன் ஜீன்ஸைப் போட்டுக்கிட்டுப் போறேன்.''

—க. கணேசன்



கொணர்ந்து வைத்த பில்லை எடுத்துப் பார்த்துவிட்டு, ஒரு நூறு ரூபாய்த் தாளை பில்லுடன் சேர்த்து, தட்டில் வைத்தான் தினகரன்.

மீதிப் பணம் வருவதற்காக இருவரும் காத்திருந்தபோது அது நடந்தது.

அந்த ஓட்டலில், ஒவ்வொர் உணவு மேஜைக்கும் மேலாகச் சிறு வட்டங்களாக, அரைகுறையான ஒளியை உமிழ்ந்த விளக்குகள் தவிர மற்றபடி, சாப்பாட்டு ஹால் முழுவதும் முக்கால் இருட்டுதான்.

ஆனால் ஒருபுறமாய்ச் சுவர் ஓரமாய் அமைக்கப்பட்டிருந்த நீண்ட சதுர மேடையில் மட்டும் வெளிச்சம் இருந்தது.

திடுமென அந்த வெளிச்சமும் அணைந்துவிட, இரு ஒளிவட்டங்கள், ஜிலுஜிலுவென்று ஜிகினா பளபளத்த உடை அணிந்திருந்த பெண்ணொருத்தியை அந்த மேடையின் மையத்துக்கு அழைத்து வந்தன. பார்ப்போரின் ஆர்வத்தைத் தூண்டிவிடும் விதமாக இனிய இசை வேறு.

என்னவென்று கவனிக்கு முன், எழுந்து வந்து ஜெயவாணியின் கையை இறுகப்பற்றி, ''போகலாம்,'' என்று நடக்கத் தொடங்கினான் தினகரன்.

அவசரமாகக் கைநீட்டி, பார்சல் அடங்கிய பையையும், கைப்பையையும் எடுத்துக் கொண்டு அவனைத் தொடர்ந்தவள், ''மீதிப் பணம்'' என்றதை அவன் கவனிப்பதாகவே இல்லை.

காரை ஓட்டியபோதும், அவளது கையை அவன் விடவில்லை என்றதுமே ஜெயவாணிக்குப் புரிந்துவிட்டது. இது சாயா விஷயம்.

அவன் நினைவைத் தூண்டியது என்னவாக இருக்கும் என்பதையும் அவளால் ஊகிக்க முடிந்தது. எனவே வீட்டினுள் சென்றதும் அவளைத் தோளோடு பற்றி, ''இப்படித்தான் நான் சாயாவை முதலில் சந்தித்தேன்,'' என்று தினகரன் கூறியபோது அவள் ஆச்சரியப்படவில்லை.

உள்ளூர ஒரு வேதனை மட்டுமே. இந்தச் சாயாவிடமிருந்து அவனுக்கு விடுதலையே கிடைக்காதா? அவளுக்கும்தான்?

மனைவியின் மனம் புரியாமல்— புரிந்து கொள்ளும் தன்மையே இல்லாமல் அவன் தொடர்ந்தான். ''அன்றைக்கு ஒரு சினேகிதனின் பிறந்த நாள் பார்ட்டிக்குப் போயிருந்தேன், வாணி. அப்போது இதே மாதிரிதான், நீலமும் சிவப்புமாய் ஜிகினா பளப்பளக்கச் சாயா பாட வந்தாள்... வாணி, நான் கொஞ்ச நேரம் உன்னை அணைத்துக் கொண்டு நிற்கட்டுமா? தப்பாக இல்லை. சும்மா... லேசாக. எனக்கு என்னவோ... என்னவோ நீ என் கைக்குள் இருந்தால் இந்த வலியெல்லாம் போய்விடும் போல...




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆறு

கொஞ்சமாவது குறையும்போலத் தோன்றுகிறது.''

அவள் எப்படி மறுப்பாள்?

சொன்ன மாதிரியே அணைத்து, அவளது உச்சந்தலை மீது கன்னம் சாய்த்து கம்மிய குரலில், ''உனக்குப் பிடிக்கவில்லை என்றாலோ கஷ்டமாயிருந்தாலோ சொல்லிவிட வேண்டும், வாணி'' என்றவன், மீண்டும் சாயாவிடம் சென்றான்.

''உன்னைப் பார்த்த பிறகு என் கண்கள் வேறு எதையும் பார்க்க மறுக்கின்றன, என்ற அர்த்தத்தில் இதே பாட்டுதான். என்னையே பார்த்துப் பாடினாள். என்னைவிட்டு வேறு எதையும் அவனால் பார்க்க முடியவில்லை என்று எண்ணினேன். ஏனென்றால் எனக்கு அப்படித்தான் இருந்தது. பாடி முடித்ததும் தங்க நிறமும் பளபளப்புமாய் மெல்லிய 'ஷால்' அணிந்து வந்தவளை, நண்பன் அறிமுகம் செய்து வைத்தான்.

''இரவில் அவள் நினைவு அடிக்கடி வந்தது. மறுநாள் சாயாவே டெலிபோன் செய்து அன்றைய புரோகிராமுக்கு அழைத்தாள். போனேன். பாடி முடித்ததும் என் அருகிலேயே உட்கார்ந்து பேசிக் கொண்டு இருந்தாள். மற்றவர்களின் பொறாமைப் பார்வையில் பெருமை உண்டாயிற்று.

''ஒருநாள் வீட்டுக்கு அழைத்தாள். விட்டுப் பிரிய மனமே இல்லை என்றாள். எனக்கும் அதே உணர்ச்சி உண்டாயிற்று. அடக்கிக் கொண்டேன். மணந்து கொண்டபிறகே மற்றது உறுதியாக என்று இருந்தேன்.

''கொஞ்சம் ஆசைப்படுவாள், வாணி. துணிமணி, நகை என்று விரும்புவாள். மற்றது தன்னால் வாங்க முடிந்தது, வைரம்தான் எட்டாக்கனி என்ற ஏக்கத்துடன் சொன்னது பொறுக்காமல் அவள் டூர் போய் வரும்போதெல்லாம் வைர நகையாகவே பரிசு கொடுத்தேன்.

''அப்போதெல்லாம் எவ்வளவு உணர்ச்சி வசப்பட்டுப் போவாள் தெரியுமா? திருமணத்தை அவசரமாக வைத்ததன் காரணமே, அளவு மீறி நடக்கக் கூடாது என்றுதான்.

''இவ்வளவுக்கு மேல் அவளால் எப்படி மாற முடிந்தது வாணி, எப்படி அவளால் என்னைப் பிரிய முடிந்தது? அவ்வளவு உணர்ச்சி வசப்பட்டவள் மாறுவது என்றால் வாணி, என்றால் நம்பக் கூடவில்லையே!''

ஜெயவாணியின் மனமும் சட்டெனக் கலங்கிப் போயிற்று.

ஒருவேளை, பிரியமுடியாமல் தான் ஃபோன் செய்தாளோ? அதைச் சொல்லாமல் வாணிதான் அநியாயம் செய்து விட்டாளோ?

(தொடரும்)




..த்தியாசங்கள் உள்ளன. விடை: 91'ம் பக்கம்.

# எய்ட்ஸ் நோயாளிகளின் கவனத்திற்கு

சித்ரா, செப்டம்பர் பதினேழாம் தேதியிலிருந்து ஆயுர்வேத மருந்தைச் சாப்பிட ஆரம்பித்தாள். நாற்பத்தைந்து நாட்களுக்குப் பிறகு அவள் ரத்தப் பரிசோதனையில் நோய் இல்லை என்று நிரூபணம் ஆயிற்று. எல்லோருக்கும் இந்த முடிவு அதிர்ச்சியைத் தந்தது. ஆங்கில மருத்துவ முறையைச் சார்ந்தவர்களால் இந்தத் தீர்வை நம்ப முடியவில்லை. இந்த வெற்றிச் செய்தி வெளியே வராதபடி மறைக்கக்கூட அவர்கள் முயற்சி செய்தனர்.

பாபுராஜ், பல நாட்களாக எய்ட்ஸ் நோயால் அவதிப்படும் நோயாளி. அவரது எடை முப்பத்திரண்டு கிலோ மட்டுமே. பத்து வாரம் சிகிச்சை பெற்ற பிறகு, தனக்கு மறுவாழ்வு கிடைத்துவிட்டது என்று சந்தோஷம் அடைந்தார். பத்திரிகையாளர்களிடம் பேசும்போது இந்த மகிழ்ச்சி வெளிப்படையாகத் தெரிந்தது. அவரது எடையும் ஏழு கிலோ அதிகரித்து விட்டது.

கேரளகௌமதி, நவ. 4, 1992

இரண்டு நோயாளிகளின் ரத்தப் பரிசோதனை மூலம் எய்ட்ஸ் கிருமி அவர்கள் ரத்தத்தில் இல்லை என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது. பத்திரிகையாளர் கூட்டத்தில் மஜீத், இந்த ரத்தப் பரிசோதனை அறிக்கையை வெளியிட்டார்.

மருத்துவ உலகில் இந்தப் புதிய கண்டுபிடிப்பு ஒரு பெரிய புரட்சியைத் தோற்றுவிக்கும். இதுவரை உலகில் எந்தப்பகுதியிலிருந்தும் எய்ட்ஸ் நோயாளி குணமாக்கப்பட்டார் என்ற அறிக்கை வந்ததேயில்லை.

தீபிகா, நவ. 4, '92

கிளிமனூரைச் சேர்ந்தவர் சித்ரா. திருவனந்தபுரத்தைச் சேர்ந்தவர் பாபுராஜ். இருவரும் எய்ட்ஸ் நோயாளிகள். ஆயுர்வேதச் சிகிச்சைக்குப் பிறகு இருவரும் குணமாக்கப்பட்டு, பத்திரிகையாளர்கள் முன்னிலையில் கொண்டு வரப்பட்டனர்.

ஜூலை மாத இறுதியில் பாபுராஜ் மிகவும் மெலிந்து, அபாய நிலையில் இருந்தார்.

''பாபுராஜ் நோய் குணமாகி அவருக்கு மீண்டும் நல்ல வாழ்க்கை அமைந்துவிட்டது. இதனால் எந்த எய்ட்ஸ் நோயாளியையும் காப்பாற்ற முடியும்'' என்று உறுதியாகக் கூறுகிறார் மஜீத்.

மாத்ருபூமி, நவ. 4, '92

எர்ணாகுளத்தைச் சேர்ந்த மூலிகை மருத்துவர் திரு. டி.ஏ. மஜீத். இவர் எய்ட்ஸ் நோய்க்கு அபாரமான மருந்தைக் கண்டுபிடித்துள்ளார். இந்தக் கொடிய நோய்க்கு நிச்சயமான மருந்து கண்டுபிடித்துள்ளவர் இவர் ஒருவர் தான்.

இதில் இருபது மருந்துகள் கலந்துள்ளன. அவற்றில் எய்ட்ஸ் கிருமியைக் கொல்ல நான்கு பொருட்களும், மற்றவை உடல் ஆரோக்கியத்தைச் சீர் செய்யவும் உள்ளன.

டைம்ஸ் ஆஃப் இந்தியா,
ஆகஸ்ட் 11, '93

எய்ட்ஸ்க்கு ஒரு சவால்: ''எய்ட்ஸ் கிருமியை என் உடலில் செலுத்துங்கள்: ஒரே வாரத்தில் நான் நோயிலிருந்து குணமடைந்து காட்டுகிறேன்'' என்று சவால் விடுகிறார் மஜீத். தான் கண்டுபிடித்த மருந்தின் வெற்றியைச் சொல்ல இப்படி சவால் விடுகிறார் மஜீத்.

தானே எய்ட்ஸ் நோயாளியாக மாற விரும்பும் இந்த கண்டுபிடிப்பாளருக்கு, எச்.ஐ.வி. தர யார் முன்வருவார்கள்?

இந்தியன் எக்ஸ்பிரஸ்,
ஜூலை 29, '93

''இறக்கும் தறுவாயில் உள்ள எய்ட்ஸ் நோயாளியை என்னிடம் கொண்டு வாருங்கள். முப்பது நாட்களில் அவருக்கு வாழ்க்கையை மீட்டுத்தருகிறேன்'' என்று மார் தட்டுகிறார் டி.ஏ. மஜீத்.

சண்டே அப்சர்வர், ஆக. 8-14, '93

கிளிமனூரில், தேவேஸ்வரத்தில்,

சித்ராபவனத்தில் சித்ராவும், மகளும் வசிக்கின்றனர். சிகிச்சை முடிந்து குணமாகிய பிறகு, இரண்டாவது கண



# மைவிழி மயக்கம்

16

ஊகூம். சாயா ஒன்றும் உருகிவரவில்லை. அப்படி ஏங்கி வருகிறவளின் குரலில் ஏக்கம் இருக்கும், பதைப்பு இருக்கும். உதாசீனமும் எகத்தாளமும் நிச்சயமாக இராது.

அவளுக்குமட்டும் தினகரனிடம் உண்மை அன்பு இருந்திருந்தால், அவனுடைய தந்தை என்னதான் சொல்லியிருந்த போதும் அவனை விட்டு அவளால் எப்படி விலக முடியும்?

தினகரனின் வாய்மொழியே காட்டவில்லையா அவள் எப்படிப் பட்டவள் என்று? உணர்ச்சி வசப் பட்டாளாமே! வளைத்துப் போட முயன்றிருக்கிறாள் என்று இவனுக்குத் தெரியவில்லையே! வைரம் மட்டும் எட்டாக் கனியாமா? வாங்கித் தர ஒருவன் இருந்தால் ஏக்கம் வராதா என்ன? அவள் மட்டும் நல்லவள் என்றால், திருமணத்தை மறுத்தபோது அந்த நகைகளைத் திருப்பிக் கொடுத்திருக்க மாட்டாளா?

அந்த சுயநலக்காரி, தினகரனை மீண்டும் சீண்டி வருத்துவதற்காகவே ஃபோன் செய்திருக்கிறாள்! அவனிடம் சொல்லாததுதான் சரி.

ஆனால் இப்போது அதையெல்லாம் நினைத்துக் கொண்டு இருப்பதைவிட, தவித்துக் கொண்டிருக்கும் இவனைத் தேற்றுவது உத்தமம்.

தினகரன் மனைவியைப் பற்றியிருந்த முறையால், அவளது கைகள் அவன் அணைப்பினுள் சிக்குண்டுகிடந்தன. அவனை விலக்கி, கையை விடுவித்துக் கொள்ள மனமற்று, ''பாருங்கள், எந்தத் துன்பமும் அனுபவிக்கிறபோது தோன்றுகிற அளவுக்கு உண்மையில் பெரியதில்லை. எனக்கு அம்மா இல்லை, தெரியுமல்லவா? எங்கள் அம்மா மறைந்த போது உலகமே இருட்டி விட்ட மாதிரி இருந்தது. இன்று எல்லோரும் அப்பா உட்பட சாதாரணமாய் நடமாடவில்லையா?

''நல்ல சுடுநீரில் குளித்து விட்டுப் படுத்துத் தூங்கினால், இ

தப் பழைய நினைவின் அலை தானாக
ஓய்ந்துவிடும். அத்தோடு யோசியுங்கள்.
யாராவது சிந்திய பாலுக்காக ஏங்குவார்
களா? நீங்கள், இவ்வளவு படித்தவர், உங்
களுக்கு நானா கற்றுக் கொடுப்பது? அப்
புறம் நான் அல்லவா குருவாகி விடுவேன்!''
என்று மனதில் தோன்றியதை எல்லாம்
சொல்ல அவனைச் சமாதானப்படுத்த
முயன்றாள் அவள்.

ஒரு பெருமூச்சுடன் அவளை விடு
வித்தான் தினகரன். ''நீ சொல்வதும் சரி
தான். ஆனால்... சரி, நீ சொல்வது போல
முதலில் குளித்துவிட்டு வருகிறேன் வாணி,
நீகூட இன்று முழுவதுமாய் அலைந்த
அலுப்புதீரக் குளித்துவிடு. வெந்நீர் நீயே



கலந்து கொள்வாயில்
லையா?'' என்று அவ
ளையும் அனுப்பிவிட்டுச்
சென்றான்.

வாங்கி வந்த உணவு
வகைகளை பிரிஜ்ஜில்
வைத்து விட்டு, அவசர
மாகச் சென்று உடம்பு கழு
விக் கொண்டு ஓடி வந்
தாள் அவள்.

ஊட்டியின் வெளிக்
குளிருக்கும், வெந்நீர்க்
குளியலுக்கும், கணப்புச்
சூட்டுக்கும் எவ்வளவோ
சுகம்தான். இதை அவன்
உணர்வானா என்று
யோசித்தபடி பாலைச்
சூடு செய்தாள்.

வெளியே அவன் அர
வம் கேட்கவும் கப்பில்
ஊற்றிக் கொண்டு போய்க்
கொடுத்தாள்.

மறுக்காமல் அருந்தி
விட்டு, ''வாணி, இன்று
தூங்கும் போதும், சற்று
முன்போல நீ என் அருகில்
இருக்க வேண்டும். ப்ளீஸ்,
முடியுமில்லையா?'' என்று
உணர்ச்சியற்ற குரலில்
கேட்டான் தினகரன்.

கவனமாக உணர்ச்சி
யைத் துடைத்த குரல்
எனலாம்.

தலையாட்டிவிட்டு,
காலி கப்பை எடுத்துக்
கொண்டு சமையல் அறைக்
குச் சென்றாள் அவள்.

என்ன இது இப்படிக்
கேட்கிறானே என்றிருந்
தது அவளுக்கு. யோசியா
மல் பேசுவது அவனுக்குப்
புரியுமா? கரடி பொம்
மையை அணைத்துத் தூங்
கும் குழந்தை போல,
அவனுக்கு எத்தனையோ

வகையில் இதமாயிருக்கலாம். வலி குறையலாம். வேதனைகளை மறக் கடிக்கலாம். ஆனால் அவள் பொம் மையல்லவே? உயிரும் உணர்ச்சியும் உள்ள பெண் ஆயிற்றே.

எதற்கும் ஓர் அளவு உண் டென்று அவனுக்குத் தெரியாதா? ஆனால் அவனிடம் மறுக்கவும் முடியவில்லை.

முன்தினம் போலவே தின கரன் விரைவிலேயே உறங்கிவிட் டான்.

ஆனால் கணவனின் கைய ணைப்பில் இருந்தாலும் வாணியின் மனம் வெகுவாகச் சோர்ந்து போயிற்று.

கணவன் என்று ஒட்டவும் முடியாமல், மற்றவன் என்று ஒதுங் கவும் முடியாமல் சித்ரவதையாக உணர்ந்தாள் அவள்.

சாயாவின் நினைவுக்கு மேலும் மேலும் வளமை கூடுவதாகத் தோன்றுவது வேறு வேதனையை அதிகமாக்கியது.

கூடவே, இன்னொரு பயங் கரமான, அருவருப்பான சந்தேகம் வேறு தோன்றி அவளை அலைக் கழித்தது. தினகரன், சாயாவினால் வரும் வேதனையைத் தடுப்பதற் கான கேடயமாக அவளைப் பற்று கிறானா அல்லது சாயாவே கைகளுக் குள் இருப்பதாகக் கருதுகிறானா?

இந்த எண்ணம் தோன்றிய கணத்திலேயே உடம்பு முழுவதும் அனலில் இட்டாற்போல்க் காந்த லெடுக்க, அவனது கையைப் பிரித்து எறிந்துவிட்டு எங்காவது ஓடிவிட வேண்டும்போல அவளது உள்ளம் பதறியது.

ஆனால், உடனேயே, சாயா வாக அவளை எண்ணியிருந்தால் அவனது அணைப்பு இத்தோடு நின் றிராது என்பதை ஒரு நிம்மதியுட னும், கூடவே ஏக்கத்துடனும் உணர்ந்து ஒருவிதமாய் ஆறுதலுற் றாள். காதருகே கேட்ட அவனது சீரான நெஞ்சத்துடிப்பு ஒருவாறு மனதில் அமைதியை உண்டாக்க மெல்ல மெல்ல அவளையும் தூக்கம் தழுவிக் கொண்டது.

முன் தினத்தைவிடச் சீக்கிர மாகவே விழித்தபோதும், அன்றும் அவளுக்கு முன்னதாகவே தினகரன் எழுந்து சென்றுவிட்டிருந்தான்.

தினமும் 'பின் எழும் பேதை யாக அவள் தூங்க, அவனே முத லில் எழுந்து காப்பி போடுகிறானே என்று கூசியவாறு, அவசரமாக எழுந்து வாய் கொப்பளித்து முகம் கழுவிவிட்டு, வேகமாகச் சமையல் அறைக்குச் சென்றாள் ஜெயவாணி.



ஆனால் அங்கே தினகரன் இல்லை.

பிரிஜ்ஜில் இருந்த பாலை எடுத்து, காஸ் அடுப்பில் தீ குறைத்து வைத்துவிட்டு அவனைத் தேடி சென்றாள் அவள்.

வாயில் கதவைத் திறந்து கொண்டு, வெளியே கனமான புகை மூட்டம் போலப் படிந்திருந்த பனியை வெறித்தபடி ஒரு சிலை போல நின்றிருந்தான் தினகரன்.

நேற்றைய அலை இன்னமு ஓயவில்லையா? எழுந்த பெருமூச்சை அடக்கிக் கொண்டு, 'உனக்கு பொறுமையே இல்லை ஜெயவாணி' என்று தன்னையே திட்டிக் கொண் டாள் அவள்.

காதல் கொண்டு கல்யாணம் வரை சென்றவன், ஓரே நாளில் மறந்துவிட முடியுமா? மெல்ல மெல்லத்தானே மீளமுடியும்?

அருகில் சென்று லேசாகத் தொட்டு, ''குளிரவில்லை?'' என்று வினவினாள்.

ஒருகணம் தயங்கிவிட்டு, மெல்லத் திரும்பி அவளை ஆழ நோக்கினான் தினகரன். ''உனக்கு மிகவும் கஷ்டமாக இருந்ததா?'' என்றான் தாழ்ந்த குரலில்.

புரியாததுபோல நடிக்கவோ, அதெல்லாம் ஒன்றுமில்லை என்று ஒதுக்கவோ முடியாமல் வாணி தடுமாறுகையில் அவனே தொடர்ந்தான். ''நிச்சயமாகக் கஷ்டமாகத்

> **அ**ண்மையில் பம்பாயில் உள்ள காந்தேன் காவல் நிலையத்தில் ர்புராம் என்பவர்மீது இரண்டரை யது பெண் குழந்தையைக் கற் ழிக்க முயன்றதாக அக்குழந்தை ன் தந்தை புகார் மனு செய்திருக் றார்!
>
> — வியெஸ்ஸார், பங்களூர்.

தான் இருந்திருக்கும். என்னதான் தாலி கட்டிவிட்டாலும், கணவன் மனைவி என்ற மன நெருக்கம் இல்லாதபோது அந்த ஆண்மை உனக்கு அருவருப்பாகக் கூட இருந்திருக்கலாம். ஆனால் வாணி, நேற்று தான் அந்த மாதிரி நாகரிகங்களை எண்ணிப் பார்க்கிற நிலைமையில் இல்லை. கொஞ்சமும் கட்டுப்படுத்த முடியாமல் உள்ளே தகதகவென்று எரிகிறது. அதை அணைக்கவும் கட்டுப்படுத்தவும் நீ அருகில் இருந்தால்தான் முடியும்; உன்னை விட்டு விடக் கூடாது என்பது மட்டும் என் மனதில் இருந்தது. துரும்பை ம் தூணாகப் பற்றுகிற, முழுகிக் கொண்டிருக்கிறவன் கதை. தூணே கிடைத்தது எனும்போது அதை இறுகப் பற்றிக் கொண்டு தப்புவது தவிர வேறு ஒன்றுமே நினைக்கத் தோன்றவில்லை...'' என்றான் தன் னிலை விளக்கம் லோலல.

அவன் தப்பிவிட்டால், அதை விட அவளுக்கும்தான் வேறு என்ன வேண்டும்?

தினகரனை நோக்கி, முத்துப் பற்கள் பளிச்சிட முறுவலித்து, ''ஒருவருக்கொருவர் துன்பம் விலக்குவது தான் நம் உறவுக்கு வித்தாகும். மெல்ல முளைத்துவரும் உறவுச் செடியில் இன்னொரு தளிர் இது. வளர்ச்சிதானே? இதில் மகிழ்ச்சி அடைய வேண்டுமே தவிர வேண்டாததையெல்லாம் நினைத்து வருந்துவார்களா? வாருங்கள். பால் கொதித்துப் போயிருக்கும். முதலில் காப்பியைக் குடிக்கலாம் வாருங்கள்,'' என்று பிடிவாதமாய், அவன் மீது கைவிரல்களைப் பற்றி உள்ளே இழுத்துப் போனாள். ''இன்னும் கொஞ்ச நேரம் இந்தக் குளிரில் நின்று வெடவெடத்தால்கூட நன்றாகத்தான் இருக்கும். ஆனால் பால் வற்றி, திரட்டுப்பாலாகி விடுமோ என்றுதான்...''

சூழ்நிலையை இலகுவாக்க அவள் முயற்சிப்பது புரிந்தவனாக அவனும் அதில் கலந்து கொண்டான்.

தீயைக் குறைத்து வைத்திருந்ததால் பொங்கி வழியாமல், சிறு கொதியில் பால் வற்றிக் கொண்டு இருந்தது. அதில் 'இன்ஸ்டண்ட்' காப்பி கலந்து அவள் கொடுக்கவும், இரண்டு மடக்கு அருந்திவிட்டு, ''மோர்க்கூழ், கேப்பைக் கூழ் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தக் காப்பிக்கூழ் கூடப் பரவாயில்லை,'' என்று கூறிச் சிரித்தான்.

கொஞ்சம் அசடு வழிய, ''கொஞ்சம் வெந்நீர் கலந்து தரவா?'' என்று அவள் கேட்ட போது, ''இதுவே ருசி,'' என்று சொல்லிச் சொட்டு விடாமல் குடித்தான்.

(தொடரும்)


Mere papa ka
Lyril Super
Mera Bhi
விரில் சூப்பர் பனியன்கள்
Lyril®
2000
SERIES
ஆயிரக்கணக்கான
வியத்தகு பரிசுகள்
DIALOGUE
CONTEST
டயலாக்போட்டி
இப்பக்கத்தில் உள்ள படத்திற்கு ஏற்ற வசனத்தை 20 வார்த்தைகளுக்குள் நுழைவுத் தாளில்
எழுதி வியத்தகு பரிசுகளை பெறுங்கள்
நுழைவுத்தாள் உங்கள் அருகிலுள்ள லிரில் டீலரிடம் கிடைக்கும்
LYRIL 2000 SERIES டயலாக் போட்டி
தபால் பெட்டி எண் 272 திருப்பூர் - 638 602.
கடைசி தேதி - 30-9-1994
லிரில் விற்பனையாளர்கள்
Phone Nos:
சென்னை–5375572; மதுரை–23367;
நெல்லை–24037; சேலம்–63909; கோவை–447298.
akarsh




ரமணி சந்திரன்

# மைவிழி மயக்கம்

## 17

சற்றுநேரம் பேசிக் கொண்டு இருந்துவிட்டு தினகரன், மைக்ரோ அவனில் சப்பாத்தி, குருமா சூடு பண்ணக் கற்றுக் கொடுத்தான்.

''நன்றாய்த்தான் இருக்கிறது,'' என்று வாணி உரைக்கவும், காலரைத் தூக்கிவிட்டு, ''செம குருதான். ஒத்துக் கொண்டுவிட்டாயில்லையா? இனி குருதட்சிணையாக உன்னிடமிருந்து எதைப் பிடுங்கலாம்...'' என்று வேடிக்கையாகப் பேசியவன், சட்டென அந்தப் பாவனையைக் கைவிட்டான். ''ஏற்கனவே குருதட்சிணையை வசூல் பண்ணி ஆயிற்று. அப்படித்தானே வாணி! இரண்டு நாட்கள் நிம்மதியான உறக்கம். இப்படித் தூங்கிச் சில மாதங்கள் ஆயின, வாணி.''

''மாதங்களா! சில நாட்களாகத்தான்...'' என்று முடிக்காமலே நிறுத்தினாள். 'சாயா உன்னைக்

கைவிட்டு, சில நாட்கள்தானே ஆகின்றன' என்று சொல்ல விருப்பமின்றிப் பாதியிலேயே பேச்சை விட்டுவிட்டாள்.

ஆனால் புரிந்துகொண்டு அவன் வெளிப்படையாகப் பேசினான். ''அவள் என்னைக் கைகழுவிச் சிலநாட்கள்தான் ஆகின்றன, வாணி. ஆனால் அவளோடு பழகத் தொடங்கியதிலிருந்தே அவ்வளவாகத் தூக்கம் சரியில்லைதான். முதலில் அவள் என்னைப் பற்றி என்ன எண்ணுகிறாளோ என்று அவள் மனநிலை பற்றிய கலக்கங்கள், பிறகு அப்பா பற்றிய கவலைகள்! அப்பா ஜாடையாக எப்படி நக்கல் பேசுவார் என்று உனக்கே தெரியும். இந்தத் தவிப்பில், சில சமயங்களில் உன்மீதுகூட எரிந்து விழுந்திருக்கிறேன். நீ புரியாமல் விழிக்கும் போது மனம் ஒருமாதிரி ஆகிவிடும் தெரியுமா?''

கவனித்திருக்கிறானே!

லேசான புன்னகையுடன் எழுந்தாள் ஜெயவாணி. ''இன்றைக்கு எந்தப் பக்கம் போகலாம், சொல்லுங்கள்?''

'' 'பொடானிக்கல் கார்டன்' போகலாம். சும்மா நடந்து கொண்டிருந்தாலே இனிமையாகப் பொழுது கழியும்.''

குளித்துவிட்டுத் தன் எளிய அலங்காரங்களைத் தொடங்கிய போது வாணியின் மனம் முரண்டியது. பொதுப்படையான ஒரு பார்வைக்கு மேல் அவன்தான் அவளைக் கவனிப்பதாகவே இல்லையே! இதற்குப் போய் ஏன் மெனக்கெட வேண்டும்?

ஆனாலும், அவன் பார்வைக்காக மட்டும்தான் அலங்காரமா? அவளுக்கே அவளது தோற்றம் திருப்தி தரவேண்டாமா? மயான காண்டத்து சந்திரமதி போல இருந்து இன்னமும் மனம் சோர்வானேன் என்றெல்லாம் தனக்குத்தானே இடித்துரைத்தபடி பிடிவாதமாக,




கவனத்துடனேயே அலங்கரித்துக் கொண்டாள்.

இன்று சேலை. ஆரஞ்சு வண்ண கோட்டா சேலை, கறுப்பில் சேலை நிறத்தில் அங்கங்கே 'ஹகோபா' வேலை செய்த சட்டை, கறுப்புப் பொட்டு, கண் மை, கறுப்பு வண்ணக் கைப்பையுடன் அவள் தயார் ஆனாள். ஊட்டிக்காக என்று அவன் கோவையில் வாங்கித் தந்திருந்த 'ஷாலு'டன் முன் ஹாலுக்குச் சென்றாள்.

அணிந்திருந்த, லேசான உல்லன் ஸ்வெட்டரைச் சரியாக இழுத்து விட்டுக்கொண்டு வந்த தினகரன், ''அதற்குள் ரெடியாகி விட்டாயா? குட்.'' என்று வார்த்தைகளால் மெச்சியபடி கார்ச் சாவியை எடுக்கச் சென்றானே தவிர, அன்றும் அவன் நின்று அவளை நோக்கவில்லைதான்.

ஆனால் அவனும் அவளது




தோற்றத்தைக் கவனிக்கும்படி, கண்டு வியக்கும்படி, வியந்து பாராட்டும்படியும் ஆயிற்று.

ஊட்டி முழுமையும் அழகு தான் என்றாலும், பொடானிகல் கார்டன் ஜெயவாணியை மிகவும் கவர்ந்தது.

தினகரனுக்கு இன்னமும், மனைவியென்று ஆகிவிட்டவள் எப்படியிருக்கிறாள் என்று பார்க்கும் ஆர்வம் கொஞ்சம்கூட வரவில்லையே என்ற வருத்தம் ஒருவாறு மறந்தது.

பல வண்ணங்களில் பெரிது பெரிதாகப் பூத்திருந்த 'டேலியா' மலர்களைச் சுற்றிச் சுற்றி வந்து ரசித்தாள். 'இதைப் பாருங்கள்; அதைப் பாருங்கள்,' என்று கணவனுக்கும் காட்டினாள்.

ஆண்டுதோறும் ஊட்டிக்கு வந்து பழகியிருந்த தினகரன், அந்த டேலியாப் பூக்களில் எந்தவித அதிசயத்தையும் காணவில்லை.

ஆனால், ஜெயவாணியின் உற்சாகத்தைப் பார்த்து ரசித்தபடி நின்றவனின் முகத்தில் திடுமென ஒரு திகைப்பு பரவியது.

''ஆரஞ்சும் சிவப்புமாய் இந்த டேலியாவைப் பாருங்களேன்.'' வாணி அவன் கையைப் பற்றி அழைத்துக் காட்டியபோது அவன் பார்வை அவளிடம்தான் இருந்தது.

தினகரன் ஏதோ சொல்ல வாயெடுத்தபோது, ''ஒரே ஒரு போஸ், ப்ளீஸ்...'' என்றது ஒரு குரல்.

திரும்பிப் பார்த்தால், தோளில் தொங்கவிட்ட காமிராவுடன் அவர்களைக் கெஞ்சிக் கொண்டு இருந்தார் ஒரு நடுவயது மனிதர். ''சாரி சார். சாரி மேடம். தொந்திரவு பண்ணியதற்கு மன்னியுங்கள். ஆனால் அப்போது பிடித்து, இந்தப் பூக்கூட்டத்திற்குப் பொருத்தமாய் யாராவது அழகான பெண் கிடைத்தால் சேர்த்து எடுக்கலாம் என்று கொக்கு போலக் காத்திருந்தேன். இப்போது கனகச்சிதமாய், அருமையாய் ஒரு ஜோடி கிடைத்திருக்கிறீர்கள். ப்ளீஸ் சார். ப்ளீஸ் மேடம்,'' என்றார் அவர்.

ஜெயவாணி தயங்கினாள். ''பூவும் மொட்டுமாக இந்தச் செடிகள் அழகாய் இருக்கையில் அதை மட்டும் எடுக்கலாமே. நாங்கள் எதற்கு?'' என்றாள்.

தினகரன், அவரது கைப் பையைக் காட்டினான்.

அவரும் தலையாட்டி, ''ஆமாம் மேடம். இங்கே ஒரு போட்டோ ஸ்டுடியோ வைத்திருக்கிறேன். இந்த மாதிரிப் படங்களை 'விண்டோ கேசில் வைத்தால், இதுபோல எடுத்துத் தரவே நிறைய ஆர்டர் வரும்...'' என்றார் அவர்.

''வா வாணி. வாருங்கள்

நீடித்து செழிக்கும் வியாபாரத்தை நிறுவ உறுதியான அடிப்படை பாகஸ்தர்களின் பரஸ்பர உறவுதான் என நம்புவோம். வெற்றி கனவு நனவாகுவதுதான் ஒரே லட்சியம். வாழ்க்கையின் அனைத்து ஏற்றத் தாழ்வுகளும், அந்த லட்சியத்தை அடையும் ஆர்வத்தை மேலும் தூண்டும் என நம்புவோம். வெற்றி வாகைகளிலும், பொறுப்பின் சுமை - களிலும் ஈடான பங்கேற்பதே சிறந்த நோக்கு என நம்புவோம். ஒருவர் மற்றொருவர் நலனுக்காக இணைந்து செயல்படுவதில்தான் முன்னேற்றமும் சுபிட்சமும் உண்டாகும் என நம்புவோம். இந்த நம்பிக்கையில் எழுந்ததுதான் **'பார்ட்னர்ஷிப் பேங்க்கிங்'**

போட்டோகிரர்பர். இந்தப் 'போஸ்' சரிதானா?'' என்று மனைவியின் தோளை அணைத்தாற்போல நின்றான் தினகரன்.

இதிலெல்லாம் அவனுக்குக் கொஞ்சமும் பாதிப்பே ஏற்படாதா? இரவும் சேர்ந்து நினைவு வந்துவிட, கவனத்துடன் முகபாவனை மாறாமல் காத்தாள் ஜெயவாணி.

''ரொம்பவும் நன்றி சார். இந்தப் படம் எனக்கு எத்தனை வாடிக்கை பிடித்துத் தரப்போகிறது தெரியுமா? இப்படி ஒரு பொருத்தமான, அதே சமயம் அழகான ஜோடியைப் பார்த்தே பல வருஷங்கள் ஆகிவிட்டன சார்...'' என்று கூறிக் கிளம்பினார் புகைப்படக்காரர்.

வாணிக்கு ஆச்சரியமாய் இருந்து. தினகரன் ஆணழகன் ஆயிற்றே! அவனுக்குப் பொருத்தம் என்றால்... ஆராயும் பார்வையுடன் கணவன் புறம் திரும்பியவளுக்குச் சிரிப்பு வந்தது. ஏனெனில் அவன் பார்வையும் அதே ஆராய்ச்சிதான்!

முறுவலித்துவிட்டு, ''அவர் சொன்னது மெய்தான் வாணி. நீ உண்மையாகவே மிகவும் அழகாகத்தான் இருக்கிறாய்,'' என்றான் தினகரன்.

உள்ளூர மகிழ்ச்சி ஊற்றெடுப்பதைக் காட்டிக் கொள்ளா



குமுதம்—லக்ஸ் விருதுகள் வழங்கும் விழாவில் சில காட்சிகள்.
வண்ணப்படங்கள்: யோகா

மல் ''உங்கள் அழகைப் பற்றி' நீங்களே பீற்றிக்கொள்வீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை,'' என்று உதட்டைப் பிதுக்கினாள் அவன் மனைவி.

''நான்... பீற்றினேனா? இல்லையே! நான் உன்னையல்லவா அழகி என்றேன். நான் பெருமைப்பட்டதாக எப்படிச் சொல்கிறாய்?''

''எப்படியா? அந்த காமிராக்காரர் நாம் இருவரும் பொருத்தமான ஜோடி என்றார், ரைட்? நான் மிகவும் அழகு என்றால் என் பொருத்தமான... ஜோடியான... என் கணவர் எப்படி இருந்தாக வேண்டுமாம்?'' ஓரவிழிப் பார்வையில் குறும்பு மின்னியது.

தோல்வியை ஒப்புக்கொண்டு கைகளை உயர்த்தினான் அவன். ''வெற்றி வாணியல்லவா? வார்த்தை ஜாலத்தில் வெல்வது முடியாதுதான். ஆனால் மூக்கைப் பிடிக்க அப்படிச் சுற்றி வளைத்தாக வேண்டும் என்பது இல்லை. இப்படியும் என்னால்...'' என்று அவன் கையை நீட்ட, அவனது நோக்கம் புரிந்து சட்டென நகர்ந்து நின்று மேலும் நகைத்தாள் அவள்.

நீண்ட கை நின்றுவிட அவன் முகத்தில் மீண்டும் ஆச்சரியம் தெரிந்தது. ''வாணி, உன் முகத்தில் ஒரு மாற்... மறுபடியும் உஜாலாவுக்குப் பாய்ந்துவிடாதே— என்னவோ மனதை இழுக்கிற மாதிரி ஒரு... ஒரு... ஏதோ ஒன்று இருக்கிறது... ஆகா! நீ கண்களில் மை தீட்டியிருக்கிறாய். அதுதானே? அப்பா சொன்னது போல அது கவர்ச்சியாகத்தான் இருக்கிறது, வாணி!'' என்றான் அவன்.

தாமோதரனின் பேச்சு வெறும் கவர்ச்சியோடு நிற்கவில்லை. அவள் முன்னிலையிலேயே 'மயக்கம்' என்றார். மையோடு பொய்யைச் சம்பந்தப்படுத்தி ஏதோ சொன்ன தாகத் தினகரனும் கூறியிருக்கிறான்.

மாமனார் கூறிய மற்றதும், அவர் செய்ததும் நினைவுவந்து அந்த நேரத்து இனிமை கலைந்து விடுமோ என்று உள்ளூர அஞ்சினாள் ஜெயவாணி.

பேச்சை வேறுபுறம் திருப்பும் முயற்சியாய், ''கண் மை, சோப், பவுடர் விளம்பரங்களைப் பார்க்கும்போது சுபாவுக்கும் எனக்கும் ஒரேயடியாகச் சிரிப்பு வந்துவிடும். சும்மா இருக்கும்போது அவளைக் கவனிக்காத கதாநாயகன், அவள் இந்தப் பொருட்களைப் பயன்படுத்தியதும் அவள் பின்னோடு ஓடி வருவானாம். இவள் ஒருத்திதானா அந்த மை, சோப் வகையறா பயன்படுத்துவாள்? நாளைக்கு இன்னொருத்தி அந்தப் பொருட்களைப் பயன்படுத்தினால் அவள் பின்னே ஓடிவிட மாட்டானா என்று சிரிப்போம்,'' என்று கூறி, ஜெயவாணி முறுவலித்தாள்.

''ஊகூம். நானெல்லாம் அப்படி யார் பின்னோடும் ஓட மாட்டேனம்மா!'' என்று பாவனையோடு பேசி ஆறுதலளித்தவன், மேலே தொடர்ந்தான். ''ஆனால் அப்பா சொன்னதும், ஓரளவுக்கு சரிதான், வாணி. உன் கண்கள் சும்மாவே அழகுதான். ஆனாலும் மை தீட்டியதும் அவைகளுக்கு ஒரு காந்த சக்தியே வந்துவிட்டாற்போல் தான் தோன்றுகிறது. வேறு எங்கும் பார்வையைத் திருப்ப விடாமல் இழுப்பது போல... மைவிழி மயக்...குகிறது,'' என்று லேசாகத் தள்ளாடுவதுபோல நடித்துச் சிரித்தான்.

விழிகளைத் தாழ்த்திக் கொண்டு, லேசாக முறுவலித்து விட்டு மேலே நடந்தாள் ஜெயவாணி.

பெரிய மயக்கம்! நேற்று செய்யாத எந்த அலங்காரத்தை இன்று அவள் புதிதாகச் செய்து விட்டாள்? ஆனால் இன்னொருவர் வந்து சொல்லும்வரை எதுவும்

அவனது கண்ணில் படவே இல்லையே!

உள்ளூரப் பொருமியபடியே நடந்தவள் மீது ஒரு பூச்செண்டு வந்து மோதியது. மலரின் மென்மையோடு ஒரு குழந்தை— மூன்றிலிருந்து நாலு வயதிற்குள்ளாக இருக்கும். ஓடிவந்த வேகத்தில் வாணியின் மேல் மோதிவிட்டு, ''ஸாரி ஆன்ட்டீ...'' என்று மழலையாய் மிழற்றிய வண்ணம் நில்லாமல் ஓடியது. அதைப் புன்னகையோடு பார்த்துத் திரும்புமுன் ஏறத்தாழ அதே வயதுள்ள இன்னொரு சிறுவன், அதே 'சாரி சாரி'யுடன் முன்னதைத் துரத்திக் கொண்டு ஓடினான்.

இரண்டு குடும்பங்களாக ஊட்டிக்கு வந்திருப்பார்கள் போலும். நாலைந்து குழந்தைகள்— ஓடிப் பிடித்து விளையாட, அவர்களுடைய பெற்றோர்போலத் தோன்றிய இரு ஜோடியினர் ஒருபுறமாய் அமர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர்.

பால் சதையும் பச்சரிசிச் சிரிப்புமாக அந்தப் பிள்ளைகளின் விளையாட்டை ரசித்தபடி தினகரனும் ஜெயவாணியும் அங்கேயே அமர்ந்தனர்.

விளையாட்டின் மும்முரத்தில் இவர்களின் பின்னேயும் 'அங்கிள் பிளீஸ், ஆன்ட்டி பிளீஸ்' என்று அந்தப் பிள்ளைகள் ஒட்டி ஒட்டிப் பதுங்கி ஒளிந்திருந்து ஓடி விளையாடவும் வாணியின் மனதில் ஏதேதோ கனவுகள் மலர்ந்தன.

''வாணி, அந்த லேஸ் டிரஸ் போட்டிருக்கும் குழந்தை கொஞ்சம் உன்போல் இல்லை? நம் குழந்தை கூட இதே மாதிரிதான் இருக்கும். ஆனால் முழுவதும் உன் ஜாடையில் பிறந்தால் இன்னும் அதிக அழகாக இருக்கும் என்று நினைக்கிறேன்,'' என்று திடுமெனத் தினகரன் கூறவும் அவளுக்குள்ளே ஆச்சரியமாகிப் போயிற்று.

(தொடரும்)



பெயர்: கணேசன்

வயது: 32

தொழில்: 15 வருடமாகப் பேப்பர் போடுவது.

இடம்: காரைக்கால்.

வேலை நேரம்: அதிகாலை 5 மணியிலிருந்து மாலை 5 மணி வரை. (பேப்பர் போடக் காலையில் ஒரு ரவுண்ட். 10 மணிக்கு மேல் வீடு வீடாகச் சென்று மாத, வார இதழ் விற்பனை).

## தினம் கட்டாய சேமிப்பு 10 ரூபாய்

குடும்பம்: மனைவி பாமாவும், இரண்டு பெண் குழந்தைகளும்.

வருமானம்: சராசரி ஒரு நாளைக்கு ரூ. 40/-

சேமிப்பு: தினமும் ரூ. 10, (கட்டாயம்)

லட்சியம்: ஒரு நியூஸ் ஏஜெண்டாக வேண்டும்.

தொழில் ரகசியம்: வார இதழ்களில் வரும் காரைக்கால், புதுவைச் செய்திகளைச் சொல்லி அந்தந்த இதழ்களை வாசகர்களை வாங்க வைப்பது.

தொகுப்பு: செல்லூர் கணேசன்



18

ஜெயவாணி குதூகலத்துடன், ''அட, நானும்...'' என்றவள் கப்பென டங்கினாள். மனம்தான் கூச்சமற்க் கற்பனை செய்தது என்றால் ாயாலுமா உளறிக் கொட்டுவது? வசரமாக எழுந்து ''இங்கேயே ட்கார்ந்து விட்டோமே! மற்றதெல் ாம் பார்க்க வேண்டாமா? இங்கே கிளாஸ் ஹவுஸ்' நன்றாக இருக்கு ாமே...'' என்று மடமடவென்று பசலானாள்.

''மெல்லவே போகலாம். அப்படி என்ன அவசரம்?'' என்று அவள் கையைப் பற்றி இழுத்து மீண்டும் உட்கார வைத்தான் தின ரன். ''முதலில் நீ சொல்லத் தொடங்கியதைச் சொல்லி முடி. ன்ன நீயும்? நீயும் என் போலவே நம் குழந்தை பற்றிக் கற்பனை செய்தாயா? என்ன பேச்சையே காணோம்? என்ன விஷயம்?'' என்று சற்று முன்புறமாகக் குனிந்து அவள் முகத்தைப் பார்த்துவிட்டு, ''வெட்கப்படுகிறாயா, வாணி? ஏன்? திருமணம் என்றால் அடுத்துப் பெற்றோர் ஆவதும் இயல்பாக எதிர் பார்க்கப்பட வேண்டியதுதானே?'' என்று குரல் மாறாமலே உரைத்தவன் திடுக்குற்று நிமிர்ந்தான்.

அவனிடம் அதிர்வை உணர்ந்ததும் என்னவென்று கவலையுடன் வினவினாள் ஜெயவாணி.

''அது... அது பிறகு சொல்கிறேனே. முதலில் இந்தப் பிள்ளைகளின் விளையாட்டைப் பார்ப்போமே. கடைசியில் அந்தப்— பச்சை உடை பேபிதான் ஜெயிக்கப் போகிறது போல் தெரிகிறதே!''

சிறிது நேரத்தில் அந்தக் குழந்தைகள் சாப்பிடச் சென்று

ரமணி சந்திரன்

> வேறு யாராவது சாதாரணப் பெண் என்றால் இதையெல்லாம் உன்னிடம் சொல்லியிருக்க மாட்டேன் வாணி.

# ...மைவிழி மயக்கம்


பாரி டீ. பிரியமான டீ.
"என்ன...இன்னிக்கு சீக்கிரமா
வீட்டுக்கு வந்துட்டிங்க"?
"ஆமா...அதிசயம்தான்."!
"என்ன சாப்பிடறீங்க"?
"என்ன தர்றே"?
"ம்ம்ம்...சூடா ஒரு கப் டீ"
"ஆஹா... நீ பிரியமா தந்தா...
வய் நாட்"?
PARRY'S TEA
CTC DUST
A BLEND OF TRADITION AND TASTE
Chaitra Leo Burnett-K-1368/94

ிடவே இருவரும் மேலே நடக்கத் தொடங்கினர்.

சற்று நேரம், பேச மனமற்றவன் போல நேர் எதிரே வெறித்தபடி நடந்தவன், ரொம்பவும் தயக்கத்துடன்தான் சொல்லத் தொடங்கினான். ''பிறகு சொல்வதாகச் சொன்னே...?''

''உம்,'' என்றவள் ஆழமூச்சுகள் எடுத்து, தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

''பெற்றோராவது பற்றிச் சொன்னேனே, வாணி உன்னைப் போல ஒரு சிறு குழந்தையை என் மகளாகக் கற்பனை செய்வது ஆற்று நீரோட்டம் போல எவ்வளவு இயல்பாக நடந்தது தெரியுமா? ஆனால்? சாயாவோ ஒரு குழந்தையை மனதில் நினைத்துப் பார்த்ததே கிடையாது என்றால் ஆச்சரியமாக இல்லை? இத்தனைக்கும் எனக்குக் குழந்தைகளிடம் பிரியம் உண்டு. என்னைப் போல ஒன்றாக நின்று விடாமல் குறைந்தது மூன்றேனும் பெறவேண்டும் என்று உறுதியே உண்டு. அப்படியிருக்க... ஏன்? உனக்கு என்ன தோன்றுகிறது வாணி?'' என்று தினகரன் அவளிடம் கேட்கவும் வாணி திணறினாள். சாயா பற்றித் தினகரன் பேசுவதே முள் குத்திய காலோடு நடப்பது போல வேதனை. அந்தப் பேச்சில், அவள் வேறு பங்கெடுத்துக் கொள்ள வேண்டும் என்றால் ரொம்பவும் அநியாயமாய்த் தோன்றியது அவளுக்கு. ஒரு சாதாரண மனைவி போல 'இன்னொரு பெண்ணைப் பற்றி என்ன பேச்சு உங்களுக்கு' என்று சிடுசிடுக்க முடியாமல், குறைந்தபட்சமாய் மவுனமாய் இருந்து தன் எதிர்ப்பைக் காட்டக்கூட முடியாமல் பதில் சொல்லும்படி ஆயிற்று.

''ஒருவேளை அவளைச் சந்தித்த சூழ்நிலை... சந்தர்ப்பங்கள்...'' என்று முடிக்கப் பிடிக்காமல் இழுத்தாள் அவள்.

அவன் ஆவலாக அந்தக்



காரணத்தைப் பற்றிக் கொள்ள முயன்றான். ''அப்படித்தான் இருக்க வேண்டும். அவளைச் சந்தித்த சமயங்களில், சுற்றுப்புறச் சூழலில் குழந்தைகளை நான் காணவில்லை என்பதால்தான்... ஊகூம். இல்லை வாணி. அப்படிச் சொல்வதற்கும் வழியில்லை. ஒருநாள் அவள் பாடுவதற்குச் சற்று முன்பாகவே ஓட்டலுக்குப் போய்ப் பேசிக் கொண்டு இருந்தபோது, பக்கத்து டேபிள்காரர் மடியில் இருந்த ஓர் அழகான குழந்தையைக் காட்டி, 'இது வளர்ந்தால் உன்போல அழகாக இருக்கும்' என்றுகூடச் சொன்னேனே! அப்போதுகூட இந்த மாதிரி நினைக்கத் தோன்றவில்லையே. ஒருவேளை, அந்தப் பேச்சு அவளுக்குப் பிடிக்காததால் இருக்குமோ?''

''பிடிக்கவில்லையா? ஏன்?'' அவன் பேசப் பேச உள்ளூரத் தவிப்புடன் கேட்டுக் கொண்டு இருந்தவள் தன்னை மீறிய ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''அந்தக் குழந்தையின் மூக்கு சப்பையாக இருந்ததாம். அது எப்படி என்னை மாதிரி வரக்கூடும்? உளறாதீர்கள்,'' என்றாள். இவ்வளவு அழகான குழந்தையை இப்படிச் சொன்னாளே என்று எனக்கும் ஒருமாதிரியாகிவிட்டதால், அத்தோடு பேச்சை விட்டுவிட்டேன். குழந்தைகள் என்றாலே அவள் ஒரு வெறுப்பைக் காட்டவும் அவள் முன்னே நான் பிள்ளைகள் பேச்சே எடுப்பதில்லை. ஒருவேளை அவளது தொழிலுக்குக் குழந்தை உண்டாவது, பெறுவது எல்லாம் சரிவராது என்று அதை வெறுத்து ஒதுக்கப் பழகிக் கொண்டாளோ என்னவோ?''

மெல்ல நடக்கும்போதே, தினகரனின் கை நீண்டு, தேடி, அவளது கையைப் பற்றிக் கொண்டது.

''வேறு யாராவது சா
ரணப் பெண் என்றால் இதை
லாம் உன்னிடம் சொல்லியிரு
மாட்டேன் வாணி. ஆனால் நீ
கிதம் அறிந்தவள். எதையும்
யான முறையில் புரிந்துகொள்
தெரிந்தவள். இனிப்பான பொய்
விடக் கசப்பான மெய்யே பே
என்று கருதுகிறவள். உன்னிட
மனதில் இருப்பது எல்லாவற்
யுமே மறைக்காமல் சொல்லலா
என்று ஒரு நம்பிக்கை. மனம் விட்
எல்லாவற்றையுமே கொட்டிவி
வேண்டும் போல ஓர் உந்துதல்.
உனக்குப் புரிகிறதில்லையா?''

இதில் மகிழ வேண்டுமா
கலங்க வேண்டுமா என்று ஜெ
வாணிக்குப் புரியவில்லை.

சாயாவின் நினைவிலே
இருக்கிறானே என்று வருந்துவத
அல்லது பிள்ளை குட்டி என்
நல்லதொரு குடும்ப வாழ்வை அ
ளோடு அவன் நாடவில்லை என்



எண்ணி மகிழ்வதா?

ஒரு காலத்தில்– அது சீக்கிரமே வரவேண்டும் என்பது இறைவனிடம் அவளது பிரார்த்தனை. அது பரிசு. இந்த அடிப்படை உண்மை அவனுக்குப் புரிகிற காலத்தில் உண்மையாக மகிழலாம். அதுவரை இந்தப் பாடுதான்.

பாடுதான். சாயா பஜனை கேட்பது பெரும் பாடாகத்தான் இருந்தது. ஆனால் அவளைத் திருமணம் செய்துகொள்ளக் கேட்ட போது, தினகரனுக்குச் சாயா பற்றிப் பேச மனமில்லாமல் இருந்தது அவளுக்கு நினைவு வந்தது. அன்று அவனது சொந்த வேதனை குறித்துப் பேச சுயகவுரவம் இடம் கொடாமல், அவளது தேவையை முன் நிறுத்திப் பேசியதும் நினைவு வந்தது.

அன்றையத் தடைகள் அனைத்தும் விலகி, இன்று ஒளிவு



...வித்தியாசங்கள் உள்ளன. விடை: 106'ம் பக்கம்.

மறைவற்றுப் பேச முன்வந்தது பெரும் முன்னேற்றம்தானே.

அவனது பேச்சில் குறுக்கிடவோ, தடுக்கவோ, திசை திருப்பவோ ஜெயவாணி முயற்சி செய்யவில்லை. முயற்சித்தாலும் அது பயன்தராது போலத் தோன்றியதோடு, அவன் எதையும் மறைக்காமல் சொல்வான் என்றால் எல்லாவற்றையும் அறிந்து கொள்வதே நல்லது என்றும் அவளுக்குத் தோன்றிவிட்டது.

நோயைப் பற்றிய முழு விவரமும் தெரிந்தால்தானே அதை முழுமையாகக் குணப்படுத்தவும் முடியும் என்று கவனத்துடனேயே கேட்டாள்.

தினகரன் பேசப் பேச, சாயாவைப் பற்றிய தன் மதிப்பீடு மிகவும் சரியானது என்றே வாணிக்குத் தோன்றியது.

தினகரன் ஒரு பணக்கார வாலிபன் என்று அறிந்ததும் அவனை வளைத்திருக்கிறாள். தினகரனை அன்று பார்ட்டிக்கு அழைத்த அந்த நண்பனோடு சாயாவுக்கு எவ்வளவு பழக்கம் இருக்கக்கூடும் என்ற ஐயமும் உண்டாயிற்று. அவன் எந்த அளவுக்குச் செலவு செய்யக் கூடியவன் என்பதை 'வைரம் எட்டாக்கனி' என்று ஏக்கம் காட்டி தெளிவுபடுத்திக் கொண்டிருக்கிறாள். வைரப் பரிசுகள், வரத் தொடங்கியதுமே தன் அழகு, சாகசங்களின் மூலம் அவனை உடும்பாய்ப் பற்றிக் கொண்டாள். தார்மோதரன் உறுதியோடு மகனுக்குச் சொத்து இல்லை என்று கூறிவிடவும், சுட்ட சட்டியாய் உதறிவிட்டாள்.

ஆனால், பிறகு ஏன் தொடர்பு கொள்ள முனைந்தாள்? திருமணம் என்று இல்லாமலே ஒட்டுண்ணியாய் வாழலாம் என்று எண்ணினாளா? அவள் டெலிபோன் செய்தது பற்றித் தாமோதரனுக்கு

ஏதோ தெரியும். திருமணத்தன்று அவரது பேச்சு அதை நன்றாகவே காட்டியது. ஆனால் அவர் ஏன் அதை மகனிடம் சொல்லி, அந்தத் திருமணத்தை நிறுத்தவில்லை? சாயாவுக்கு ஜெயவாணி பரவாயில்லை என்று நினைத்தாரா? இதில் எதையும் தினகரனோடு கலந்து கொள்ள முடியாதது அவள் மனதை உறுத்தியது. ஆனால்...

''அப்ப்....பா!'' என்று நெடியதாய் ஒரு மூச்சுவிட்டான் தினகரன். ''அடைத்துக் கிடந்ததெல்லாம் வெளியேறி நன்றாக மூச்சு விடமுடிகிற மாதிரி இப்போது எவ்வளவு இலகுவாக இருக்கிறது தெரியுமா? சே, முதலிலேயே உன்னிடம் எல்லாம் சொல்லித் தீர்த்திருக்கவேண்டும். அப்போதே இந்த ஸிம்பதி கிடைத்திருக்கும். ''இனி, சாயாவே வந்தால்கூட பாதிப்பு இராதென்றே எண்ணுகிறேன் வாணி,'' என்றவன், குனிந்து, இன்னமும் அவனது கைப்பிடியிலேயே இருந்த மனைவியின் உள்ளங்கையில் முத்தமிட்டான்.

குனிந்திருந்த தலையையும், அலையலையாய்ப் படிந்திருந்த ஆரோக்கியமான சிகையையும் காண்கையில் ஜெயவாணிக்கு நெஞ்சை அடைத்தது. இப்படி எல்லாவற்றையும் அவனிட கொட்ட அவளுக்கு முடியவி லையே!

பொய்யென்பதே அறியா நேர்மையின் வடிவம் என்று அவளை எண்ணியிருக்கும் இவன், அவ சாயாவின் டெலிபோன் செய்தி சொல்லாமல் விடுத்ததை அறி தால், அவளைப் பற்றி என்ன எண்ணுவான்? நினைத்துப் பார்க்கக்கூட மனம் அஞ்சியது.

ஆனால், அதைவிடவும் சுவரில் அடித்த பந்தாய் அவன் மீண்டும் அந்தச் சாயாவிடம் போய் மாட்டிக் கொண்டுவிடக்கூடாதே என்ற கவலைதான் அவளுக்குப் பெரிதாகத் தோன்றியது.

தினகரனின் வாய் மூலமாக சாயாவைப் பற்றி அறிய, அறிய அந்த ஒன்றுதான் மிகவும் முக்கியம் என்று– மூச்சுவிடுவதுகூட அதை விட முக்கியமற்றது என்று நிச்சயமாக நினைத்தாள். ஆனால், அவள் நினைத்ததை வாய்விட்டுச் சொல்லத்தான் முடியவில்லை.

இதை ஒன்றும் தினகரன் அறியாமல் மறைத்து வைப்பது அவளது உத்தேசம் இல்லை. சொல்லிவிட வேண்டும்தான். ஆனால் இப்போதல்ல. உள்ளூர அடைத்துக் கிடந்ததையெல்லாம் கவுரவம் பாராமல் அவளிடம் கொட்டுகிற அளவுக்கு வந்திருக்கும் இவன், இன்னமும் அதை நன்றாக ஆராய்ந்து, சாயாவைப் பற்றி சரியாக மதிப்பிடத் தெரிந்து கொள்ளும்வரை அவனிடம் மறைத்துத்தான் ஆகவேண்டும். மறைக்கிறோம் என்ற உறுத்தலையும் சகித்துத்தான் ஆகவேண்டும்.

அதன் பிறகு, தினகரன் அவ்வளவாகப் பேசவில்லை. அவளது நெருக்கத்தையும் அவ்வளவாகத் தேடவில்லை. அதற்காக அவள் ஒருத்தி இருப்பதையே மறந்துவிட்டான் என்று சொல்லமுடியாது.

**18.8.94** குமுதம் 'Building Supplement'-ல் வெளியான 'பெயிண்ட் அடிக்கச் சில யோசனைகள்' கட்டுரை தொடர்பாக:

சுவர் காயும் முன்பே பெயிண்ட் அடித்தால், உள்ளே அடங்கியுள்ள ஈரம் வெப்பத்தால் உண்டாகும் ஈரக் காற்றழுத்தத்தினால் கொப்பளமாகவும் அல்லது விரிசலாகவும் பெயிண்டில் பழுது ஏற்படும்.

இதைத் தவிர்க்கத்தான் சுவர்கள் நன்றாகக் காய்ந்த பிறகே, நல்ல தரமுள்ள பிரைமர் (Primer) அடித்த பிறகே பெயிண்ட் (ஆயில் பவுண்ட் டிஸ்டம்பர், எமல்ஷன் அல்லது எனாமல்) அடிக்கலாம்.

உரிய தருணங்களில் உரிய பேச்சுகள், செய்கைகள் இருக்கவே செய்தன.

ஏதோ யோசனையோடு கூடிய பார்வைகளையும் சில சமயங்களில் அவள் சந்திக்க நேர்ந்தது.

ஆனால், அவன் மனம் அங்கே இல்லை என்பது மட்டும் அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. உள்ளே எதையோ பற்றி பலத்த சிந்தனை நடப்பதையும் புரிந்து கொள்ள முடிந்தது.

அவளாகத் தினகரனின் விஷயங்களில் மூக்கை நீட்டுகிற பழக்கமோ, அதற்கான உரிமை உணர்வோ இல்லாத காரணத்தால், ஜெயவாணியும் மவுனமாகவே அவனைத் தொடர்ந்தாள். பேசாத நிழல்.

அத்தோடு அந்தக் குழந்தைகளைப் பார்த்ததிலிருந்து அவ்ளும் சலனப்பட்டிருந்தாள். என்னதான் காரண காரியம் கூறி ஒதுக்க முயன்றாலும், முன்தின இரவு வேறு அவளை ரொம்பவும் பாதித்திருந்தது. பாதிப்பே இல்லாதிருக்க, அவள் ஒன்றும் சன்னியாசினி அல்லவே!

எதையும் நினைவுக்குக் கொண்டு வருவது அவள் கையில் இல்லாதிருக்கலாம். ஆனால், கனவு காண்பது சாத்தியம்தானே?

சாத்தியப்பட்டதைச் செய்தாள். நிகழ்காலத்தை அடியோடு மறந்து, எதிர்காலத்தைப் பற்றிய எண்ணற்ற கனவுகளில் மூழ்கிப் போனாள்.

ஆனால் வீடு திரும்பியபின், தினகரனின் மவுனம் மீண்டும் அவளைத் தாக்கியது. பேசக்கூட பிடிக்காதபடி என்ன ஆகிவிட்டது என்று உள்ளூரக் கலங்கியபடியே தன் வேலைகளைக் கவனித்தாள்.

பகல் முழுவதும் வெளியே சுற்றிய அலுப்பும், அழுக்கும் நீக்கிக் கொண்டு, கையோடு வாங்கிச் சென்றிருந்த உணவை இருவரும் கொறித்தனர்.

சூடு பண்ணிய பாலை அருந்தியபடி, இருவரும் சற்று நேரம் டி.வி. முன் உட்கார்ந்திருந்தனர்.

திடுமென, ரிமோட் கண்ட்ரோலை எடுத்து தினகரன் டி.வி. நிகழ்ச்சியை நிறுத்தினான்.

அவள் கையில் இருந்த கண்ணாடித் தம்ளரை வாங்கி, தன்னதையும் சேர்த்துச் சமையல் அறையில் வைத்துவிட்டு வந்தான்.

ஜெயவாணியின் இரு கைகளையும் பற்றி எழுப்பினான்.

(தொடரும்)

## இ. வா. சி.



ரெண்டு வயசிலயே வேட்டி கட்டி விட்டா சிரிப்புத்தான் வருது.

சிரிப்பு: ஆதித்யன். (துபாய்)

படம் அனுப்பியவர்: வி.எஸ்.எஸ். கோபாலன்

லயோலா கல்லூரியில் இரண்டாம், மூன்றாம் ஆண்டு மாணவர்களைக் கொண்டு முதலாம் ஆண்டு மாணவர்களுக்கு மனிதவள மேம்பாட்டுப் பயிற்சி அளிக்கப்படுகிறது. அதில் ராக்கிங்கைத் தவிர்ப்பது விஷயமாய் மாணவர்களி டையே நடந்த கலந்துரையாடலின் ஒரு பகுதி :

ஃபிரடெரிக்: இந்தக் கல்லூரியின் எழுபத்தைந்து வருட சர்வீஸில் இப்படியொரு முயற்சி, அதுவும் ராக்கிங்கை எதிர்த்து மாணவர்களிடையே நல்லுறவு வளர்த்திருக்கிறார்கள் என்பதை நினைக்கும்போது ரொம்ப வித்தியாசமான அனுபவமாய் உணர்ந்தேன்.

பிலிப்: நிச்சயமாக இது ஒரு வித்தியாசமான முயற்சிதான். சந் தேகமே இல்லை. இரண்டாம், மூன்றாம் ஆண்டு மாணவர்கள் கல்லூரியில் புதிதாகச் சேரும் முதலாண்டு மாணவர்களை ராக்கிங் செய்வதை ரொம்ப ஜாலியாக நினைக்கிறார்கள். இதனால் முதலாம் ஆண்டு மாணவர்கள் கல்லூரிக்கு ரொம்ப பயந்த நிலையில் வருகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. மனிதவள மேம்பாட்டுப் பயிற்சியின்போது ஃபீலிங் கேம் (Feelings game) என்று ஒரு அயிட்டம் இருந்தது. அடுத்தவர்களி உணர்வுக்கு மதிப்பு கொடுக்க வேண்டும் என்பதை முக்கியமாய்க் கொண் வலியுறுத்தப்பட்டது.

## கல்லூரிகளில் ராக்கிங் தேவையா?

மார்கரெட்: கரெக்ட். உள்ளே நுழையும்போதே கல்லூரி வாழ்க்கை எப்படியிருக்குமோ, என்ன நடக்குமோ என்ற பயம் எனக்கு எக்கச்சக்க மாய் இருந்தது.

ஃபிரடெரிக்: அப்படியா?

மார்கரெட்: ஆமாம். சீனியர் ஸ்டூடண்ட்ஸ் மூலம் எங்களைப் போலுள்ள புதியவர்களுக்குப் பயிற்சி (Human Resource Development Programme) கொடுக்கும்போது நல்லவிதமாய்ப் பழகியதை என் வாழ்நாளில் மறக்கமுடியாது.

இந்தப் பயிற்சி மூலம் எனக்கு நிறைய தன்னம்பிக்கை வந்தது. ஒருநாள் பயிற்சி நடக்கும்போது நடந்த அந்த நிகழ்ச்சி என்னால் மறக்கவே முடியாது.

கோஷி (Goshi) என்ற மூன்றாம் ஆண்டு மாணவர் போர்டில் கழுதை படம் ஒன்றை வரைந்து ''வால் மட்டும் நீங்கள் வரையுங்கள்,'' என்றார். அதுவும் எப்படி? கண்ணை கட்டிக் கொண்டு. கையில் சாக்பீஸை எடுத் கழுதைக்கு வால் வரைய வேண்டும். முதலில் ஒருவர் கழுதையை வி

ரமணி சந்திரன்

# மைவிழி மயக்கம்



## 19

"வாணி, நம் திருமணம் நம் இருவரின் சில வசதிகளுக்காக நடத்தப்பட்டது என்றாலும், உண்மையான திருமணம்தான். வெறும் நாடகம் அல்ல. தெரியும் அல்லவா?"

பேசாமல் தலையாட்டினாள் அவள்.

இப்போது ஏன் இந்தப் பேச்சு என்ற கேள்வி முகத்தில் இருக்க, உள்ளூர மனம் படபடத்தது.

"நம் நாட்டில் எத்தனையோ திருமணங்கள் ஒருவர் பற்றி ஒருவர் சரியாக அறியாமலே பெற்றவர்களால், மற்றவர்களால் நடத்தி வைக்கப்படுகின்றன. ஆனால், நாம் அப்படியல்ல. வாணி, உனக்கு என்னைப் பிடிக்காமல்... என்று... அப்படி ஒன்றும் இல்லைதானே?

வாணி, ப்ளீஸ், உனக்குப் புரிகிற தில்லையா? ம்...?''

அவள் லேசாகத் தலையசைக்கவும், குனிந்து, ஜெயவாணியின் இதழ்களில் மென்மையாக முத்த மிட்டான் தினகரன்.

முன்னிரண்டு தினங்களையும் போல அல்லாமல், அன்று காலையில் ஜெயவாணி கண்விழித்த போது தினகரனும் அருகிலேயே உறங்கிக் கொண்டிருந்தான்.

சற்று நேரம் அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். இந்த முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் பேறு போதும். வேறு எதுவும்..., சோறு தண்ணீர் கூட வேண்டாம் என்று எண்ணினாள்.

எண்ணிய உடனேயே சிரிப்பு வந்தது. என்ன பைத்தியக்காரத் தனம்! சோறு தண்ணீர் இல்லாமல் உயிரோடு இருக்க முடியுமா? உயிரோடு இருந்தால்தானே எதையும் பார்க்க முடியும்? அறிவியலில் படித்தது எல்லாம் மறந்து 'சினிமா வசனம்' போல எண்ணுகிறாளே!

சிரிப்பில் அவளது உடல் குலுங்கியது காரணமாக இருக்கக் கூடும், தினகரன் லேசாக அசைந்தான்.

இப்போது அவனது கண்களை நேராகப் பார்த்துப் பேசுவதற்குக் கூச்சமாக இருக்கும் போலத் தோன்றவும், அவன் விழித்துவிடாத படி ஜாக்கிரதையாக எழுந்து சென்றாள்.





முகம் கழுவிப் பொட்டிட்டுக் கொண்டு, அவள் வந்தபோதும், அவன் விழித்திருக்கவில்லை.

காப்பியைத் தினகரன் கண் விழித்த பிறகே தயாரித்துக் கொள்ளலாம், இப்போதே தயாரித்தால் ஆறிவிடும் என்று எண்ணிக் கத

வைத் திறந்து கொண்டு வெளியே சென்றாள்.

கிளுகிளுவென்றிருந்த காலைப் பொழுதை அனுபவித்தபடியே சற்று நேரம் நடந்தாள்.

குளிரில் நடப்பது நன்றாயிருந்தால்கூட அவளுக்கு அதிக தூரம் செல்ல மனம் இல்லை. முன்னிரண்டு நாட்கள் போல இல்லாமல், இன்று தன் கையால் காப்பி தயாரித்துத் தினகரனுக்குக் கொடுக்கும் ஆவலில் வேகமாக வீட்டை அடைந்தவள் திகைத்தாள்.

ஏனெனில், கடும் கோபத்துடன் அவளை எதிர் கொண்டான் அவளுடைய ஆருயிர்க் கணவன் தினகரன்.

தினகரன் கோபம் கொண்டு ஜெயவாணி பார்த்ததே இல்லை என்று சொல்ல முடியாது. அவனிடம் அவள் வேலைபார்த்த காலத்தில், எத்தனையோ காரணங்களால் அவனது கோபம் வெகுவாகச் சீண்டி விடப்படுவதை அவள் கண்டிருக்கிறாள். அந்தச் சமயங்களில் தினகரன் கோபத்தைக் காட்டியவிதம் கண்டு வியந்தும் இருக்கிறாள்.

சிலரைப் போலப் புருவத்தைச் சுளித்து, கண்ணை உருட்டி முகத்தைக் கோரம் செய்வதோ, காட்டுக்கூச்சல் போடுவதோ அவனது பாணி அல்ல. ஓர் அமர்ந்த குரலில், இன்னது இப்படி, இனி மன்னிக்கப்பட மாட்டாது என்று மறுத்துப் பேச இடமே கொடாதபடி, பேசி முடித்து அனுப்பி விடுவான்.

அப்படிப்பட்டவன் முகத்தில் இந்தக் கனலைக் காணவும் ஜெயவாணி பயந்து போனாள்.

அதுவும் முதல்நாள் இரவில் அவ்வளவு கனிவும் காதலும் காட்டி விட்டு... ஒருவேளை அதுதான் காரணமோ? ஏதோ ஒரு பலவீனத்தில் அவளை அணைத்துவிட்டு, இவளால் தானே சாயாவுக்குத் துரோகம் செய்யும்படி ஆயிற்று என்று ஆத்



"என் உயிர்த் தோழிங்க. ஒரு நிமிஷம்கூடப் பிரிய மாட்டேன்...!"

—ராம்குமார்

திரப்படுகிறானோ? அவசரப்பட்டு என்னென்னவோ கனவு காணத் தொடங்கிவிட்டாளே!

ஜெயவாணி உள்ளே வரும் வரை கோப முகத்துடனேயே பார்த்துக் கொண்டிருந்த தினகரன், அவள் வராந்தாவில் காலடி எடுத்து வைத்ததும் சீறினான்! "இவ்வளவு நேரம் எங்கே போனாய்?"

மீண்டும் முன்தினக் கனிவு நினைவு வந்தது அவளுக்குக் கண்ணைக் கரித்தது. "வா... வாக்கிங்." என்று திக்கினாள்.

"என்னது? வாக்கிங்கா?! இப்போதா?" என்று கேட்டபோது அவன் குரலில் சுதி கொஞ்சம் இறங்கி இருந்தது.

"கிளுகிளுவென்ற குளிரில் நடப்பது நன்றாய் இருந்தது."

"ஏன், இன்னும் கொஞ்சம் முன்னதாகவே கிளம்பியிருப்பது தானே கிளுகிளுப்பில் ஜன்னியே கண்டிருக்கும்!" என்றான் அவன் கோபமும் பரிகாசமுமாக.

அவள் பேசாமல் நிற்கவும், "இங்கே வா," என்று அவளை அருகில் அழைத்தான்.

அருகில் வந்து நின்றவளின்

தோள்களில் கைகளை வைத்து, ''வாணி, உனக்கு என்மேல் கோபம் இல்லையே?'' என்றான் கம்மி விட்ட குரலில்.

''கோபமா! எனக்கா? ஏன்...'' என்று திகைத்தவளுக்குக் கணவன் எதைக் குறிப்பிடுகிறான் என்று உடனே புரிந்து போயிற்று. செம்மை யுறத் தொடங்கிய கன்னங்களின் மேல் அடர்ந்து நீண்ட இமைமயிர் கள் விசிறியாய்ப் படிய, 'இல்லை' என்பது போலத் தலையசைக்கவும் அவன் முகம் மலர்ந்தது.

''தாங்க் காட்!'' என்று அவளை அள்ளி அணைத்துக் கொண் டான். இறுக்கமெல்லாம் தளர, ஒரு பெருமூச்சுடன், ''எனக்குக் கடவு ளாகப் பார்த்துக் கொடுத்த இந்தப் புகலிடத்தை என் அவசரத்தினால் முட்டாள்தனமாக இழந்துவிட் டேனோ என்று மிகவும் பயந்து போனேன்,'' என்று உரைத்தவன் மீண்டும் அவளை இறுகத் தழுவிக் கொண்டான்.

ஒருவாறு அவன் இயல்புக் குத் திரும்பவும், ''ஏன் அப்படி நினைத்தீர்கள்?'' என்று மெல்ல வினவினாள் ஜெயவாணி.

''அதுவா...? யோசி வாணி. நம் திருமணம் பொதுவான நட் புக்கு முற்றிலும் வேறுபட்ட ஒரு விசித்திரம். திருமணம் ஆகிவிட்ட தாலேயே, மற்ற திருமணங்களைப் போல இதை எல்லா வகையிலும் ஏற்க வேண்டும் என்று எதிர்பார்ப் பது பிசகு. இரண்டு நாட்களாகக் காலையில் கண்விழித்ததும் தரிசித்த அழகு முகம் அருகில் இல்லை. குரல் கொடுத்தால் பதிலும் இல்லை. தேடிப் பார்த்தும் காணவில்லை. என்ன நினைப்பது? நேற்றிரவு வேறு வழியின்றி என்னைச் சகித்தாயோ; வெறுப்பு தாளாமல் வெளியேறி விட்டாயோ என்று எண்ணிக் கலங்கி விட்டேன்.''

அவன் பேச்சு எதை யெதையோ உணர்த்த, அவளுக்கு, உள்ளூர ஒரு மகிழ்ச்சி ஊற்றாகப் பெருகியது.''

அகத்தை முகம் பிரதிபார்க் கவும், ''ஆமாம், சிரி.'' என்று அலுத்துக் கொண்டான் தினகரன். ''இரவில் எப்போது கிளம் பினாயோ, குளிரில் எங்கே விறைத் துக் கிடக்கிறாயோ என்று நான் கலங்கியது எனக்கல்லவா தெரியும்? இங்கே நான் நரக வேதனைப் பட்டுக் கொண்டு இருக்கிறேன்; அம்மாள் குஷாலாக அன்னநடையில் வன்ன மருங்கசைய வந்து கொண்டு இருக் கிறாய்! எனக்கு வந்த கோபத்தில் ஓங்கி அறைந்திருப்பேன். பெண் டாட்டியை அடிப்பது ஆண்மைக்கு இழுக்கு என்பதால் சும்மாவிட்டே னாக்கும்!'' என்று அவன் பாவனை யோடு கூறவும் அவளுக்கு மேலும் சிரிப்பு வந்தது.

அவளுக்காக அலைபாய்ந் திருக்கிறான் என்ற ஆனந்தத்தினால் வந்த சிரிப்பு. கண்கள் சிரிக்க,




இரண்டு படங்களுக்கும் இடையே குறைந்தபட்சம் ௨

''ஆக, கற்பனை செய்தால் கஷ்டத்தைத்தான் தேடுவீர்களாக்கும்! ஏதோ காலையில் விழித்தவள், ஆனந்தமாய்ப் பள்ளி கொண்டிருக்கிறவரை எழுப்ப வேண்டாம்; நாமே காலார நடந்துவிட்டு வரலாம் என்று பக்கத்தில் சென்றிருக்கலாம் என்று எண்ணிப் பார்க்கவே கூடாதாக்கும்?'' என்று கூறிக் கலகலவென்று நகைத்தாள்.

அவளது சிரிக்கும் செவ்விதழ்களில் ஆசையுடன் முத்தமிட்டான் தினகரன்.

அதன்பின் இருவருக்கும் அந்தவீடு சொர்க்கலோகம் ஆயிற்று.

திருமணம் செய்து கொண்டு கணவன் மனைவியாக வாழும் வாழ்வு பற்றி ரொம்ப முன்னால் — சென்ற யுகம் போலத் தோன்றிய படிக்கிற காலத்தில் ஜெயவாணி கற்பனை செய்து பார்த்ததுண்டு. அப்பா மாதிரி ஒரு பிரியமான கணவன் என்பதற்கு மேல் எந்தக் கனவையும் காண அப்போதைய அறியாமை இடம் தந்ததில்லை. பின்னர் வீட்டு நிலைமை போனபோக்கில், தனக்குத் திருமணம் என்ற எண்ணத்தையே துறந்தவள், விரைவிலேயே அதை மறந்தும் போனாள்.




தியாசங்கள் உள்ளன. விடை: 104'ம் பக்கம்.

வெகு அபூர்வமாக, மனதில் சிறுசிறு சலன அலைகள் எப்போதாகிலும் எழுந்தாலும், அறிவுபூர்வமாய் யோசித்து, இதயத்தோடு போராடி, அந்த அலைகளை அடியோடு நசுக்கி அழித்திருக்கிறாள்.

தினகரனோடு திருமணம் முடிவாகி, நடந்தேறிய பிறகுகூட, நடப்பு அறிந்திருந்ததால், கனவு, கற்பனைகள் மனதில் தோன்றக்கூட இல்லை.

ஊட்டி வந்தபிறகு அவ்வப்போது தலைதூக்கிய சலனங்கள், பொடானிகல் கார்டன் குழந்தைகளைப் பார்த்தும் ஒரேயடியாக நிமிர்ந்து நின்று ஆட்டம் போட முயன்றன.

ஆனால், சாயாவை மறந்து, தன்னை அவனுடைய மனைவியாகத் தினகரன் ஒருநாளும் — குறைந்தபட்சம் இப்போதைக்கு ஏற்கப் போவது இல்லை என்ற உறுதி இருந்ததால் மீண்டும் சலனங்களை அடக்கியே வைத்தாள்.

எதிர்பாராமல் வந்த இந்த சுகம் அவளுக்கு ஆச்சரியமாகவும், கூடவே ஆனந்தமாகவும் இருந்தது.

ஒவ்வொரு சமயங்களில், இது எப்படி சாத்தியம்? இவனால் எப்படித் தன்மீது இவ்வளவு பிரியமாக இருக்க முடிகிறது என்று யோசிப்பாள். பக்கம் திருப்பியதும் முன்பக்கம் மறைவது போலவா மனம்? கண்முன் ஜெயவாணி இருப்பதால் சாயா அடியோடு மனதிலிருந்து போய்விடுவாளா? இது முடிகிற காரியமா, அதுவும் இவ்வளவு சீக்கிரமாக எப்படி முடியும், யோசனை ஓடும்.

ஆனால் அவன் அருகில் வந்து



பத்திரிகையாளர் கூட்டத்தில் ஏர்—இந்தியாவின் பிராந்திய மேலாளர் திரு. கே. சிவராமன் அறிவிப்பு செய்கிறார்.

## பின் அட்டை அறிவிப்புத் தொடர்ச்சி

இந்த நிபந்தனைகள் எல்லாம் பொதுவான ஆலோசனைகள்தாம். இதனால் இந்தப் பக்க அளவை மீறின நல்ல படைப்புகளையும் நிராகரித்துவிடுவோம் என்றில்லை. படைப்புகளின் உட்கருத்து தமிழகத்தின் இன்றைய சூழலில் அமைக்கப்பட்டிருந்தால் நலம்.

படைப்புகளை அனுப்ப வேண்டிய கடைசி நாள்: 31.12.1994.

பரிசுக்குரிய படைப்புகளை தேர்ந்தெடுக்க, பாரபட்சமற்ற இலக்கியப் பரிச்சயம் உள்ள குழுவினர் தனித்தனியே அமைக்கப்படுவர். கருத்து வேறுபாடு ஏற்பட்டால் ஆசிரியரின் முடிவு இறுதியானதாக இருக்கும். நடுவர்களின் பெயர்களை விரைவில் அறிவிப்போம்.

நிர்வாகக் காரணங்களுக்காக குமுதம், ஏர்—இண்டியா நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள் இதில் கலந்து கொள்ள அனுமதி இல்லை.

தமிழ் இலக்கியப் படைப்பாளிகளை ஆர்வத்துடன் கலந்து கொள்ள அழைக்கிறோம்.

ஆசையுடன் அணைக்கும் போது அவர்கள் இருவரையும் தவிர உலகமே மறந்து போகும். என்ன, இவ்வளவு வெட்கம் கெட்டுப் போய் இருக்கிறோமே என்று உள்ளூரக் கூச்சமாக இருந்தாலும் அவனுக்குரிய பதிலை அவளால் தராதிருக்க முடியவில்லை.

ஊர் உலகத்தில் திருமணம் செய்து கொண்ட மற்ற தம்பதிகள் போலவே இருவரும் ஒன்றிப் போயினர்.

ஏழு நாட்கள் இறக்கை கட்டிப் பறந்துவிட, அடுத்தநாள் காலையிலேயே சென்னைக்கு எஸ்.டி.டி. போட்டான் தினகரன்.

அவள் காப்பி கலந்து எடுத்து வரும்போது, ''எப்படியும் இன்னும் மூன்று வாரங்கள் ஆகும், சங்கரன் சார்,'' என்று அவன் கூறுவது கேட்டது.

காப்பியை டீபாய் மேல் வைத்து விட்டு, கேள்வியால் நோக்கியவளை, இழுத்து அருகே அமர்த்திக் கொண்டு, அவன் பேச்சைத் தொடர்ந்தான். ''தினமும் டெலிபோன் செய்கிறேன். அப்போது கேட்டுக் கொள்ளுங்கள். ஏதேனும் அவசரம், தொடர்பு கிடைக்கவில்லை என்றால் அப்பாவிடம் கேட்டுக் கொள்ளுங்கள். எப்படியும் இன்னும் மூன்று வாரங்கள் எல்லா வேலையும் நீங்கள்தான் பார்த்தாக வேண்டும். செக் புத்தகம் கூரியரில் அனுப்புங்கள். கையெழுத்திட்டு திருப்பி அனுப்பி வைக்கிறேன். பை...'' என்று ரிசீவரை வைத்தான்.

சங்கரன் ஜி.எம். தந்தை காலத்திலிருந்து இருப்பவர் என்பதால், கூட ஒரு சாரை மரியாதைக்காகச் சேர்த்துச் சொல்லி அழைப்பான்.

விஷயம் புரிந்துவிட, புரிந்து கொண்டது மனதுக்கு இனிப்பாகவே இருந்தாலும், ''அங்கே எல்லோரும் என்ன நினைப்பார்கள்?'' என்று முகம் சிவந்து கேட்டாள் வாணி.

(தொடரும்)

மணிசந்திரா

20

நெற்றி மயிரை ஒதுக்கி, லேசாக முத்தமிட்டு விட்டு, ''பெரிதாக என்ன நினைத்துவிடப் போகிறார்கள்? சொல்லப்போனால் நம்மைப் பற்றிய நினைப்பே அங்கு யாருக்கும் இருப்பது அதிசயம். விஷயம் தெரிந்ததும், அவரவர் தேனிலவுகளை



அசை போட்டு ரசிக்கத் தொடங்கிவிடுவார்கள் என்பது என் ஊகம்.'' என்று சிரித்தான் தினகரன்.

கூடச் சேர்ந்து முறுவலித்தவளின் முகத்தில் யோசனை படிந்தது. ''அவசரத்துக்கு உங்கள் அப்பாவிடம் கேட்கச் சொன்னீர்களே! இப்போதைய தொழில் நிலவரம் அவருக்கு என்ன தெரியும்?''

''எல்லாமே தெரியும். வாரா வாரம் ரிப்போர்ட் டைப் பண்ணுவாயே. வரவு, செலவு, பர்ச்சேஸ், டெலிவரி, புது ஆர்டர்கள்... என்று முக்கிய நிகழ்ச்சிகளின் சுருக்கம் தயாரிப்பாயல்லவா? அதில் ஒரு காப்பி அப்பாவுக்குத்தான். அத்தோடு முன்பு நேரடியாகப் பார்த்தவர்தானே? இப்போதும் பார்க்கலாமே!'' என்றான் தினகரன் அலட்சியமாக.

பெற்ற தந்தையிடமா? என்று உள்ளூரச் சினந்து, ''அதற்காக மட்டும் என்றால் சரிதான்,'' என்று சட்டென உரைத்துவிட்டு நாக்கைக்

கடித்துக் கொண்டாள்.

''வேறு எதற்காக என்று நினைத்தாய்?''

''நன்றாய்த்தான் இருக்கிறேன் என்று காட்டுவதற்காக இருக்குமோ... என்று...?''

''நீ சொல்லும்வரை அது என் மனதில் இல்லை. ஆனால் அவர் அப்படியே எடுத்துக் கொண்டாலும் எனக்கு மகிழ்ச்சியே,'' என்றான் அவன் அக்கறையற்று.

வாணியின் மனம் வாடியது.

தினகரன் இன்னமும் தந்தையிடம் கோபம்விடவில்லையே! அப்படியானால் சாயாவின் இழப்பு இன்னமும் மனதில் குறையாக இருக்கிறது என்பதுதானே பொருள்? பின்னே, இவளிடம் முழுமையாக ஈடுபட்டிருப்பது எப்படி?

அல்லது இது முழுமையான ஈடுபாடே அல்லவோ? அவளுக்குக் கண்டுபிடிக்கத் தெரியவில்லையே!

''ஏய்... என்னது? என்னடா யோசனை? முகம் சோகம் காட்டுகிறதே!''

ஒருகணம் தயங்கிவிட்டு, சாயாவை ஒதுக்கி மற்றதைச் சொல்லிவிட்டாள் வாணி. ''உங்களுக்கு மாமாமேல் கோபம் தீரவில்லையே. நாம் மகிழ்ச்சியாக இருக்கிறோம் என்று எண்ணினேனே?''

''அதாவது, 'ஆல் இஸ் வெல் தட் எண்ட்ஸ் வெல்' என்கிறாயா? இரண்டையும் ஒன்றாக்காதே வாணி. சிந்திக்கத் தெரிந்த ஒரு தனி மனிதனின் வாழ்வில் இன்னொருவர் – அவர் யாராக இருந்தாலும் சரிதான், எல்லை மீறிக் குறுக்கிடுவது தப்புதான். அது முழுக்க முழுக்க வேறு விஷயம். மற்றபடி ஓர் உண்மை அறி. உன்னுடனான இந்த வாழ்வுக்கு மேம்பட்டதோ, ஏன் இதற்கு ஈடானதுகூட இருக்க முடியாதென்றே நான் நம்புகிறேன். நிம்மதி.''

அவனும் சாயாவின் பெயரைச் சொல்லாமலே அவளைப் பெருமளவு தேற்றிவிட்டான். ஆனால் கூடவே, ஒரு தீப்பொறியையும் நெஞ்சினுள் வைத்துவிட்டான். டெலிபோன் விஷயத்தைச் சொல்லாததையும் இந்த மாதிரி வரம்பு மீறலில்தான் சேர்ப்பானோ? அது கடவுள் காட்டிய வழி என்பதை ஒத்துக் கொள்வானா? அல்லது மாட்டானோ?

நெஞ்சக் கனலை மறைத்து, வாணி கணவனுக்காக முறுவலிக்கவும், அவன் அவளது கன்னத்தில் மென்மையாகத் தட்டினான். ''எவ்வளவோ நிம்மதிதான். ஆனால் இந்த மாமனார் விவகாரம்தான் இந்தப் பட்டு மண்டைக்குள்ளிலிருந்து வண்டாய்க் குடைகிறது! கரெக்ட்?''

அவன் சொன்னது இன்னொருவிதமாய் அவளை எண்ண வைத்தது. தந்தை மகனுக்காகவே செயல்பட்டதால் அவரது செயல்



காம்பவுண்டு சுவர்: சிறுநீர் கழிக்குமிடம்.

ஆபீஸ் மேனேஜர்: லேட்டாகப் போகும்போது சீக்கிரமும், சீக்கிரமாகப் போகும்போது லேட்டாகவும் வருபவர்.

கான்வென்ட்: நாகரிகமாகக் கொள்ளையடிக்கும் இடம்.

பிழையல்ல என்று தினகரனால் ஏற்க முடிந்தால் ஜெயவாணி செய்ததை யும் சரியென்று ஒத்துக்கொள்ளக் கூடுமே.

துணிந்து வெளிப்படையாகப் பேச முடிவு செய்தாள்.

''யோசித்துப் பாருங்கள், சாயாவின் உண்மை உருவை உங்க ளுக்கு வெளிப்படுத்துவதற்காகத் தானே மாமா, சாயாவிடம் சென் றார். அதனால்...'' என்று தொடங் கியவளைத் தினகரன் இடைமறித் தான்.

''என் புத்திசாலித்தனத்தின் மீது அப்பாவுக்கும் உனக்கும் எவ் வளவு நம்பிக்கை!'' என்று அவன் உரைக்கவும் வாணி வாயடைத்துப் போனாள்.

அவள் முகத்தைப் பார்த்த தும் சட்டென அவளை இழுத்து அணைத்தான் தினகரன். ''சாயா பேச்சை விடு வாணி. ஆனால் நீ? உன்னை என்னவெல்லாம் சொன் னார்? அதற்கு மேலுமா அவருக்கா கப் பரிகிறாய்? நீ ஒரு மாசுமறுவற்ற ரத்தினம் என்பது எனக்குத் தெரி யும். ஆனால் பழங்கால பழைய பாரத குலப் பண்பாட்டு ரத்தினமா கக் கணவன் வீட்டுக் கன்றுக்குட்டி வரைக்கும் வக்காலத்து வாங்கி உயர்வாகத்தான் பேசியாக வேண் டும் என்று அவசியம் இல்லை. அதி லும் என்னிடம் கொஞ்சம்கூடத் தேவை இல்லை. முக்கியமாக உன் மாமனார் விஷயம். ஏனெனில் உன்னைவிட எனக்கு அவரை நன் றாகவே தெரியும் பார்!''

''ஆனாலும் நியாயம் என் றும் ஒன்று இருக்கிறதில்லையா?''

அவளை ஒரு பார்வை பார்த்து விட்டு, சோபாவில் அமர்ந்து, ''அவர் பக்கம் அப்படி என்ன நியா யம் கண்டுவிட்டாய்?'' என்றான் அவன் நிதானமாக.

அவள் பேச வாய்திறந்த போது, ''முதலில் உட்கார். நீதான் ஒரு பட்டிமன்றம் நடத்தப் போகி றாய் போல இருக்கிறதே. அவ் வளவு நேரம் நிற்பானேன்? உட் கார்.'' என்று அருகே அமருமாறு சைகை செய்தான்.

இந்தப் பேச்சு தினகரனுக் குப் பிடிக்கவில்லை என்பது நன்றா கவே தெரிந்தது. ஆனாலும் இடை யில் விட்டுவிட ஜெயவாணிக்கு மனம் இல்லை.

அவன் காட்டிய இடத்தில் அமர்ந்து கொண்டு தொடர்ந்தாள். அவரது நிலையில் இருந்து கொஞ் சம் யோசித்துப் பாருங்களேன். அவரானால் உங்கள் அந்தஸ்திற் கும் அழகுக்கும் பொருத்தமான ஒரு பெண்ணைப் பார்த்துக் கொண்டு காத்திருக்கிறார். நீங்களானால் அவ் வளவு செல்வத்தையும் அழகையும் விட்டுவிட்டு, உங்களிடம் வேலை பார்க்கிற ஒரு கண்ணராவிப் பெண்ணை....''

---

காலிஃபிளவர்: வெஜிடேரியன் மூளைக்கறி.

கற்பு: வாய்ப்பு கிடைக்காத வரை பத்திரமாக இருப்பது.

சிகரெட்: பாக்கெட் கொலை காரன்.

நாகரிக வளர்ச்சி: பிராவை உரு வாக்கியது.

குமாஸ்தா: பேனாவால் எழு தும் இயந்திரம்.

மனசாட்சி: 'யாராவது பார்க் கப் போகிறார்கள்' என்று எச்சரிப் பது.

கோழை: வேகமாக ஓடுபவர்.

''நீ ஒரு நாளும் கண்ணராவியாக இருக்கவில்லை. அதிக அழகாகத் தோன்றவில்லை. அவ்வளவே.''

''சரி. அழகாய்த் தோன்றாத ஒரு பெண்ணை, இன்னோர் அழகியை மணக்க முடியவில்லை என்று ஆன இரண்டாம் நாளே கொண்டுவந்து நிறுத்தினால் அவருக்குத்தான் எப்படி இருக்கும்? என்ன ஏன் என்று தெரிந்து கொள்ள முயற்சிக்க மாட்டாரா?'' என்று வாதாடினாள் ஜெயவாணி.

''உங்கள் உலகமகா மாமனார் அப்படி முயன்று என்னவெல்லாம் கண்டுபிடித்தாராம்?'' என்றான் தினகரன் ஏளனமாகவே.

திருமணத்தின்போது தாமோதரன் 'மறத்தி' என்றது அவளுக்கு

நினைவு வந்தது. கண்டுபிடித்துத் தான் இருக்கிறார் என்பது நிச்சயமே.

ஆனால் அதை இப்போது தினகரனிடம் வெளியிட்டுச் சொல்வது வெடிகுண்டின் திரியைப் பற்ற வைப்பதற்குச் சமானம். எதையும் வாய்விட்டுச் சொல்ல முடியாமல் போகவே உதட்டைக் கடித்துக் கொண்டு பேசாமல் இருந்தாள் ஜெயவாணி.

பச்சரிசிப் பற்களின் அடியில் சிக்கியிருந்த கீழுதட்டை மிருது வாய் வருடி விடுவித்தான் தினகரன். ''ஜெயவாணி உன்னாலேயே உன் மாமனாரை நியாயப் படுத்த முடியவில்லை, பார்த்தாயா? பெற்றவர். அவரை எப்படியும்

ஒதுக்கி வைத்துவிடப்போவது இல்லை. ரத்தபாசம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? ஆனால் அத்தோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். உனக்கோ, எனக்கோ அவர் நன்மை செய்தவர் அல்ல என்பதை ஒரேயடியாக மறக்கக்கூடாது வாணி.''

இதை அவன் மனைவியால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. 'மறத்தி' என்றவர் நினைத்திருந்தால் திருமணத்தை நிறுத்தியிருக்க முடியும். மாறாகக் கூட இருந்து நடத்தி வைத்ததற்காகவே அவள் அவருக்கு நன்றிக் கடன் செலுத்தியாக வேண்டுமே!

''அப்படிச் சொல்லாதீர்கள். அவர் மட்டும் தலையிட்டிராவிட்டால்... உங்கள் வாசகப்படி மூக்கை நுழைத்திரா விட்டால் எனக்கு இந்த வாழ்வு கிட்டுவது ஏது?''

''எனக்கு என்று பிரிப்பானேன்? நமக்கு என்றே சொல்லு. ஆனால் அதை அப்பா செய்ததாகச் சொல்லாதே. அவர் ஒன்றைக் கெடுத்ததோடு சரியே தவிர, உன்னை அவர் காட்டித் தரவில்லை. அது என் சாதனை!''

மற்றதைச் சொல்ல முடியா விட்டாலும், ''எப்படியும் பிள்ளையார் சுழி அவரதுதானே?'' என்றாள் அவள் விடாமல்.

ஆனால், ''ஜெயவாணி என்று காட்டுகிறாயாக்கும்?'' என்று அவன் ஒரு மாதிரிக் குரலில் கூறவும், அவளுக்குச் சுதி இறங்கிப் போயிற்று. கணவனுக்கு எரிச்சல் மூட்டிவிட்டோமோ என்ற பயத்தில், ''கோபமா?'' என்று மெதுவாகக் கேட்டாள்.

''பின்னே?'' என்றான் அவனும்.

அவள் கவலையுடன் நோக்கவும், '' 'கற்றது கை மண்ணளவு, கல்லாதது உலகளவு' என்பார்கள். பால பாடத்தில் இருக்கிறோம்; முடிந்த அளவு கற்றுத் தேர்ந்துவிட வேண்டும் என்றுதான் விடுமுறையை நீடித்ததே. நீயானால் படிக்க வேண்டிய பாடத்தை விட்டுவிட்டு வேண்டாத கதையெல்லாம் பேசிக் காலத்தை வீணாக்கினால் எனக்குக் கோபம் வருமா வராதா? ம்?'' என்று கண்களில் சிரிப்புடன் ஒற்றைப் புருவத்தை உயர்த்தி வினவினான் தினகரன்.

சமாளிக்கப் பார்த்து முடியாமல் சூடேறிச் சிவந்த முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு விரல் இடுக்குகளின் வழியே அவனைப் பார்த்துச் சிரித்தாள் மனைவி.

மேலும் நீட்டித்த வீடுமுறையும் கண்சிமிட்டுமுன் கடிதோடி மறைந்துபோயிற்று.

திரும்ப வேண்டிய நாள் நெருங்க நெருங்க உள்ளூர ஏதோ சுமையாக உணர்ந்தாள் ஜெயவாணி.

ஏதோ சுமை என்ன? இன்னமும் கணவனிடம் மனதை முழுமையாகக் காட்ட முடியவில்லையே என்பதுதான் சுமை. எவ்வளவோ முயன்றும் அவனிடம் சொல்லும் தைரியம் அவளுக்கு வர மறுத்தது.

இத்தனைக்கு அவன் அவளிடம் உயிராக இருந்தான்.

தினகரனின் திருமணத்துக்கு ஒரு முன் கதை உண்டு என்பதோ, ஜெயவாணி அவனுடைய இரண்டாவது தேர்வு என்பதோ அவளாக நினைவுபடுத்திக் கொண்டால்தான் உண்டு. அப்படி நினைவுபடுத்திக் கொள்வது மிகவும் சிரமமாய் இருக்கவே அவளும் அதை மறந்துவிடவே பழகிவிட்டாள்.

சில சமயங்களில் மாசுமறுவற்ற ரத்தினம், வைரம் என்று அவளை அவன் கொஞ்சும்போது மட்டும் மனம் உறுத்தும். ''இல்லை இல்லை. நானும் குற்றம் குறைகள் உள்ள ஒரு சாதாரணப் பெண்தான். எத்தனையோ தப்புத் தவறுகள் செய்

# இ.வா.சி



பாக்யகாந்த்



மனைவியுடன் பாலசுப்ரமணியம்

இங்கே பட்டுக்கோட்டை பாக்யகாந்த் அனுப்பியுள்ள படம் சிரிப்புதானா என்ற பலத்த சந்தேகம் எங்கள் நிபுணர் குழுவுக்கு எழுந்துள்ளதால் சேலம் எஸ். பாலசுப்ரமணியனுக்கு திருமணத்தன்று அவருடைய மனைவி மைசூர் பாக் ஊட்டி மகிழும் படத்தையும் பிரசுரித்துள்ளோம்.

---

திருக்கிறேன்,'' என்று தொடங்கி, அவள் அன்று செய்ததைச் சொல்லி விட முயற்சி செய்வாள்.

''தப்புத் தவறா? நீயா?! ஏனம்மா, படிக்கும்போது அடுத்தவள் தண்ணீர் பாட்டிலிலிருந்து தாகம் தாங்காமல் தண்ணீர் குடித்து விட்டாயா? மாதத் தேர்வுகளில் காப்பி அடித்தாயா? ஊகூம். இராது. யாராவது பிழைத்துப் போகட்டும் என்று காப்பியடித்துக் கொள்ள உன் பேப்பரைக் காட்டியிருப்பாய். அது தானே? கரெக்டாக சொல்லிவிட்டேனா? எங்கே பரிசு?'' என்று அவன் சரசமாகச் சிரிக்கவும் தன் முயற்சியைக் கைவிடுவாள்.

அவளை இவ்வளவு உயர்வாக அவன் எண்ணுகையில் இல்லை என்று நிரூபிப்பது போல எப்படிச் சொல்வது?

சொல்லித்தான் ஆக வேண்டும் என்று ஒரே உறுதியாக நினைத்திருந்தால் சொல்லியிருக்க முடியும் தான். விலகி அமர்ந்து, இந்த நேரம் இப்படி நடந்தது என்று உரைத்திருக்க முடியும்தான்.

ஆனால் சாயாவைப் பற்றிப் பேசப் பிடிக்காததும், அப்போதைய இனிய சூழ்நிலையைக் கெடுத்துக் கொள்ள விரும்பாததுமாகச் சொல்வதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்த அடிமனது, சொல்வது அனாவசியம் என்பதற்கு ஒரு காரணத்தையும் கண்டுபிடித்தது.

ஜெயவாணியும் தினகரனும் தான் இணைய வேண்டும் என்பது கடவுளாகப் பார்த்து முடிவு செய்தது. அதற்கு, மனித முயற்சிகளினால் வந்த இடையூறுகளை எல்லாம் விலக்கி, அவர்களை இணைத்து வைத்தவரும் அவரே. எல்லாம் அறிந்த தெய்வத்தின் செயலில் மூக்கை நுழைத்துக் குழப்ப அவள் யார்? அந்த டெலிஃபோன் செய்தியைத் தினகரனிடம் சொல்லாதது தவறாகவே இருக்கலாம். ஆனால் சில பெரிய நன்மைகளுக்காகச் சில சிறு தப்புகளைச் செய்வது பிழை அல்ல என்று அந்தக் கடவுளே அவரது ராமாவதாரத்திலும், கிருஷ்ணாவதாரத்திலும் நமக்குக் கற்றுத்தரவில்லையா என்று தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டு, கணவனிடம் தெரிவிக்கும் எண்ணத்தையே கைவிட்டாள்.

ஆனால், தண்டிக்கப்படாத தவறு என்று எதுவும் கிடையாது என்பதைப் பாவம், அவள் அப்போது அறிந்திருக்கவில்லை!

(தொடரும்)



# மைவிழி மயக்கம்



*"என்னடி, எங்கள் உங்கள்? நான் யார்? அந்த 'எங்க'ளில் நான் சேர்த்தி இல்லையா?" என்று கேட்டாள் ஜெயவாணி.*

## 21

ஊட்டி வெகுவாக இனித்த போதும் சென்னைக்குத் திரும்புவதிலும் ஜெயவாணிக்குச் சந்தோஷம்தான்.

அப்பாவை மிகவும் நன்றாக வைத்துக் கொள்ள வேண்டும். இது வரை அவர்பட்ட துன்பங்கள் போதும். சுபாவுக்கும் வேண்டியதெல்லாம் கேட்டு வாங்கித்தர வேண்டும்.

சும்மாவே இப்படிக் கனவு கண்டு கொண்டிருந்தவளுக்கு, "உன் தந்தையும், தங்கையும் அந்தச் சிறுவீட்டில் இருப்பது தேவையில்லை, வாணி. அடையாறில் நம் வீடு பெரியது. தாத்தா வழிச் சொத்து என்பதால் என் வீட்டுக்கு யார் வருவதையும், அங்கே வசிப்பதையும் யாரும் தடுப்பதற்கில்லை. எனவே விருப்பப்பட்டால் அவர்களும் நம்முடனேயே இருக்கலாம்," என்று தினகரன் கூறவும், உவகை ஊற்றாய்ப் பீறிட்டது.

அளவுகடந்த ஆனந்தத்தோடு அதை எப்படிக் காட்டுவது என்று புரியாத திகைப்பும் ஆர்வமுமாய் விழிகள் மலர, அவள் கணவனை நோக்கவும், அவன் குறுநகையுடன் தன் உதடுகளைச் சுட்டிக் காட்டினான்.

கன்னங்களில் சிவப்பேறிய போதும் கணவனின் விருப்பத்தை மகிழ்ச்சியுடனேயே நிறைவேற்றினாள் மனைவி.

அடையாறு வீட்டில் சாமான்களைப் போட்டுவிட்டு, குளித்துக் கிளம்பி, அலுவலகம் செல்லும் வழியில் மனைவியை, அவளுடைய தகப்பனார் வீட்டில் விட்டுவிட்டு, "நான் அலுவலகம் போனதும் காரை உனக்குத் திருப்பி அனுப்புகிறேன்,",

ரமணி சந்திரன்



''டெய்லர் 100 ரூபாய் கேட்டான், நான் 75 ரூபாய்க்குத் தச்சுக் குடு என்றேன்.''

—அ. அழகராஜ், ம. லட்சுமிபுரம்

---

என்று கூறிச் சென்றான் தினகரன்.

தந்தைக்கும் தங்கைக்கும் வாங்கி வந்த பொருட்களை எல்லாம் கடை பரப்பிய வண்ணமே தன் சேதியை வாணி உற்சாகத்துடன் உரைத்தபோது, இருவருமே முதலில் அதற்குப் பதில் ஏதும் சொல்லவில்லை.

கணவனின், 'விருப்பப்பட்டால்' தனியாக மனதில் உரத்து ஒலிக்க, ''என்னப்பா?'' என்றாள் மகள் திகைப்புடன்.

பேச வாயெடுத்துவிட்டு, தயங்கி, ''சுபா சொல்லுவாள், அம்மா,'' என்று கூறி தன்மட்டில் ஒதுங்கிக் கொண்டார் வாகீசன்.

தன் யோசனையைத் தந்தை ஆர்வத்தோடு எதிர்கொள்ளவில்லை என்ற உறுத்தலை, இன்னொன்று மறைத்தது.

வாகீசனின் நடையிலிருந்த வேறுபாடு! அதில் முன்பிருந்த தளர்வு மாறித் தெரிந்த தெம்பு!

''என்ன சுபா?''

''சொக்கலிங்கம் அங்கிள்,'' என்ற சுபவாணி, தமக்கை முகம் சுளிக்கவும், அவசரமாகத் தொடர்ந்தாள், ''கோபமாக எதுவும் சொல்லிவிடாதே அக்கா. கேட்கும்போது அங்கிளின் கதையும் பரிதாபமாகத்தான் இருக்கிறது. அதோடு அவர் அதைச் சீர் செய்யவும் முன் வந்திருக்கிறார்...'' என்று தொடங்கி, விவரம் சொன்னாள்.

கழுத்தை நெரித்த கடனும் கஷ்டமும் தாங்கமாட்டாமல் குடும்பத்தோடு, ஊரைவிட்டு வடக்கே ஓடிப்போன சொக்கலிங்கம் குடும்பத்தார் எப்படி எப்படியோ பாடுபட்டுப் பிழைத்தார்கள். குடும்பம் முழுவதுமே உழைத்தது. கூலி வேலை, சிற்றாள் வேலை எதையும் விடவில்லை. கிடைத்த பணத்தில் ஒரு பகுதியைக் கட்டாயமாகச் சேமித்தார்கள். சேமிப்பு வளரவும் அங்கேயே சின்னதாக ஒரு கடை வைத்தார்கள். நகரம் விரிய விரிய, இவர்களது தொழிலும் விரிவடைந்து, நன்றாக நிமிர்ந்து விட்டார்கள்.

இப்போது, தன் செயலால் பாதிக்கப்பட்டிருக்கக் கூடிய நண்பரை நாடி ஒரு திட்டத்தோடு வந்திருக்கிறார். அவரது கடையிலிருந்து மொத்தமாக முப்பதினாயிரம் ரூபாயை எடுத்தால் இப்போதைய வளர்ச்சியில் பாதிப்பு ஏற்படக் கூடும். அதைவிட, நண்பரையும் ஒரு பங்குதாரர் ஆக்கிவிட்டால், இரு குடும்பங்களுமே வளம் பெற்று வாழலாமே! மேலும் மேலும் உறவை வலுப்படுத்திக் கொள்ளவும் சொக்கலிங்கத்திற்கு ஆசையே. உரிய வயது ஆனதும் அவருடைய மகன் நவநீதனுக்குச் சுபவாணியை மண முடிக்கவும் விரும்புகிறார்.

''பிராயசித்தமா?'' என்றாள் ஜெயவாணி ஒரு மாதிரிக் குரலில்.

லேசாகத் தோளைக் குலுக்

கினாள் தங்கை. ''நம் பாதிப்பின் அளவு இங்கே வந்தபிறகுதான் அவருக்குத் தெரியும், அக்கா. மேலும், நமக்கு ஏதாவது செய்யவேண்டும் என்ற உந்துதலில் அவராகத்தானே வந்திருக்கிறார். அவர் வராமலே இருந்திருந்தாலும் நம்மால் என்ன செய்ய முடியும், சொல்லு?'' என்று சொக்கலிங்கத்துக்காகப் பரிந்து பேசிய தங்கையைக் கண்களில் கேள்வியுடன் நோக்கினாள் ஜெயவாணி.

''அப்பாவுக்கு இந்த யோசனை மிகவும் பிடித்திருக்கிறது அக்கா. எனக்கும்தான். அந்த ஆன்ட்டி, நவநீதண்ணன் எல்லோரையும் எனக்கு எப்போதுமே பிடிக்கும். அதனால் நீ வந்ததும் உன்னிடம் சொல்லிவிட்டுக் கிளம்பலாம் என்று அப்பா சொன்னார்.''

ஜெயவாணிக்கு உள்ளூர ஓர் ஏமாற்ற உணர்வு உண்டாயிற்று. மூன்று ஆண்டுகளுக்கு மேலாக அந்த வீட்டில் அவள்தான் முடிவு செய்வது. இப்போது இவ்வளவு பெரிய முடிவை எடுக்க அவளிடம் ஆலோசனைகூடக் கேட்கவில்லையே!

தொண்டையில் அடைத்ததை விழுங்கிக் கொண்டு, ''நாம் எல்லோரும் சேர்ந்து ஒன்றாய் இருக்கலாம் என்று நினைத்தேன்,'' என்றாள் ஏக்கத்துடன்.

தமக்கையை ஒரு பார்வை பார்த்துவிட்டு சுபா சொன்னாள். ''அக்கா, நீ என்னதான் மூடி மறைத்தாலும் உன் திருமணம் அந்தப் பணத்துக்காகவும் எங்கள் எதிர்காலத்துக்காகவும் நடந்தது என்று எனக்குத் தெரியும். அவ்வளவுகூட ஊகிக்க முடியாத முட்டாள் அல்ல நான். எங்களுக்காக நீ...''

''என்னடி, எங்கள் உங்கள்? நர்ன் யார்? அந்த 'எங்க'ளில் நான்

சேர்த்தி இல்லையா?''

''முன்பு சேர்த்திதான். இப்போது இல்லை. அது கிடக்கட்டும். நான் சொல்ல வந்ததைக் கேள். எங்களுக்காக நீ பலி ஆனாய்...''

''பலி இல்லை சுபா. நான் மகிழ்ச்சியாகவே இருக்கிறேன். ''

''கடவுள் அருள்! ஆனால் காலம் முழுவதும் எங்கள் சுமையும், அதற்காக நீ அத்தானிடம் மேலும் மேலும் கடன் படுவதும் வேண்டாம் என்பது என் கருத்து. அதனால் நான்தான் அப்பாவிடம் கட்டாயப்படுத்தினேன். நம் பழைய அப்பா நினைவிருக்கிறதாக்கா? இப்போது நம் சொல்லுக்குப் பணிந்து கொண்டு... எதாவது தொழிலில் ஈடுபட்டு, சம்பாதிக்கத் தொடங்கினால் அப்பா, பழைய அப்பா ஆகிவிடுவார் என்பது என் நம்பிக்கை. பெருமளவு அதற்காகத் தான்... என்னக்கா?''

தந்தையின் நடை ஜெயவாணிக்கு நினைவு வந்தது.

தங்கையை ஆச்சரியமாய் நோக்கி, ''என் சின்னத் தங்கை இவ்வளவு யோசித்திருக்கிறாயே! இவ்வளவு புத்திசாலித்தனமாக!'' என்று விழிகளில் நீர்துளிக்கக் கூறினாள்.

''புத்திசாலியானதற்கு அழுகிறாயா, அக்கா?'' என்று சிரிக்க முயன்றாள் சுபவாணி.

''இல்லை குட்டிச் செல்லம். இது ஆனந்தக் கண்ணீர்!'' என்றாள் சுபவாணியுடைய சகோதரி ''நம் எல்லோருக்காகவுமே!''

சுபவாணியும் வாகீசனும் சொக்கலிங்கத்தோடு கிளம்பிச் சென்றபின். ஒரு சில நாட்களின் பிரிவாற்றாமைக்குப் பிறகு, ஜெயவாணியின் வாழ்க்கை அமைதியாகவும் இனிமையாகவும் செல்லலாயிற்று. சலசலத்து ஓடும் தெள்ளிய நீரோடை.

அலுவல் முடிந்து மாலையில் திரும்பிவரும் கணவனுக்காகவே உயிர் வாழ்வது போல உணர்ந்தாள் ஜெயவாணி. அவனும் அதே ஆர்வம் காட்டவே, மறுநாள் அவன் தொழிலைப் பார்க்கவென்று கிளம்பும்வரை பொழுது இறக்கை கட்டிப் பறந்தது.

தினகரன் ஒன்பது மணியளவில் கிளம்பிச் சென்ற பிறகும் கணவனைப் பற்றிய நினைவிலேயே பெருமளவு பொழுதை ஓட்டுவாள் ஜெயவாணி. அவ்வப்போது ஒரு குற்ற உணர்வுடன் தங்கை, தந்தையைப் பற்றிப் பிடிவாதமாக எண்ணிப் பார்ப்பாள்.

ஒரு காலத்தில் இவர்களுக்காகவே சொல்லும் செய்லுமாய் வாழ்ந்தது ஏதோ என் பிறவி நிறைவு போலத் தோன்றுவதையும், காந்தம் கண்ட இரும்பைப் போல மனம் மீண்டும் மீண்டும் தினகரனிடம்

---

## ஐஸ் கிரீ

தலைவலியால் அவதிப்படும் அமெரிக்கர்களில்— குறிப்பாக ஒற்றைத் தலைவலி— 30 சதவீதத்தினருக்கு ஐஸ்கிரீம் சாப்பிட்டதால் ஏற்பட்ட விளைவு என்கிறார் டாக்டர் லாரன்ஸ் நியூமென் (தலைவலி கழகத்தின் (MMC) இணை இயக்குநர், நியூயார்க்).

ஆனால் ஐஸ்கிரீம் சாப்பிடுவதால் மட்டும் தலைவலி வருவதில்லை. குளிர்ந்த உணவு அல்லது குளிர் பானங்கள் ஆகியவற்றைச் சாப்பிட்டாலும் தலைவலி வரும். காரணம்: குளிர்ந்த உணவோ குளிர் பானமோ வாயை அதிவிரைவில் குளிர்ச்சியடைய செய்துவிடுகின்றன. அதனால் தலையிலிருந்து அனுப்பப்படும் மிதவெப்ப இரத்தமும் உடனடியாக குளிர்ந்து விடுகிறது. குளிர்ந்த ரத்தத்தைத் தலை

ஓடுவதையும் உணர்கையில் அவ ளுக்கே வியப்பாக இருக்கும். எப்படி, இப்படி ஒரு பைத்தியம் ஆனோம் என்று ஆச்சரியப்படுவாள். பூரித்தும் போவாள்.

ஆனால், சுறுசுறுப்பாய் செயல்பட்டுப் பழகியிருந்த பெண் ணுக்கு, இந்தப் பகல் முழுவதுமான தனிமை, பெரும்பான்மை நேரம் தினகரன் ஜபம் செய்தபோதும் கூடக் கொஞ்சம் திகட்டலாயிற்று.

எண்ணெயிட்ட இயந்திரம் போல சீராக நடக்கும் அந்த வீட் டுச் செயல்பாட்டு அமைப்பில் தலை யிடத் தைரியமற்றுக் கணவனிடமே தன் குறையைச் சொல்லிக் கேட் டாள். ''வேலைக்கும் வரக்கூடாது என்கிறீர்கள். ரொம்பவும் போர டிக்கிறதே!''

''என்ன செய்வது வாணி? நீ அங்கே வந்தால், அப்புறம் அங்கே வேலை நடப்பது கஷ்டமில்லையா?

## தலைவலி



யானது வலுக்கட்டாயமாகத்தான் மீண்டும் இழுக்க வேண்டியுள்ளது. இதனால் நரம்புகள் தளர்வடைந்து, வலிக்கான அறிகுறியை ஏற்படுத்து கின்றன.

ஐஸ்கிரீமை ரசித்துச் சாப் பிட ஒரே வழிதான் உண்டு. எவ் வளவு மெதுவாக ஐஸ்கிரீமை சாப் பிட முடியுமோ அவ்வளவு மெது வாக சாப்பிட வேண்டும். இது ஒன்றே தலைவலியைத் தவிர்க்கும் முறையாகும்.

—இரா.



நான் அலுவலக வேலையைச் சொன் னேன்,'' என்று கண்சிமிட்டிச் சிரித் தான் கணவன்.

அவள் முகத்தில் சிரிப்போடு சிணுக்கமும் இருப்பதைக் கண்டு அருகில் அமர்த்திச் சொன்னான். ''பார் வாணி, இது உன் வீடு. இங்கே நீ என்ன மாற்றம் செய்தா லும் யாரும் எதிர்ப்பதற்கில்லை. யாரையும் எதையும் செய்யும்படி நீ ஏவலாம். செய்வார்கள். உதாரண மாக, நம் சமையல்காரர் நன்றா கவே செய்வார்தான். ஆனால் நீ ஏதாவது புதிதாகச் செய்வது என் றால்...'' என்றபோது அவள் குறுக் கிட்டாள். ''அய்யய்யோ, எனக் குச் சமையலில் பாடமே கிடை யாதே. படிக்கிறபோதேதான் அம்மா... சொன்னேன் இல்லையா? எங்கள் வயிற்றுத் தேவைக்கு மட்டு மாய் ரொம்பவும் சிம்பிள்தான். இந்த ஓட்டை சமையலை வைத்துக் கொண்டு ஏதாவது செய்யப் போனால் உங்கள் சமையல்காரரின் முன் குறைந்தது கால் மீட்டர் குன் றிக் குட்டையாகிப் போவேன்,'' என்றாள்.

''அய்யய்யோ! அப்புறம் ரொம்பவும் சிரமமாகிப் போகு மம்மா. இப்போதே நன்றாய்க் குனியவேண்டியிருக்கிறது!''

வேடிக்கை விளையாட்டிற் கிடையே, அவளது பிரசினை தீர வும் சில வழிகள் சொன்னான் தின கரன்.

அதன்படி கைவேலை, சிறப் புச் சமையல் கற்றுக் கொடுக்கும் வகுப்புகளில் சேர்ந்து பயின்றாள். 'கை கொஞ்சம் நிறைந்தாற்போலத் தெரிகிறது. ஹெல்த் கிளப் போ,' என்றதற்கிணங்க அங்கே சென்று சிரத்தையுடன் பயிற்சிகளைச் செய் தாள். மாதர் சங்கம், தரும காரி யங்கள் என்று ஒவ்வொருவராக வர வர, தினகரனோடு கலந்து ஆலோ சித்து அவரவர் தன்மை அறிந்து

கலந்து கொண்டாள்.

சமையல், கைவேலை வகுப்புகள், மாதர் சங்கம், ஹெல்த் கிளப் போன்ற வெளி வேலைகளோடு, வீட்டிலும் சில சில மாற்றங்களைச் செய்தாள்.

பெரிய சாப்பாட்டு மேசையை ஒதுக்கி வைத்துவிட்டு, இருவருக்குமாய் ஒரு சின்னதைப் பயன்படுத்தத் தொடங்கினாள். 'கிட் அவுட்'டில் இருக்கைகள் போட வைத்து இரவின் இருளையும், தோட்டத்து மலர்களின் இனிய மணத்தோடு வந்து மோதிய தென்றலையும் கணவனோடு சேர்ந்து அனுபவித்தாள்.

சாமான் அறையில், பூட்டிய அலமாரியுள் கிடந்த அழகிய பூக்குவளைகளைச் சுத்தம் செய்ய வைத்து அங்கங்கே பொருத்தமான பின்னணியில், அழகும் மணமும் பரிமளிக்கும்படி மலர்களை அவற்றில் அடுக்கி வைத்தாள். இலை, காம்புடன் தேவைப்பட்ட பூ வகைகளைச் செடியில் பறித்ததே தெரியாமல் எடுத்துக் கொடுத்த தோட்டக்காரனை மனதாரப் பாராட்டி, அவனது நன்மதிப்பைப் பெற்றாள்.

பூட்டிக் கிடந்த பூசையறையைச் சுத்தம் செய்து விளக்கேற்றி வணங்கினாள்.

என்னென்ன செய்தபோதும் தினகரன் திரும்பி வரும் நேரத்தில் அவனுக்காகச் சிரித்த முகத்துடன் காத்திருந்தாள்.

ஆனந்தமயமாய்ச் சென்ற இந்த வாழ்வில் முதல் சலனமாக ஒருநாள் தாமோதரன் வந்து சேர்ந்தார்.

பூஜையறைக்கு உரிய பூக்களை வீட்டுத் தோட்டத்தில் எந்தப் பக்கம் எப்படிப் பயிரிடலாம் என்று தோட்டக்காரனுடன் ஜெயவாணி விவாதித்துக் கொண்டு இருக்கையில், ''அம்மா, அம்மா... பெ... பெரிய்ய அய்யாம்மா...''



பெண்கள் கால் பந்தாட்டம்!
80'ம் பக்கம்.

என்று உளறியடித்துக் கொண்டு ஓடிவந்தான் ஒரு வேலையாள்.

வியப்புடன் சென்று பார்த்தால் மெய்யாகவே தாமோதரன் தான்.

''வா... வாருங்கள்...'' என்றவள், ''அவர் இங்கே இல்லையே... அலுவலகத்துக்கு...'' என்று இழுக்க, தாமோதரன் குறுக்கிட்டுப் பேசினார். ''ஏன், உன் புருஷனைப் பார்க்க மட்டும்தான் இந்த வீட்டுக்குள் நான் நுழையலாமா?''

திகைப்புற்று, ''பி... பின்னே யாரைப் பார்க்க?'' என்று தடுமாறினாள் ஜெயவாணி.

''யாரையாவது பார்ப்பதற்காக மட்டும்தான் நான் இந்த வீட்டுக்குள் வரலாம் என்று இல்லை, தெரியுமா? இது என் தகப்பனார் கட்டிய வீடு. உன் புருஷனைப் போலவே எனக்கும் உரிமை உள்ள இடம். என் விருப்பம் போல வருவேன். போவேன். ஏன் வந்தேன், என்ன ஏது என்று யாருக்கும் நான் காரணம் காட்ட வேண்டியது இல்லை தெரிந்து கொள்,'' என்று அவர் அதட்டலாக உரைக்கவும் அவள் மேலும் திணறிப் போனாள்.

(தொடரும்)







இதனிடையே மெடிட்டரேனியன்
நாகரீகத்தில் இரண்டு மிகப்
பெரிய கண்டுபிடிப்புகள்
ாழுத்துக்களும், அபாக்கஸ்
எனனும் கருவியும்.



அபாக்கஸ்
ன்பது
அந்தக் கால
ால்க்குலேட்டர்

சென்ற வாரம் மணி, சுப்பு வீட்டுக்குச் செல்லும் முறையைப் பற்றிச் சொன்னது நினைவு கொள்ளுங்கள். இதற்கு சில ஆதார செயல்கள் மணிக்குத் தெரிய வேண்டும். அவை, இவை:

(அ) எப்படி ஒரு வீட்டை விட்டு வெளியே தெருவுக்கு வருவது.

டாக்டர் இராதா கிருஷ்ணன்
அமைப்பு: குமுதம்
அறிவியல் குழு

இந்தியாவில் கி.பி. 650 முதல்
காகிதத்திற்குப் பதில் பனை
ஓலைகள் பயன்படுத்தப்பட்டன.
இந்திய கணித இயலார்கள் கண்டு
பிடித்தது பூஜ்யம்.





# மைவிழி மயக்கம்

## 22

ஒருவாறு சமாளித்துக் கொண்டு, சரி உங்கள் விருப்பம். இப்போது காப்பியா, காம்ப்ளானா... அல்லது மோரா? சொன்னீர்களானால் கொண்டு வந்து தருகிறேன்,'' என்ற வாணியிடம், ''குடித்துவிட்டு வெளியேறு என்கிறாயாக்கும்? அதெல்லாம் முடியாது. எங்கள் வீட்டை நீ என்ன கோலம் பண்ணியிருக்கிறாய் என்று பாராமல் கிளம்புவதாக இல்லை,'' என்றார் பெரியவர். சொன்னதைச் செயலாக்குபவர் போல இங்குமங்கும் பார்த்தபடி எழுந்து சென்றார்.

இவரிடம் வாயைத் திறப்பதே வம்புதான் என்று எண்ணி, சமையல்காரரிடம் சென்று விசாரித்து, அவன் பெரியய்யாவுக்குப் பிடித்தமானது என்று புதிய டிகாக்ஷனில் கொஞ்சமாய்ப் பால் விட்டுக் கலந்து தந்த சூடான, தண்ணீர்க் காப்பியைக் கொண்டு போய் மாமனாரிடம் கொடுத்தாள்.

காப்பியைக் கையில் வாங்கிப் பார்த்ததுமே, நடந்ததை ஊகித்து, ''இது கெட்டிக்காரத் தனம்,'' என்று ருசித்து அருந்தினார்.

இடையிலேயே, ''உட்கார். மாமனார் என்கிற மரியாதை மனதில் இருந்தால் போதும். அதை நின்றுகொண்டு இருந்துதான் காட்ட வேண்டும் என்பது இல்லை,'' என்று அவளையும் அமரச் செய்தார்.

காப்பியை முடித்துவிட்டு ''அங்கங்கே பூ அலங்காரம். பூசை வேறு நடப்பதாகத் தோன்றுகிறது. ரொம்ப நாளைக்கப்புறம் பெண்பிள்ளை வசிக்கிற இடமாத் தெரிகிறது. மறத்தியிடம் வெறும் வீரம் மட்டும் இல்லை; மென்மையும் விவேகமும் இருப்பதாகவும் புரிகிறது,'' என்று அவர் கூறவும் அவளுக்குத் திக்கென்றது.

மறக்கவேண்டியதை நினைவு படுத்துகிறாரே, இவர் மேலே என்ன செய்யப் போகிறாரோ என்ற அச்சத்துடன் வாணி அவரை நோக்கினாள்.

அலட்சியமாகச் சிரித்து, ''புலியையே விரட்டியவளுக்கு இப்போது என்ன பயம்?'' என்றார் தாமோதரன்.

''நான்... நான் ஒன்றுமே செய்யவில்லை சார்...'' என்றாள்

ரமணி சந்திரன்



''தலைமுடியெல்லாம் இப்படி கன்னாபின்னான்னு கட்டிங் பண்ணி யிருக்கியே, இந்த கட்டிங்குக்கு என்ன பேர்?''

''சென்சார் கட்டிங்.''

— எஸ். தேவாதிராஜன்

---

ஜெயவாணி அழாக் குறையாக.

''ஒன்றும் செய்யவில்லையா? என்ன ஆச்சரியம்! அந்தப் பாட்டுக்காரி சும்மா இருக்கவில்லையே! அவள் டெலிஃபோன் பண்ணியிருப்பாள் என்று நிச்சயமாக நினைத்தேனே... அவள் தினகரனோடு பேச முயற்சி செய்துகொண்டிருந்த சமயம் அவன் தொழிற்சாலையிலிருந்து என்னோடு பேசினான். பேசி முடித்ததும் உடனே அங்கிருந்து கிளம்புவதாகச் சொன்னான். ஒருவேளை என் பிள்ளையிடமே அவள் பேசி, அவனுக்கே புத்தி வந்து அவளை விரட்டிவிட்டானா?''

''இ... இல்லை சார். அதாவது சாயா டெலிஃபோன் செய்தாள். ஆனால் அவள் உங்கள் மகனோடு பேசவில்லை சார்...''

முதலில் அந்த சாரை விட்டு மாமா என்று கூப்பிடு,'' என்று அதட்டியவர் மேலும் துருவினார்.

ஜெயவாணி சற்றுத் திணறினாள். இவருடைய மகனிடம் சொல்லாமல் விட்டதை எந்த அளவுக்கு இவரை நம்பிச் சொல்லலாம்?

ஆனால் ஒன்று. சாயா, மகன் வாழ்வில் மீண்டும் புகுந்துவிடாததில் அவருக்கு மிக்க மகிழ்ச்சியே.

அத்தோடு இவர் விவரம் அறிந்தவர். ஜெயவாணி அறியாததையும்கூட அறிந்தவர். உதறிச் சென்றவர் ஏன் திரும்பிவர முயன்றார் என்பதை இவர் மூலம் அவள் அறிய வாய்ப்பு இருக்கிறது.

ஒருவேளை உண்மை அன்பினாலேயே சாயா, தினகரனை மீண்டும் அணுக முயன்றிருந்தால், விளைவு என்ன ஆனாலும் சரி என்று அவனிடம் எல்லாவற்றையும் சொல்லியே ஆகவேண்டும். அந்தக் கடமை வேறு இருக்கிறது.

ஒரு பெரிய மூச்சை எடுத்துக்கொண்டு, அன்று நடந்ததை அப்படியே தாமோதரனிடம் சொன்னாள் ஜெயவாணி.

சொல்லி முடித்தவள் உடனேயே அவரிடம், விசாரித்தாள்.

''ஒரு மடத்தனம்தான்,'' என்று தயங்காமல் மருமகளிடம் ஒப்புக் கொண்டார் மாமனார். ''சொத்து பத்து கிடையாது என்றதும் அந்தப் பெண் சாயா வெட்டிக்கொண்டு விட்டாள். இதை நான் என் வக்கீலிடம் சொல்லவில்லை. சொந்த விஷயங்களை அவரிடம் சொல்லவேண்டிய அவசியம் இருப்பதாக நான் எண்ணவுமில்லை.

''அந்தப் பாட்டுக்காரியிடம் நான் சொன்னது பொய் என்று ஊகித்திருப்பாய்...''

''ஊகிக்கவில்லை. உங்கள் மகன்தான் சொன்னார்.''

''என்னவென்று? எப்போது?''

''ஒரேயடியாக ஒன்றுமில்லை என்று விரட்ட முடியாது. இந்த வீடும், தொழிலில் கொஞ்சம் பங்குகளும் உண்டு என்று உங்கள் பண்ணையிலிருந்து திரும்பி வரும்போது சொன்னார்.''

''ஓ! அப்போதுதர்னா?'' ஓர் ஆறுதல் மூச்சுடன் அவர் மேலே சொன்னார். ''ஆனால் அவன் சொன்னதும் சரியில்லை. தொழி

ில் பாதிப் பங்கு அவனது என்று
திவு பண்ணியிருக்கிறது. அதை
ானாக மாற்ற முடியாது. ஆனால்
ன் ரோஷக்கார கணவன், நானா
க் கொடுத்ததை ஒதுக்கி, அவன
ாக அவனுடைய தாத்தா வைத்த
சாத்தின் வருமானத்தில் பெற்றி
க்கக்கூடிய பங்குகளை மட்டும்
ணக்கு வைத்து உன்னிடம் சொல்லி
ிருக்கிறான். அப்படிப் பார்த்தால்
வன் படித்ததெல்லாம் என் பணம்
ானே? படிப்பைக் கக்கிவிடுவானா?
பெரிய ரோஷம்! இருக்கட்டும்.
ராஷம் நிறையக் காரியங்களைச்
ாதிக்கும். இப்போதுகூட ஏதோ
து வேலை தொடங்குகிறான்
பால...'' என்று பெருமைப்பட்ட
ர் மேலும் தொடர்ந்தார்.

''இதே மாதிரி விதிமுறை
ளோடு கல்கத்தாவில் ஒரு கம்
பெனி. அதன் அடிப்படை விதிகளை
எழுதியதும் நம் கம்பெனி வக்கீல்
தான். அங்கே மகன் தகப்பனைக்
கொன்றுவிட்டான். அது சம்பந்த
மாக நம் வக்கீல் அங்கே போயிருக்
கிறார். கல்கத்தாவில், சாயாவின்
நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்தவர்
நம் வக்கீலுக்கு நெருங்கிய நண்பர்.

''ஒருநாள், பொதுவாய்ப்
பேசிக் கொண்டு இருக்கும்போது,
தமிழர் பண்பாட்டுப் பெருமை
பேசுகிற மும்முரத்தில் வக்
கீல் வாயை விட்டு
விட்டார். சென்னை
யில் 'தினகரன்
இன்டஸ்ட்ரீ'சில் கூட
இந்த விதிமுறைகள்
தான். இப்படி ஓர்
எண்ணம் பெற்ற
வருக்கோ, பிள்
ளைக்கோ ஒருகண
மேனும் தோன்றுமா
என்று அளந்திருக்
கிறார்.

''ஆனால், யார்
என்ன என்று சாயா
துளைத்தெடுக்கவும்
பயந்து போனார். அதற்குமேல்
அவள் எஸ்.டி.டி. எங்கே என்று ஓட
வும், என்னவோ, ஏதோ என்று
மிரண்டு, எனக்கு 'லைட்னிங் கால்'
போட்டு விவரம் சொன்னார்.

''எனக்கும் என்ன செய்வது
என்று புரியவில்லை. விதியோ
என்று கலங்கிப் போனேன்.

''அப்போதுதான் தொழிற்
சாலையிலிருந்து, உன் புருஷன்
போன் பேசி முடித்திருந்தான்.
அவனை அங்கே பிடிக்கப் பார்த்
தால் 'கிளம்பிவிட்டான்' என்றார்
கள். இங்கே அலுவலகத்துக்குப்
போட்டால் கிடைக்கவில்லை. டெலி
போன் உதவியைப் பிடித்தால், கல்
கத்தா எஸ்.டி.டி. பேசுவதாகச்
சொன்னார்கள். மேற்படியாள்தான்
என்று புரிந்துவிட்டது. பையன் வந்து
சேரும் நேரம் ஆகவில்லை என்ப
தால் நீதான் அவளோடு பேசியிருக்க
வேண்டும் என்று ஊகித்தேன்.
ஆனால் பெரிய அரிச்சந்திரிணி என்று
எண்ணி, முட்டாள்தனமாக நீ தின
கரனிடம் அவள் பேசியதைச்
சொல்லிவிடக்கூடாதே என்று கவ
லைப்பட்டேன்.

''உன்னோடு பேச முயற்சி
செய்தேன். பர்சனல் நம்பர் கிடைக்
கவே இல்லை. அடுத்ததும் கொஞ்ச



நேரம் அடித்து, நின்று போய் விட்டது. ஸ்ட்ரைக் அல்லவா?

''ரகசியமாய் விசாரித்தேன். இங்கே திருமண ஏற்பாடுகளில் தடை இருக்கவில்லை. அங்கேயும், அவள் பம்பாய் போய், அங்கிருந்து வெளிநாட்டுக்கும் கிளம்பிவிட்டதாகத் தெரிந்தது. அதனால், நீதான் ஏதோ செய்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன்,'' என்று முடித்தார் தாமோதரன்.

'மறத்தி'யின் காரணம் புரிந்தது. ஆனால்...

விழிகளை விரித்து அவரை நேராய் நோக்கி, ''அப்போது என்னையும் உங்களுக்குப் பிடிக்காதே!'' என்றாள் ஜெயவாணி.



''பிடித்தம் என்று இல்லை தான்.'' என்று ஒப்புக்கொண்டார் அவர். ''ஆனால், அது பாம்பு என்று தெளிவு. பாம்பு கடிக்கும் பூரான் பூச்சி பரவாயில்லைதானே. அத்தோடு அன்று நீ பேசிய விதம் ஏற்கெனவே, என்னைச் சிந்திக்க வைத்திருந்தது. மேலும்; அந்த பாம்பு என் மகனை அண்டவிடாமல் காத்ததற்காகவே உன்னை எனக்குப் பிடித்தாக வேண்டும்! நன்றி மறவாமை என்று திருக்குறளில் ஓர் அதிகாரம் இருக்கிறதம்மா. பத்துக் குறள்கள்! படித்துப் பார்!''

அவளைப் பூரான் பூச்சியோடு ஒப்பிட்டபோதும், தாமோதரனின் பேச்சு அவளை வாய்விட்டு நகைக்க வைத்தது.

ஒரு மத்திய வயதுக்காரரின் சிரிப்பொலியும் அத்துடன் கலந்து ஒலித்தது.

சிரிக்கும்போதே ஜெயவாணிக்கு இன்னொன்று தோன்றியது. ''உங்கள் கம்பெனியின் விதிமுறைகள் உங்கள் மகனுக்கும் தெரியும்தானே? சொத்து இல்லை என்று சாயா விலகியபோது அவளிடம் அவர் சொல்லியிருக்கலாமே?'' என்றாள்.

''அவனா? விலகி ஓடுகிறவளைச் சொத்தைக் காட்டி இழுக்கிற வேலை அவன் செய்வானா? அவன் மானஸ்தன். கவுரவம் பார்க்கிறவன்,'' என்றார் பெரியவர்.

தலையசைத்து, ''அவள் திரும்பி வருவாள் என்றால் 'உடம்பின் ஓர் உறுப்பைக்கூடக் கொடுக்கத் தயார்,' என்றார் மாமா,'' என்றாள் வாணி வருத்தத்துடன்.

''அவனது சொந்த உடம்பின் உறுப்பைத்தானே? அப்பன் தேடி வைத்த சொத்தை இல்லையே! ஒன்று தெரியுமாம்மா? நான் தலையிட்டேன் என்பதற்காக, நானாகக் கொடுத்த பங்குகளை எனக்குத் திருப்பித் தருவதாக ஸ்டாம்ப் பேப்

ரில் எழுதிக் கையெழுத்திட்டு அனுப்பியிருக்கிறான். பத்திரமாய் வைத்திருக்கிறேன்.'' என்றார் பெருமையோடு.

மேலும் அவரே பேசினார். 'நன்றி அறிதலாய், உன் நிம்மதிக்கென்று இன்னொன்றும் செய்திருக்கிறேன், மருமகளே! தினகரனின் திருமண விவரம் அவளுக்கு எட்டச் செய்திருக்கிறேன். மனைவி என்கிற பட்டயம் இல்லாமல், சொத்து பத்துகளில் உரிமை கிடைக்காது என்பதை அவள் அறியாமல் இருக்க மாட்டாள். எனவே இனி அவள் இவன் பக்கம் திரும்பப் போவது இல்லை என்பது நிச்சயம். ஆகவே இனி நீ கவலையற்று இருக்கலாம்.''

உண்மையே. ஆனால் அதை விட முக்கியமாய் அவரது பேச்சு, இவ்வளவு நாளாக அவளை அவ்வப்போது அலைபாய வைத்துக் கொண்டிருந்த ஒரு பெரும் துன்பத்தை நீக்கி மனதிற்கு நிம்மதியை அளித்தது. ஒருவேளை சாயா உண்மை அன்பினால் தினகரனை மீண்டும் நாடியிருந்தால் தான் செய்தது எவ்வளவு பெரிய அநியாயம் என்று எண்ணிஎண்ணி அடிக்கடி தன்னைத் தானே ஜெயவாணி சித்ரவதை செய்து கொள்வது நின்றது. பரிபூரண நிம்மதியோடு முழுமையான மகிழ்ச்சியில் திளைக்கலானாள்.

அதன்பின் தாமோதரன் அடிக்கடி வந்தார். பண்ணைக் காய்கறிகளோடு வந்து மகன், மருமகளோடு விருந்தாடிவிட்டுப் போவார். 'இந்தா உன் அத்தை நகைகள். காதில் கழுத்தில் உருப்படியாய்ப் போட்டுக் கொள்!' என்று கொடுத்தார்.

தந்தையும் மகனும் ஒரேயடியாக உருகிக் கொள்ளவில்லைதான். அது பழக்கமும் இல்லை என்றான் தினகரன் அவளிடம். ஆனால் சாதாரணமாக, ஒருசில சமயங்களில் சிறு கிண்டலுடன் பேசிக் கொண்டார்கள்.

மருமகளை ஒத்துக் கொண்டதாகக் காட்டியபோதும் தாமோதரன் அவ்வப்போது மை, பொய் என்று பேசுவது உண்டு. 'கண்ணில் மையெழுதி, கருத்திலே பொய்யெழுதி' என்பது அவருக்குப் பிடித்தமான சொற்றொடர்.

ஓரிருமுறை பொறுத்த வாணி, ஒருநாள் திருப்பினாள். ''எதுகையும் மோனையும் சரியாக வந்ததால் எவனோ ஒரு பொடியன் எழுதினால் நீங்களும் அதையே கட்டிக்கொண்டு அழுவதா?''

'' 'எழுதியவன் ஏட்டைக்

---

நான் ஆணையிட்டால்...



மாடியிலிருந்து தெருவில் குப்பை கொட்டுவோர் மீது ஹெலிகாப்டரிலிருந்து சேறு வீசுவேன்

—ராணி

கெடுத்தான். படித்தவன் பாட்டைக் கெடுத்தான்' என்பதுபோல் இந்த 'மை' 'பொய்' எல்லாம் ஏட்டைக் கெடுக்கிற சமாசாரம்.'' என்றவள் மின்வெட்டாய் ஒரு பார்வையை அவரிடம் செலுத்திவிட்டு இமைகளைத் தாழ்த்திக் கொண்டாள்.

சிரித்துவிட்டு, ''நான் பாட்டைக் கெடுக்கிறவன் என்கிறாயா? உனக்குத் துணிச்சல் அதிகம்தான் மருமகளே! மாமனார் என்கிற மரியாதையையே காணவில்லையே!'' என்றார் அவர்.

உடனே எழுந்து, பணிவு போலக் கைகட்டி வாய் பொத்தி நின்று அவள் கண்ணால் மட்டும் சிரிக்கவும் அவர் லேசாக முறுவலித்தார். ''கறுப்பு மை தவிர உன் கண்களுக்கு இன்னொரு மையழகு இருக்கிறதம்மா. அது சான்றாண்மை அழகு. இந்த மையழகு புரிந்து அதில் என் மகன் முழுமையாக மயங்கினான் என்றால் ரொம்பவும் நன்றாயிருப்பான். அப்படி இருக்க வேண்டும் என்பதே என் ஆசி,'' என்றார் கரகரத்த குரலில்.

''சான்றாண்மையா?'' என்றவளின் முகம் சற்று வாடிப் போயிற்று.

''நீ அந்த டெலிஃபோன் சேதி சொல்லாததை நினைக்கிறாய் என்று தோன்றுகிறது. நான் சொல்வது வள்ளுவரின் சான்றாண்மை. 'பொய்மையும் வாய்மையிடத்து, புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்' என்றாரே, அந்த சான்றாண்மை.'' என்று கூறி அவளை நிமிர வைத்தார் பெரியவர்.

தினகரனுக்கும் வாணிக்கும் வீட்டில் இருப்பதே விருப்பமாக இருந்தபோதும், புதிதாகத் திருமணம் ஆனவர்கள் என்ற முறையில் உறவிலும் நட்பிலுமாகப் பல விருந்துகளுக்கு இருவரும் செல்ல வேண்டியிருந்தது. புதுத் தம்பதியருக்காக அளித்த விருந்துகள் தவிர, அவரவர் வீட்டு சொந்த விசேஷங்கள், கலந்துரையாடல்கள் என்று அவ்வப்போது வெளியே சென்று வந்தனர்.

அன்று விருந்து கொடுத்தவரின் வீட்டு வரவேற்பறையில் ஓர் ஆளுயரப்படம் மாட்டியிருந்தது. வீட்டுக்காரருடைய முதல் மனைவியாம்.

அந்தப் படத்தைப் பார்க்கையில் வீட்டுக்காரர் வெங்கடேசனிடம் ஜெயவாணிக்கு இரக்கம் உண்டாயிற்று. இந்தப் பெண்மணியை மறப்பது மிகவும் கடினம் என்று எண்ணியபடி திரும்பியபோது, வெங்கடேசனுடைய இரண்டாம் மனைவி அருகிலேயே நிற்கக் கண்டு சற்றுத் தடுமாறிப் போனாள்.

(தொடரும்)



''பர்ஸை எடுத்தவுடனே ஏன் இப்படிச் சீறுகிறார்?''

''பாம்புத் தோலிலே செஞ்ச பர்ஸா இருக்கும்.''

— கோன்


ஜக்கு
சப்பாத்தி, பூரி, தோசை ஏதாவது சாப்பிடக் கொடுங்க
இது சப்பாத்தியா? பூரியா?
என்ன வாசனை அடிக்குது ஜக்கு?
மண்ணெண்ணெய்
அப்படின்னா அது பூரி!
சப்பாத்தின்னா ரப்பர் வாசனை அடிக்கும்.

ரமணி சந்திரன்



23

சில கணங்கள் வாணியை நேராகப் பார்த்துவிட்டு, ''இதைவிடப் படுக்கை அறையில் மாட்டியிருக்கிற அக்கா படம் இன்னமும் அழகாக இருக்கும். தூங்கப் போகுமுன்னும், காலையில் கண் விழித்த உடனேயும் என் வீட்டுக்காரருக்கு அக்கா முகம்தான் கண்ணில் படவேண்டும்!'' என்று கூறி, உதட்டால் மட்டும் லேசாக முறுவலித்துவிட்டு அகன்று சென்றுவிட்டாள் அந்தப் பெண்மணி.

ஜெயவாணிக்கு உள்ளே மிகவும் வலித்தது.

வீடு திரும்பியதும் தினகரனிடம் அதுபற்றிப் பேசினாள். ''என்ன அநியாயம் பாருங்கள். அவள் மிகவும் பிரியமானவளாகவே இருக்கட்டும். ஆனால் அவள் முகத்தைக் கடைசியாகப் பார்த்துவிட்டு விளக்கணைத்து இவளோடு... இந்த இரண்டாம் மனைவியோடு... அதாவது. இவளை அணை பது என்றால் அநியா மாய் இல்லை?'' என் சினம் காட்டினாள்.

ஆச்சரியப்படத்தக்க வி மாய்த் தன் நண்பரைத் தாங் கிப் பேசினான் தினகரன் ''இரண்டாவதாக வரு போதே இதுபோலச் சில சில் றைத் துன்பங்களை அவள் எதி பார்த்துதான் இருக்க வேண்டும்.''

''அதற்காக இப்படியா?'' என்றபோது வாணியின் குரல் சி மிகுதியால் கீச்சிட்டது.

கீழ்க்கண்ணால் அவவை நோக்கிவிட்டு, ''வெங்கடேசனா சியாமாவை மறக்க முடியாது வாண ஆனால் அந்தச் சுகத்தையும் வி முடியவில்லை. எளிதாக ஒரு வழி அவளாக இவளை எண்ணி...'' என்று தோளைக் குலுக்கினா தினகரன்.

''என்னது?'' என்று எழுந் நின்றவளுக்குக் குரலோடு உடலு நடுங்கியது. ''இன்னொருத்திய எண்ணி அணைப்பதா? என்ன அ மானம்! ஒரு பெண்ணுக்கு இ விடக் கொடுமை என்ன செய் முடியும்? சீ!''

லேசாக முறுவலித்து, ''ஏ

மைவிழி மயக்கம்



வாணி, இவ்வளவு கோபம்? காலம் காலமாக நடப்பதுதானே? சட்டம் தடுக்குமுன் பலதார மணம் நடைமுறைதானே? உறவுக்கு, நட்புக்கு, சொத்துக்கு என்று பலபேரை மணக்க நேர்ந்தபோதும் காதல் என்பது ஒருத்தியிடம்தானே இருக்க முடியும்? மற்றவர்களையும் மனைவியாக நடத்தும் கடமை நிறைவேற்ற வேறு வழி? ஷாஜஹானை எடுத்துக் கொள். தாஜ்மகாலைக் கட்டி, உலகத்துக்கே பறைசாற்றும் அளவுக்கு அவருக்கு மும்தாஜிடம் தான் உண்மைக் காதல். ஆனாலும் அவருக்குப் பதினாலு மனைவியர் என்கிறார்கள். பலபேருக்குப் பிள்ளைகள்! எப்படி வந்தன என்கிறாய்? விளக்கை அணைத்துவிட்டால் எல்லாப் பெண்களும் ஒன்றுதான் என்று படித்திருக்கிறேன்,'' என்றான் தினகரன் சாவதானமாகவே.

''இருக்கும்!'' என்றாள் வாணி ஆத்திரத்துடன். ''ஆனால் இதையே பெண்கள் சொன்னால் மட்டும் எகிறுவீர்கள். அப்படித்தானே? முனிவர் வேஷத்தில் இந்திரன் வந்ததற்கு அகலிகை எந்த விதத்தில் பொறுப்பு? கல்லாக்கிக் காலடியில் போட்டு விட்டார்களே! எல்லாப் பெண்களும் ஒன்றுதானாமா? அன்றிலிருந்து இன்று வரை அதே அநியாயம்.''

தினகரன் சிரிப்பது கண்டு திகைப்புற்று பேச்சை நிறுத்தினாள் ஜெய்வாணி.

அருகில் வந்து அவள் முகத்தைக் கைகளில் ஏந்தி, அவன் பேசினான். ''அடேயப்பா, எவ்வளவு கோபம்! சினத்தில் உன் முகம் முழுவதும் செவேல் என்று சிவந்திருப்பதும், விரிந்த கண்களில் இருந்து பளிச் பளிச்சென்று மின்னல் போல ஒளி பாய்வதும், பார்ப்பதற்கு எவ்வளவு அழகாய் இருக்கிறது தெரியுமா?'' என்றவன்,

ஆறு வித்தியாச விடை:
1. நாயின் காது
2. பெண் தலையில் பூ
3. கழுத்தில் சங்கிலி
4. குப்பைத் தொட்டி
5. குடிசை
6. துடைப்பம்

குனிந்து அவளது செவ்விதழ்களில் அழுத்தமுடன் முத்தமிட்டான். ''உள்ளே தவிக்கவும் செய்கிறாயே என்றுதான் மேலே இழுக்காமல் பேச்சை நிறுத்தினேன்.'' என்று கூறி மீண்டும் குனிந்தான்.

''சீண்டினீர்களாக்கும்.'' என்று சினம் காட்ட முயன்றவள், கணவனின் அணைப்பில் அனைத்தும் மறந்து அவனோடு ஒன்றிப் போனாள்.

பின்னர் இந்தப் பேச்சை அசை போடுகையில், தினகரன் உண்மையிலேயே அவளைச் சீண்டினானா அல்லது அவளது அபிப்பிராயத்தை ஒப்புக் கொள்ளப் பிடிக்காமல் ஆண்களுக்கே உரிய முறையில் அவளது பேச்சை நிறுத்தினானா என்று ஒருமுறை, ஒரே ஒரு தரம் சந்தேகப்பட்டாள்.

உடனேயே, அவளுடைய அன்புக் கணவனுக்கு அந்த மாதிரிச் சின்னத்தனம் வரவே வராது என்று நிச்சயமாய் நினைத்தாள். அத்தோடு இந்தப் பேச்சையே மனதிலிருந்து ஒதுக்கினாள்.

இந்த விருந்து விசேஷங்களில் கலந்துகொள்ளச் செல்லும்போது, செல்லுமிடங்களுக்கு ஏற்றபடி அணிவதற்காக ஆடை அணிகலன்கள் என்று ஜெயவாணிக்கு அடிக்கடி வாங்க வேண்டியிருந்தது. தந்தையின் பணத்தைப் பயன்படுத்தக் கூடாது என்ற கணவனின் கொள்கை அறிந்தவள் ஆதலால் இருவிதமாய் ஜெயவாணி கஷ்டப்பட்டாள்.

ஒன்று பெற்றவரிடம் இன்னமும் இந்த வேற்றுமை பாராட்டுகிறானே என்பது. தன்னால் இவ்வளவு செலவாகிறதே, பணத்திற்கு என்ன செய்கிறானோ என்பது அடுத்தது.

விலை குறைவாகப் பார்க்கலாம் என்றாலோ, கட்டியதையே மேலும் ஓரிரண்டுதரம் திருப்பிக் கட்டுகிறேன் என்றாலோ தினகரன் விடமாட்டான். ''இதெல்லாம் நம்மால் முடியாதது இல்லை, வாணி. இன்னும் அடுத்த ஆண்டில் பார். இதற்கேற்ப நவரத்தினங்களில் நகைகளும் வாங்கி விடலாம்,'' என்பான். ''அதுவரை அம்மாவுடையதை அணிந்து கொள்,'' என்று ஒரு வரட்டுக் குரலில் சேர்த்துக் கொள்வான்.

தந்தையோடு மகனை முழுமையாக இணைத்துவிடும் ஆர்வம் கொண்டிருப்பவள் அவள். எனவே, ''ஏது? என் மாமனார் அவருடைய மனைவியுடையது என்று கொண்டு வந்து கொடுத்தவைகளையா?'' என்று கேலிச் சிரிப்புடன் தலையைச் சரித்து வினவுவாள்.

புரிந்து கொண்டு, ஒரு விரலால் பத்திரம் காட்டி, ''ஆமாம் வாயாடி. பிறகு ஒரு கணக்குப் போட்டு, அந்த நகைகளுக்காக உன் மாமனாருக்கு வாடகை கொடுத்து விடலாம்,'' என்று கேலியிலேயே அவனும் முடித்துவிடுவான். அதற்கு மேல் பேச இடம் தரமாட்டான்.

பொதுவாக, வாணியின் கச்சிதமான அலங்காரம் அவள் கணவனுக்கு மிகவும் பிடித்தமே என்றாலும், விதம்விதமாய் வாங்கி மனைவிக்கு அணிவித்துப் பார்ப்பதிலும் தினகரனுக்கு ஆர்வம் இருந்தது.

ஏதாவது விளம்பரத்தில், திரைப்படங்களில் என்று அவனது கருத்தைக் கவர்ந்தவற்றைக் கட்டாயமாய் அவளுக்கு வாங்கிவிடு

பான். அவன் விருப்பப்பட்ட நேரம் அவள் அதை அணிந்தாகவும் வேண்டும்.

''அந்தக் கதாநாயகி அணிந்தது 'காடி'யாக இருந்தது. ஆனால் கூட்டத்தில் நின்ற ஒருத்தி அணிந்திருந்த காக்ரா சோளி பிரமாதம் என்று உடனே வாங்குவான். அதே மாதிரி வாங்க முடியாவிட்டால், தைக்கவேணும் செய்வித்து, அணிய வைப்பான்.

''அய்யோ! இதைப் போட்டுக் கொண்டு நான் எங்கே வரட்டும்,'' என்று அவள் சிணுங்கினால், அடுத்தவர் பார்க்கவா இது?' என்று கணவன் பார்வை பார்ப்பான். இப்படி முதுகு முழுவதையும் காட்டுவது என்றால் இந்த மாதிரி 'ஷேப்'பும் இருக்க வேண்டும் என்று முதுகுத்தண்டில் முத்தமிடும்போது அவளுக்கு மெய்சிலிர்த்துப் போகும்.

அன்று ஒரு 'ஷோ கேஸ்' பொம்மையின் உடை தினகரனைக் கவர்ந்துவிட, மனைவியை அங்கே அழைத்துச் சென்று, அவன் அந்த உடையையே கழற்றி வாங்கிவிட, அந்த உடையை ஜெயவாணியின் அளவுக்கேற்பச் சீரமைத்துக் கொடுத்தார்கள்.

கடைசியாக அணிந்து, அளவு சரியென்றதும், ஆடையை மடித்து அட்டைப் பெட்டியிலிட்டு 'சேல்ஸ்' பெண் கொடுக்கவும் முறுவலோடு அதை வாங்கிக் கொண்டு கணவனிடம் விரைந்து வந்த ஜெயவாணி சட்டென உறைந்தாள்.

தினகரனிடம், ''டெலிஃபோன் ஸ்ட்ரைக் என்றாலும் ஒரு தந்தியாவது வரும் என்று எதிர்பார்த்தேன் தினு,'' என்று சோகமே உருவாகச் சொல்லிக் கொண்டிருந்தாள் சாயா.

கால்கள் தன் போக்கில் கணவன் அருகே நடத்திச் சென்று விட்ட போதும், மற்றபடி ஐம்புலனும் செயலிழந்தாற்போல மலங்க விழித்தாள் ஜெயவாணி. மாமா சொன்னது தப்பாகிப் போயிற்றே! அவளாகவே பேச்செடுக்கிறாளே!

சிறு அசைவில் அதிர்ச்சியைச் சமாளித்துக் கொண்டு, ''ஏன் எதிர்பார்க்க வேண்டும்? முறிவு என்று முடிவெடுத்தவள் நீதானே,'' என்றான் தினகரன்.

''மாற்ற முடியாதபடி இதென்ன கல்லில் பொறித்த பத்துக் கட்டளைகளா? முடிவெடுத்தவளுக்கு மாற்றும் உரிமை கிடையாதா, தினு? என்னிடம் நீங்கள் இவ்வளவு கண்டிப்பு காட்டுவீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை,'' என்றாள் விழிகளில் நீர் மூழ்க.

அச்சமும் திகைப்புமாக வாயடைத்து நின்றாள் ஜெயவாணி.


குமுதம்

நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.
நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
பொறுப்பாசிரியர்
சுஜாதா
பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்
உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்
நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்
நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி
அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்
வடிவமைப்பு ஆலோசகர்
டிராட்ஸ்கி மருது
தலைமை நிருபர்
பால்யூ
ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா டாவின்ஸி



குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக அச்சிடப்பட்டது. முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

எதிர்பார்த்தது போல ஒன்றும் நடக்கவில்லையே. எடுத்த எடுப்பிலேயே சொந்த வாழ்வு பற்றிப் பேசுகிறாளே! பொது இடம் என்கிற கூச்சம் இல்லாமல் கண்களில் நீர் காட்டுகிறாளே! ஒருவேளை இந்த 'பொட்டிக்'கில் கூட்டம் நிறைய இருந்திருந்தால் சாயா இப்படியெல்லாம் பேசியிருக்க மாட்டாளோ? அய்யோ! இது அந்த மாதிரிக் கூட்டம் வருகிற இடம் இல்லையே! ஆனால் அந்த யோசனை எல்லாம் இப்போது அனாவசியம்.

ஆனால், அனாவசியமான எண்ணங்கள்தான் தோன்றினதே தவிர அப்போதைய நெருக்கடியைச் சமாளிப்பதற்கு அவசியமானதென்று எதுவுமே ஜெயவாணியின் மூளைக்குத் தோன்ற மறுத்தது.

அருகில் நிற்பவளை அப்போதுதான் கண்டவள் போ
''யார் நீ, நாங்கள் சொந்த விஷ
பேசும்போது கூடக்கூட நின்
கொண்டு? நாகரிகமே தெரியவ
லையே. தூரப் போய்த் தொலை
என்று எரிந்து விழுந்தாள் சாயா

பேந்த விழித்தபடி, பி
னோக்கி ஓர் எட்டு வைக்கக் காலை
தூக்கிவிட்டாள் ஜெயவாணி.

அந்த நேரம், அவள் கை
பற்றி நிறுத்தி, ''இவள் எ
மனைவி,'' என்று அறிமுகம் செய்
வைத்தான் தினகரன். ''பெ
ஜெயவாணி.''

''மனைவியா!'' என்
என்னவோ தலையில் இடி
விழுந்துவிட்டாற்போல ஒருகண
தடுமாறினாள் சாயா. ''அய்யோ
என்னை மன்னித்துக்கொள் அம்ம
நான் யாரோ... என்று...'' என்
வருத்தக் குரலில் இயம்பியவ
அவளைக் கூர்ந்து நோக்கி, ''ஏ.
நான் உன்னைப் பார்த்திருக்கிறே
நீ... நீ...'' என்றாள் அவசரமா
யோசனையோடு.

''ஜெயவாணி. திருமண
துக்கு முன்பு என் செயலாளரா
இருந்தாள். அப்போது பார்த்திரு
பாய்,'' என்று தினகரன் சாதாரண
மாக விளக்கம் கொடுத்தான்.

''செயலாளரா?'' சட்டெ
னச் சாயாவின் கண்களில் மின்ன
வெட்டியது. ''செகரட்...டரியா
அப்படியானால் என் செய்தி உங்
ளுக்கு வந்து சேரவே இல்லை என்
தெரிகிறது! அப்படித்தானே?
தீனுவிடம் சொல்லவில்லைதானே?'

மேலும் மேலும் தொண்டை
இறுகிக்கொண்டு இருந்ததில் ஜெ
வாணிக்கு மூச்சுகூட சிரமமாயிற்று

இருவர் முகத்தையும் மா
மாறிப் பார்த்துவிட்டு, ''என்ன
செய்தி?'' என்று கேட்டான் தின
கரன்.

(தொடரும்



முசோலினி சிறுவனாக இருந்தபோது தன் அறையில் படுத்துக் கொண்டிருந்தார். நள்ளிரவில் விழித்துக் கொண்ட அவர் தனக்குத் தானே பெருங்குரலில் பேசிக் கொண்டிருந்தார். பக்கத்து அறையிலிருந்த அன்னை பதறியடித்து ஓடிவந்து, ''என்னப்பா, என்ன ஆச்சு?'' என்று கேட்டார்.

''நான் வருங்காலத்தில் பெரிய தலைவனாகி சாதனைகளைச் செய்யப் போகிறேன். அதற்குச் சொல் திறமை வேண்டும் என்பதற்காக இப்போதே பேசிப் பழகுகிறேன்,'' என்றார்.

—மயிலைத் தொண்டன்

# இனிய நினைவுகளின் தொடக்க விழா மீண்டும் இதோ!



## மர்மமாகக் காத்திருக்கும் அந்தப் பரிசு என்ன?

**புதிய சந்தாதாரரை அறிமுகப்படுத்தும் ஒவ்வொருவருக்கும் ஒரு பரிசு மறைந்து காத்திருக்கிறது...**



**ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தட்டு முதல் தங்கக்காசு வரை எண்ணற்ற பரிசுகள்.**

மீண்டும் விஜயதசமி விழா. கூடவே வலைத்தூண்டி மகிழ்வூட்ட மறைந்து ...த்திருக்கும் பரிசுகள். அவை என்னவென்று ...ரிந்துகொள்ள வேண்டுமா? கத்திரித்துப் ...ருங்கள். கண்டு கொள்ளுங்கள்.

அறிமுகப்படுத்துவோர் கூப்பன் ...வொன்றிலும் ஒரு பரிசின் பெயர் ...ளித்தெரியாமல் இடம் பெற்றிருக்கும். இப் ...சைப் பெற்றுச் செல்ல நீங்கள் செய்ய ...ண்டியது எல்லாம் இதுதான் — ஒரு புதிய ...தாதாரரை அறிமுகப்படுத்துங்கள். கூப்பனின் ... ஓரமாகக் கத்திதிரியுங்கள். உங்களுக்காகக் ...த்திருக்கும் பரிசின் பெயர் கண்முன்னே!

ரகரகமான பரிசுகள்... வாஷிங் மெஷின், ...கக்காசு முதல் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ...ளட் வரை.

அதுமட்டுமல்ல. நீங்கள் எத்தனை பேரை ...ண்டுமானாலும் புதிய சந்தாதாரராக அறிமுகம் ...ய்யலாம். ஒவ்வொரு புதிய அறிமுகத்துக்கும் ...வொரு பரிசு உங்களுக்காக மறைந்து ...த்திருக்கும்.

**நினைவிருக்கட்டும். கூப்பனை ஸ்ரீராம் ...ள மேலாளர் முன்னிலையில் மட்டுமே ...திரிக்க வேண்டும்.**




Shriram Group Companies All India Deposit Mobilisation Drive is on.

SHRIRAM GROUP COMPANIES MADRAS

**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

**ஸ்ரீராம்** சிட்ஸ் தமிழ்நாடு பி. லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700/8523932/8522651/8525536/8520797

அறிமுகப்படுத்துவோர் பரிசு இப்போதுள்ள சந்தாதாரர்களுக்கு மட்டுமே

*ஸ்ரீராம் சிட்ஸ் — உங்கள் வளமைக்குப் பாதை.*

ADWAVE/SCI/4824/TAM B

# மைவிழி மயக்கம்

ரமணி சந்திரன்

## 24

தினகரன் முன் ஒயிலாகத் தோளைக் குலுக்கினாள் சாயா. ''நான் வெளிநாடு செல்வதற்கு முன்தினம் உங்களுடைய அப்போதைய செயலாளரிடம் ஒரு முக்கியமான செய்தி சொன்னேன். நம் இருவரின் வாழ்வையே மாற்றி அமைத்திருக்கக் கூடிய செய்தி. அது என்னவென்று உங்கள் மாஜி காரியதரிசியையே கேளுங்கள். அவளால் இப்போதும் சொல்ல முடியவில்லை என்றால் என்னிடம் வாருங்கள், நான் சொல்கிறேன்... அவள் சொன்னாலும் கூட, சொல்வது சரிதானா என்று என்னிடம் வந்து சரிபார்த்துக் கொள்ள வாருங்கள்,'' என்றவள், ஜெயவாணியை ஒரு பார்வை பார்த்துவிட்டு, மீண்டும் பழைய மாதிரியே தோளைக் குலுக்கிவிட்டு அங்கிருந்து அகன்றாள்.

அவள் மறையும்வரை பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வாணியிடம் திரும்பியபோது, வெகு நாளைக்குப் பிறகு, தினகரனின் முகத்தில் புன்னகை மறைந்திருந்தது.

''சார், பில்,'' என்று வந்த விற்பனையாளரிடம் பணத்தைக் கொடுத்துவிட்டு வீடு வந்து சேரும் வரையிலும் அவன் வாணியிடம் எதுவும் பேசவில்லை. மாடித் தனிமைக்குச் செல்லும் வரையிலும் கூடத்தான்.

அதன்பிறகே, திரும்பி அவள் முகத்தை நேராகப் பார்த்து, ''என்ன விஷயம்?'' என்று வினவினான்.

ஒன்றுமில்லை என்றிருக்கலாம். சேதியாவது இன்னொன்றாவது? அந்தச் சாயா என்ன சொல்லுகிறாள் என்றே புரியவில்லையே என்று ஜெயவாணி பொய் புகன்றிருக்கலாம். சொல்லியிருந்தால், தினகரன் அவள் பேச்சை சந்தேகிக்கக்கூட மாட்டான். ஏற்கெனவே பொய்த்துப் போன சாயாவின் பேச்சைத்தான் ஒதுக்கியிருப்பான்.

ஆனால் அந்த மாதிரி எண்ணங்கள் அவள் மனதில் தோன்றினால் அல்லவோ?

அவள்தான் வியர்த்து விறு விறுத்துப் போய், நான்தான் குற்றவாளி என்று டமாரம் அடித்துப் பறைசாற்றிக் கொண்டிருந்தாளே!

அன்றே தினகரனிடம் சொல்லியிருக்க வேண்டும். என்ன ஆனாலும் ஆகட்டும் என்று அப்போதே அவனிடம் சொல்லி முடித்திருக்க வேண்டும். அப்படி என்ன பெரிதாக ஆகிவிடும்? கொஞ்சம்... கொஞ்சமென்ன, மிகவும் அதிகமாகவே மனது கஷ்டப்பட நேர்ந்திருக்கக்கூடும். அப்பா... சுபாவும் கூடச் சேர்ந்து வேதனைப்பட்டிருப்பார்கள். என்ன துன்பமென்றாலும் அத்தோடு முடிந்து போயிருக்கும். இப்படி இவன் முன்னிலையில் கூசிக் குறுக நேர்ந்திராது...

''நான் ஒரு கேள்வி கேட்டேன்,'' என்றான் அவன் குரலில் அழுத்தத்துடன். ''சாயா என்ன சேதி சொன்னாள்? எப்போது சொன்னாள்?''

''அ... அன்று... திருமணத்துக்கு முதல் நாள் டெலிஃபோனில்...'' முடிக்க மாட்டாமல் தொண்டைக்குள் திரண்ட பந்து தடுத்தது.

''என்ன சொன்னாள்?''

''தி... திருத்திக் கொள்ள... வாய்ப்புத் தேடுவதாக... உங்களிடம்...''

''சொல்லச் சொன்னாளா?''

''ஆ...ஆமாம்...''

''ஏன் சொல்லவில்லை?''

குற்றவாளிக் கூண்டில் கைதியை நிறுத்தி இப்படித்தான் கேட்பார்களோ? ஆனால் அவள் தினகரனுடைய மனைவி அல்லவா? ஒருவேளை அவனுக்கு அது மறந்து போய் விட்டதோ?

''நான் சொல்லத்தான் நினைத்தேன்... ஆனால், நீங்கள் முதலில் மீனாட்சி மிஷின் வொர்க்ஸுடன் பேசவேண்டும் என்று...''

''என்ன மீனாட்சி?'' என்று பொறுமையிழந்து இடைப்பட்டவன் உடனே நினைவு கூர்ந்து, ''பிறகு? பிறகு ஏன் சொல்லவில்லை? ஏன்?'' என்று விரட்டினான்.

''பிறகு டெலிஃபோன் ஸ்ட்ரைக்... சொன்னாலும் பயன் இல்லை என்று...'' என்றவளின் குரல் வெகுவாகத் தேய்ந்து நின்றே போயிற்று. அய்யோ! எவ்வளவு பலவீனமான காரணம்! ஆனால் அன்றைக்கு அப்படித் தோன்றவில்லையே என்று அவளது உள்ளம் பதறியது.

அவள் அஞ்சியது போலவே தினகரனும் அந்தக் காரணத்தை ஒத்துக் கொள்ளவில்லை. ''டெலிஃபோன் தவிர ஒருவருடன் தொடர்பு கொள்ள வழியே கிடையாதா? ஒரு எக்ஸ்பிரஸ் தந்தி கொடுக்க முடியாதா? ஒரு 'பிளேன் சார்ட்டர்' பண்ணிக் கொண்டு நேரிலேயே போயிருக்க மாட்டேனா? முடியாததா? அன்று நான் அவளை எப்படி நேசித்தேன் என்று உனக்குத் தெரியும் அல்லவா...?''

நேசித்தேன்! இறந்தகாலம்! இப்போதும் சாயா அவன் மனதில் இருப்பதாகத் தினகரன் சொல்லவில்லை. ஒரு காலத்தில் நேசித்ததாகத்தான் கூறுகிறான்!

சாதகமாக எதையாவது தேடிக் களைத்த மனம் அணுவை மலையாக்கி ஆறுதல் கொள்ள முயன்றது. ஆனால் அவன், தான் இறந்த காலத்தில் பேசுவதை உணரக்கூட இல்லையே!

''டெலிஃபோனில் பேசமுடியாது என்பதாலேயே விஷயத்தைச் சொல்லவில்லை என்றால் நம்பும்

பெண்களிடம் வம்பு செய்யலாமா?
22'ம் பக்கம்

படியாக இல்லை ஜெயவாணி,'' என்றான் அவன் குரலில் கண்டிப்புடன்.

''அது... அது கடவுள் காட்டிய வழி என்று...''

''என்னது?''

''வந்து... சாயாவின் தொடர்பு வேண்டாம் என்று கடவுளே முடிவு செய்து...''

''என்ன உளறல் இது! நான் சாயாவோடு பேசுவதைத் தடுப்பதற்காகவே கடவுள் அத்தனை ஆயிரம் பேர் மனதில் புகுந்து ஸ்ட்ரைக் செய்யத் தூண்டினார் என்று நினைத்ததாகவும் அதனாலேயே நீ என்னிடம் சாயாவின் பேச்சை மறைத்ததாகவும் சொல்லப் போகிறாயா...?''

ஆமாம். அதுதான் நிஜம். அட்சரம் பிசகாமல் அவள் அன்று அப்படித்தான் நம்பினாள். ஆனால் அவன் சொன்ன விதத்தில் அது படுமுட்டாள்தனமான கற்பனையாக அல்லவா தோன்றுகிறது!

ஆனால் அவன் அதைவிட அதிகம் என்றான். ''இந்தப் பொய்யை என்னை நம்பச் சொல்கிறாயா?'' என்று அருவருப்புடன் கேட்டான். ''சே! நான் உன்னை நேர்மையின் உருவம் என்று எண்ணினேனே!''

''பொய்யில்லை. நான் மெய்யாகவே அப்படித்தான் நம்பினேன். அத்தோடு சாயா நல்லவள் இல்லை என்பதால் உங்கள் நன்மைக்காகவே...''

''என்ன என்ன? என் நன்மைக்காக என்று நீ முடிவெடுத்தாயா? என் நன்மை தீமைகளை ஆலோசித்து என் சார்பில் முடிவெடுத்துச் செயல்படும் உரிமையை உனக்கு நான் எப்போது தந்தேன்?'' என்றான் தினகரன் வியப்பும் கோபமுமாக.

மலங்க விழித்தாள் ஜெயவாணி.



''எங்க வாத்யார், நீ நடு ரோட்டிலதாண்டா நிப்பேன்னாரு.''

—பாளை பசும்பொன்

---

அவன் உரைத்தது மெய்தானே? அவனுக்காக முடிவெடுக்க அன்றைக்கு அவள் யார்?

''நா...ன்... நா...ன்...'' என்று தொடங்கியவள், பதிலளிக்க மாட்டாமல் திணறி அந்த முயற்சியையே கைவிட்டாள். மீண்டும் முயன்று, ''உங்கள் நன்மையில் மிகவும் அக்கறை இருந்ததால் அப்படிச் செய்துவிட்டேன். டிய...'' என்றவள், அவனை அழைக்கும் வகை அறியாமல் மீண்டும் தடுமாறினாள்.

'டார்லிங்'கும் 'டிய'ரும் தண்ணீர் பட்ட பாடுதான். இன்னமும் சற்று அதிக அந்தரங்கமான சமயங்களில், 'குருஜி', 'பாஸ்' என்பாள். ஆனால் இப்போது அடியோடு மாறிப்போய் நின்ற கணவனை என்னவென்று கூப்பிடுவது என்றுகூடப் புரியாமல் கலங்கினாள்.

பெருமுயற்சியின் பின், ''சாயா ரொம்பவும் சுயநலக்காரி... பணத்தாசை மிகவும் அதிகம். அவள் உங்களை அழித்து விடு



இன்னும் ஊசியே போடலே... அதுக்குள்ளே கால்கால்னு கத்தினா எப்படி?

– சீர்காழி சாமா

வாள் என்பதால்தான்...'' என்றவளுக்கு, அதற்கு மேல் பேசவே முடியாமல் கீழுதடு நடுங்கத் தொடங்கி விடவே, பற்களால் அதை அழுத்திக் கொண்டு நின்றாள்.

பேசாமல் மனைவி படும் பாட்டைப் பார்த்துக் கொண்டு நின்றவனின் முகம் கறுத்தது. ''சாயா பணத்தாசை பிடித்தவள். சரி, நீ எப்படியாம்? அந்த முப்பதாயிரத்திற்காகத்தானே நீ என்னை மணந்தாய். ஓ! இப்போது புரிகிறது. திருமணம் நின்றுவிட்டால் அந்தப் பணத்தைத் திருப்பித்தர நேரும் என்று பயந்துவிட்டாய். அதுதானே! அதனால்தானே மறைத்து விட்டாய்? ஆனால், நீ உண்மையைச் சொல்லியிருந்தால் உனக்கு எத்தனையோ மடங்கு கொடுத்திருப்பேனே. ஆக, உன்னையும் நம்புவதற்கில்லை. அப்படித்தானே? சீச்சீ! எவ்வளவு பெரிய ஏமாற்று வேலை!'' என்றான் ஆத்திரமும் அருவருப்புமாக அவளை நோக்கி.

அந்தப் பார்வையிலேயே பாதி செத்திருந்தவளிடம் மேலும் காய்ந்தான். ''நீ எதற்கும் வளைந்து கொடுத்தாய்; இணங்கினாய். என் ஆறுதலை நாடிய உண்மை அன்பினால் என்று நினைத்தேன். ஆனால் என்னை மயக்கி உன் கைப்பிடியில் வைத்துக் கொள்வதற்கா என்று எனக்குத் தெரியாது...''

வேண்டாத மருமகள் பழமொழி ஜெயவாணிக்கு நினைவு வந்தது. குற்றம் காண்பது என்று தொடங்கிவிட்டால் எதற்கும் தப்பு வண்ணம் பூசிவிட முடியும் போலும்.

ஆனாலும் இந்த அநியாயமான குற்றச்சாட்டைப் பொறுக்க மாட்டாமல், ''இல்லை. நான்...'' என்று தொடங்கியவளை அதிகாரமாக உயர்ந்த அவனது கரம் அடக்கியது.

அவன் பார்வை, அவனோடு வெளியே செல்வதற்காக அவள் செய்து கொண்டிருந்த அலங்காரத்தில் வந்து நின்றது. உதட்டில் ஓர் ஏளன வளைவுடன், ''அப்பா அனுபவசாலி. கண்ணிலே மை எழுதி, கருத்திலே பொய் எழுதி என்றாரே! எவ்வளவு சரியாகச் சொல்லியிருக்கிறார்! நீயும் என்னை மயக்குவதற்காக கண் மை, உதட்டுச்சாயம் என்று என்னவெல்லாம் பூசியிருக்கிறாய்,'' என்றான்.

''இல்லை. இது எல்லோரும் செய்து கொள்கிற சாதாரண எளிய அலங்காரம். உங்கள் 'ஆஃப்டர் ஷேவ்' மாதிரி...'' என்றவள், அவன் முகத்தில் நம்பாத தன்மையைக் காணவும் நிலையிழந்தாள்.

இந்தப் பேச்சு இப்போது எடுப்பது தவறு என்று உள்ளுணர்வு எச்சரித்ததை ஒதுக்கி, ''நான் என்ன சாயா மாதிரியா அலங்காரம் செய்கிறேன்? மஸ்காரா, ஐ ஷாடோ, லைனர், ஃபவுண்டேஷன், பான் கேக், ரூஜ், இரண்டு தினுசுச் சாயம், லிப்க்ளாஸ்...'' என்று அடுக்கியவளைப் ''போதும்!'' என்று மீண்டும் கை உயர்த்தி அடக்கினான் தினகரன்.

''நீ சொன்னாயே, இதில்

எதையும் அவள் செய்யாதது போல மறைக்கவில்லை. நியாய தேவதை போல நடிக்கவில்லை. உள்ளத்தில் ஒளிவு மறைவு இல்லாதபோது வெளியே என்ன செய்தாலும் ஒன்று மில்லை என்று ஒதுக்கிவிட முடி கிறது. ஆனால் நீ?'' என்று பெரி தாகத் தோளைக் குலுக்கினான்.

சாயாவா ஒளிவு மறைவு அற்றவள்?

தினகரனை அவள் முதலில் பிரிந்ததற்கும், மீண்டும் ஒட்டிக் கொள்ள முயன்றதற்கும் எனக் கார ணங்களை அவளால் உள்ளபடி சொல்ல முடியுமா?

சட்டென விழிகளில் ஒளி பிறக்க, ''சாயா ஏன் மீண்டும் உங்களை நாடினாள் என்று தெரிந் தால் உங்களுக்கு உண்மை விளங் கும்,'' என்றாள் அவசரமாக.

''தெரிந்து கொள்வேன். ஆனால் பொய்த்துப் போன உன் னிடமிருந்து அல்ல. ஏனெனில் உன் பேச்சில் உண்மை இருப்பதே சந் தேகம் ஆயிற்றே,'' என்றவன் திரும்பி நடந்தான் ''நான் சாயா விடம் போகிறேன். திரும்பி வர நேரமாகும். எனக்காகக் காத்தி ருக்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில், இனியும் இந்த உத்தமி, உத்தம மனைவி வேடங்களில் நான் ஏமாறுவதற்கு இல்லை,'' என்று மொட்டையாக மொழிந்தவன், திரும்பிப் பாராமலே சென்றுவிட் டான்.

தினகரனின் கார் கிளம்பிச் செல்லும் ஓசை தேய்ந்து அடியோடு மறையும் மட்டும் ஜெயவாணி அப் படியே நின்றாள்.

அவள் நின்றிருந்த இடம் மட் டும் பிளந்து அதல பாதாளத்தில் விழுவது போன்ற ஓர் உணர்ச்சி. இதயத்தின் மேல் பெரிய இரும்புக் தண்டை ஏற்றி வைத்து நட்டாற் போல ஓர் இறுக்கம்.

தினகரன் மன்னிக்கிறவன் அல்ல. வாணியை அவன் மணந்து கொண்டதே அதற்குச் சரியான சான்று. தன் வழியில் குறுக்கிட்ட தந்தைக்குத் திருப்பிக் கொடுப்பதற்காகவே அவரால் கொஞ்சமும் ஒத்துக் கொள்ள முடியாத நிலையில் இருந்த ஒருத்தியை மணந்து கொண்டான். மற்றபடி அன்றைய நிலையில், வசீகரம் அணுவளவும் இல்லாத ஒருத்தியைப் போய் மணப்பானா? கூடவே, ‘அடப்போடி’ என்று சாயாவுக்குக் காட்டத்தானே அந்தத் திருமணம்?

இப்போது அவன் கருத்தில் பிழை புரிந்தவள் ஜெயவாணி. இவளை எப்படித் திருப்பி அடிக்கப் போகிறானோ?

முதல் அடியாகத்தான் சாயாவைச் சந்திக்கச் சென்றிருக்கிறானோ? இரவு திரும்பி வர நேரமாகுமாமே! நேரம் ஆனால் மட்டும்? அவளை வருத்தப்படுத்தவென்று சொன்னதுதான்.

ஆனால் இதைச் சாயா எப்படிப் பயன்படுத்திக் கொள்ளக் கூடும்?

தினகரனின் திருமணம் பற்றி மாமனார் முன்பே தெரியப்படுத்தியிருந்தபோதும் கூட, மனைவி என்று ஒருத்தியைக் காண நேர்ந்தது பெரும் அதிர்ச்சி போல நடித்தானே! இவள் எந்த அளவுக்குப் பொய் சொல்லக்கூடும்.

அன்று மறுத்துச் சென்றவள் மறுபடியும் அவனை நாடிய காரணமாகக் கூட எதையோ இட்டுக் கட்டித்தான் கூறப்போகிறாள்.

பாமரருக்கும்,
படித்தவருக்கும்
கணிப்பொறி.
— 80’ம் பக்கம்

ஆனால் சாயா என்னதான் இட்டுக்கட்டினாலும் உண்மையில் நடந்ததை விவரித்து அவளைப் பற்றிய உண்மை தெரிவிக்க மாமா இருக்கிறார். எனவே தினகரன் அவளிடம் மீண்டும் ஏமாந்து போகாமல் காப்பாற்றி விடலாம்.

அது ஒரு பெரிய நிம்மதி... அது மட்டும்தான் நிம்மதி. ஏனெனில் சர்வ நிச்சயமாய் அவன் ஜெயவாணியை முன் போல ஏற்கப் போவது கிடையாது.

அவனது நன்மைக்காகவே செய்தார் என்பதை அறிந்த பிறகும், பெற்றவரையே தினகரன் இன்னமும் முழுமையாக ஒத்துக் கொள்ளவில்லை. பிறப்பைக் கொடுத்து வளர்த்து ஆளாக்கிய தகப்பனாருக்கே இதுதான் கதி என்றால் இடையிலே வந்த— எந்தவிதமான ரத்த சம்பந்தமும் இல்லாத இவளுக்கு நம்பிக்கைக்கு ஏது இடம்?

தாமோதரனுக்கு விவரம் தெரிவிக்கலாமா என்று ஒருகணம் நினைத்து, உடனே அந்த எண்ணத்தை விடுத்தாள் ஜெயவாணி. சாயாவின் சுய ரூபத்தைத் தினகரனுக்குக் காட்ட மட்டும்தான் அவர் தேவைப் படக்கூடும். அதை அவனாகவே அறிந்து கொண்டுவிட்டால், பாவம் அனாவசியமாய் அவரையும் கஷ்டப்படுத்துவானேன்?

மற்றபடி அவளது பிரசினை அவளுடனேயே இருந்துவிடுவது மேல். ஏனெனில் கூடச் சேர்ந்து கஷ்டப்படுவது தவிர அவரால் எதுவும் செய்ய முடியாது.

சூழ்ந்து வந்த இருட்டுக்குள்ளே எப்படியும் சாயாவை இனம் காட்டிவிட முடியும் என்பது ஒன்று மட்டும் மின்மினியாய் வெளிச்சம் தர, அதையே பிடிவாதமாக நினைத்தவாறு ஜெயவாணி கணவனின் வருகைக்காகக் காத்திருந்தாள்.

(தொடரும்)



# மைவிழி மயக்கம்

(25)

நள்ளிரவு தாண்டித் திரும்பி வந்தவன், அவளைக் கண்டதும், ''காத்திருக்க வேண்டாம் என்று சொல்லவில்லை?'' என்றான் சினக் குரலில்.

''சாப்பாடு எடுத்து வைக்கவா?'' என்றாள் அவள் மெதுவாக.

மேலும் முகம் கடுக்க, ''நீ இன்னமும் சாப்பிடவில்லை, அது தானே? இந்தப் பத்தினி வேஷம் அவசியமில்லை என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன். நன்றாக உண்டு, உறங்கத்தானே இல்லாத ஏமாற்று வேலையெல்லாம் செய்து மணந்து கொண்டாய்? நேரத்துக்குக் கொட்டிக் கொள்வதற்கென்ன?'' என்று சிடுசிடுத்தான் தினகரன்.

இன்னொருத்தி மனதில் இருப்பதாக உரைத்த காலத்தில்கூட அவன் இந்தக் கோபம் காட்டியது கிடையாது!

கண்ணைக் கரித்துக் கொண்டு உருவாகத் தொடங்கிய கண்ணீரை அடக்கிக் கொண்டு, ''பா...ல்?'' என்று மெல்ல வினவினாள்.

''தேவையில்லை. அதுவும் உன் கையால் எதுவும் வேண்டாம்.'' தன் அறையை நோக்கி நடந்தான் தினகரன்.

கையாலேயே முகத்தில் அடித்திருக்கலாம்! ஆனாலும் அப்படியே விட மனமின்றி அவனைப் பின்தொடர்ந்து சென்று பேசினாள். ''பாருங்கள், நான்... நான் என்ன செய்திருந்தாலும் உங்கள் நன்மையே பெரிதென்று கருதித்தான்...''

அறைவாயிலை அடைந்திருந்த தினகரன் சரேல் என்று திரும்பினான். ''என் நன்மை பற்றி என்னைவிட மற்றவர்களுக்குத் தான் நன்றாகத் தெரியும் போலும். ஒன்று தெரியுமா, என் நன்மைக்காகவே பிரிந்து சென்றதாகத் தான் சாயாவும் சொல்கிறாள். வளமான வாழ்க்கைக்குப் பழக்கப் பட்டுவிட்ட நான் அவளை மணப்பதால் சொத்தை இழந்து ஏழ்மையில் கஷ்டப்படுவது என்றால் அவள் மனம் தாங்க முடியாது என்பதால் பிரிந்தாளாம். அதுவும் அவளை நினைத்து வருந்தக் கூடாது என்பதற்காகவே வெறுப்பேற்றி விட்டுப் போனாளாம்...''

அய்யோ! என்ன பொய்! என்னமாய்த் துணிந்து வாய் கூசாமல் அளக்கிறாள்!

''எல்லாம் பொய்!'' என்றாள் ஜெயவாணி கோபமாக.

''அதை நீ சொல்கிறாயா?'' என்று திருப்பினான் தினகரன்.

''ஆனால் ஒருவகையில் அதுவும் சரிதான். அவர

ரமணி சந்திரன்



வருக்குத் தெரிந்த கலைபற்றித் தானே அபிப்பிராயம் சொல்ல முடியும்,'' என்றான் குத்தலாக.

இதை இப்போது மறுத்துப் பயன் இல்லை என்பதை உணர்ந்து, ''அப்படிப் போனவள் ஏன் திரும்பி வர முயன்றாள் என்பது உங்களுக்குத் தெரியுமா? கல்கத்தாவில் உங்கள் வக்கீல்...'' என்று விளக்க முயன்றாள் அவள்.

அவள் பேச்சை இடை மறித்தான் தினகரன். ''கரெக்ட். வக்கீலின் பேச்சைக் கேட்ட பிறகுதான் அப்பா சொன்னது பொய் என்று உணர்ந்திருக்கிறாள். பொருளாதார ரீதியில் நான் துன்பப்பட நேரிடாது என்பது புரிந்ததும் அவசரமாக என்னோடு பேச முயன்றிருக்கிறாள். எனக்காக அந்த வெளிநாட்டுப் பயணத்தையே தியாகம் செய்யத் தயாராக இருந்தாளாம். என்னிடமிருந்து எந்தத் தகவலும்

இல்லாது போகவே அவள் மனம் ஒடிந்து போனாளாம்.

''இதை நீங்கள் மெய்யாகவே நம்புகிறீர்களா?'' என்று ஆத்திரமாகக் கேட்டாள் ஜெயவாணி.

தோளைக் குலுக்கினான் தினகரன். ''அவளை நம்பாதிருக்கக் காரணம் இல்லையே!''

''இல்லை. இல்லை. மாமாவுக்கு எல்லாம் தெரியும். அவரிடம் ஒரு தரம், ஒரே ஒரு தரம் கேட்டுவிட்டு முடிவு செய்யுங்கள். ப்ளீஸ்...''

''இருந்திருந்து அவரிடமா கேட்பது? அவருக்குச் சும்மாவே சாயாவிடம் வெறுப்பு. பொய் சொல்ல அஞ்சாதவர். இப்போது உன் வசிய வேலையில் உள்ள கெட்டிக்காரத்தனத்தையும் கோட்டைவிட்டுவிட்டார். அவரிடம் கேட்பதும் ஒன்றுதான், பூனையை மடியில் கட்டிக் கொண்டு சகுனம் பார்ப்பதும் ஒன்றுதான்,'' என்றான் அவன் அலட்சியமாக.

''அய்யோ! இப்படிச் சொன்னால் எப்படி? பாருங்கள், நான் சொல்வது மெய்யாகவே முழுக்க முழுக்க உண்மை. ப்ளீஸ், நம்புங்கள்!'' என்று அவன் கையைப் பற்றிக் கெஞ்சினாள் ஜெயவாணி.

தன் கரத்தின்மேல் பதிந்திருந்த அவளது கையை வெறுப்புடன் தினகரன் வெறிக்கவும், அவசரமாகக் கையை விலக்கிக் கொண்டாள் அவன் மனைவி.

அவள் கைப்பட்ட இடத்தில் இல்லாத தூசியை, நாசூக்காகத் தட்டிவிட்டுவிட்டு, ''இன்று உன் அறையில், என் தொல்லையின்றி வசதியாக நீ தூங்கலாம்,'' என்று கூறி, அறையினுள் சென்று, கதவைச் சாத்தி உள்புறமாகத் தாழிட்டான் தினகரன்.

இன்னொருத்தியை மனதில் வைத்திருந்ததாகப் புகன்ற அந்த நாட்களில்கூட ஜெயவாணியின் அரு

காமையை நாடியவன், இப்போது வெளியே நிறுத்திக் கதவை அடைத்திருக்கிறான்.

நெஞ்சைப் பிளந்து வெளியேறிய விம்மலின் சத்தம், கணவனுக்குக் கேட்டுவிடாமல், வாயைப் பொத்திக் கொண்டு ஓசையற்று அழுதாள் ஜெயவாணி.

மறுநாளிலிருந்து, எத்தனையோ வளங்களும், வசதிகளும் இருந்தாலும் வாழ்க்கை எவ்வளவு துன்பமயமாக இருக்க முடியும் என்று அவளுக்குத் தினகரன் காட்டினான்.

அவன் வீட்டிலிருக்கும்போது உண்பதுகூட அவளுக்குத் துன்பமாயிற்று. 'திருமணத்திற்கு முன் இந்த வகைப் பதார்த்தமெல்லாம் அறிந்திருக்கமாட்டாய். இப்போது விலாப் புடைக்கச் சாப்பிடு. இதற்காகத்தானே என்னை ஏமாற்றி மணந்து கொண்டாய்?' என்பான்.

சோபாவில் அமர்ந்தால், 'நல்ல குஷன். இந்த சொகுசு வாழ்க்கைக்காகத்தானே கஷ்டப்பட்டாய் அனுபவி!'' என்பான்.



நின்றாலோ, 'ஏன் பாவனை? அதுதான் இல்லாத நாடகம் போட்டுத் தாலியை வாங்கிக் கொண்டாயிற்றே,' என்று கூறுவான்.

எப்போது, என்ன மாதிரி சூடு விழுமோ என்ற அச்சமும்; அடிபடுவதும் அதன் வலியுமாகவே வாழ்க்கை நடந்தது.

இரவிலோ அவன் அருகில் வரவும் அவள் தகுதியற்றவள் ஆகிப் போனாள். அதிலும் அரைகுறைப் பேச்சில் கதவைச் சாத்துவதும், அவள் வெளியே நின்று அழுவதும் வாடிக்கை ஆயிற்று.

நாலே நாட்களில் ஜெயவாணி உடலும் மனமும் பெரிதும் ஓய்ந்து போனாள். இல்லை, இதே போக்கில் அதிக நாள் வாழமுடியாது.

அன்று அவனை நோக்கி அவள் வருவதைச் சற்றும் கவனியாத பாவனையில், அவன் செல்லவும், மனதைத் திடப்படுத்திக் கொண்டு, பிடிவாதமாகக் கணவன் பின்னோடு போய், ''உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டும்,'' என்றாள்.

''ஏன்? ஒளித்து மறைத்து வைத்திருந்த குற்றங்கள் இன்னமும் இருக்கின்றனவா? பரவாயில்லை. அவைகளை உன்னோடேயே வைத்துக் கொள்ளலாம். இதற்கு மேல் பாவ மன்னிப்பு அவசியமில்லை. இதுவே மூச்சு முட்டுகிறது,'' என்றான் அவன். நில்லாமல் நடந்தபடியே.

சட்டென்று இரண்டெட்டுக்கு முன்னே வந்து, அவன் வழியை மறைத்தாள் ஜெயவர்ணி. ''ஓர் ஐந்து நிமிடம். ஒரே ஓர் ஐந்து நிமிடங்கள் என் பேச்சைக் காது கொடுத்துக் கேட்கக்கூட முடியாதா?'' என்று வேதனையில் கண்ணகல அவனை நேராக நோக்கிக் கேட்டாள்.

ஒரு கணம் அசைவற்று நின்றுவிட்டு, சற்று விலகிச் சென்று, வெறித்தபடி, ''ம்?'' என்றான்



முன் அட்டை: டயானா

பின் அட்டையில்:

1. பாஸ்கர், பாவலர், கங்கை அமரன், இளையராஜா.
2. வை.கோ.
3. கே.ஆர். விஜயா.
4. கவாஸ்கர் – கிட்டி.
5. ஸ்ரீநிதி ரங்கராஜன்.

தினகரன்.

இதுவே பெரிய சலுகை போல ஜெயவாணியின் கண்கள் கலங்கின. சமாளித்துக் கொண்டு, வேகமாகச் சொல்லத் தொடங்கினாள்.

முதல் தடவை சாயாவைப் பார்க்க நேர்ந்தபோது, அவள் நடந்து கொண்ட விதத்தை நினைவுறுத்தினாள். ''ஒழுங்கு, கட்டுப்பாடு எதுவும் இல்லாதவள். நீங்களோ அதற்கு நேர் விரோதம். அவளை மணந்தால் உங்கள் வாழ்வு வீணாகிவிடுமோ என்று ஏற்கெனவே நினைத்திருக்கிறேன்.''

''அதனால் உன்னை மணக்க வைத்து, என் வாழ்வை வீணாக்கினாயாக்கும்!'' என்றான் அவன் எகத்தாளமாக.

இப்படிப் பேசித்தான் ஆக வேண்டுமா என்பது போலப் பார்த்துவிட்டு, அவள் மேலே தொடர்ந்து, சாயா டெலிஃபோனில் பேசிய விதம் பற்றிக் கூறினாள்.

''சாயா மோசம், நீ மகா உசத்தி என்று காட்டுவதற்காகச் சொல்கிறாயா?'' என்றான் அவன் உணர்ச்சியற்ற குரலில்.

''இல்லை. ஆனால் இப்படிப் பட்டவளை மணந்தால் உங்கள் வாழ்வு வீணாகி... வந்து... உங்களுக்குத் துன்பம் வருமே... எப்படிச் சொல்வது என்று தடுமாறிக் கொண்டிருந்தேன். நீங்கள் வந்ததும், என்னைப் பேச விடாமல் வேறு வேலை கொடுத்து அவசரப் படுத்தினீர்கள். பிறகு, பிறகு... டெலிஃபோன் ஸ்ட்ரைக் என்றதும், அது.. அது.. நல்லதாயிற்று. கடவுளே வழிகாட்டியிருக்கிறார் என்று எண்ணி...'' என்று கூறி நிறுத்தினாள் ஜெயவாணி.

தினகரன் திரும்பவும் இல்லை. பேசவும் இல்லை.

ஜெயவாணியே தொடர்ந்தாள். பணத்துக்காகத்தான் என்றீர்களே... அந்த முப்பதினாயிரத்தை நீங்கள் திருப்பிக் கேட்க மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியாதா? மேலும், சொத்து பற்றி உங்கள் அப்பா என்னிடம் சொன்னதும் உங்களுக்குத் தெரியும்.''

தினகரன் திரும்பி, அவளை ஒரு பார்வை பார்த்தான். ''நன்றாக! இருவரும் வேலை பார்ப்போம் என்று நீ சொன்ன பதிலும் கூடத்தான். எப்படியும் வெளிநாடு சென்று படித்த மாப்பிள்ளை! ஒன்றுமில்லாமல் வெளியேறி எங்கேனும் வேலை பார்க்க நேர்ந்தால் கூடச் சம்பளம் நிறைய வருமே! உன் அப்போதைய நிலைமைக்கு அதுவே பெரிதுதானே! உனக்குப் பணத்தாசை இல்லை என்றால்... நோ... நம்ப முடியாது.''

வாணி அயர்ந்து போனாள். இதற்கு என்ன சமாதானம் சொல்வது?

அவள் திகைப்பும் கலக்கமுமாக நோக்க, அவன் மேலும் சொன்னான். ''எனக்காக என்றாய். எனக்கு எது நல்லது, எது கெட்டது என்று முடிவு பண்ணத் தெரியாத முட்டாளா நான்? ஒருவருக்கு இருவராக அதே முடிவு எடுத்திருக்கிறீர்

கள். இருவரென்ன...? அப்பாவோடு சேர்த்து, மூவருமாக, நான் முழு முட்டாள் என்று முடிவு கட்டி விட்டீர்கள். ரொம்பவும் பெருமைக்குரிய விஷயம்!'' என்றான் அவன் ஏகத்தாளமாக.

''அப்படிப் பார்த்தால் சாயாவும்...'' என்ற மனைவியின் பேச்சைக் கவனியாதவன் போன்று, ''ஆனால் ஒன்று... இதில் சாயா எனக்காக என்னையே தியாகம் செய்தவள்,'' என்று முடித்தான்.

தியாகமா? மூழ்குகிற கப்பலிலிருந்து ஓடிய எலி! அவளைப் போய்...

''அப்படியில்லை,'' என்றபடி நிமிர்ந்தவள் அவன் பார்வையில் குழம்பிப் பேச்சை நிறுத்தினாள். சாயா பற்றிப் பேசுவது அவனை உசுப்பி விடக்கூடுமோ என்று எண்ணி ''நம் இருவருமான வாழ்வு எதையும் விட மேற்பட்டது என்றீர்களே! அதெல்லாம் ஒன்றுமே இல்லை என்று ஆக முடியுமா? கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். ப்ளீஸ்,'' என்றாள் ஜெயவாணி.

''கொஞ்சமா? முட்டாள்கள் கொஞ்சம் யோசித்தால் எப்படிப் போதும்? நிறையவே யோசித்துப் பார்த்தேன். பிறகுதான் கண்டு பிடித்தேன். நான் முட்டாள் தானே! இயல்புக்கு ஏற்றபடி முட்டாள்தனமாகச் சொல்லியிருக்கிறேன் என்பதை,'' என்று குத்தலும் கேலியுமாகவே மொழிந்தான் தினகரன்.

நாலு நாட்களாகவே அவ்வப்போது அழுகைதான். அன்று ஒரு சிறு ஆசை. ஒருவேளை அன்றைய நிலையில் அப்படியே எடுத்துச் சொன்னால் அவன் அதை ஏற்கக் கூடுமோ என்று ஒரு நப்பாசை. ஆனால் அது அற்பாயுளில் முடியவே, அவளது கண்களில் நிராசையுடன் நீரும் பெருகலாயிற்று.

(தொடரும்)



''ஸாரி டியர்! கொஞ்சம் அதிகமா கோபப்பட்டுட்டேன்.''

—ராம்போ





# மைவிழி மயக்கம்

## 26

எதிரே நின்றவனின் உருவம் மங்கலாகும் போதே, சட்டெனக் கைநீட்டி, அவளைப் பற்றினான் தினகரன். ''ஏன்? ஏன்? ஏன் அப்படிச் செய்தாய் வாணி? நான் உன்னை என்ன மாதிரித் தேவதையாக எண்ணியிருந்தேன்? இப்படி மண் குதிரையாகிப் போனாயே!'' என்று தன்னைமீறி உரைத்தவன், சட்டென அவளை எலும்பு நோக இறுக அணைத்தான்.

அவனது அணைப்பை உணர்ந்து அதை மீறி அவனது தவிப்பையும் அவள் உணரத் தொடங்கும்போதே அணைத்த வேகத்தில் அவளை விலக்கி நிறுத்தினான் தினகரன்.

தடுமாறி நின்றவளை வெறித்து விட்டுத் திரும்பி நடந்து வெளியேறினான்.

வேகமாகக் கார் கிளம்பிச் செல்லும் ஓசையில் வாணியின் உள்ளம் கலங்கியது.

அதிக நேரம் அவள் கலங்கும்படி விடாமல், தினகரன் விரைவிலேயே வந்துவிட்டான். கையில் சற்று நீளமான ஓர் அட்டைப் பெட்டி.

அவனைக் கண்டதும் ஓசையற்று எழுந்து நின்ற மனைவியைக் கண்டதும் உதட்டில் ஓர் ஏளன வளைவுடன், கையிலிருந்த பாக்கெட்டைப் பிரித்துக் காட்டினான்.

விஸ்கி பாட்டில்! தினகரனா? தொழில்துறையில் கம்பெனி கீப் பண்ணுவதற்காக் கோப்பையை வாங்கினால்கூட, அருந்துவதுபோல் பாவனை தவிர, உதடு தாண்டி உள்ளே போகாமல் வருகிறவனா?

அதிர்ந்து போய் நின்றவளிடம் பாட்டிலைத் தூக்கிக் காட்டி, ''அங்கே குடித்தது போதவில்லை. அதனால் வாங்கிக் கொண்டே வந்துவிட்டேன்,'' என்றான் ஒருவித இளிப்புடன்.

ரொம்பவும் கலங்கிப்போய், ''வேண்டாம் குரு. இது கெட்டப் பழக்கம். உங்கள் உடம்பு கெட்டுவிடும். குடிக்காதீர்கள். ப்ளீஸ்,'' என்று தவிப்புடன் கெஞ்சினாள் ஜெயவாணி.

ரமணிசந்திரன்

''ஏய், எனக்கு நல்லது, கெட்டது எது என்று எனக்கே தெரியும் என்று ஏற்கெனவே சொல்லவில்லை?'' என்று உறுமியபடி அவளை உறுத்து விழித்தான் தினகரன்.

''இங்கே வா,'' என்று அவளையும் உடன் வரும்படி பணித்துவிட்டு அறைக்குள் சென்றான்.

படுக்கையின் அருகிலிருந்த சிறு மேஜையில் பாட்டிலை வைத்துவிட்டு, செய்வது அறியாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்த மனைவியின் எதிரே சென்று நின்றான்.

சில வினாடிகள் அவளை வெறித்துவிட்டு, ''நீ கொஞ்சம் கெட்டவள்போல... ஒரு சாதாரணப் பெண்ணாக நடந்து கொண்டிருந்தால்கூட எனக்கு மனம் ஆறியிருக்குமே. சற்றும் கபடு சூதற்ற இந்தப் பிள்ளை முகத்திலும்...'' என்று இரு நடுவிரல்களால் அவள் முகவடிவை அளந்தான்.



''ஏன், ரயில் வராதுன்னு சொல்றீங்க?''

''நான் சாதாரணப் பெண்தான் என்று உங்களிடம் முன்டே சொல்லியிருக்கிறேன்,'' என்றாள் வாணி சிரமத்துடன்.

தலையாட்டினான் தினகரன். ''ஆமாம். சொல்லியிருக்கிறாய். நான்தான் முட்டாளாயிற்றே. புரிந்து கொள்ளவில்லை. மேலும் சொக்கத் தங்கம் என்று. ச்சே, அது முடிந்துவிட்ட கதை. கடந்த காலம். நினைத்துப் பார்ப்பதே மடத்தனம்.'' என்று யோசனை போலப் பேசியவன் மீண்டும் அவள் முகத்தை நோக்கினான். ''ஆனால் ஓர் உத்தமமான விஷயம். இதற்கு நல்லவர்கள், கெட்டவர்கள், முட்டாள், புத்திசாலி பாகுபாடு ஏதும் தேவையில்லை.'' என்றவன் அவளது தோளைப் பற்றி, அவள் முகம் நோக்கிக் குனிந்தான்.

குடி வெறியிலா என்பதற்கு மேல் சிந்திக்கவோ மறுக்கவோ அவளாலும் முடியாது போயிற்று.

அதிகாலையிலேயே விழிப்பு தட்டிவிட, அவனது மார்பு, ரோமம் கன்னத்தில் இதமாக உரச, லேசாகத் திரும்பி அவனை ஒட்டிப் படுத்தாள் வாணி.

மனதில் ஏதோ ஒரு திடம் உண்டாயிற்று. இல்லை, உள்ளூர அன்பின்றி அவனால் இப்படி நடந்து கொள்ள முடியாது. இந்த உறவு இருவரையும் மீண்டும் ஒன்று சேர்த்து விடும்.

பரிவும் பிரியமுமாய் விரல்களால் அவன் முகத்தை லேசாக வருடினாள்.

கண் திறவாமலே தினகரன் முணுமுணுத்தான். ''சாயா, என் கண்ணே!'' என்று லேசான கரகரப்புடன் அவனது தூக்கம் கலந்த

குரல் தெளிவாக உரைக்க, உறக்கத்திலேயே அவளை இறுக அணைத்துக் கொண்டான் அவன்.

சாயாவா?

சில கணங்கள் ஜெயவாணியால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. அவன் வேறு ஏதாவது முனக, அது அவள் காதில் தவறாக விழுந்திருக்குமோ என்று மனம் பரபரத்தது.

ஆனால் இல்லையே! கரகரத்த குரல் என்றாலும், 'சாயா என் கண்ணே!' என்ற வார்த்தைகள் தெளிவாகக் கேட்டனவே!

அப்படியானால் கை வளையத்துக்குள் கிடப்பவள் சாயா என்றா எண்ணியிருக்கிறான்!?

இல்லை. ஒருபோதும் அப்படி இருக்காது என்று தன்னைத் தேற்றிக் கொள்ள முயலும்போதே, தினகரனின் ஷாஜஹான் பேச்சு அவளுக்கு நினைவு வந்தது.

விளக்கை அணைத்துவிட்டால் எல்லாப் பெண்களும் ஒன்றுதான் என்று படித்ததாகச் சொன்னானே! படித்ததைப் பயிற்சி செய்து பார்க்கிறானா? அவ்வளவுக்கா சாயா மோகம் தலைக்கேறியிருக்கிறது?

சற்றுமுன் சொர்க்கமாக இருந்த நிலை இப்போது தணல் படுக்கையாக மாறிவிட, அவசரமாக எழ முயன்றாள் ஜெயவாணி. ஆனால் ஆழ்ந்த உறக்கத்திலும் இரும்பாய்ப் பற்றியிருந்த அவனது பிடியிலிருந்து விடுபட முடியாமல், அவனாக விழித்து ''நீ... யா?'' என்று கேட்டு, விடுவிக்கும் வரை அந்த அணைப்பை அவள் சகித்தே ஆகவேண்டியிருந்தது.

அப்போதும் அந்த நீயா மேலும் ரணப்படுத்த, சீற்றமுற்று, ''அப்படியென்றால்?'' என்று தினகரனை நேராகப் பார்த்துக் கேட்டாள் அவள்.

அவன் ஒரு நமுட்டுச் சிரிப்



"அவனை வெளில தள்ளுன்னா ஜன்னல் வழியா இல்லை.''

புடன் தோளைக் குலுக்கிவிட்டுக் குளியல் அறைக்குள் புகுந்து கொள்ள, ஜெயவாணி வலியோடு சினத்தையும் சேர்த்தே விழுங்க வேண்டியதாயிற்று.

இது தொடர்ந்தது.

தூக்கத்தில் நாளுக்கு நாள் தினகரனின் சாயா ஜபம் அதிகமாகிக் கொண்டே வந்தது.

முன்னொரு காலத்தில் கொண்ட ஆசையினால், அந்த நினைவில், அதனால் வந்த கனவில், தன்னிச்சையின்றித் தூக்கத்தில் வந்த பிதற்றல் இந்தச் சாயா ஜபம் என்று விதம் விதமாய்த் தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டது முழுத் தவறு என்பது உள்ளங்கை நெல்லிக் கனி என்பார்களே, அதுபோல சர்வ நிச்சயமாய்த் தெளிவான பிறகு, ஜெயவாணி மறுத்தாள்.

விழி இடுங்க, ''ஏன்? என் மனைவி என்ற உரிமை வேண்டும். அந்தப் பதவியின் பலனான வசதிகள் வேண்டும். ஆனால் கடமை மட்டும் கசக்கிறதா?'' என்று ஏளனமாக வினவினான் தினகரன்.

''உங்கள் காலடியில் கிடக்கவும் தயார். ஆனால்...''

''ஆனால்?'' என்றான் அவன்

கண்கள் பளபளக்க.

''சாயாவை எண்ணி என்னை... என்றால் முடியாது.''

''அதாவது... இதுவரை வேறு வழியில்லாமல் என்னைச் சகித்திருக்கிறாய். இப்போது ஏதோ ஒரு சாக்குக் கிடைத்ததும் என்னைத் தளர்க்கப் பார்க்கிறாய். அப்படித் தானே?''

''ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்? இவ்வளவு நாள்... இவ்வளவு நாளும் எவ்வளவு ஆனந்தமாக இருந்தோம்? நான் வெறுத்திருக்கக் கூடும் என்று உங்களால் எப்படி நினைக்க முடிகிறது?'' என்றாள் அவள் வேதனைக் குரலில்.

''உன்னைப் பற்றி என்னென்னவோ தான் நினைத்திருந்தேன். அதில் எத்தனையோ தப்பு என்று நிருபணம் ஆகிவிடவில்லையா? இது மட்டும் சரியாக இருக்கும் என்று எப்படி நம்புவது?''

மீண்டும் குத்தல். அலுத்துப் போயிற்று அவளுக்கு.

ஒரு பெரிய மூச்சுடன், ''இப்போது என்னதான் செய்ய வேண்டும் என்கிறீர்கள்?'' என்று களைப்புடன் கேட்டாள் வாணி.




''அறிவுகெட்ட முண்டம். பார்த்து போடா.''

''சாயாவை நான் நினைக்காமல் இருக்க முடியாது. நீ அதைச் சகித்தே ஆகவேண்டும்.''

''அது முடியாது.'' என்று சுருக்கமாக முடித்து விட்டாள் அவள்.

''முடியாதா?'' என்று ஆத்திரத்துடன் அவளை உறுத்தவனின் பார்வை விலகி, அகலமான 'கிரில்லைத்' தாண்டி வெளிப்புறம் சலசலத்த மாமரக்கிளைப் பக்கம் சென்றது. ''முடியாது என்றால் மணவிலக்குதான் முடிவு,'' என்றான் அமர்ந்த குரலில்.

''அய்யோம்மா!'' என்று அலறிவிட்டாள் ஜெயவாணி. ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று புரிந்துதான் பேசுகிறீர்களா?'' என்றாள் பதட்டமும் ஆத்திரமுமாக.

''பேசுகிற பேச்சுக்குக் கூடப் பொருள் தெரியாத முட்டாள் என்றா என்னைப் பற்றி முடிவு கட்டியிருந்தாய்?'' என்று குத்திவிட்டுத் தொடர்ந்து பேசினான். ''நன்றாக யோசித்துப் பார்த்தால் அதுதான் மேல் என்று... ம்ம்... நிச்சயமாகவே விவாகரத்துதான் உத்தமம். உனக்காக நான் சாயாவை மறக்க முடியாது, பார்.''

''சாயாவை மணப்பதற்காக என்றால் நிச்சயமாக நான் விவாகரத்துக்கு ஒத்துக் கொள்ளவே மாட்டேன்,'' என்று நிலையிழந்து கீச்சிட்டாள் ஜெயவாணி.

''ஆமாம். அவள் உங்களோடு இணைய நான் விடவே மாட்டேன்!''

தினகரனின் கண்கள் மீண்டும் பளிச்சிட்டன. ''ஓகோ! மகாராணி மணவிலக்குக்குச் சம்மதிக்க மாட்டாயாக்கும். பட்டத்தைத் தக்க வைத்துக் கொள். ஆனால் மணவிலக்கோ, மறுபடி மணமோ இல்லாமல்கூட நாங்கள் சேர்ந்து வாழ முடியும் தெரியுமா?'' என்றான் சவால் விடுவதுபோல்.

காலம் காலமாய் நெறி கெட்ட ஆண்களின் திமிர்ப் பேச்சு!

இதைத் தினகரனும் பேசுவதா?

''நீங்கள் ஒழுக்கம் தவறி வாழமாட்டீர்கள்.'' என்றாள் ஜெய வாணி குரலில் திடத்துடன்.

சற்றுத் திகைத்தவனின் முகத்தில் சீற்றம் பரவியது. ''ஓ! அப்படி ஒரு தைரியமா? பார்க்கலாம்,'' என்று முடித்தான்.

பொருள் அன்று மாலை ஜெயவாணிக்குப் புரிந்தது.

சுமார் ஒரு மணியளவில் தினகரன் டெலிஃபோனில் அவளுடன் பேசினான். ''வெளியே போகிறேன். இரவு வீட்டுக்கு வர மாட்டேன். எங்கே இருப்பேன் என்று உன்னால் ஊகித்துக்கொள்ள முடியும் என்று நினைக்கிறேன்,'' என்று கூறி ரிசீவரை வைத்துவிட்டான்.

சாயா!

ஜெயவாணி நிலைகுலைந்தாள்.

சாயாவோடு தினகரன் முறையற்ற உறவு கொள்ளக்கூடும் என்று அவளால் இன்னமும் ஒத்துக்கொள்ள முடியவில்லை. அவன் அங்கே சென்றிருப்பது வெறும் வீம்புக்காகவே என்றே நம்பினாள்.

ஆனால் சாயாவை எண்ணி அச்சமுற்றாள்.

இரவில், மனைவியைப் பிரிந்து அவன் வந்திருப்பதைப் பயன்படுத்தி, சாயா தன் வாழ்வில் இன்னும் என்னென்ன புயல் கிளப்புவாளோ என்று பெரிதும் அஞ்சினாள். பொய் சொல்லத் தயங்காதவள் ஆயிற்றே! இன்றும் பல விதமாய் மன்றாடியதாகப் புளுகினால்?

இன்றைய மனநிலையில் தினகரன் அவளைத்தானே நம்புவான்?

அத்தோடு இந்த இராத் தங்கல்கள் வெளியே பரவினால் எவ்வளவு அவமானம்!

அதற்குமாறாக, தினகரன் தொடங்கியிருக்கும் குடிப்பழக்கத்தைக் கூட அவள் மேலும் வளர்த்து விடலாம்.



''ரொம்ப குறட்டை விடறாரு.''

மாமனாரிடம் முறையிடலாம் என்று பல தடவை டெலிஃபோனைக் கையில் எடுத்துவிட்டுப் பேசாமலே வைத்தாள்.

தாமோதரனோ கொஞ்சம் கடமுடாக்காரர். அவர்பாட்டுக்கு மகனை அதட்டிப் பேச, அவன் ஒரேயடியாகத் திருப்பிக்கொண்டு விடக் கூடாதே என்று அவரிடம் சொல்லவும் அஞ்சினாள்.

இரவு முழுவதும் படுக்கவோ உட்காரவோகூட முடியாமல் குறுக்கும் நெடுக்குமாக அலைந்தவள் கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தாள். கடைசி வழியாகச் சண்டைக்காரன் காலிலேயே விழுந்து விடுவது.

எது எப்படி ஆனாலும், தினகரன் இப்படித் தன்னைத் தானே அழித்துக் கொள்வதை இனியும் சகித்துக்கொள்ள முடியாது.

முதலில் குடி. இப்போது...

குறைந்தபட்சம் இந்தக் குடிப் பழக்கத்தை நிறுத்தும்படியேனும் சாயாவிடம் கேட்க வேண்டும். ஏனெனில் இவள் ஜெயவாணி என்ன சொன்னாலும் எதிர் செய்யும் வெறியால் அவள் வேண்டாம் என்று கேட்டதற்காகவே அதிகம் ஊற்றிக் கொண்டான் என்று உணர்ந்து, அது பற்றிய பேச்சை அவள் நிறுத்தியிருந்தாள்.

(தொடரும்)

# மைவிழி மயக்கம்

**27**

விரும்பி உண்ணாததோடு, வாணியின் உபசரிப்புக்கு இடம் கொடாததுமாகத் தினகரனின் உடம்பு மெலிவது அவளை வும் பாதித்திருந்தது. இதற்கெல்லாம் முடிவு டியே ஆகவேண்டும் என்று வாணி நிச்சயமாக னத்தாள்.

காலையில் தினகரன் தன் போக்கில் வந் ன். அவளை ஏறெடுத்தும் பாராமல் தன் லைகளை முடித்தான்.

கிளம்பும்போது மட்டும், ''இன்றும் இரவு வருவதற்கு இல்லை. சாயாவோடு பெங்க போகலாம் என்று இருக்கிறேன்,'' என்று ட்டு அவளது பதிலுக்காகக் காத்திராமலே ன்று விட்டான்.

ஜெயவாணி கொண்டிருந்த முடிவு வலுப் பற்றது.

பொதுவாக மாலையில் டிரைவரை அனுப்பி ட்டுத் தானே காரை எடுத்துக்கொண்டு வீடு நவதும், காலையில் தானே அலுவலகத்துக்கு ட்டிச் செல்வதும் தினகரனின் வழக்கம். அலு லகத்தில் இறங்கிக்கொண்டு டிரைவரிடம் காரை ட்டுக்கு அனுப்புவான். தன் தேவைக்குப் பயன் டுத்திக் கொண்டு, வாணி மாலைக்குள் காரைக் ம்பெனிக்கு அனுப்பி விடுவாள். இடையில் கார் தவைப்பட்டால் தினகரன் அருகில் இருந்த ராவல்ஸ்'லிருந்து வாடகைக் கார் எடுத்துக் காள்வான். சொந்தக் காரில் செல்லாவிட்டால் வுரவக் குறைச்சல் என்றிருக்கும் இடங்களுக்கு புவன் செல்ல வேண்டியிருந்தால் தவிர, பகல் முழுவதும் கார் வீட்டில்தான் நிற்கும். அப்போ ும், ''இன்னமும் ஆறே மாதங்கள். உனக்குத் னி கார் வாங்கித் தந்து விடுகிறேன். ஓட்டு தற்கு மட்டும், நான்தான் கற்றுத் தருவேன்,''

**ரமணிசந்திரன்**



என்று கொஞ்சுவான்.

இன்று காரை அனுப்புவானா, வாடகைக் காருக்குச் சொல்ல வேண்டுமா என்று ஜெயவாணி யோசித்துக் கொண்டிருக்கையில், கார் வந்துவிட்டதை வேலைக்காரப் பையன் வந்து தெரிவித்தான்.

ஒரு பெருமூச்சுடன் வாணி கிளம்பினாள்.

சாயா, ஜெயவாணியை எதிர்பார்க்கவில்லை என்பது நன்றாகவே தெரிந்தது. உடனேயே சமாளித்துக் கொண்டாள். ''வா'' என்று வாயால்கூட அழைக்கவில்லை. ''எங்கே வந்தாய்?'' என்றாள் குரலில் உதாசீனத்துடன்.

எடுத்த எடுப்பிலேயே இப்படியா என்று சோர்ந்த மனதை ஒருவாறு திடப்படுத்திக் கொண்ட போதும், வாணியின் கால்கள் லேசாக வெடவெடத்தன. பல நாட்களாகச் சரியாக உண்ணாத பலவீனமாகவும் இருக்கலாம். ஆனால் சாயாவின் வீட்டில் அவளாக அமரச் சொல்லாமல் அமர மனம் இன்றி, நின்றுகொண்டே பேசத் தொடங்கினாள் ஜெயவாணி.

மிகவும் மகிழ்ச்சியாக வாழ்ந்து கொண்டிருந்தவன் தினகரன். இப்



''உங்க பேரை முதல்ல சொல்லுங்க. அப்பதான் முதலாளி இருக்கான்னு சொல்ல முடியும்!''

போது ரொம்பவும் கஷ்டப்படுகிறான். சரியாக உண்ணுவதும் இல்லை, உறங்குவதும் இல்லை. ஒரு கெட்ட பழக்கமும் அறியாதவன். இன்று பாட்டில் பாட்டிலாகக் குடிக்கிறான். ஆள் பாதியாய் மெலிந்து விட்டான். அதனால் அவனது நன்மையைக் கருதி சாயா மிகவும் தயவு செய்து அவனைவிட்டு விலகிவிட வேண்டும். என்று மிகமிகக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் ஜெயவாணி.

தன் பளிங்குக் கண்களில் எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் கேட்டுக் கொண்டிருந்த சாயா, ''அப்படி உருகுகிறவள், நீதான் விலகிப் போய் விடேன்,'' என்றாள் சாவதானமாக. ''தினுவின் வாழ்வில் குழப்பம் தீரும். நாங்களும் நிம்... மதியாய், சந்தோ...ஷமாய் குடியும் குடித்தனமுமாய் வாழ்ந்து விட்டுப் போகிறோம்,'' என்று எகத்தாலம் பேசியவள், ஒரு துள்ளலில் எழுந்து நின்றாள். ''என்ன திண்ணக்கமடி உனக்கு. என் காதலனை ஏமாற்றி மணந்து கொண்டதும் இல்லாமல், 'விலகிப் போ' என்று என் வீடேறிச் சொல்ல வந்தாயா? மரியாதையாக விவாகரத்துக்குச் சம்மதித்துக் கையெழுத்துப் போட்டு விட்டுக் கண் காணாமல் ஓடிவிடு,' என்று அதட்டினாள்.

''மாட்டேன்.'' என்றாள் ஜெயவாணி உறுதியோடு.

''என்னடி மாட்டாய்? நீ ஒத்துக் கொண்டாலும் ஒத்துக் கொள்ளா விட்டாலும் நாங்கள் இனிச் சேர்ந்துதான் வாழப் போகிறோம்! தினகரன் எனக்கு வைரத்தால் அபிஷேகம் செய்யத்தான் போகிறார்.''

''இல்லை. நடக்காது. என் கணவர் தப்புவழி செல்ல மாட்டார்.'' என்றாள் ஜெயவாணி கோபமும் பரிதவிப்புமாக.

''செல்வார். செல்ல வைப்பேன். இதோ பார் எனக்குத் தின

கரனின் சொத்து வேண்டும். செல்வம் வேண்டும். அவன் பணம் வேண்டும். வைரமும் ரூபியும் எமரால்டும் நினைத்த நேரம் வாங்க வேண்டும். பென்சும், டயோடாவும் வேண்டும். ஒருதரம் அந்தக் கிழவன், அவன் தகப்பன் பேச்சைக் கேட்டு ஏமாந்து போனேன். இப்போது மீண்டும் கிடைத்ததை ஒரு நாளும் விடமாட்டேன். நாங்கள் இருவரும் இன்றைக்கு பெங்களூர் கிளம்புகிறோம். இங்கே இரண்டு நாட்கள் தங்கல். திரும்பி வரும்போது தினகரன் என் காலடியில் கிடப்பான்,'' என்றாள் சாயா கர்வத்துடன்.

''இப்போது நீங்கள் கூறியதையெல்லாம் அவரிடம் சொல்லுவேன்.'' என்று மிரட்ட முயன்றாள் வாணி.

ஆனால், ''தாராளமாய். ஆனால் இனியும் தினு உன்னை நம்பக் கூடும் என்றா எண்ணுகிறாய்? பா... வம்.'' என்று இடித்துக் கூறி இகழ்ச்சியாக நகைத்தாள் சாயா. ''அப்புறமாய் அந்தக் கிழவனையும் ஒரு கை பார்க்க வேண்டும்.''

அயர்ந்து போய், ''அவர் குடும்பத்தையே அழித்து விடுவாய் போலிருக்கிறதே!'' என்றாள் வாணி தன்னையும் மீறி.

ஆத்திரமுற்று, ''என் வீட்டில் வந்து இதைச் சொல்ல உனக்கு என்ன தைரியம்? மரியாதையாக உடனே இடத்தைக் காலி செய். இல்லாவிட்டால் வேலையாட்களை விட்டு அடித்து விரட்டுவேன்,'' என்று ஆங்காரத்துடன் கத்தினாள் சாயா.

பெரும் தோல்வி உணர்ச்சி வாணியைப் பற்றிக்கொண்டது. எண்ணிவந்த காரியத்தைச் சரியாகச் செய்யாததோடு உள்ளதையும் மேலும் கெடுத்துக் கொண்டது அவளை மேலும் சோர்வடையச் செய்தது. தினகரனின் நன்மையில்



''நீங்க கண்டிப்பா முடி வெட்டித்தான் ஆகணும்.''

---

சாயாவுக்கும் அக்கறை இருக்கும் என்று எண்ணியது எவ்வளவு பெரிய முட்டாள்தனம்!

கடைசி முயற்சியாக, நம்பிக்கையின்றியே, ''ஒரு திருமணத்தை உடைப்பது பெரிய பாவம் சாயா,'' என்றாள் மெல்லிய குரலில்.

''அய்யய்யோ! அப்படியாம்மா?'' என்று பயந்தாற் போலப் பாவனை செய்தாள் சாயா. ''இதற்கு என்ன செய்வது...?'' என்று யோசிப்பது போல நடித்தாள். ''ஆகா, ஐடியா! அவரையே மணப்பதன் மூலம்! இன்னொரு திருமணத்தைச் செய்து புண்ணியம் தேடிப் பாவத்தைச் சமன் செய்து விடுகிறேன். நீ என்னைப் பற்றிக் கவலைப்படாமல் போய்க் கையெழுத்துப் போட்டு விடம்மா,'' என்று எள்ளி நகையாடினாள்.

முழுக்க முழுக்க அடிபட்டவளாகத் திரும்பினாள் வாணி.

அவளை முட்டி மோதிக் கொண்டு, வேலைக்காரி போலத் தோன்றிய ஒருத்தி உள்ளே ஓடி வந்தாள். ''அக்காக்கா, அந்தய்யா தினகரன் அய்யா வருகிறாங்கக்கா.'' என்று மூச்சிரைக்க உரைத்தாள்.

# வந்து விட்டது... புதிய

தொந்தியுடன் வரும் தொலைக்காட்சித் திரைகள், நந்தி போல், மகிழ்ச்சிக்குப் போடுகின்றன இரும்புத் திரை. இதை உணர்ந்த பிலிப்ஸ், இப்பொழுது அறிமுகப்படுத்துகிறது புதிய பிலிப்ஸ் பவர்விஷன். இதன் திரை, சீரான நேர் மட்ட வடிவில் வருகிறது. எனவே, இப்பொழுது டி.வி. கட்டழகுடன் காட்சி அளிக்கிறது.

# பிலிப்ஸ் பவர்விஷன்

கருப்புத் திரையில், துல்லியமாய் படம் தெரிய, இதில் உள்ளது முழு, மட்ட, சதுரமான படக் குழாய். இதில் இல்லாதது தொந்தியேதானே தவிர, வலுவான அம்சங்கள் அதிகம் உள்ளன. உதாரணமாக : புதிய சினி சவுண்டு இரட்டை ஸ்பீக்கர்கள் ஸிஸ்டம். முன் பக்கம் முழங்கும் முழு அளவு ஸ்பீக்கர்கள். பர்ஸனல் பிரஃபரன்ஸ் வசதி.

# தொந்தி இல்லா டி.வி.

உலகத்தரமுள்ள புதிய எர்கானமிக் ரிமோட் கண்ட்ரோல். நீங்களே சொல்லுங்கள். ஒரு டி.வி.க்கு வேறென்ன தேவை ? உடனே விரையுங்கள் உங்கள் பிலிப்ஸ் டீலரிடம். பொதுவாகவே, பணம் இருந்தால் தொந்தி வரும் என்பார்கள். ஆனால், இப்பொழுது, பணமிருந்தால் தொந்தி இல்லா சீரான வயிறை வாங்க முடியும்... பிலிப்ஸ் மூலம் !

# ஸூப்பர் ஃபிட் டி.வி.

PHILIPS

பி கஸ்டமர் ரிலேஷன் சென்டர்ஸ் பம்பாய். போன் 4926611. கல்கத்தா. போன் 747333. தில்லி. போன் 5469692. சென்னை. போன் 8282221

இரு பெண்களுமே அதிர்ந்து போய் வாயிலை நோக்க, மெய்யாகவே தினகரன்தான் உள்ளே வந்து கொண்டிருந்தான்.

வந்ததும், வராததுமாய் ''இங்கே எங்கே வந்தாய்?'' என்று வர்ணியை அதட்டினான்.

சாயாவும் 'எங்கே வந்தாய்' என்றுதான் கேட்டாள். இருவருக்கும்தான் பொருத்தமா என்று ஒரு கணம் வாணியின் மனம் மருண்டது.

அதற்குள் சாயா சமாளித்துக் கொண்டாள் போலும். ஒரு சிறு 'க்ளுக்' சிரிப்புடன், ''கோவலனை மன்றாடி மீட்டுச் செல்வதற்காக இந்த நவீனக் கண்ணகி,



கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக அச்சிடப்பட்டது. முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

மாதவி வீட்டிற்கு வந்திருக்கிறாளாம்!'' என்றாள் கிண்டலாக. அவன் அருகே சென்று உரிமையுடன் அவன் தோளைப் பற்றி, ''நாம் எத்தனை மணிக்குக் கிளம்பலாம், தினு?'' என்றாள் கொஞ்சும் குரலில்.

அவள் கையை லேசாக விலக்கி, ''அதை அப்புறம் வந்து சொல்கிறேன், சாயா.'' என்றவன் மீண்டும் மனைவியிடம் திரும்பினான். ''கிளம்பு,'' என்று அவள் கரத்தை அழுந்தப் பற்றியவன் மடமடவென்று காருக்கு நடத்திச் சென்றான். ''ஏறு,'' என்று உறுமினான்.

பார்வை அலைய, ''டிரைவர்...'' என்று ஜெயவாணி தயங்கினாள். ''முதலில் காரில் ஏறிக்கொண்டு அப்புறம் பேசு,'' என்று கடித்த பற்களுக்கிடையே அவன் வார்த்தைகளைத் துப்பவும், சட்டென அவள் ஏறிக்கொள்ள தானும் ஏறிக் காரைக் கிளப்பினான். ''நான் வந்த டாக்சியில் டிரைவரை வீட்டுக்கு அனுப்பி விட்டேன்.'' என்றான், ''மேலே பேசாதே'' என்று எச்சரிக்கும் குரலில்.

அப்போதைக்கு எதையும் பேசி வாதாட அவளுக்கு விருப்பமில்லை. சாயா எத்தனை மணிக்குக் கிளம்பலாம் என்று கேட்டாளே. ஆக, இருவரில் யாருமே அவளை சும்மா மிரட்டவென்று சொல்லவில்லை போலிருக்கிறதே. இதன் அர்த்தம்... என்று கலங்கிக் கொண்டிருந்தாள்.

அவளுக்கு வேறு எதைப் பற்றியும், அந்த நேரத்தில் சாயா வீட்டுக்கு ஏன் வந்தான் என்று கேட்கக்கூடத் தோன்றவில்லை. கேட்டும்தான் என்ன பயன்?

வீட்டை அடைந்ததும், டாக்ஸி ஒன்று சற்று ஒதுங்கி நிற்பது கண்ணில் பட்டது.




கதவு திறக்க வந்த டிரைவர் முகத்தில் சிறு கவலையுடன் நோக்க வும், புன்னகை புரிய முயன்றபடி இறங்கி னாள்.

அதற்குள், ''காரை ஷெட்டில் விடு,'' என்று எஜமானன் கட்டளை யிட, அதை நிறை வேற்ற ஓடினான் டிரை வர்.

மீண்டும் கைப்பிடி யிலேயே மனைவியை மாடிக்கு அழைத்துச் சென்று நிறுத்தினான் தினகரன். சரமாரி யாகப் பொழியவும் தொடங்கி விட்டான். ''என்ன துணிச்சல் உனக்கு? என்ன தைரி யம் இருந்தால் சாயா வீட்டுக்குப் போவாய்? யாரை அழைத்துக் கொண்டு எங்கே போவது என்கிற அறிவாவது இருக்க வேண்டாம்? டிரைவர் என்ன நினைப்பான்? குடும்ப மானம், கவு ரவம் என்றால் என்னவென்று அர்த்தமாவது தெரியுமா, உங் களுக்கு?''

திட்டவேண்டும் என்ற வெறி யில் பேசுவதுபோலத் தோன்றியது அவளுக்கு. சாயாவோடு கொஞ்ச நேரம் சந்தோஷமாகப் பேசவேண் டும் என்று வந்திருப்பான். இவள் அதற்குத் தடையாக வந்துவிட் டாள் என்ற ஆத்திரம் என்று வருத் த்துடன் எண்ணினாள்.

அவன் பேசி முடிக்கும்வரை, பொறுமையாகக் காத்திருந்துவிட்டு, நீங்கள் சொல்கிற இடத்துக்கு ஏன் போவது பற்றி டிரைவர் ப்பாக நினைக்க எதுவும் இருப்ப ாக எனக்குத் தெரியவில்லை,'' என்று வெற்றுக் குரலில் பதிலுரைத் தாள் வாணி.

அதுவும் அவனுடைய கோபத் தையே கிளறியது. 'ஜெயவாணி யல்லவா? வார்த்தைக்கு என்ன பஞ்சம்? அப்படி அங்கே போய் என் னென்ன கண்டுபிடித்து விட்டா யாம்?'' என்றான் ஏளனமும் எரிச் சலுமாக.

சட்டென அவனை ஏறிட்டு நோக்கினாள் வாணி. ''கண்டு பிடித்துத்தான் இருக்கிறேன். சாயா வுக்கு உங்கள் பணம் ஒன்றுதான் குறிக்கோள் என்று அவள் வாய் மூலமாகவே...''

''பழைய பாட்டு.'' என் றான் தினகரன். அருவருப்புடன் ''அப்படிப் பார்த்தால் உன் குறிக் கோளும் அதுதானே?''

''இல்லை.''

''என்ன இல்லை? என் நன் மைக்காக என்று கூற வேண்டாம். ஏனென்றால் சாயாவும் அதையே தான் சொல்கிறாள். உன் வார்த் தைக்கு அவள் வார்த்தை. என்



''சினிமாவுல வேலைன்னாங்க. இப்படி நினைக்கலை.''

தராசில் இரண்டும் சமம்தான். உன் தட்டு தாழவேண்டுமென்றால் நீ வேறு காரணம்தான் உருவாக்கியாக வேண்டும்,'' என்று தோளைக் குலுக்கினான் தினகரன்.

''புதிதாக உருவாக்கத் தேவையில்லை,'' என்றாள் வாணி மெதுவாக. இமை தட்டாமல் கணவனையே நோக்கி, ''உங்களை நான் மணக்க விரும்பியதன் ஒரே காரணம் காதல்'' என்றாள் விழிகளில் நீர் மல்க.

''வாட்!''

''ஆமாம். உங்களை முதல் முதல் பார்த்ததிலிருந்தே அப்படித்தான். எட்டாக்கனி என்று உள்ளேயே மறைத்திருந்தேன். நீங்களாகக் கேட்டதும்... உங்கள் நன்மையை எதையும்விட மேல் என்று நான் கருதிச் செயல்படவும் அதுவே காரணம்.''

ஒளிவு மறைவின்றி உடையவன் முன் உள்ளத்தைத் திறந்து வைத்தாள் ஜெயவாணி.

ஆனால் - அவனோ, ''இல்லை... இல்லை. நம்புவதற்கில்லை.'' என்றான் அவள் சொன்னதை ஒப்புக் கொள்ள மனமற்றவனாய்.

நிராசையுடன் தலையசைத்து, ''இதற்குமேல் நான் என்ன சொல்லட்டும்? நான் சொல்வது உண்மை. சத்தியம் குரு.'' என்றாள் அவள்.

சட்டென அவன் முகம் கறுத்தான். ''உன் பேச்சில் எது சத்தியம், எது அசத்தியம் என்று கண்டுபிடிக்கும் சக்தி எனக்குக் கிடையாது என்பது ஏற்கெனவே நிரூபிக்கப்பட்ட ஒன்று...'' என்றவன் அவள் முகத்தைப் பார்த்துவிட்டு, ''ஒருவேளை நீ சொல்வது உண்மையாகவே இருந்தால் சரி. உனக்காக வருத்தப்படுகிறேன். இரங்குகிறேன். மற்றபடி... உன்மனம், உன் காதல், எல்லாம் உன் விஷயம். இதில் நான் கூற எதுவும் இல்லை. நான் போக வேண்டும். கிளம்புகிறேன்,'' என்றவன் வேகமாக விலகிச் சென்றுவிட்டான்.

(தொடரும்)



''மூக்கில சொட்டு மருந்து போட வேற ஏதும் முறை இல்லையா டாக்டர்?''

## 28

மு டிந்தது.

தினகரனோடான மகிழ்ச்சிகரமான மணவாழ்வு ஒரு குறுகிய காலத்தில் ுடிந்து போயிற்று.

இதைத் தாங்கி வாழ்வது முடியாது என்றே ஜயவாணிக்குத் தோன்றியது. ஒருவேளை நெஞ் க்குள் இருக்கும் இந்த இறுக்கம் தாளாமல் அதுவே வெடித்து அவளுக்கு விடுதலையைத் தந்துவிடுமா?

அப்படி ஏதும் நடந்து, எல்லாம் முடிந்து ிட்டால் எவ்வளவு நிம்மதியாகப் போய்ச் சேர்ந்து ிடலாம் என்று எண்ணும்போதே கடமை ஒன்று ுவளை உறுத்தியது.

அவளது வாழ்வு முடிந்திருக்கலாம்.

ஆனால் பணம், சொத்து என்று தினகர னைப் பேயாகப் பற்றப்போகும் சாயாவிடமிருந்து ுவனை எப்படியாவது காப்பாற்றி விடவேண் ாமா?

# விழி மயக்கம்

# ரமணிசந்திரன்

இதனால் அவன் தன்னிடம் திரும்பி வந்து ிடப் போவது இல்லை என்பதை வாணி நன்றா வே உணர்ந்திருந்தாள். அவனளவில் வாணி ிபாய்த்துப் போனவள். முடிந்துவிட்ட கதை ஏன் ுதும் அவள் அறிந்ததே. ஏன், மனதில் சிறு நன்றி ட இராது. மாறாக, அவளை மேலும் வெறுப் ான் என்பதும் உறுதியே.

ஆனால் இந்தச் சாயாவை ஒரு காலத்தில் றந்து, வேறொரு நல்ல பெண்ணோடு அவனுக்கு இனிய இல்லறம் அமையுமானால் வாணிக்கு ுதுபோதும்.

அத்தோடு, சாயா ஒரு கை பார்க்கப் போவ ாகச் சொன்னாளே, பாவம், அவன் தகப்பனா ரையும் தினகரனைக் காப்பதன் மூலம் காப்பாற்றி ிட முடியும்.

தாமோதரனின் ஞாபகம் அவளது இன் னொரு கடமையையும் வாணிக்கு நினைவுறுத்தியது.

அவளிடம் அவர் கொடுத்த நகைகள். அவர் சொத்தை அவரிடம் திரும்பவும் ஒப்படைத்து விடு ுது அவளது கடமையல்லவா?

ஜெயவாணி சட்டென நிமிர்ந்து அமர்ந்தாள். சொத்து... பணம்... அவரது பணத்தின் மூலம் கிடைத்த பங்குகளை அவர் பெயருக்கே மாற்றிவிடும்படி தினகரன் கையெழுத்திட்ட பத்திரம்! அதைப் பத்திரமாக வைத்திருப்பதாக அவர் சொன்னாரே!

இன்னமும் சாயாவிடமிருந்து தினகரனைக் காப்பாற்ற ஒரு வழி இருக்கிறது. அந்தப் பங்குகளின் வருமானம் இல்லாவிட்டால் சாயா விரும்பிய வைரமும், பென்சும் முடியாத காரியம். வீட்டுக்கும் அலுவலகத்துக்கும் 'ஷட்டில்' அடிக்கும் ஒரு காரும் சிறுசிறு நகைகளுமாகத்


குமுதம்

நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.
நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
பொறுப்பாசிரியர்
சுஜாதா
பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்
உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்
நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்
நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி
அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்
வடிவமைப்பு ஆலோசகர்
டிராட்ஸ்கி மருது
தலைமை நிருபர்
பால்யூ
ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா பாவின்ஸி

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக அச்சிடப் பட்டது. முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.


திருப்தியுடன் வாழ்வது சாயா
முடியாத காரியம்! கடவுளே

எழுந்து ஓடிப்போய் வெ
நோக்கினாள்.

கார் நின்றது. தின
டாக்சியில்தான் சென்றிருந்த

அவசரமாகச் சென்று க
அமர்ந்து பண்ணை வீட்டு
காரை ஓட்டச் சொன்னாள்.

தாமோதரன் வெகு உற்
மாய் மருமகளை வரவேற்
''வா மருமகளே வா. கிழவ
பத்து நாளாகக் காணோம்
றான பிறகுதான், அவன் இ
மிடம் தேடி வந்து எட்டிப் பார்
தோன்றியதா? ஏய், சௌந்
வாயைப் பிளந்துகொண்டு எ
பார்வை? போய் உன் புருஷ
சொல்லி நல்ல காயாய் இர
இளநீர் இப்போதே பறித்துச்
கொண்டு வரச் சொல்லு. ஒ
உட்காரம்மா. இங்கே ஒரு
முழுவதும் பாசுமதி விதை
பார்த்தேனில்லையா? ஒரே பு
களை. அதுதான் வரமுடியாமல்
என்றபடி தானும் அமர்ந்துகொ
மருமகளின் முகம் பார்த்து
திகைத்து, ''என்னம்மா?''
றார் பரிவும் கவலையுமாக.

பத்து நாட்களுக்குப் பி
ஒரு பரிவான சொல்லில் ஜெயவ
யின் கண்கள் கலங்கின.

''சா... சாயா!'' என்
உதடு நெருங்க.

''நினைத்தேன். உன்னை
படியாக்க வேறு யாரால் முடி
ஆனால் எந்தப் பேயாய் இருந்
என்ன? அதற்காக இப்படியா?
படி என்ன பயம் உனக்கு? நீதா
மனைவி?''

''மனைவியா?'' கசந்த
வல் ஒன்று அவளது உதடு
தோன்றி உடனேயே மறைந்

''மாமா, உங்கள் மக
காப்பது இப்போது உங்கள் கை

ான் இருக்கிறது,'' என்று
தொடங்கி, சுருக்கமாக விவரம்
ரைத்தாள். ''அந்தப் பங்குகளை
ங்கள் பெயரிலேயே மாற்றிக்
காள்ளுங்கள் மாமா. ஒன்றுமே
ரப் போவதில்லை என்று...''
ாமோதரனின் பார்வையில் பேச்சை
றுத்தி, என்னவென்று கேட்டாள்.

''நம்ப மாட்டானே,
ஜயாம்மா. ஒரு தடவை இதே
ஸ்டண்ட்' அடித்து அது பொய் என்
ும் தெரிந்தாயிற்று. மகானுபாவன்
க்கீல் புண்ணியம் கட்டிக்கொண்
ார். பையன் மேல் என் பாசம்
ற்றி அவன் அறியப் பறைசாற்றி
ிட்டார். பங்குகளை என் பெயரி
லயே மாற்றிக் காட்டினாலும்கூட,
ங்கே போய்விடுவான் கிழவன்,
ருப்பதோ ஒரே பிள்ளை. நாலே
ாளில் கோபம் தீர்ந்து தானாக
ழிக்கு வந்துவிடுவான் என்று
ணக்குப் போட மாட்டானா?''

''அதுவும் சரிதான். ஆனால்
ன்றேனும் இந்தப் பணம் தினகர
ுக்கு வரும் என்று இருந்தால்
ானே? இந்தக் கணக்கு?''

''இதையெல்லாம் ஏதாவது
ரும நிறுவனங்களுக்கு எழுதி
வைத்து விடுங்களேன் மாமா!''
ன்று அடுத்த வழி கண்டுபிடித்து
ிட, உற்சாகத்துடன் அவரை
நாக்கினாள் வாணி.

''பிற்பாடு உனக்கு வர
வண்டாமாம்மா?''

''எனக்கா! எனக்கு எதற்கு
ம்மா? சாயாவின் பிடியிலிருந்து
வர் தப்பினால் போதாதா?''

இரக்கத்துடன் நோக்கி,
'இது தெரியவில்லையே, அந்த
டையனுக்கு?'' என்றார் தாமோ
ரன் ஆற்றாமையோடு.

சிறிது நேரம் அங்கே மவுனம்
லவியது.

பெரியவருக்கு இந்தப் பங்கு
ளை வெளியே கொடுத்து அடி



''உங்கப்பா எங்கே? சினிமா பார்க்கப் போயிருக்காரா?'' — கருணா

யோடு தாரை வார்த்துவிட விருப்
பம் இல்லை என்பதை ஜெயவாணி
யால் ஊகிக்க முடிந்தது.

இது அவர் பாடுபட்டுச் சம்
பாதித்தது. நூறல்ல, ஆயிரமல்ல.
பல கோடிகள். இதை வாரி இறைக்
கும்படி கேட்பது நியாயமும் இல்லை.
கேட்க அவளுக்கு உரிமையும் இல்லை.

இந்தப் பணத்தை இழக்கா
மலே மகனை மீட்டுவிட அவர் வழி
தேடுகிறார்.

ஆனல் சாயா எவ்வளவு பயங்
கரமானவள் என்று அவருக்குத்
தெரியவில்லையே!

''ஏம்மா, அவளைப் பிடித்து
உள்ளே போட்டுவிட்டால்?'' என்
றார் தாமோதரன் திடீரென்று.

தூக்கிவாரிப் போட்டுக்
கொண்டு வாணி நிமிரவும், ''அவ
சரப்படாமல் சற்று யோசித்துப்
பாரம்மா. ஜெயிலுக்குப் பயந்து
அவள் ஓடிவிட மாட்டாளா?''
என்று கேட்டார்.

''என்னவென்று புகார்
பண்ணுவீர்கள்?''

''மனைவியிருக்க இரண்டாம்
கல்யாணம் கட்டிக்கொண்டதாக.''

''அப்படிப் புகார் கொடுத்
தால் முதலில் உங்கள் மகனைத்





தான் பிடிப்பார்கள். அத்
மணம் செய்யவில்லையே?''

''பின்னே அந்த...
கழுதை வீட்டில் இவனுக்கு
வேலையாம்?''

''நண்பர். ஏதாவது
செய்யப் போயிருக்கலாம்.''

''என்ன, நீ வேறு, த
தட்டிப் பேசிக் கொண்டு
கிறாயே!'' என்று எரிந்து
தார் தாமோதரன்.

''கோர்ட்டில் அப்
தான் சொல்வார்கள் மாமா

''ம்... உன்னை அடி
கிடித்து இம்சை செய்த
புகார் கொடுப்போமா?''

''அப்படி எதுவும் ப
வில்லையே மாமா.''

''ச்சே... என்ன பெ
ணும்மா நீ. வாய் வெந்தால்
நெருப்பு என்று சொல்ல
டுமா? நீ இங்கே சும்மா உன்
பேசிக்கொண்டே இரு. அ
அந்தப் பிசாசு உன் புருவ
அடித்துக் கொண்டுபோகப்
றாள். உனக்குக் கணவன்
டுமா, வேண்டாமா? ஆமாம்,
யாமல்தான் கேட்கிறேன், இ
இவ்வளவு பார்க்கிறவள்,
றைக்கே அவனிடம் சொல்லி
ஒதுங்கியிருக்கலாம் இல்லைய
என்று பொறுமை இழந்து பட
தார் அவர்.

''செய்திருக்கலாம்.
ரணம் இவ்வளவு பெரியதாக
வளவு ஆழமாக ஏற்பட்டிரா

மருமகளின் முகம் பே
வாடுவது பொறுக்காமல், ''
பணத்துக்காகப் பார்க்கிறேன் எ
நினைக்கிறாயாம்மா? உன்னை
எனக்குப் பணம் பெரிதல்ல
மகளே. ஆனால் பணம் வே
வெறியில் அவள் அவனைக்
விட்டால்? எனக்கு என்
வேண்டுமேம்மா? அதற்காகத்

...வ்வளவு யோசிக்கிறேன்,'' என்று ...ாமோதரன் கூறவும் ஜெயவாணி ...டுக்கிட்டாள்.

அவள் அதை யோசித்துப் ...ார்க்கவில்லையே! அன்பின் துய ...ம் அவள் அறியாதது இல்லையே! ...ழுக்க முழுக்க அனுபவித்துக் ...காண்டிருக்கும்போதே எப்படி ...றந்தாள்?

சற்று நேரம் தீவிரமாய் ...யாசித்துவிட்டு, ''மாமா, நான் ...வரிடம் விவாகரத்துக்குச் சம்ம ...ம் தெரிவித்து எழுதிக் கொடுத்து ...டப் போகிறேன்.'' என்றாள்.

''நீ ஒரு முட்டாள்!'' என்று ...றிவித்தார் பெரியவர்.

ஒப்புதலாய்த் தலை அசைத் ...நாள் அவள். ''முட்டாளேதான். ...ரும்பாத மனிதரிடம் மனதை ...வைத்துவிட்டு... கைக்கிளைக் காதல் ...ன்று பாடமாய்ப் படித்தபோது ...புரியாமலேயே போயிற்று. உண்மை ...அன்பு என்றால் அது இருவருக் ...டையேதான் ஏற்படும் என்று ...ண்ணினேன். ஆனால் உண்மை ...அன்புக்கும் எதிரொலி இல்லாமல் ...போகும் என்பது இப்போதுதான் ...தெரிகிறது. அது எவ்வளவு ஆழ ...மான அன்பு என்றாலும்...

மருமகளின் மெல்லிய குர ...லில் மறைந்திருந்த வேதனை புரிந்து ...தாமோதரன் மனமுருகிப் போனார். ''வேண்டுமானால் ஒரு பொய் ...சொல்லலாமாம்மா? அன்று அவள் ...டெலிஃபோன் செய்ததை நீ என் ...னிடம் சொன்னதாகவும், நான் ...தான் பையனிடம் சொல்லக்கூடாது ...ன்று தடுத்ததாகவும் சொல்லி ...விடலாமே...''

அவளுக்காக மகனிடமே ...பொய் சொல்லத் துணிகிறாரே! ...லேசாக முறுவலித்து, ''நம்ப மாட் ...டார் மாமா. உண்மையையே நம் ...பாதபோது பொய்யை எப்படி நம்பு ...வார்?'' என்றாள் அவள்.

''நீ பைத்தியக்காரி அம்மா.



''போன மாசமே உங்க சம்பளத்தை ஏத்திட்டேனே! உங்க மனைவி சொல்லலை?''
— சாரா

இந்தக் காலத்தில் உண்மையைவிட பொய்யைத்தான் இலகுவாக நம்பு வார்கள். நீயானால் கண்ணில் மைகூடப் போடாமல்...'

''விடுங்கள் மாமா. இன் னும் மை, பொய் என்று... மாமா, எனக்கு ரொம்பவும் மனதுக்குக் கஷ்டமாக இருக்கிறதே?''

தொண்டையில் அடைத் ததை விழுங்கிக் கொண்டு, ''இங்கே வாம்மா.'' என்றார் பெரியவர்.

எழுந்து சென்று, தரையில் அமர்ந்து, அவரது முழங்காலில் தலை சாய்த்தாள் அவள். தன் போக்கில் கண்களில் நீர் பெரு கியது.

மருமகள் தலையை மெல்ல வருடியபடி, ''நான் தினகரனிடம் பேசுகிறேன்,'' என்றார் தாமோ தரன்.

''வேண்டாம் மாமா. அப் புறம் அவர் உங்களிடம் சற்று நன் றாய் இருப்பதும் கெட்டுவிடும்.''

''என்னம்மா நீ? ஊரில் உள்ள அத்தனை பேருக்காகவும் பார்க்கிறாய். கொஞ்சம் உன்னை யும்தான் நினையேன்.''

(தொடரும்)




29

ரமணிசந்திரன்

"என்னையா...? அதுவும் சரிதான். இனி நினைப்பதற்கு வேறு என்ன இருக்கப் போகிறது? நீங்கள் மனோகரா சினிமா பார்த்திருக்கிறீர்களா, மாமா? நான் டி.வி.யில் ஒரு தரம் பார்த்தேன். அதில் அந்த மனோகரனுடைய தாய் வில்லியிடம் ஓர் இடத்தில், 'உன்னை அழித்துவிட என் மகன் துடித்த போதெல்லாம் அடக்கி வைத்தேன். ஏன் தெரியுமா? நீ அழிந்தால் என் கணவர் வருத்தப்படுவார் என்பதால்தான்,' என்று சொல்லுவாள். 'என்ன முட்டாள்தனம்! அப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டாலாவது கெட்டவளிடம் கணவனை விட்டுவிட்டு இருப்பாளா' என்று ஏளனமாக, எரிச்சலாக நினைத்தேன். இப்போது புரிகிறது மாமா. அவராவது நன்றாக இருக்கட்டும் என்று..." என்றாள் ஜெயவாணி.

"சரி. இப்போதைக்கு அவன் எப்படியோ போய்விட்டு வரட்டும். ஆனால் உரிமையோ, பணமோ லேசில் கையில் வராது என்றால்

# 120 இலட்சம் குழந்தைகள் தமது வாய்க்குள் கேடு விளைவிக்கும் ஓர் பொருளை இடுகின்றனர்.

## உங்கள் குழந்தையும் அவற்றில் ஒன்று ?

அப்பொருள் எது தெரியுமா ? நீங்கள் பரிபூரணமாக நம்பி உபயோகிக்கும் டூத்பேஸ்ட்தான். வயது வந்தவர்கள் உபயோகிக்கும் டூத்பேஸ்ட்களும் ஜெல்களும் சுரண்டும் தன்மையுள்ள அப்ரேஸிவ் ஆகும். இவை உங்களது குழந்தையின் நாசூக்கான பற்களுக்குக் கேடு விளைவித்து வலிவிழக்கச் செய்யக்கூடும்.

காரணம், குழந்தைகளது பற்களின் மீதுள்ள எனாமல் பூச்சு, வயது வந்தவர்களது பற்களின் மீதுள்ளதைக் காட்டிலும் மென்மையானதாகும். ஆகவே, உங்கள் குழந்தைக்குத் தேவைப்படுவது குழந்தைகளுக்கான ஓர் டூத்பேஸ்ட் ஆகும்.

ப்ராமிஸ் ஜஸ்ட் ஃபார் கிட்ஸ். குழந்தைகளுக்கென்றே விசேஷமாக ஃபார்முலேட் செய்யப்பட்ட டூத்பேஸ்ட். சாதாரணமாக வயது வந்தவர்களுக்கான டூத்பேஸ்ட்களில் காணப்படும் சுரண்டும் தன்மையுள்ள அப்ரேஸிவ், இதில் கிடையாது. அதே சமயம் பற்குழிகளை எதிர்க்கும் கிராம்புத் தைலத்தின் நற்குணங்கள் அனைத்தும் இதில் உள்ளது.

அதனால், பிரிட்டிஷ் டென்ட்டல் ஹெல்த் ஃபவுண்டேஷன் (BDHF) ப்ராமிஸ் ஜஸ்ட் ஃபார் கிட்ஸ் டூத்பேஸ்ட்டை குழந்தைகளுக்கு உகந்ததென ஒப்புதல் வழங்கியுள்ளது.

ஆகவே, உங்கள் குழந்தைகள், வயது வந்தவர்களுக்கான டூத்பேஸ்ட் உபயோகிப்பதை உடனே தடுத்திடுங்கள். வாழ்நாள் முழுதும் அவர்களது பற்கள் கெடுதலுக்குள்ளாவதை தவிர்த்திடுங்கள்.




**BDHF ஒப்புதல் பெற்ற இந்தியாவின் ஒரே டூத்பேஸ்ட.**

அவள் அதிக நாள் தரிக்க மாட்டாள்,'' என்றார் தாமோதரன் மருமகளுக்கு ஆறுதலாக.

மெல்ல நிமிர்ந்து அமர்ந்தாள் ஜெயவாணி. ''இல்லை மாமா. சாயா எதற்காக இவரைச் சுற்றினாலும், உங்கள் மகனின் அன்பு உண்மையானது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. என் சுய நலத்தால் அந்த அன்பு நிறைவேறாமல் போகவேண்டாம். அன்பு வைத்துவிட்டு, அது கைகூடாமல் போவது எவ்வளவு வேதனை என்று எனக்குப் புரிகிறது, மாமா. இந்த வேதனையை அவர் அனுபவிக்க வேண்டாம். ஒருவேளை அவரது அன்பு அவளையும் மாற்றிவிடக் கூடும் அல்லவா? அவரும் பணமும் கிடைக்கும்போது சாயாவுக்கு வேறு என்ன வேண்டும்? யோசியுங்கள் மாமா, உங்களுக்கும், உங்கள் குலம் தழைக்க வேண்டாமா? இதை ஒரு கூடா வாழ்வில் அவர் தொடங்குவானேன்? அந்த மாதிரித் தப்புக்கு அவர் எவ்வளவு சிரமப்படுவார் தெரியுமா? நான் சம்மதித்துவிட்டால் அவருக்குத் தப்பு செய்கிற துன்பம் இராதல்லவா?'' என்றவள் அவசரமாக எழுந்தாள்.

''அவர் பங்களூர் கிளம்பு முன் அவரிடம் சொல்லிவிட வேண்டும் மாமா. எப்படியும் துணிமணி எடுக்க வீட்டுக்கு வருவார் அல்லவா?'' என்று ஓடிப் போய் அவர்களது வீட்டுக்கு டெலிஃபோன் செய்தாள்.

''அய்யா வந்து கொஞ்ச முன்னேதாம்மா பெட்டி எடுத்துப் போறாங்க,'' என்றான் வேலைக்காரன்.

சற்று முன்னதாகவே இந்த யோசனை வந்திருக்கக் கூடாதா என்று தன்னையே நொந்தபடி, டெலிஃபோன் டைரக்டரியில் சாயாவின் நம்பரைத் தேடி டயல் செய்தாள்.

''அக்காவும், தினகரன் அய்யாவும் காரிலே கிளம்பி அரை அவர்தான் ஆவுது,'' என்றாள் சாயா வீட்டு வேலைக்காரி.

ஜெயவாணி செயலற்று நிற்கவும், ''என்னம்மா?'' என்று எழுந்து வந்தார் தாமோதரன். ''எனக்கு என்னவோ நீ தப்பு பண்ணுகிறாய் என்று தோன்றுகிறது,'' என்றார்.

''இல்லை மாமா. இதுதான் சரி.'' என்றாள் வாணி தெளிவுடன். ''மாமா, நான் இப்போது கிளம்புகிறேன். வீட்டில் டைரியில், சாயாவுடைய ஏஜென்டின் நெம்பர் இருக்கும் அவர் மூலம் அவர்களோடு தொடர்பு கொள்ளப்



போகிறேன்,'' என்று வந்தது போலவே அவசரமாகக் காரை எடுக்கச் சொன்னாள்.

''இரம்மா, துணி மாற்றிக் கொண்டு நானும் உன்கூட வருகிறேன்.'' என்றவரிடம், ''பரவாயில்லை, மாமா.'' என்றாள் வாணி. ''நீங்கள் கூட வரவேண்டும் என்று அவசியம் இல்லை மாமா. சொல்லப் போனால் எனக்குக் கொஞ்சம் தனிமைதான் தேவை மாமா,'' என்று உரைத்துவிட்டு, ஓடிச் சென்று காரில் ஏறி, டிரைவரை ஓட்டச் சொன்னாள்.

கார் ஓடும்போதே வேகமாக யோசித்தாள்.

சாயாவும் தினகரனும் பங்களூருக்கு எப்படிப் போகக் கூடும்? விமானத்திலா, காரிலா? தினகரனின் கார் இங்கே இருப்பதால் அனேகமாக ப்ளேனில்தான் செல்வார்கள். விமான நிலையத்துக்கே போய்ச் சொல்லி விடலாமா? அவனை நேராகப் பார்த்து இதை அழாமல் சொல்ல முடியுமா? பொது இடத்தில், நாலு பேர் பார்க்க ரசாபாசம் ஆகிவிடக் கூடாதே...

வெகு வேகமாய் எண்ணங்கள் ஓடும்போதே வெகு தூரத்தில் ஒரு காரின் 'ஹார்ன்' ஒலி கேட்டது. ரொம்பவும் விசித்திரமான ஒரு வெளிநாட்டு மியூசிக்கல் ஹார்ன். இதுபற்றி முன்பு 'ஒளிவு மறைவு இல்லாமல்' கொட்டிய போது, தினகரன் அவளிடம் ஒரு தரம் சொல்லியிருக்கிறான். இது சாயாவின் கார் ஹார்ன்.

கணத்தில் முடிவு செய்து, காரை ஓரமாக நிறுத்தச் சொல்லி, வேகமாகக் காரை விட்டு இறங்கினாள் ஜெயவாணி.

அதற்குள் தூரத்திலிருந்து வந்து கொண்டிருந்த காரும், அதைச் சாயா ஓட்ட, தினகரன் அருகே இருப்பதும் தெரிந்தது.

எஜமானியின் உத்தேசம் புரிந்து, ''அம்மா, வேண்டாம்.'' என்று டிரைவர் இறங்கி ஓடிவரு முன், எதிரே வந்த காரை நிறுத்தும் படி, கைகளை உயரத் தூக்கி ஆட்டிச் சைகை செய்தபடியே சாலை நடுவுக்கு ஓடினாள் ஜெயவாணி.

ஆனால் நிற்கும் என்று எதிர்பார்த்த கார், முன்னிலும் பெரும் வேகமும் ஓசையுமாகப் பூதமாய் அவளை நெருங்கவும், செய்வது அறியாமல் ஒருகணம் பிரமித்தவள், சுய உணர்வு பெற்றுத் துரிதமாக வழியிலிருந்து விலக முயன்றபோது அதற்குத் தேவையான காலம் கடந்து விட்டிருந்தது.

தார் ரோட்டில் டயர்களின் தாறுமாறான உரசல் சத்தம். உதைபட்ட பந்தாய்க் காற்றில் பறப்பதுபோல ஓர் உணர்வு.

தரையைத் தொடுமுன்பே ஜெயவாணி நினைவிழந்து விட்டாள்.

ஜெயவாணி குற்றவாளிக் கூண்டில் நிற்கிறாள். நீதிபதி ''இவள் உண்மையை மறைத்துப் பொய்யள் ஆகிப் போனவள். இவள் மேல் காரை ஏற்றிக் கொல்லுங்கள்.'' என்று தீர்ப்புக் கூறுகிறார். தீர்ப்பை நிறைவேற்றுவதற்காக வாணியைச் சாலையில் கிடத்தியிருக்கிறது. மின்னல் வேகத்தில் காரைச் சாயா ஓட்டிக் கொண்டு வருகிறாள்.

''வேண்டாம்!'' என்று கதறியபடியே கண்ணைத் திறந்து பார்த்தாள் ஜெயவாணி.

எதிரே அவளுடைய ஆருயிர்க் கணவனின் திருமுகம். அப்படியானால் அவள் உயிரோடுதான் இருக்கிறாளா? ஆனால் இவன் கண்ணில் நீர் வடிவானேன்? ஒரு வேளை....

சொல்வதற்குக் கஷ்டமாக இருந்தது. ஆனால் தினகரன் கண் கலங்கி நிற்பது அதைவிடவும் தாள

# பொறுப்பும் வளர்ந்தது!



DIPR/DIS/94/TFS

POWERFIN

**பவர்ஃபின்**

84, டி.டி.கே.சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600 018. தொலைபேசி: 4997689 / 4995428

(This is in continuation of our earlier advt. published in "News Today" on 17.9.94.)

பெருமுயற்சி செய்து, ''அழாதீர்கள். நீங்கள் சாயாவை மணக்க நான் சம்மதிக்கிறே...ன்...'' என்று கூறி முடிக்கு முன்பே மீண்டும் அவளது விழிகள் மூடிப் போயின.

மறுதரம் அவள் விழித்த போது அந்த அறையில் துணையிருந்தவர் தாமோதரன்.

''என்ன நடந்தது மாமா?'' என்று கேட்டபோது, அந்தப் பலவீனமான குரல் தன்னுடையது தானா என்றிருந்தது அவளுக்கு.

''உனக்கு ஒரு குறையும் இல்லை. பேசாமல் தூங்கு,'' என்றார் பெரியவர்.

''சார்... கார் மோதியதே! சா... யா... அப்புறம்...'' அவள் அலட்டிக் கொள்ளவும், மருமகளைப் பேசாதிருக்கச் சொல்லிவிட்டுத் தாமோதரன் விவரம் சொன்னார்.

சாயா ஓட்டிவந்த வேகத்தில், அந்தக் கார் மட்டும் நேராக ஜெயவாணியின் மேல் மோதியிருந்தால் அவளைத் துண்டு துண்டாகத்தான் பொறுக்க நேர்ந்திருக்கும். ஆனால் வாணியை மிகவும் நெருங்கி விட்ட நிலையில், கார் அவளுக்கு எதிர்ப்புறமாய், நேர்க் கோணத்தில் ஒடித்துத் திரும்பியது. ஆனால் வாணி மிகவும் அருகில் இருந்தபடியால் என்ன முயன்றும் முடியாமல் விலக முயன்று கொண்டிருந்த, அவளது இடைச் சரிவில் மோதி, கார் அவளைத் தூக்கி எறிந்து விட்டது. உயரத் தூக்கி எறியப்பட்டவள், புவி ஈர்ப்பு விதியின்படி மீண்டும் தரையில் வந்து விழுந்த வேகத்தில் கை, கால்களில் கடுமையாய்ச் சிராய்த்து விட்டது. இடைச் சரிவில் ஊமையடியாய் உள்ளே காயம் கொஞ்சம். மற்றபடி சீரியசாக எதுவும் இல்லை என்று டாக்டர் சொல்லிவிட்டார்.

அதுதான் இவர் வந்திருப்

றும் இல்லை என்றானதும் தினகரன் சாயாவைத் தேடிப் போய்விட்டானாக்கும்.

ஆனாலும் ஒரு நப்பாசையில் அவளது விழிகள் அலைந்து, விரும்பியதைக் காணாமல் சோர்ந்து திரும்பின.

தாமோதரன் முட்டாள் அல்ல. அவளது சோர்வின் காரணம் உணர்ந்து, ''நேற்றிலிருந்து அவன் உன்னை விட்டு அகலவே இல்லை. இப்போதுதான், இருபத்து நாலு மணிநேரம் கழிந்து விட்டது; ஹெமரேஜ் பயம் இல்லை என்று டாக்டர் உறுதி கொடுத்த பிறகு, அவனைக் கொஞ்சம் ஓய்வு எடுக்கும்படிக் கட்டாயப்படுத்தி அனுப்பினேன். ஏதோ எல்லாம் நல்லபடியாக ஆயிற்று என்று நீயும் நிம்மதியாய் நன்றாக ஓய்வெடுத்து, விரைவிலேயே உன் வீடு வந்து சேரப் பார். ம்... தூங்கு,'' என்றார் சற்று அதட்டலாகவே.

## அன்றும்



ராஜீவ் காந்தி

ஜெயவாணி என்ன சின்னப் பிள்ளையா, இந்தக் கதையை நம்பி ஏமாறுவதற்கு. தினகரன் இப்போது பங்களூரில் சாயாவுடனல்லவா இருப்பான்?

அவனாவது மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம் என்று தனக்குத்தானே பல முறை சொல்லிக் கொண்டபோதும் அவளது மனம் மிகவும் சோர்ந்து தான் போயிற்று.

யாருடனும் பேசப் பிரிய மற்று கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

தாமோதரன் எழுந்து செல்வதை உணர்ந்தபோதும் கண்களைத் திறக்கவில்லை. ஏனெனில் அவரது இரக்கத்தையும் இப்போது பொறுக்க முடியாதென்று அவளுக்குத் தோன்றியது.

மனதின் சோர்வினாலோ, மருந்தின் வேகத்தினாலோ அவள் சற்றுக் கண்ணயர்ந்திருக்க வேண்டும்.

## இன்றும்



காமினி திசநாயகே

நெற்றிமீது இதமாய்ப் படிந்த கையை உணர்ந்ததும் அவளது விழிகள் விலுக்கெனத் திறந்து கொண்டன.

தினகரன்!

இது கனவும் அல்ல! கற்பனையும் அல்ல! மெய்யாகவே தினகரனே தான். எதையும் புரிந்துகொள்ள முடியாமல், ''நீங்கள்... இப்போது பங்களூரில் அல்லவா இருக்க வேண்டும்,'' என்று அசட்டுத்தனமாக விசாரித்தாள்.

அவள் அருகே அமர்ந்து, ''தான் எங்கே இருக்க வேண்டும் என்பது உன் கணவனுக்கு நன்றாகவே தெரியும்,'' என்று அமர்த்தலாக மொழிந்தவனின் முகம் உடனே கசங்கியது. சட்டெனக் குனிந்து, ஜெயவாணியை அள்ளி அணைத்துக் கொண்டான் அவன். ''வினாடியில் என்னை என்னமாகப் பயமுறுத்தி விட்டாய்? உன்னை இழந்து விடுவேனோ என்று... கடவுளே!''

தினகரனின் இறுகிய அணைப்பும், உடலின் நடுக்கமும், நெஞ்சின் படபடப்பும் உணர்த்திய சேதியை ஜெயவாணியால் நம்பக்கூட முடியவில்லை. இவளிடம் அவன் மணவிடுதலை கேட்டு முழுசாக இரண்டு நாட்கள் முடியவில்லை. இல்லை. நேற்றிலிருந்து என்றாரே மாமா. அப்படியானால் மூன்று நாட்களா?

அணைப்பில், அவளது தோள் மீது படிந்திருந்த அவனது கையிலிருந்த கடிகாரத்தில் அன்றையத் தேதியைக் காண முயன்றாள் ஜெயவாணி.

ஆனால் அவளது அசைவை வேறுவிதமாய் எண்ணி அவசரமும் மென்மையுமாய் அவளை விடுவித்தான் தினகரன். ''வலிக்கிறதாம்மா,'' என்று பதறினான்.

(தொடரும்)

# லாரி வாங்க வேண்டுமா?

நெய்வேலியிலிருந்து வாசகர் வி. கந்தசாமி எழுதிய கடிதத்தின் ஒரு பகுதி.

''நான் பிரைவேட் கம்பெனி பஸ் டிரைவராகப் பணியாற்றி வருகிறேன். சொந்தமாக லாரி வாங்கி ஓட்ட நினைக்கிறேன். கடன் வாங்கும் வழியினை, விவரங்களைத் தர முடியுமா?''

இவருக்கு, சென்னை அமைந்தகரையில் தொழில் இயந்திரம் மற்றும் நிர்வாக ஆலோசகராக இருக்கும் ஞானசேகர் கூறும் தகவல்கள்:

தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம் (Tamil Nadu Industrial Investment Corporation) என்பது தமிழக அரசு நிறுவனம். வருடத்திற்கு 300 கோடி சிறுதொழில் செய்வதற்காகவும், லாரிகள், வேன்கள், டிராவல்ஸ் நடத்தப் பயன்படும் அம்பாசடர் கார்கள், ஆட்டோ ரிக்ஷாக்கள் வாங்குவதற்காக இந்த நிறுவனம் கடன் உதவி அளிக்கிறது. தமிழகம் முழுவதும் இக்கழகத்தின் கிளைகள் உள்ளன.



ஞானசேகர்

இதன் தலைமை அலுவலகம், ஒயிட்ஸ் ரோடு, சென்னை–6ல் உள்ளது.

மேற்படி கடிதம் எழுதியவர் நெய்வேலியில் இருப்பதால் கடலூரில், பாண்டிச்சேரி ரோடில் உள்ள கிளை அலுவலகத்திலிருந்து இவர் கடன் உதவி பெறலாம்.

கடன் உதவி பெற என்ன தகுதிகள் இருக்கவேண்டும்?

தமிழ்நாட்டைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும். லாரி வாங்க வேண்டுமானால், அதனை ஓட்டுவதற்கான லைசன்ஸ் இருக்கவேண்டும். இதே போல் எந்த வாகனம் வாங்குவதாக இருந்தாலும் அதற்கான லைசன்ஸ் பெற்றிருக்க வேண்டும். கடன் பணம் பெறும்போது, அதற்காக ஜாமீனுக்கு அரசு ஊழியர் இருவர் 'காரண்டி' தருவதற்காக உத்தரவாதக் கையெழுத்துப் போடவேண்டும். அல்லது சொத்து வகையறா இருந்தால் அவற்றை ஜாமீனாக வைக்கவேண்டும்.

விண்ணப்பதாரர் ஆதி திராவிடராக இருந்தால், தமிழ்நாடு ஆதி திராவிடர் வீட்டு வசதி மற்றும் வளர்ச்சி நிறுவனம் (TADCO) நிறுவனம் மூலம் கடன் வசதி பெறலாம்.

இதன் அலுவலகம், சென்னையில் கீழ்ப்பாக்கம் போஸ்ட் ஆபீஸ் அருகே உள்ளது.

பிற்பட்டோர் பிரிவினருக்குக் கடன் வசதி கிடைக்க தனி நிறுவனம் உள்ளதா?

ஆமாம். தமிழ்நாடு பிற்பட்டோர் பொருளாதார முன்னேற்றக் கழகம், அண்ணாசாலையில்

பெரிய இடைவெளி இருக்கிறது என்பதையே இந்தத் தேர்தல் முடிவுகள் காட்டுகின்றன.

டெமக்ராட்டுகளின் தோல்விக்குத் தானே காரணம் என்று அவர் பெருந்தன்மையுடன் ஒப்புக் கொண்டாராம்.

அடுத்த ஜனாதிபதி தேர்தலுக்கு இந்த முடிவு ஒரு மிரட்டலாகவே இருக்கப் போகிறது.

இனி கிளிண்டன் எந்த முடிவை எடுத்தாலும் எதிர்க்கட்சிகளின் கருத்தையும் கவனத்தில் கொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருக்கிறது.

உலகப் பிரசினைகள் அப்புறம் உள்நாட்டுப் பிரசினைகளைக் கவனியுங்கள் என்று அமெரிக்க மக்கள் சொல்லியிருக்கிறார்கள்.

இலங்கையாக இருந்தாலும் சரி, அமெரிக்காவாக இருந்தாலும் சரி, ஜனநாயக நாடுகளில் மக்கள் மிகத் தெளிவாக இருக்கிறார்கள் என்பதை இந்த இரு தேர்தல் முடிவுகளும் காட்டுகின்றன.

நல்லவற்றை வரவேற்கவும், தண்டிக்க வேண்டியவற்றைத் தண்டிக்கவும் அவர்கள் தயங்குவதே இல்லை!

## துப்பாக்கி வேண்டாம்

காஷ்மீரைச் சர்வதேச பிரசினையாக்க முயற்சித்த பாகிஸ்தான் தோல்வியுற்றது.

காஷ்மீரில் மனித உரிமைகள் மீறப்படுவதாகக் கூறி தீர்மானத்தை ஐ.நா. சபையில் தாக்கல் செய்ய ஐ.நா.வின் பிரதிநிதியுடன் பேச்சு வார்த்தையில் கலந்துகொள்ள வேண்டும் என்று பாகிஸ்தான் முயன்றது. 7ம் தேதி தீர்மானம் கொண்டுவருவதாகத் திட்டமிட்டுப் பின் 2 நாள் அவகாசம் கேட்டது. நம்முடைய நிலை தெளிவானது . இது உள்நாட்டுப் பிரசினை. பாகிஸ்தானுடன் சிம்லா ஒப்பந்தத்தின் அடிப்படையில் தீர்த்துக் கொள்ள வேண்டும். வெளி ஆட்கள் கூடாது.

இதை விரும்பாத பாகிஸ்தான் முஸ்லிம் நாடுகளின் கூட்டணியான 52 நாடுகளின் ஆதரவைப் பெறுவதற்குப் பல வகைகளில் முயற்சி செய்தது. அரேபியா, துருக்கி, நிகர், அல்பானியா, காம்பியா, போஸ்னியா ஆகிய 6 நாடுகள் மட்டுமே தீர்மானத்தை ஆதரிப்பதாக வாக்குறுதி அளித்தன. 45 முஸ்லிம் நாடுகள் எதிர்ப்பு தெரிவித்து விட்டன.

ஆதரவு கிட்டாத நிலையில் இந்தியாவுக்கு எதிரான பிரதிநிதி, வாலைச் சுருட்டிக்கொண்டு இஸ்லாமாபாத் திரும்பிவிட்டார். 20 வருடம் முன்பும் பாகிஸ்தான் இதேபோல் தீர்மானம் கொண்டுவந்து தோல்வியில் முடிந்தது.

1972'ம் ஆண்டு சிம்லா ஒப்பந்த அடிப்படையில் மற்ற நாடுகளின் குறுக்கீடு இல்லாமல் இரு நாடுகளும் பிரசினையைப் பேசி சுமுகமாகத் தீர்வு காணவேண்டும் என்ற இந்தியாவின் கருத்தில் நியாயமிருப்பதை உலக நாடுகள் புரிந்துகொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

பாகிஸ்தான் இப்போதாவது தன்னுடைய ஒதுக்கப்பட்ட நிலையைப் புரிந்துகொள்ள வேண்டும்.

பேச்சு வார்த்தை மூலமாகத்தான் விடை காணமுடியும் என்பது உதயமாக வேண்டும்.

பெனாசிர், ஏகே 47களையும் 56களையும் தூர எறிந்துவிட்டு மேசைக்கு வருவதுதான் புத்திசாலித்தனம்.



# மைவிழி மயக்கம்

**30**

ஜெயவாணி இருந்த நிலையைப் பார்த்து, ''நான் ஒரு மடையன். போய் டாக்டரை...'' என்று நகர முனைந்தான் தினகரன்.

வலிதான். மருந்துகளின் வேகம் குறைந்து சுரணை ஏற ஏற, அங்கங்கே உடம்பில் 'விண்விண்' என்று வேதனை தெறித்தது. ஆனாலும் 'கண்ணிழந்தான் பெற்றிழந்தான்' என்ற நிலையில் இருந்தவள், தெய்வச் செயலாய் மீண்டும் அருகில் வந்த கணவன் விலகுவது பிடிக்காமல் அவனைத் தடுத்து நிறுத்தினாள். ''எனக்கு ஒன்றுமில்லை. தேதி பார்த்தேன்.'' என்று அவனது கைக்கடிகாரத்தைக் காட்டினாள்.

''ஓ!'' என்றவன் ஓர் ஆறுதல் மூச்சுடன், மீண்டும் அவள் அருகிலேயே அமர்ந்தான். ''ஒரு நாள் முழுதாக இருபத்துநாலு மணி நேரம் உன்னைச் சுற்றியிருக்கும் உலகம் அறியாமலே கிடந்திருக்கிறாய்.''

'பரவாயில்லையே! ஒரு நாளைக்கு இருபத்துநாலு மணி நேரம் என்பதைக்கூடத் தெரிந்து வைத்திருக்கிறீர்களே! அமெரிக்காவில் நன்றாகத்தான் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள்!' என்று பழைய வழக்கம் போல் கிண்டல் தொண்டைக்குள் துடித்த போதும், அதைச் சொல்வதற்குரிய திடமோ, மனநிலையோ இல்லாமல் பேசாமல் கிடந்தாள் ஜெயவாணி. அவன் அருகில் இருப்பதே போதும் என்றிருந்தது அவளுக்கு.

ரமணி சந்திரன்

ஏதோ நினைவில் தினகரன் உடல் சிலிர்த்து, ''வாணி, உனக்குக் கஷ்டமாயிராவிட்டால் என் மேலேயே சாய்ந்து கொள்கிறாயா? எனக்கு... எனக்கு நீ என் கைகளுக்குள் இருந்தால் தவிர, நீ இருக்கிற... நீ நன்றாயிருக்கிறாய் என்பதை நீ பிழைத்திருப்பதை இன்னமும் என்னால் முழுமையாக நம்ப முடியவில்லை, கண்ணம்மா,'' என்றான் குரலில் கரகரப்புடன்.

கஷ்டமா? உயிர் வாதனை என்றாலும் சகித்துக் கொள்ள மாட்டாளா?

ஆனால் வசதியாகக் கணவன் தோளில் சாயுமுன், அவளது விழிகளில் ஆழத்தேடி, தேடியதைக் கண்டுகொண்ட நிம்மதியோடு, ''அப்படியானால் நீங்கள் என்னை மன்னித்து விட்டீர்களா...?'' என்று மெல்லிய குரலில் வினவினாள்.

''மன்னிப்பதா? உன்னையா? என்னை உரிமையோடு அழைக்கும் தைரியத்தைக்கூட அழித்திருக்கிறேன். என்னை நீயல்லவா மன்னிக்க வேண்டும்?'' என்றான் தினகரன் வருத்தத்துடன்.

அவன் வருந்துவது பிடிக்காமல், ''அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது. உங்கள் முன் நோயாளியாகக் கிடந்து எனக்கு முன் அனுபவம் கிடையாதில்லையா? இப்போது நீங்கள் குருவா அல்லது பாஸ்தானா என்று கொஞ்சம் குழம்பிப் போனேன். அவ்வளவுதான்,'' என்று சமாதானம் சொன்னாள்.

''ஆமாம், சமாளி. இந்த மடையன் வருத்தப்பட்டு விடக்கூடாதில்லையா? குற்றத்தை எல்லாம் உன் தலைமீதே போட்டுக் கொள். கடவுளே! நான் எவ்வளவு பெரிய மூடனாக இருந்திருக்கிறேன்!'' என்று மீண்டும் தன்னையே நொந்து கொண்டான் தினகரன்.

தன்னைத் திட்டிக் கொள்வதிலுமா இந்தப் பிடிவாதம்!

பேச்சை மாற்ற ஒரு வழி தேடியபோது, ''இந்தப் பாசுமதி...'' தாமோதரனின் குரல் கேட்கவும் ஜன்னல் வழியே நோக்கினாள் வாணி. ''பண்ணை வீடு!'' என்றாள் ஆச்சரியமாக.

மீண்டும் உடல் சிலிர்த்தான் தினகரன். ''ம். அடிபட்டு அசைவே இல்லாமல் கிடந்தாய். ஒரே ரத்தம். நாடித் துடிப்பு இருக்கிறதா இல்லையா என்று நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. நகரம் வரை உன்னைக் காரில் எப்படி அழைத்துப் போவது? நேரே இங்கே கூட்டி வந்துவிட்டேன். இங்கிருந்து போன் செய்து டாக்டரை வரவழைத்து, டாக்டர் வந்து பார்க்கும் வரை என்ன மாதிரி நரகத்தில் இருந்தோம் தெரியுமா? ஆனால், இது என்ன பைத்தியக்காரத்தனம் வாணி? அப்படியா நடுச் சாலையில் நின்று வேகமாக வரும் காரை நிறுத்த முயற்சிப்பார்கள்? அது யாருடைய கார் என்ன ஏது என்று இல்லாமல்...

''அது சாயாவின் கார் என்று தெரியும்.'' என்றாள் வாணி சின்னக் குரலில். அதை இனம் கண்டவிதம் பற்றியும் கூறினாள்.

''அப்படி இருந்தாலும் நான் வீடு வரும் வரை பொறுக்க மாட்டாமல் அப்படி என்ன அவசரம்?'' என்றான் அவன் சிறு கோபத்துடன்.

என்ன அவசரம் என்று அவன் மனைவி எடுத்துக் கூறவும், சற்று நேரம் தினகரனால் பேச முடியவில்லை.

இதற்கு மேல் இறுக அணைத்தால் அவளுக்கு வலிக்குமா என்று அஞ்சினான். குனிந்து அவள் தலைமேல் கன்னம் பதித்து, சற்று நேரம் அசையாமல் இருந்துவிட்டுச் சொன்னான். ''நான் சாயாவுடன் பெங்களூர் செல்வதாக இல்லை, பேபி.'' என்றான் மிருதுவான குரலில்.



சில குழந்தைகளுக்குத்தான் எவ்வளவு விரைவில்
நொறுக்குத் தீனிப் பழக்கம் துவங்கிவிடுகிறது ?

தாயாகப் போகும் உங்களுக்கு காரசாரமான பதார்த்தங்கள், மாங்காய், புளி வகைகள் மற்றும் சாக்கலேட் போன்ற இனிப்புகளை உண்பதற்கான மசக்கை ஏற்படலாம்.

இது சகஜம்தான் எனினும் ஒன்று மட்டும் நினைவிருக்கட்டும். நீங்கள் சாப்பிடுவது இருவருக்காக. நீங்கள் சாப்பிடும் உணவுதான், உங்கள் குழந்தைக்கும் போய்ச் சேருகிறது.

ஆகவேதான், சாப்பிடும் உணவு சமச்சீர் உணவாக இருப்பதில் நீங்கள் கவனம் செலுத்த வேண்டும். அப்படி உட்கொள்ளும் பட்சத்தில் குழந்தை கொழுகொழுவென்று ஆரோக்கியமாக பிறக்கும்.

முட்டை பற்றி சிந்திப்போம்.

ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் அடைக்கப்பட்டுள்ளதாகும் முட்டை. இதிலே உன்னத தரமுள்ள புரதச் சத்து அடங்கியுள்ளது. குழந்தையின் முறையான வளர்ச்சிக்கும், வருங்காலத்தில் நோய் எதிர்ப்புச் சக்தியை அவன் பெறவும் இது உதவும் என்பதில் சந்தேகமில்லை.

அடுத்ததாக, இதிலே வைட்டமின்-A செறிந்துள்ளது. (இது குழந்தையின் கண்களுக்கும், சருமத்திற்கும் சிறந்தது). நல்ல ஜீரண சக்திக்கும், நரம்புகள் வலுப்பெறவும் தேவையான வைட்டமின்-B க்ரூப்புகள் அனைத்தும் உள்ளது. தவிர உறுதியான, திடமான எலும்புகளை உருவாக்க வைட்டமின்-D யும் உள்ளது.

அது மட்டுமல்ல. முட்டையிலே 11 வகை கனிஜப் பொருட்கள் உள்ளன. உடல் இயக்கத்தை சரிவர வைப்பதில் கனிஜப் பொருட்களுக்கு பெரும் பங்கு உண்டு. இரும்புச் சத்து இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்கிறது. அதே சமயம் பாஸ்பரஸ் மூளை வளர்ச்சிக்கு உதவுவதுடன், குழந்தைகளின் ஞாபக சக்தியைப் பெருக்கவும் உதவுகிறது.

ஆகவே இன்றே முட்டை உண்ணத் தொடங்குவீர். அதன் மூலம் உங்கள் குழந்தைக்கும் புஷ்டியான உணவு கிடைக்கக் கூடும்.



**எந்த நாளும் சிறந்தது. முட்டை உண்ண உகந்தது.**

NECC

நேஷனல் எக்
கோ-ஆர்டினேஷன்
கமிட்டி

Enterprise/NECC/26/Tm

சற்றே விலகி, அவன் முகத்தைப் பார்த்து, ''நீங்களே போவதாகச் சொன்னீர்களே?'' என்று கேட்டாள் வாணி.

அவன் முகம் கன்றியது. ''அது உன்னை வருத்தவென்று சொன்னது.'' என்றான் இறங்கிய குரலில்.

யோசித்து, ''சாயாவும் சொன்னாளே!'' என்றாள் அவள்.

முகம் கறுத்து, ''அவள் சொல்வதற்கு என்ன?'' என்றான் தினகரன். ''பெங்களூரில் ப்ரோகிராம், கூட வாங்கள் என்று என்னைக் கொஞ்சி அழைத்துக் கொண்டிருந்தாள். எப்படியாவது என்னைச் சம்மதிக்க வைத்து விடலாம் என்பது அவள் எண்ணம். காலையில் டெலிஃபோனில் இரண்டு பேருக்கும் ரூம் ரிசர்வ் செய்து விட்டதாகச் சொல்லிவிட்டு ஃபோனை வைத்து விட்டாள். திரும்பவும் டெலிஃபோன் செய்து அது சரியில்லை என்றாள். அந்தப் பேச்சு தொடங்கினாலே ரிசீவரை வைத்து ஒரே தொல்லை. அதனால் நேரில் சொல்ல வந்தால், அங்கே நீ இருந்தாய்...''

ஆக, அவன் ஒன்றை மறுப்



''போலீஸ்காரரே! ஏதாவது உதவி வேணுங்களா?''

பதற்காகத்தான் அந்த நேரத்தி
சாயா வீட்டுக்குப் போயிருக்கிறான்
சும்மா சும்மா அவளைப் பார்க்கு
ஆசையில் இல்லை!

சற்று முகம் மலர்ந்தவளா
உடனே வாடினாள்.

கேள்வியாய் நோக்கியவ
டம், ''முந்திய இரவு அன்று அங்
போவதாகச் சொன்னீர்களே...''
என்றாள்.

''இல்லை. அப்படிச் சொல்
வில்லை. அங்கே இருப்பேன் என்
ஊகித்துக் கொள் என்றேன். இர
முழுவதும் காரிலேயேதான் இரு
தேன். ஆக, நீங்கள் தப்பு செய்
மாட்டீர்கள் என்று என்னிட
சவால் விட்டது எல்லாம் சும்ம
தானா?''

''இல்லை. உங்கள் மே
எனக்கு நம்பிக்கை இருந்தது. ஆனா
என்னைத் தண்டிக்கும் வெ
யில்...''

''ஆமாம். அப்படி ஒரு வெ
இருந்தது உண்மைதான்.'' என்
ஒத்துக் கொண்டான் தினகரன்
''வாணி, உனக்கு அசதியாக இரு
தால் கொஞ்சம் ஓய்வெடுத்து
கொள். இதையெல்லாம் பிற
விவரமாகப் பேசிக் கொள்ளலாம்
இப்போதைய மனநிம்மதிக்காக
இந்த ஆறடி மனிதனின் ஒவ்வோ
அணுவும், உள்ளமும் உனக்கு
சொந்தம் என்று உறுதி தருகிறேன்
கொஞ்ச நேரம் தூங்குகிறாயா?''

''இல்லையில்லை. அசதி
கிடையாது. இந்த விவரங்கள் அ
முதல் நுனி வரை தெரியாவிட்டா
பொட்டுக் கண் மூட முடியாது என்
ஜெயவாணி சர்வநிச்சயமா
சொன்ன பிறகு, தினகரன் மே
தொடர்ந்தான்.

சாயாவின் நளினங்க
நடிப்பு, செயற்கை அலங்காரங்க
இயல்பாக வாயில் வரும் பொ
எதுவும் அவனைப் பெரிதா

பாதித்தது கிடையாது. யாருக்கு வந்த விருந்தோ என்பதுபோலச் சம்பந்தமற்றுப் பார்க்க முடிந்தது. ஆனால் ஜெயவாணியின் விஷயம் அப்படியல்ல.

''உன்னிடம் பிழை என்றால் என்னால் தாங்க முடியவில்லை, வாணி. நீ என்னவள். என்னில் பாதி. அதிலும் பெருமைக்குரிய பாதி. உனக்குச் சின்னப் புத்தி வரலாமா? எனக்கு வந்த ஆத்திரம் சாயாவை இழந்ததற்காக அல்ல. அவள் காரணமாகப் பொய், ஏமாற்று என்று நீ இறங்கிப் போனாயே என்றுதான். இனிமையான உறவைப் பாழடித்து விட்டாய் என்ற கோபம். உன் சுயநலத்துக்காக, நீதி, நேர்மை, என் விருப்பம் எல்லாவற்றையும் தூக்கித் தூரப் போட்டுவிட்டாயே! என் வாழ்வில் உன் நலத்துக்காகத் தப்பாட்டம் ஆடியிருக்கிறாய். உன்னைத் தண்டித்தே ஆக வேண்டும் என்று முடிவு செய்தேன்.

''சாயாவை ஒதுக்குவது இப்போது சிரமமாகத் தோன்றவில்லை. ஆனால் அதற்காகவே என்னை ஏமாற்றிய உனக்கு, அப்படி ஒரு வெற்றியை அடையும் தகுதி கிடையாது என்று நினைத்தே மீண்டும் மீண்டும் அவளைப் பார்க்கச் சென்றேன்– மனதுக்குப் பிடிக்காவிட்டாலும் கூட.

''அதைக்கூட உன் குற்றமாகத்தான் கருதினேன். சாகசம் செய்து என்னை மயக்கி விட்டாய். அதனால்தான் சாயாவைப் பிடிக்கவில்லை என்று உன் குற்றத்தைக் கூட்டினேன்.

''உன்னைப் பார்த்தாலே தொட வேண்டும், அணைக்க வேண்டும், முத்தமிட வேண்டும் என்று ஒரு வேகம், மேலே மேலே கட்டுப்படுத்த முடியாத அளவு வலிமையோடு என்னைத் தாக்கியது. நான் இவ்வளவு பலவீனமானவன் என்று எனக்குத் தெரியாது, வாணி.



## இ.வர.சி.

சிரிப்பு: சி. கார்த்தி
படம்: வி. சுந்தரராஜு,
கோவை.

உன்னை மறக்கத்தான் ஒரு நா குடித்துப் பார்த்தேன். இன்னமு கட்டுப்பாடு தளர்ந்ததுதான் மி சம். அதனால்... அதனால் பிற குடி என்கிற திரைமறைவில் குடி ததுபோல நடித்து உன்னை அணை தேன்.

''இப்படித் தோற்கிறேே என்று அருவருப்பாகவும்– என்மீ தான்– இருந்தது. ஆனால் உன்ன மறக்க முடியவில்லை. ரொம்பவு யோசித்து, அவளை நினைத் உன்னை அணைப்பதாகக் காட் வதே உனக்குரிய தண்டனை என் முடிவு செய்தேன். ஆனால் உன்ன அணைத்துக் கொண்டிருக்கும்போ சாயாவின் பெயரை நினைவுக் கொண்டுவர நான் என்ன பாடுப வேண்டியிருந்தது தெரியுமா?''

அவன் எரிச்சலோடு சொன் விதத்தில் தன்னை மீறிச் சிரித்தா ஜெயவாணி. இந்தப் பாடுபட்டிரு கிறானே! பெரிய பழிவாங்கல்!

(தொடரும்

# மைவி
# மயக்கம்



## 31

ஒரு வேகத்தில் சொல்லிக் கொண்டிருந்தவனின் முகம் அந்தச் சிரிப்புச் சத்தத்தில் இளகி மலர்ந்தது. அவளது நெற்றியில் புரண்ட கூந்தல் சுருளை மென்மையாக விலக்கிவிட்டு, அவள் மூக்கைப் பிடித்துச் செல்லமாக ஆட்டினான். ''ஆமாம், சிரி. நான் பட்டபாடு எனக்கல்லவா தெரியும்!'' என்றவன் மீண்டும் தொடர்ந்தான்.

''மனைவி என்ற பதவியின் மாயக் கவர்ச்சியோ என்று ஓர் எண்ணம். அதற்காகத்தான் விவாகரத்து கேட்டேன். ஆனால் நீ சாயா வீடு வரை வந்தது ஒரு பெரிய அதிர்ச்சி.

''அன்று நீ காதல் என்றாயே! இன்னொரு பொய்யா என்று முதலில் கோபம்தான் வந்தது. ஆனால் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தேன். நீ பழகிய முறையை ஆராய்ந்தேன். அன்று முதலாளிக்கு வேண்டியவள் என்று தெரிந்த பிறகும் சாயாவிடம் வெறுப்புக் காட்டினாயே! அப்பாவிடம் எப்

ரமணி சந்திரன்

பழிப் பேசினாய்! காதல்தான் என்று என் மனமும் ஒத்துக் கொண்டு விட்டது.''

மனைவியின் முகத்தை ஒரு பரிதவிப்புடன் மிருதுவாய் வருடியபடி மேலே பேசினான் தினகரன்.

''அந்த இரண்டாம் நாள் இரவு! அந்த இரவு முழுவதும் உனக்கு எப்படிப்பட்ட சித்ரவதையாக இருந்திருக்கும்! ஒட்டி அணைத்துப் படுத்திருக்கும் கணவன் மனதில் இன்னொருத்தி என்னும் போது பிய்த்து எறிந்துவிட்டு ஓடிவிட வேண்டும் போல இருந்திருக்குமே! எப்படிச் சகித்தாயோ?

''வாணி, அன்று நான் மனம் தளர்ந்திருந்தேன். நீதான் கதி என்று உன்னைப் பற்றியிருந்தேன். அப்போது உன் கையில் பச்சைக் களிமண் நான். நீ மட்டும் கொஞ்சம் நெகிழ்ச்சி காட்டி சாகசம் செய்திருந்தால்? நாம் கணவன், மனைவி எனும் போது அதைப் பிழை என்றுகூடச் சொல்ல முடியாது. ஒரு சிறு ஜாடையில் நான் சரணாகதி ஆகியிருப்பேனே!

''ஆனால் கண்மணி, உன் நேர்மையல்லவா அதற்கு இடம் கொடுக்கவில்லை. உள்ளூர எத்தனையோ ஆசையிருந்தும், எல்லாம் அடக்கி ஒரு சன்னியாசினியாகத் தவம் இருந்தாய். உன்னைப் போய்த் தப்பு செய்தவள் என்பது... உன்னைத் தப்போடு சம்பந்தப்படுத்திப் பார்ப்பதுகூட எவ்வளவு பெரிய பிசகு! உனக்குத் தண்டனையாவது மண்ணாவது? அதன்பின் சாயாவின் பெயர்கூட வெறுப்பாயிற்று.''

புரியாமல் நிமிர்ந்து, ''பின்னே?'' என்று தொடங்கினாள் வாணி.

''என்ன பின்னே?''

''வீட்டில் இருந்து பெட்டி எடுத்துப் போனீர்களே?''

''ஆமாம். ஆபீசுக்குக் கொண்டு செல்லும் ப்ரீஃப்கேஸ் காலையில் இருந்த மனநிலையில் விட்டுவிட்டுப் போயிருந்தேன்.''

''ஆனால் சாயாவின் காரில் பெங்களூருக்குப் போனீர்களே?''

அலர்ந்திருந்த முகத்தில் கேள்வியாய் மலர்ந்திருந்த செவ்விதழ்களில் முத்தமிட்டு, அவன் சொன்னான். ''அன்று என்னால் வேலை பார்க்க முடியவில்லை. பெங்களூருக்கு வர முடியாது என்று சாயாவிடம் முடிவாகச் சொல்லிவிட்டு, வீட்டுக்குக் கிளம்பினேன். நம் வீட்டில் விட்டுவிட்டுப் போவதாகச் சொன்னாள். நீ பண்ணை வீட்டுக்கு அப்பாவைப் பார்க்கச் சென்றிருப்பதாக அங்கே தகவல் கிடைத்தது. வழிதானே, பண்ணையிலேயே என்னை விட்டு விடுவதாகச் சொன்னாள். இது தற்காலிகத் தோல்வி. சுமுகப் போர்வையை விட வேண்டாம் என்று நினைத்தாளோ என்னவோ. ஆனால்... உன்னைப் பார்த்ததும் சாயா வேகத்தைக் குறைக்கவில்லை. உன் மேல் ஏற்றி விடும் வெறியுடன் ஓட்டினாள்: அந்தக் கணத்தில்— உன்னை இழந்து விடக் கூடும் என்று உணர்ந்த வினாடியில் எனக்கு உன் அருமை முழுமையாகப் புரிந்தது. என் இதயத்தில் உனக்கு இருந்த இடம் புரிந்தது. உன்னைக் காப்பாற்றியாக வேண்டும் என்பது ஒன்றே நினைவாக, ஸ்டியரிங்கை ஒடித்துத் திருப்பி, கியரை மாற்றி, இஞ்சினை அணைத்துக் காரை நிறுத்தி விட்டு ஓடி வந்தேன். வந்து பார்த்தா.... அப்பா! ஜென்மத்துக்கும் மறக்காது சாமி, அந்தத் தோற்றம்!''

அவனைத் தேற்றும் வகை அறியாமல், எம்பி அவனை முத்தமிட்டாள் வாணி. ''அதெல்லாம் முடிந்த கதை. மறந்து விடுவோம்,'' என்றாள் இனிய குரலில் கனிவாக.

சற்றுப் பொறுத்துத் தினகரன் மீண்டும் தொடங்கினான். ''எனக்கு முதலிலேயே தெரிந்திருக்க வேண்டும். உன் அருகாமை நிம்மதி தந்

தது; உன்னைத் தொட்டுக் கொண்டிருக்கும்போது பாதுகாப்பாக உணர்ந்தது என்ன?'' என்று அவளிடம் வியப்பை உணர்ந்து வினவினான்.

''நீங்கள் என்னை ஒரு கேடயமாகக் கருதுகிறீர்கள் என்று நான் எண்ணியதுண்டு.''

''சரிதான். பாதுகாக்கும் கருவி கேடயம். சரிதான். ஆனால் நீ நான் நினைத்ததை எல்லாம் எனக்கு முன்பாகவே காப்பியடித்ததுதான் உலகமகா அநியாயம்!''

மனைவி சிரிப்பதை ஆசையாகப் பார்த்திருந்துவிட்டு, ''நிம்மதி, பாதுகாப்பு, மகிழ்ச்சி எல்லாமே உன்னிடமிருந்து கிடைத்தபோதே நான் உண்மையை ஊகித்திருக்க வேண்டும்.'' என்றான் தினகரன்.

''நன்றாய் ஊகித்தீர்களே! என் முகத்தில் கண், மூக்கு, வாயெல்லாம் சரியாக இருந்திருக்கிறதா என்று பார்ப்பதற்கே அந்த ஃபோட்டோ கிராஃபர் துணை செய்ய வேண்டியிருந்தது. நீங்களாவது ஊ... கிப்பதாவது?''

சற்று அசடு வழிந்துவிட்டு, ''ஊகூம். இது பொய் வாணி. நீ வேலை பார்க்கும்போதே உன் உதடு அழகு என்று நினைத்திருக்கிறேன். கண்ணாடி பிரேம் மாற்றிக் கொண்டையை அவிழ்த்து விட்டால் அழகாக இருப்பாய் என்று கூட ஒரு தரம் யோசித்தேனாக்கும்!'' என்று பெருமையடித்தான் அவன்.

''ஓகோ! அப்படியா?'' என்று பொய்க் கோபம் காட்டினாள், ஜெயவாணி. ''ஊம்...'' என்று ஒரு பெரிய மூச்சுவிட்டு, ''மறக்காமல் அந்த ஃபோட்டோ கிராஃபருக்கு ஒரு தாங்க்யூ கார்டு அனுப்ப வேண்டுமாக்கும்.'' என்றாள்.

''வாணி, இதோ பார், ஒரு குத்து விளக்கு எரிகிறது என்று கொள். சுடரைத் தூண்டி பிரகாசம் பெருக்க ஒரு துரும்பு தேவைப்படுகிறதுதானே? அந்த வேலைதான் அந்த ஆள் செய்தது. பாயிண்ட் ஜீரோ ஜீரோ ஜீரோ ஒரு சதவீதம். மற்றதெல்லாம் சுயகண்டுபிடிப்புதான். ஆனால் உன் ஊக.சக்தி எவ்வளவாம்? பாயிண்ட் ஜீரோ ஜீரோ ஜீரோ 'வாட்'சா?'' என்று பதிலுக்குக் கேட்டான் அவன்.

''அப்படி எதை நான் கண்டுபிடிக்கவில்லையாம்?'' என்று ரோஷத்துடன் கேட்டாள் வாணி.



நான் ரெடின்னு சொன்னப்புறம் குதிங்க.

''என் காதலை! நான்
சான்ன பிறகுகூட நீ புரிந்து
காள்ளவில்லையா?''

''நீங்கள் எப்போது காத
லப் பற்றிப் பேசினீர்கள்?''

''சாயாவோடு என் குழந்தை
யச் சம்பந்தப்படுத்திப் பார்க்கவே
தான்றியதில்லை. உன்னிடம் என்
ரம்பரையை எதிர்பார்ப்பது இயல்
ாக இருக்கிறது என்றால் என்ன
ர்த்தமாம்?''

''ம்ம்....? ஆனால் அப்
பாதும் நீங்கள் சாயாவை நியாயப்
டுத்திப் பேசினீர்களே?''

''உன்னைக் காதலிக்கிறேன்
ன்றால், உலகத்தில் உள்ள மற்ற
த்தனை பெண்களிடமும் குற்றம்
ண்டாக வேண்டுமா?'' என்று
டக்கினான் தினகரன்.

ஒருவருக்கொருவர் காலை
ாரிப் பேசுகிற பழைய கிண்டல்
ப்சு திரும்பியது, இருவருக்குமே
ற்சாகத்தை அளித்தது. இணைந்து
கைக்க வைத்தது.

சிரித்து முடித்துவிட்டு,
'அய்யா வழக்கம், இப்படிச் சுற்றி
ளைத்துதான் மூக்கைத் தொடுவ
ாக்கும். நேராக உன்னைக் காதலிக்
கிறேன் என்று சொல்ல வேண்டியது
ானே!'' என்று கேட்டாள் ஜெய
வாணி.

''எப்படியாம்? பணத்தைக்
கொடுத்து, ஒருவகையில் நிர்பந்தப்
படுத்தி மணந்த பெண்ணிடம்,
இரண்டே நாளில் மனம் மாறிவிட்
டது என்று காலில் விழுவதா? நீயும்
தைத்துத் தள்ள மாட்டாய் என்று
ன்ன நிச்சயம்?''

''நானா? உங்களையா?
சேச்சே!''

''ஆனால் அது எனக்கு அப்
பாது தெரியாதே! பெரிதாகச்
சால்கிறாயே. நீ ஏன் உன்மனதை
வளியே காட்டவில்லையாம்?''

''அது... அது...''

''ஆமாம். அது அதுதான்.
இது இதுதான். கூட்டிக் கழித்தால்
இரண்டு பேருக்கும் செம பொருத்
தம். சரிதானா?''

உற்சாகத்துடன் தலையாட்டி
யவள், யோசனையோடு, கணவனை
நோக்கி, ''திடீரென்று என்னைக்
சாகடிக்கிற அளவு என்னிடம் சாயா
வுக்கு என்ன கோபம்?'' என்று வாணி
விசாரித்தாள்.

''வாணி பத்தரைமாற்றுத்
தங்கம். அவளைத் தவிர வேறு ஒரு
பெண்ணை எண்ணிப் பார்ப்பதுகூட
என்னால் முடியாது என்று சாயா
விடம் அன்று, அப்போது சொல்லி
யிருந்தேன். அதனால் இருக்கலாம்.''

விழிகள் விரிய ஆர்வத்துடன்
கணவனை நோக்கினாள் ஜெய
வாணி.

''யெஸ். இதே பார்வை
தான். இந்தக் கண்ணாலேயே நீ
என்னைக் கவர்ந்ததும், அப்பா
சொல்வதுபோல மைவிழி மயக்கம்.
என் வாழ்வு முழுவதும் தீராத
இனிய மயக்கம்,'' என்று புன்னகை
செய்தான் தினகரன்.

கடைக் கண்களில் குறும்
புடன், கணவனை நோக்கினாள்
ஜெயவாணி. ''மைவிழி மயக்கம்
என்றால் மைவிழிப் பெண்ணிடம்
மற்றவர் மயங்குவது மட்டும்தானா
பொருள்? அந்த மைவிழிப் பெண்ணே
ஒருவரிடம் மயங்கி விட்டதையும்
அப்படியே சொல்லலாமே! மைவிழி
யின் மயக்கமும் தீராததுதான்.''

''ஸ்டாப். ஸ்டாப். வாணி
யிடம்– அதிலும் ஜெயவாணியிடம்
வார்த்தை விளையாட்டில் வெல்
வது சாத்தியமாகுமா? என் திறமை
செயலில்தான். காட்டட்டுமா?''

''எஸ், பாஸ்!''

(முற்றும்)

இந்த இதழில் வெளியாகி
யுள்ள புகைப்படக்காரர்கள்
குறித்த நகைச்சுவைகள் 'கிரேசி
வோர்ல்ட் ஆஃப் ஃபோட்டோ
கிராபி' என்ற புத்தகத்தை அடிப்
படையாகக் கொண்டவை.

# அரசு உரசுவாரா?



ஜெ. ஹரி, பல்லாவரம்.

¶ **ஊழல்கள் மலிய மழை நன்கு பொழிகிறதே அரசே?**

அப்படி இல்லை. மழை நன்கு பெய்தால்தான் 'பூசனை'களே நடைபெறும் என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறார். ''சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு.''

---

அருணா ராஜன், அய்யம்பாளையம்.

¶ **அரசுவுக்கு உரசும் பழக்கம் உண்டா?**

உண்டு. மற்றவர்களின் மூளையை.

---

எம். பக்குரூதீன், ஆலூர்.

¶ **விசித்ரா, ஷர்மிலி, டிஸ்கோ சாந்தி இவர்களில் யாருடைய உதடு உங்களைப் பிரமிக்க வைத்தது?**

உதடுகளைவிட இவர்களின் கடின உழைப்பு, முன்னேற வேண்டும் என்ற உறுதி, கதாநாயகி சான்ஸ் கிடைக்காமல் கவர்ச்சி நடனம் ஆடினாலும் மனம் தளராமை இவை பிரமிக்க வைக்கின்றன.

---

தென்னூர் யாதவன், திருச்சி.

¶ **திருமணமாகும் ஆண்களுக்கு அடையாளமாக எதையாவது வைத்தால் என்ன?**

தேவையில்லை. முழியே காட்டிக் கொடுத்துவிடும்.

**அரசு பதில்கள்**

இளங்கோவன்

...அதற்குப்பின் அம்மா வலி தாங்காமல் கதற, கூந்தலைப் பிடித்து இழுத்து, அவள் வயிற்றில் குத்தினார். அம்மா சுருண்டு...

# அம்மா

"ஸார், உங்க பையன் படிப்புல ரொம்ப கிளவர். க்ளாஸ்ல அவனை மாதிரி நல்ல ஸ்டூடண்ட்ஸ் அமையறது கஷ்டம். எதுக்காக அவனது படிப்பை நிறுத்தறீங்க?"

"ரொம்ப அவசியமோ?"

"என்ன ஸார், இப்படி, பேசறீங்க. உங்க பையனோட எதிர்காலம் நல்லா அமையறதுக்காகத்தான் படிப்பு-பண்பு எல்லாம். அது எங்க கடமை. ஒரு நல்ல மாணவனோட எதிர்காலம் பற்றின அக்கறை டீச்சர்ஸ்க்கு இல்லைன்னு நினைக்கறீங்களா? யூ ஆர் ராங் ஸார். உங்க பையனோட திறமை உங்களுக்குப் புரியலைன்னு நினைக்கிறேன். நிச்சயமா அவன் ரொம்ப நல்லா வருவான். மேற்கொண்டு அவனைப் படிக்க வைங்க ப்ளீஸ்..."

அப்பாவின் சுபாவம் தெரியாத டீச்சரின் நிலை எனக்குப் பரிதாபமாக இருந்தது. அப்பா ஒரே வார்த்தையில் பதில் சொன்னார்.

"கெட்-அவுட்."

"ஸார் ப்ளீஸ்..."

"லுக்—நீ ஒரு பொம்பளை. உனக்கு இவ்வளவுதான் மரியாதை. இதே ஒரு வாத்தியான் என்னைப் பார்த்து இத்தனை பேசியிருந்தா இந்நேரம் தெருவுல கிடந்திருப்பான். என் பையனை எப்படி வளர்க்கிறதுன்னு எனக்குத் தெரியும். வக்கில்லாம ஒண்ணும் நான் அவனைப் பெத்துடலை... போ- வெளியே!"

டீச்சரால் மேற்கொண்டு என்ன செய்வதென்று புரியவில்லை. அதிர்ச்சியிலிருந்து மீளாமல் என்னைப் பார்த்தவாறு மெல்ல எழுந்து வெளியேறினார்.

நான் கூனிக் குறுகிப் போனேன். கண்களில் நீர் முட்

புற்று. இத்தனை களேபரத்திலும். அம்மா தன் அறையை விட்டு வெளி வரவில்லை.

'ஏய் லட்சுமி! எங்கடா அவ?'' என்னை எட்டி உதைத்தார்.

அம்மா மிரண்டபடி கத வைப் பிடித்து நின்றாள்.

''வாடி, இங்க! இதுக்கெல் லாம் நீதான் காரணமா? உன் புள்ளைக்கிட்ட, டீச்சர்கிட்ட சொல் லச் சொல்லி தூது விடறீங்களோ. படிச்ச திமிருடி உங்களுக்கெல்லாம் வந்து, அந்தக் கத்து கத்திட்டுப் போறா. மனசுல என்ன உனக்கு சாணக்கியத்தனம்னு நினைப்பா கமுக்கமா உக்காந்துக்கிட்டு ஆலோ சனை சொல்லச் சொல்ல— உன் புத் திரசிகாமணி நிறைவேத்தறதுக்கு ஏண்டி! இத்தனை அடிக்கிறேனே



உனக்கு மண்டைல ஏறவே ஏறாதா? சுத்த மானங்கெட்ட குடும்பத்துல வந்தவளா... இருக்கறியே?''

''ஏன் இப்ப என் குடும்பத்த இழுக்கறீங்க?''

''இதோடா... கவரிமான் பரம்பரை! ரோஷம் சுர்ருன்னு ஏறிக்கிச்சு. உன்னைப் பத்தித் தெரியாதா? அதான் வீட்டுக்கு லெட்டர் மேல லெட்டரா எழுதறியே... உன் அப்பன் அதுக்கு மேல, பரதேசி...''

''போதும்... நரம்பில்லாம பேசாதீங்க.''

''எதுத்தா பேசறே?.. உன்னை...''

அதற்கு பின் அம்மா வலி தாங்காமல் கத்தினாள். கூந்தலைப் பிடித்து அவர், வெறித்தனமாகத் தன்னை நோக்கி இழுத்தார்.

இழுபட்டு வந்த வேகத்தில் வயிற்றில் குத்தினார். அம்மா சுருண்டு விழவே...

நான் அலறியபடி ஓடினேன். எனக்கும் ஓர் உதை.

பிறகு அம்மா கிட்டத்தட்ட ஆறு நாட்களாக வயிற்று வலியால் துடித்தது இன்றும் என் கண்ணில் நிற்கிறது.

நின்று போன என் படிப்புச் செலவு அவரது போதை மிதப்பிற்குத் துணை போனது.

நான் மெக்கானிக் ஷாப் ஒன்றில் விடப்பட்டேன். க்ரீஸ்—ஆயில் ஒட்டிய டவுசர், சட்டை, எண்ணெய்ப் பிசுக்கு தேகம் என வாழ்க்கை உருண்டு ஓடியது.

நான் இன்று சொந்தமாக காரேஜ் வைத்திருக்கிறேன். அப்பா உடல் ரீதியாகத் தளர்ந்து போயிருந்தார். ஆனால் மனதில் அந்த வன்மமும், முரட்டுத்தனமும் இன்னமும் இளமையாகவே இருந்தன.

என் கைகள் இன்று வலுவானவை. எனது புறங்கையாலேயே அவரை என்னால் சாய்த்துவிட முடியும். ஆனால் அப்படி நான் செய்யவில்லை. அதற்கும் காரணம் அம்மாதான்.

''ராஜேஷ் வந்து சாப்பிடுப்பா...'' தரையில் சாப்பாடு, பதார்த்தங்கள் பரப்பப்பட்டிருந்தன. கைகளைக் கழுவிவிட்டு உட்கார்ந்தேன். சாப்பிட்டு முடித்து எழுந்தபோது மூலையில் கிடந்த 'அந்த' அழுக்கு மூட்டை அசைந்தது. அப்பாதான். வழக்கம்போல


குமுதம்

நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.
நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
பொறுப்பாசிரியர்
சுஜாதா
பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்
உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்
நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்
நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி
அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்
வடிவமைப்பு ஆலோசகர்
டிராட்ஸ்கி மருது
தலைமை நிருபர்
பால்யூ
ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா டாவின்ஸி

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. கதை, கட்டுரை முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் கடிதங்களைச் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு. குமுதம் பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட்டில், குமுதம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக அச்சிடப்பட்டது. முகவரி: 151, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை—600 010.

சாராய நெடி.

மாலையில் ஒரு வேலையாக திருவல்லிக்கேணி வரை சென்று வீடு திரும்பினேன். வாசலில் கூட்டமாக மனிதத் தலைகள். பதறியபடி உள்ளே சென்றேன்.

அப்பாவை நடுக்கூடத்தில் கிடத்தியிருந்தார்கள். உதடுகளின் ஓரத்தில் லேசாக உலர்ந்து போன சிறு ரத்தக் கோடுகள்.

இது எதிர்பார்த்ததுதான் என்றாலும், எத்தனை தான் திடப்படுத்தியிருந்தாலும், மனசு நிதானம் இழந்தது.

அம்மா, விட்டத்தை வெறித்தபடி உட்கார்ந்திருந்தாள். கண்கள் அசையவில்லை.

நிலை குத்திய பார்வை.

விரக்தியா? அல்லது இது ஒரு விடுதலை உணர்வா?

வாழ்க்கை முழுதும் சந்தோஷம் அனுபவித்த பெண்கள் கடைசியாக அந்த தினம் அழுவார்களே!

அம்மா, தான் வாழ்நாளெல்லாம் அழுதவள் இன்று மனசுக்குள் சிரிக்கிறாளா?

ஆம். நிச்சயமாக அம்மாவுக்கு இன்றுதான் தன் சந்தோஷம் திரும்புகிறது. இனி அம்மாவின் முகத்தில் நிரந்தரப் புன்னகை தவழும். அம்மா உனக்கு விடுதலை. இனிமேல் நீ சிரிக்கலாம்.

நெடுநேரம் கழித்து அம்மாவின் அறையிலிருந்து மெல்லிய விசும்பல் ஒலி கேட்டது. எழுந்து சென்று மெதுவாக நின்று பார்த்தேன்.

அம்மா கட்டில் ஓரத்தில் உட்கார்ந்து புடவை முந்தானையைச் சுருட்டி வாயில் பொத்தியபடி சத்தம் வராமல் அழுது கொண்டிருந்தாள். எனக்கு அந்த அழுகைக்கு அர்த்தம் புரியவில்லை.

# காமம்

என் பேர் ரகு. வயசு இருபத்தி ஒண்ணு. நான் ஒன்பதாவது படிக்கும்போது அம்மா இறந்துட்டாங்க. அதோட படிப்ப பாதியிலேயே விட்டுட்டேன். அப்பா யார்னு தெரியாது. கண்டிக்க ஆளில்லாததினாலோ என்னவோ, எனக்குன்னு ஒரு லட்சியம் இல்லாம தறுதலையா வளர்ந்துட்டேன். நாள்பூரா வொர்க் ஷாப் வேலை. பெரியம்மா வீட்டில் தங்கிக்குவேன். என் செலவுக்கான பணத்தை அப்பப்ப கரெக்டா கேட்டு வாங்கிக்குவாங்க. ஏதோ அந்த வீட்டுல தங்குறேனே தவிர, கிட்டத்தட்ட நானும் ஓர் அனாதைதான். வொர்க் ஷாப்புல கூட வேலை செய்கிற பசங்களோட சேர்ந்து நல்லா தம் அடிப்பேன். தண்ணி போட சமீபத்துலதான் ஆரம்பிச்சேன். அங்கிருக்கிற பசங்க என்னைவிட கில்லாடிங்க. அதிலும் அந்த நாகராஜுவும், வடிவேலும் இருக்காங்களே, எல்லாத்தையும் ஒரு கை பாத்தவனுங்க. என்னை எத்தனையோ தடவை பொண்ணுங்ககிட்ட போக கூப்பிட்டானுங்க. ஆனா எனக்கு அதுல மட்டும் தைரியம் வரலை. வேலையில்லாத நேரத்துல இரண்டு பேரும் அவங்க 'அனுபவத்தை' புட்டுப் புட்டு வைப்பாங்க். நாங்கெல்லாம் அவனுங்கள சுத்தி உட்கார்ந்து வாயப் பிளந்து ரசிச்சு கேட்போம். நாகராஜு பொம்பள விஷயத்துல ஒரு ஆராய்ச்சியே பண்ணியிருப்பான் போலிருக்கும்.

வயசுப் பொண்ணுங்க ரோட்டுல போனா, நாங்கல்லாம் சேர்ந்து கலாட்டா செய்வோம். அவங்க முறைச்சுப் பார்க்கிறதும், திட்டறதும் எங்களுக்கு ஆனந்தமா இருக்கும்.

சமீபத்துல என் மாமா மகன் மணி அண்ணன் கல்யாணம் நடந்தது. சும்மா சொல்லக்கூடாது. மணி அண்ணன் பொண்டாட்டி செம கட்டை, எலுமிச்சம் பழக்கலர். சினிமா ஸ்டார் கணக்கா இருந்தாள். மணி அண்ணனைப் பார்க்க எனக்குப் பொறாமையா இருந்தது. ஏன்னா மணி அண்ணன் கறுப்பா, பார்க்க சுமாராத்தான் இருப்பார். அவருக்கு இப்படி ஒரு பொண்டாட்டின்னா? ரொம்ப கொடுத்து வச்சவர். இதைப் பார்த்ததும் எனக்கு 'மனைவி அமைவதெல்லாம்' பாட்டுத்தான் ஞாபகத்துக்கு வந்தது.

மணி அண்ணன் நூல் மில்லில் வேலை செய்கிறார். புதுப் பெண்டாட்டியோட தனிக்குடித்தனம். ஊருக்கு வரச் சொல்லி என்னை அடிக்கடி கூப்பிடுவார். எனக்கு இன்னிக்குதான் லீவு கிடைச்சுது. மணி அண்ணன் வீட்டுக்குப் போயி வரலாமான்னு தோணிச்சு. வேறெதுக்கு? மணி அண்ணன் பொண்டாட்டிய பார்க்கத்தான்.

ஞாயிற்றுக்கிழமையானதினாலே மணி அண்ணன் வீட்டிலிருந்தார். என்னைப் பார்த்ததும்—

''அடடே, ரகு, வாடா வா.

ஆர்.ஜே. சங்கர்

இப்பத்தான் வழி தெரிஞ்சுதா.''
என்று என்னை மனைவிக்கு அறி
முகம் செஞ்சு வச்சார்.

''உங்களைப் பத்தி இவர் சொல்லிருக்கார்,''ன்னு சிரிச்சாள்.

சிரிக்கும்போது பல்லெல்லாம் வரிசையா அமைஞ்சிருக்கு. ஏற்கெனவே உதடு மிளகாய்ப் பழம் போல சிவப்பு. பேசும்போது அடிக்கடி உதட்டை ஈரப்படுத்திக்கிறா. அதைப் பார்க்க எனக்கு உடம்பில் உஷ்ணம் ஏறிடுச்சு. உதட்டுப் பக்கம் ஒரு மச்சம் வேற. அதைப் பார்த்ததும் எனக்கு நாகராஜு சொன்னதுதான் ஞாபகத்திற்கு வந்தது.

''உதட்டுல மச்சம் இருக்கி பொம்பளைங்க செக்ஸ் விஷயத்துல கில்லாடிங்களா இருப்பாங்க.''

நானும் மணி அண்ணனும் கறிக்கடைக்குப் போனோம். மத்தியானம் மட்டனோடு சாப்பாடு. மணி அண்ணன் பொண்டாட்டி குனிஞ்சு பரிமாறும்போது அவ போட்டிருந்த சந்தன சோப் வாசமும் தலையில் வச்சிருந்த மல்லிகை பூ வாசமும் கலந்து வீசிச்சு. எனக்கு



அப்படியே கட்டிப் பிடித்து கிஸ் பண்ணலாம்னு தோணிச்சு.

''நைட் பாட்டிய வரச் சொல்லிப் படுத்துக்க.''

''இன்னிக்கு பாட்டி இல் லீங்க. அவங்க மக வீட்டுக்குப் போயி ருக்காங்க.''

அவங்க பேசறதைக் கேட்டு என்ன விஷயம் என்றேன்.

''இன்னியிலிருந்து எனக்கு நைட் ஷிப்ட். இவளுக்குப் பக்கத்து வீட்டுப் பாட்டிதான் துணைக்கு வந்து படுத்துக்குவாங்க. இன்னிக்கு அவங்க இல்லையாம்.''

''தனியா படுத்துக்குவியா? எதுக்கும் கதவை நல்லா தப்பாள் போட்டு படுத்துக்க. யார் வந்து தட்டினாலும் திறக்காதே.''

''சரிங்க,'' என்றாள்.

''ரகு உனக்கு கடைசி பஸ் ஆறு மணிக்கு. நான் டியூட்டிக்குப் போகும்போது உன்னை பஸ் ஸ்டாண்டிலே விட்டுடறேன்.''

மணி அண்ணன் சைக்கிளை எடுத்தார்.

அவளிடம் சொல்லிப் புறப் பட்டேன். மணி அண்ணன் பஸ் ஸ்டாண்டிலிருந்து போனதும் பஸ் ஸுக்காகக் காத்திருந்தேன். மனசு பூரா மணி அண்ணன் பொண் டாட்டி மேலயே இருந்தது. மணி அண்ணனை விட நான் சிவப்பா அழகா இருப்பேன். ஒருவேளை அவ ள்ளுக்குள்ள என்னை ரசிச்சிருக் கலாம். நைட்டுல அவ தனியா வற இருக்கா. பேசாம திரும்பிப் போகலாமான்னு தோணிச்சு.

மழை பெய்ய ஆரம்பித்தது. சமீபத்துல பார்த்த மலையாளப் படத்துல இதே மாதிரி மழை. புரு ஷன் இல்லாத நேரத்துல என்ன ோ திரி வயசுப் பையன், அந்த் ஸீன் ஞாபகத்துக்கு வந்து என்னவோ பண்ணிச்சு.

வா, இ  சி,

**வா**னத்தை நோக்கி சிரிப்பது செண்பகராஜ்.

படம்: கணேசன், மதுரை, திருநகர்.

---

நாகராஜு அடிக்கடி சொல் வான்—

''டேய் ரகு, பொம்பளைங்க ஆரம்பத்துல ரொம்ப பிகு பண்ணு வாளுங்க. அவங்கள வழிக்குக் கொண்டு வந்துட்டா அப்புறம் ஜாலிதான்.''

சத்தம் கேட்டுத் திரும்பி னேன். 'கடைசி பஸ் வந்திருச்சு. பஸ்ஸுல ஏறலாமா? வேண்டாமா?' மனசு பக்கு பக்குன்னு அடிக்க ஆரம் பிச்சுது. பஸ் புறப்பட்டுப் போயி டுச்சு. சுற்றுமுற்றும் பார்த்தேன். மழையில் நடக்க ஆரம்பிச்சேன்.

நான் போகும்போது அவள் மல்லிகைப்பூ கோர்த்துக் கொண் டிருந்தாள். என்னைப் பார்த்ததும்—

''என்ன ஊருக்குப் போலீங் களா?''

''கடைசி பஸ் வரலீங்க.''

''அதனாலென்ன? நாளைக் குப் போகலாம். உள்ள வாங்க. மழையில நனைஞ்சிருக்கீங்க. துணிய மாத்திக்கிங்க.''

சட்டையைக் கழற்றி அவள் தந்த லுங்கியைக் கட்டிக் கொண் டேன். என் உடம்பைப் பார்த்து வெடுக்கென்று பார்வையைத் திருப் பிக்கிட்டா. அது எனக்குக் கிளு கிளுப்பா இருந்தது.



## டெல்ட்டா தண்ணீரைத் தூய்மையாக்கும் சாதனம்

இந்தியாவின் மிக நவீன எலெக்ட்ரானிக் பியூரிஃபயர். பேத்தாஜெனிக் பாக்டீரியாவுக்கு எதிராக. உங்களுக்கு முழுமையான பாதுகாப்பு தரும் இதன உள்ளடங்கிய ஒரு கட்டுப்பாட்டு அமைப்பு. முற்றிலும் தூய தண்ணீர் மட்டுமே வெளிவருவதை நிச்சயப்படுத்துகிறது.



## டெல்ட்டா தண்ணீரை மென்மையாக்கும் சாதனம்

கடின நீரை... மென்மையாக்குகிறது கடின நீரில் சோப் நுரை தராது. சருமம் பொலிவிழந்து போகும். சருமத்தில் எரிச்சல், அரிப்பு போன்றவையும் ஏற்படும். உங்கள் வாட்டர்ஹீட்டர் மற்றும் வாஷிங் மெஷினின் உள்பாகங்கள் அரிக்கப் பட்டு நாசமாகிவிடும். இதனால் சில சமயம் ஷார்ட் சர்க்யூட் உண்டாகி கருவிகள் தீக்கு இரையாகலாம். டெல்ட்டா மென்மையாக்கும் கருவியை பயன்படுத்துவதன் மூலம் இந்த பிரச்சினைகளை தீர்க்க முடியும்.



## டெல்ட்டா இரும்பை நீக்கும் சாதனம்

சலவைக்குப் பின் துணிகள் மஞ்சளாக மாறிவிடுகின்றனவா? அதற்குக் காரணம் தண்ணீரில் அளவுக்கு அதிகமாக இருக்கும் இரும்புதான்... இரும்பு கலந்த தண்ணீரை உட்கொண்டால் மனித உடலில் உள்ள ரசாயனப் பொருள்களின் சமநிலை பாதிக்கப்பட்டு, ஹேமிசிடரோசிஸ் நிலைக்குக் கொண்டு போய்விடும். வண்டர் ஸாண்ட என்பதைப் பயன்படுத்தி. அதிகப்படியான இரும்பை இந்த டெல்ட்டா அயர்ன் ரிமூவர் நீக்குகிறது.

## டெல்ட்டா ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் யூனிட்

இது கிணறு மற்றும் போர்வெல் கிணற்றுத் தண்ணீரில் உள்ள உப்புத் தன்மையை நீக்கும் சாதனம். இந்தக் கருவி, தண்ணீரில் உள்ள உப்புத் தன்மையை நீக்கி, அதைக் குடிப்பதற்கும் சமைப்பதற்கும் ஏற்றதாக ஆக்குகிறது.

## டெல்ட்டா ஒஸோனேட்டர்

தண்ணீரைத் தூய்மையாக்கும் சக்தி மிக்க சாதனம். இந்த சாதனம், தண்ணீரில் உள்ள கிருமிகளை முழுவதுமாக ஒழித்து விடுகின்றது. இதனால் உடல் நலம் குன்றி குணமடைந்துவரும் நோயாளிகளை, குறுகிய காலத்தில் ஆரோக்கிய நிலைக்கு கொண்டுவர முடிகிறது.

உங்களது தேவைகளை மேற்குறிப்பிட்ட சாதனங்களால் பூர்த்தி செய்ய முடியாதின், உங்கள் தேவைக்கேற்ப சாதனங்களை எங்களால் வடிவமைத்துக் கொடுக்க முடியும்.

Delta
TOTAL SOLUTION WATER TREATMENT SYSTEM
IF YOU REALLY CARE ABOUT YOUR HEALTH

FOUNTAINHEAD-1215-94

---

மேலே காட்டியுள்ள பட்டியலைப் பார்த்த பின், உங்கள் பிரச்சினையை கீழே உள்ள கட்டங்களில் ✓ குறியிட்டுக் காட்டுங்கள்.

[1] [2] [3] [4] [5] [6] [7] [8] [9] [10]   வேறு ஏதாவது ..........................

எங்களது தண்ணீர் பிரச்சினைக்குத் தீர்வு சொல்ல டெல்ட்டா தண்ணீர் தர ஆய்வாளரை அனுப்பக் கோருகிறேன்.

உங்கள் பெயர் ..........................

முகவரி ..........................

.......................... பின் கோடு .......................... தொலைபேசி: ..........................

அனுப்ப வேண்டிய முகவரி :

எஸ் அண்டு எஸ் இண்டஸ்ட்ரீஸ் அண்ட் எண்டர்பிரைசஸ் லிமிடெட்.
A-3, முதல் மெயின் ரோடு, அம்பத்தூர் தொழிற்பேட்டை, சென்னை - 600 058.
தொலைபேசி : 652689/ 6258112/6258214 டெலக்ஸ்: 041-22153 SSIE IN ஃபேக்ஸ் : 91-44-6257996
எங்கள் மற்ற அலுவலகங்கள் : கோயம்புத்தூர் : 232483, திருச்சி : 32815,47052, பெங்களூர் : 3338212 விஜயவாடா : 66983

---

2815. • பெங்களூர், தொலைபேசி: 3339376. • ஹைதராபாத், தொலைபேசி: 233007. • விஜயவாடா, தொலைபேசி: 433983. • பம்பாய், ராமகிருஷ்ணா நகர், பந்தைவெளி, சென்னை 600 028. தொலைபேசி: 4938671, 4937691. • M/s. கென்வித் மார்க்கெட்டிங் எண்டர்பிரைசஸ், பாட்ஸ், 45 டாட்டாபாத் முதல் தெரு, சிவானந்தா காலனி, கோயம்புத்தூர் 641 012. தொலைபேசி: 444313. • பால்க்கெம், G-14, அம்புஜா ரோடு, எர்ணாகுளம், கொச்சி 682 018. தொலைபேசி: 369422.

கொஞ்ச நேரம் பேசிகிட்டி ருப்போம். ராத்திரி சாப்பாடு முடிஞ் சுது.

''இந்த ரூம்ல படுத்துக் குங்க.'' அவள் முன் பக்க ரூம்ல பாயை விரித்துப் படுத்தாள்.

ஜீரோ வாட் பல்ப் வெளிச் சத்தில் அவளை எனக்குப் பார்க்க முடிஞ்சுது. யாருமில்லா இடத்தில் நானும் அவளும் மட்டும்.

டேபிள் பேன் சுத்த, அவளது மேலாடை விலகி விலகி, என்னை வா வான்னு கூப்பிடற மாதிரி இருந்துச்சு. நாகராஜு சொன்ன வார்த்தை காதில கேட்டுச்சு. தைரியத்தை வரவழைச்சு மெதுவா எந்திருச்சேன். மனசு படக் படக் குன்னு அடிச்சுது. சத்தம் கேட்காம மெதுவா நடக்க ஆரம்பிச்சேன். முதன்முதலா ஒரு பெண்ணைத் தொடப் போறேன். கை, கால் லேசா நடுங்க ஆரம்பிச்சுது. அவள் நல்லா அயர்ந்து தூங்கிட்டுருந்தா. என்ன ஆனாலும் சரின்னு மெதுவா குனிஞ்சேன்.

அவளது மூச்சுக் காத்து என் முகத்துல பட்டு என் உடம்பு பூரா சூடேத்திச்சு. வாசம். அவ உதட்டை நோக்கி என் உதட்டைக் கொல போனேன்.

'சர்...ர்...ர்...ர்...' கா பெல் சத்தம். எனக்குத் தூ வாரிப் போட்டது. திடீர்னு எ ரிச்சு ஓடி என் பெட்டுல படுத் டேன்.

நல்லவ அவள் னும் விழிக்க

'சர்... ...ர்...'

அவள் ந்து சன் வழியா பார்த்து கதவைத் தி தாள். மணி அண்ணன்!

''என்னங்க இப் திடீர்னு?''

''நம்ம பரமசிவத்து ஷாக் அடிச்சுது.''

''ஐயய்யோ?''

''ஆபத்து ஒண்ணும் இல் அவரை ஆஸ்பத்திரியில் அட்ட பண்ணிட்டோம். அப்படியே னிக்கு ட்யூட்டிக்கு டிமிக்கி.''

மணி அண்ணன் அவ அப்படியே கட்டிப் பிடிக்கிறா

''என்னங்க இந்த நோத் ரகு வேறு அந்த ரூம்ல இருக்கான்



அப்பாகிட்ட நீ எடுத்த போட்டோவை காட்டமாட்டேன். என்னா நீ எடுக்கிறது நல்லாவே இருக்கு.

''ஏன்? அவன் போகலை?''

''பஸ் கிடைக்கலியாம்.''

''சரி. நாளைக்குக் காலை கிளம்பட்டும்.''

''சீ... என்னங்க விடுங்க.''

''ஏய் அவன் நல்லா தூங்கிட்டிருக்காண்டி.'' அவள் பேச வாய் திறக்கும் முன் தன் வாயால் அடைச்சு விடுறார் மணி அண்ணன்.

காலையில் என்னால் எந்திரிக்க முடியலை. உடம்பெல்லாம் ஒரே வலி. தலைக்கனம், காய்ச்சல். காரணம் தெரியலை. மணி அண்ணன் பொண்டாட்டி என்னைத் தொட்டுப் பார்த்து ''ஐயய்யோ உடம்பு அனலா கொதிக்கிதே. வாங்க ஆஸ்பத்திரிக்குப் போகலாம்.''

மணி அண்ணன் வீட்டில் இல்லாததால் ஓர் ஆட்டோவில் என்னை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனாள். அட்மிட் செஞ்சாங்க.

ஒரு வாரமா மணி அண்ணன் பொண்டாட்டி எத்தனை தடவை ஆஸ்பத்திரிக்கும் வீட்டுக்கும் அலைஞ்சாங்க. பக்கத்திலே இருந்து கவனிச்சாங்க. இதெல்லாம் பார்க்கும் போது எனக்கு என் அம்மா ஞாபகம் வந்தது. சின்ன வயசில என் அம்மா எனக்குக் காய்ச்சல் வந்த போது இப்படித்தான் கூட இருந்து கவனிச்சாங்க. நல்லவேளை எதுவும் நடக்கலை. ஆண்டவா நீ என்னைக் காப்பாத்துனே. இல்லேன்னா மணி அண்ணன் முகத்துல எப்படி முழிப்பேன்?

மணி அண்ணனும் பொண்டாட்டியும் என்னை பஸ் ஏத்த வந்திருந்தாங்க. எனக்குக் கண் கலங்கிடுச்சு.

மணி அண்ணன் பொண்டாட்டியைப் பார்த்தேன். இப்பவும் அழகாத்தான் இருந்தாங்க. வேற மாதிரி அழகா.

## தெரியாத பெயர் தெரியாத விவரம்

பெயர்: எம். கோதண்டன்

வயது: 35

தொழில்: குடை ரிப்பேர்

அனுபவம்: 6 வயதிலிருந்தே பழக்கம்

இடம்: திருநின்றவூர் முதல் அரக்கோணம் மற்றும் திருத்தணி வரையில்

நேரம்: சைக்கிளிலேயே காலை 6 மணி முதல்

வீடு: திருநின்றவூரிலேயே சொந்த குடிசை

குடும்பம்: இரண்டு மகள், ஒரு மகன் மற்றும் மனைவி

வருமானம்: மழைக்காலத்தில்தான். தினமும் 50 ரூபாய் வரைக்கும் கிடைக்கும். மற்ற நாட்களில் ரூ. 10 முதல் 20 வரையில்தான்

வருத்தம்: என் மனைவி வசந்தாவிற்கு வயிற்றில் கட்டி, இருதயத்தில் ஓட்டை. ஆபரேஷனுக்குப் பணம் இல்லை.



படம் தகவல்: மேஜர்தாசன்

# மாமியார்



சுமதியை அவர்களுக்குப் பிடித்துப் போய்விட்டது.

''எங்களுக்குப் பூரண சம்மதம். மேற்கொண்டு ஆகவேண்டியதைப் பாருங்க,'' என்று மாப்பிள்ளை வீட்டாரிடமிருந்து பதில் கிடைத்ததும் சுமதியின் தாய் மகிழ்ந்துப் போனாள்.

''அம்மா! ஊருக்குப் போய் லெட்டர் போடறேன்னு பந்தா பண்ணாம பளீர்னு வெள்ளை மனசோட நிஜத்தை உடனே சொன்னீங்களே. உங்களுக்குத் தங்கமான மனசு,'' என்று மாய்ந்து போனார் சுமதியின் தகப்பனார்.

''என் பையனுக்குப் பெண்ணை பிடிச்சுப் போச்சுங்கறதை அவன் மூஞ்சியைப் பார்த்து உணர்ந்து கொண்டேன். என் வீட்டுக்காரருக்கு ஹார்ட் பிராப்ளம். உடல் நல்ல கதியிலே இருக்கும்போதே மகனைக் கல்யாணக் கோலத்திலே பார்த்திடணும்ன்னு ஆசைப்படறார். உங்க வீட்டுக்குப் புறப்படு போதே கோயில் மணி கண கணீர்னு அடிச்சு சுபசூசகம் சொல் விட்டது. சுமங்கலிப் பெண் எதி தாப்பல வந்தா. இந்த இடம் தி யும்னு அப்போதே தீர்மானிச்ச டேன்,'' என்றாள் மாப்பிள்ள யின் தாய்.



அப்போது வாசலில் கழு கத்தியது.

''ஆஹா! நல்ல சகுன எனக்கு நகை நட்டு முக்கியமில்ல முடிஞ்சதைப் போட்டு பொண்ண கட்டிக் கொடுங்க,'' என்றாள்.

அவர்கள் ஆட்டோவில் பு பட்டதும் சுமதி ''எனக்கு இ இடம் பிடிக்கலம்மா,'' என்றாள்

''ஏண்டி இப்படி பேசறே

''சகுனம் பார்க்கிற மனு அவள். திடீர்னு அவள் கண இறந்துவிட்டால், இவ கா வைச்ச நேரம் என் தாலி பறிபே சுன்னு பேசமாட்டாள்னு என் நிச்சயம்? ஆகவே இந்த இட எனக்கு பிடிக்கலை. மன்னிச்சிடு என்றாள் சுமதி.

சிவதர்ஷிணி

# ஞாபகமா ஒரு பிரதி

இந்தக் கதை கனவில் முடியப் போகிறது. இப்போதே சொல்லி விட்டேன்

க்ரோம்பேட்டைக்கும் பல்லாவரத்துக்கும் இடையே மின்சார ரெயிலில் இரண்டு இளைஞர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒருவன் உறுதியான உடலமைப்பு கொண்டு. மற்றவன், ஒல்லியாக இருந்தாலும் கல்லூரி மாணவர்கள் என்று உடனே சொல்லும்படி தலைமயிரும் உதட்டுக் கறுப்பும். ஒல்லிதான் கைகளை பலமாக ஆட்டிப் பேசினான். ''செகண்டு ஷோ பார்த்துட்டு ராத்திரி திரும்பி வரம் குரு. சுப்ரி, ராயபுரம் சரக்கு அடிச்சிருக்கான். நாந்தாண்டா மைக்கல் ஜாக்சன்னு நடு செண்டர்ல ஆடறான். லாரிக்காரன்லாம் கடுப்பாயிட்டான். மற்ற தோஸ்துங்க உசுப்பிவிட அய்யாக்கு சூடு ஏறி இடுப்பில கையை பதிச்சுகிட்டு இப்படி இப்படி டான்ஸ் ஆடுறான். நாங்க ஆறு பேரு. பாணா, மாஞ்சா, வேம்பன், நிஸ்ஸாரு போதுமா செட்டு? என்னா களை கட்டிருக்கும் பார்த்துக்க! இந்த சமயத்தில பாரு எதுத்தாப்பல சைக்கிள்ள ஒருத்தன் வரான். எம்மாதிரித்தான் குச்சியா ஒல்லி பிச்சானா. பின் சீட்டிலே பொஸ்தவ கட்டு. அப்றம் ஒரு ஃபிகரு பாவாடை தாவணி கட்டிகிட்டு சோக்கா, பள பளன்னு, வாசமா. எங்களைக் கண்டதும் பயந்துபோய் ஓரங்கட்டறான். சுப்ரி இத பார்றான்னு, அப்படியே பாஞ்சு சைக்கிளை கேரியர்ல புடிச்சு நிறுத்தி, ''எங்க போற வாத்தியரே, யாரு இந்த புல்புல்''னான்.

''இந்த புத்தகத்தை ப்ரெஸ்ல கொடுக்கணுங்க. நாளைக்கு வெளியீட்டு விழாங்க. எங்களை உட்டுருங்க,''ன்னு கெஞ்சறான்.

''பொண்ணு யாரு? தள்ளிட்டுதானே வந்தியா''ன்னான் பாணா. ''இல்லைங்க. சம்சாரங்க. ஏய், பாவாடை தாவணி கட்டாதன்னு சொன்னனில்லை,''ன்னு அதட்டறான்.

''எல்லாரும் சம்சாரமாடா ஒனக்கு''ன்னு அதை லாவி அப்படி புடிச்சு இளுத்துகிட்டு வந்துட்டான். நானும் உள்ள பூந்து சந்தடி சாக்கில ஒரு கிஸ் அடிச்சிட்டேன். பொண்ணோ அலறுது. கை வளையல் ஒடைஞ்சு, பொஸ்தவம் எல்லாம் கீழே சிதறிப் போய், கடைசில என்ன ஆச்சு? அம்பாசடர்ல ஒருத்தன் வந்து கெடுத்தாம்பா. ரோட்டில நிறுத்திக் கௌவன் கேக்கறான். ''நீங்களாம் படிக்கலையா? அக்கா தங்கச்சி கெடையாதா''ன்னு. பொன்மொளியா உதுத்து ரெண்டு, பேத்தையும் கூட்டிட்டு போய்ட்டான். க்ரேட் ஃபன் யார், தமாஷ்! ஆறு பேரும் பதம் பார்த்திருப்போம். கடைசியா இந்த பொஸ்தவம்தான் மிஞ்சித்து. ஞாபகமா ஒரு பிரதி எடுத்துக்கிட்டேன். என்று காட்டினான். இதுவரை கதை கேட்டுக் கொண்டிருந்த திடமான இளைஞன் புத்தகத்தைக் கண்ணுறறதும் திடுக்கிட்டு, ''என் தங்கச்சி புருசன்போட்ட புஸ்தவம்டா இது படுபாவி'' என்றான். அடுத்து நடைபெற்ற கைகலப்பில் கொஞ்சம் ரத்தம் சிதறியது. அந்தப் புத்தகமும் சிதறி விழுந்தது. அது ஒரு கவிதைத் தொகுப்பு.

தலைப்பு: 'கனவு.'



1

தாக்குதலுக்குப் பயந்து மக்கள், கடலோரப் பகுதிகளிலிருந்து நாட்டின் உட்புறத்துக்கு ஓடினார்கள். கோட்டையில் பீரங்கிகள் கடல் முகம் திரும்பித் தயாரில் நின்றன. ஆகாயங்களில் ராப்பகலாய் விமான ரோந்து. கப்பல் கப்பலாய்த் துருப்புகள் இறங்கி நடமாடின. வாயடைப்பு. அவசரச் சட்டங்கள். உன் நண்பனே சத்துருவாய் இருக்கக்கூடும். யாரையும் நம்பாதே. ஏன், நீயே அவனாய் இருக்கக் கூடாது?

பட்டணம் 'வெறிச்'. எதிரும் புதிருமாய்க் காலி வீடுகளின் வரிசைகளினிடையே தெருத் தெருவாய், ஓர் ஆசாமி கூடக் கண்ணுக்குப் படாமல் மணிக்கணக்கில், தன்னந்தனியாய் நடந்து செல்லலாம். உன்னைக் கண்டு நீயே பயந்து போவாய். சென்னைக்குச் சாவுக்களை வந்துவிட்டது.

பகலே இப்படி ஆயின், இரவு ஏன் வருகிறது? ஆனால் இரவுக்கும் பகலுக்கும் வித்தியாசம் ஒன்றும் தெளிவாயில்லை. பகலில் சில பயங்கள் பார்வைக்குத் தெரிகின்றன. இரவில் கண்ணுக்கும் புலப்படா... பயங்கள். பயம், பயம், பயம்... மயம்.... மயம்... மயம்... பயத்தைத் தொட்டுவிடலாம் போன்ற பரிணாமத்தில் பிரம்மாண்ட சிலிர்ப்பு கண்டது.

ஆகாயத்திலிருந்து மின்னல்கள் விழுந்தாற்போல, பூமியில் அந்தப் பள்ளங்கள் (trenches) பாளம் பாளமாய்த் தோன்றின. பரந்த வெளிகளில், 'பார்க்குகளில், பெரிய கட்டடங்களின் பின் புறங்களில், மறைவின் அணைப்பு இல்லாத இடங்களில், இந்தப் பள்ளங்கள் ஏறக்குறைய ஆள் உயரத்துக்குப் மேல், மார்பகலத்துக்குத் தோண்டப்பட்டு உள்பக்கம் செங்கல் சுவர்கள்

லா.ச.ராமாமிருதம்

எழுப்பி, இரண்டு மூன்று Zகள் அல்ல Mகள் கோர்த்தாற் போல், வங்கி வங்கியாகக் கோணிக்கொண்டு, கோணங்கள், சிமிட்டிப் பூச்சில் கன கூர்ப்பாய், தோன்றிய புதிதில் சற்று வேடிக்கையாய், ஏன், அழகாய்க்கூட விளங்கின. அபாயச் சங்கு ஊளையிட ஆரம்பித்ததுமே, மக்கள் ஓடி வந்து இந்தப் பள்ளங்களில் பதுங்கிக் கொள்ள வேண்டும். இதற்கு ஜனங்களைப் பழக்கவே விமானத் தாக்குதல் பாதுகாப்புப் படையினரின் ஏற்பாடுகள், பிரசாரங்கள், ஒத்திகைகள், அத்துகள், அமல்கள் நடந்தன.



ஆனால் அசல் தாக்குதல் நேராத வரை, ஜனங்களுக்குக் குளிர்விட்டுப் போனதும், இந்தப் பள்ளங்களை வேறு காரியங்களுக்கும் பயன்படுத்தினர். ஆகாயமே கூரையென வாழும் ப்ளாட்பாரம் மக்கள், இந்தப் பள்ளங்களில் கழித்துக் கொப்புளித்து, தோய்த்துக் குளித்துச் சமைத்து, குடித்தனமே நடத்தினர். என்னதான் பாரா போட்டாலும், அவர்களைத் தடுக்க முடியவில்லை. நாளடைவில், காவல்காரனே, இந்தப் பள்ளம் வாழ் மக்களிடமிருந்து, அவர்கள் சுட்ட தோசை,



களினிடையே விழுந்து கொண் டிருந்தான்.

குட்டைப் பிரம்பால் தொடையைத் தட்டிக்கொண்டு பள்ளங்களை நோட்டம் விட்டுக் கொண்டு அவைகளினிடையே அவன் நடந்தான். அவனுடைய ப்ரஸன் னம் இந்தப் பள்ளம் சேரியில் ஒவ்வ வில்லை. அவனை அவர்கள் வியப் புடன் பார்த்தனர். தங்களிடையே தோளிடித்துக் கிசுகிசுத்துச் சிரித்துக் கொண்டனர்.

''பொலிமாடு அலையுது பார்!''

நேரே ஸ்திரிப்பெட்டி அடியி லிருந்து புறப்பட்டாற்போல், கஞ்சி விறைப்பில் மிடுக்காயிருந்தான். மொடமொடக் காக்கி யூனிபாரத் தில் பித்தளைப் பொத்தான்கள் 'பாலிஷ்'ஷில் பளபளத்தன. இந்த வெயில் அவனுக்கு ஆகவில்லை. மேல் தோல் வரண்டாற்போல் முகத்தின் கன்றிய செவப்பில் கண்களின் கடல் நீலம் அளாவியது. மாலைதான் என்றாலும் முகத்தில் வேர்வை கொப்புளித்தபடி. கைக் குட்டையால் அழுத்தித் துடைக்கத் துடைக்க, முகம் இன்னும் சிவப் பானது. எரிந்தது. கைக்குட்டையை ஒரு தடவை பிழிந்தான்.

திடுக்கென இரண்டு நாய்கள் பயங்கரமாய்ச் சண்டையிட்டுக் கொண்டு, குரைத்துக் கொண்டு அவன் மேல் விழுந்தன. சட்டென எட்ட நகர்ந்து கொண்டான். ஒன் றன் கண் குதறிய பாதியில் அறுந்து தொங்கிற்று. ரத்தத்தைத் தரைமண் திட்டுத் திட்டாய் உறிஞ்சிற்று. வசி யத்தில் அவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். ரத்த வசியம்.

கண் இழந்த நாய் ஊளை யிட்டுக் கொண்டு ஓடிற்று. மற்றது உடலை நக்கிக் கொண்டே குரைத் தது. அதுவும் ரத்த விளாறுதான். சற்று எட்டக் கிடந்த எலும்புத் துண்டை நோக்கி ஓடிற்று.

''Oh all this only for this?'' அவ னுக்குச் சிரிப்பு வந்தது. நகர்ந்தான். நடந்தான்

''Dogs!''

பள்ளங்களின் அசூயைகளைப் பார்க்கக் கோபம் வந்தது. அருவருப் பாயிருந்தது. மூக்கையும் வாயையும் கைக் குட்டையுள் புதைத்துக் கொண்டு நடந்தான். கண்கள் அலைந்தன.

''Ah!'' அவன் கண்கள் ஒளீரிட்டன.

பள்ளத்துள் அவள் நின்று கொண்டிருந்தாள். அவனைப் பார்த் துச் சிரித்தாள். அவளுடைய மேட்டு விழிகள் அழைத்தன. ஆனால் முகத் தில் இத்தனை பவுடரும் உதட்டில் இத்தனை சாயமும் அப்பியிருக்க வேண்டாம். ஆனால் எல்லாவற்றி லும் அதிகப்படிதான் அவர்கள் அறிந்த அலங்காரம்.

பள்ளத்துள் குதித்து வந்து அவள் எதிரே நின்றான்.

புள்ளி நல்லாத்தான் இருக்

---

## டாவீ டிக்



பியானோ: தமிழ் சினிமா ஹீரோ பிறந்தநாள் பார்ட்டி காட்சி களில் வாசிப்பது.

பண்டமாற்று: முத்தம் கொடுத்து முத்தம் வாங்குவது.

குடிகாரர்: கைகளால் நடப் பவர்.

நகைச்சுவை: வாழைப்பழத்

குது, சர்க்கஸ் புலியாட்டம். ஆனால் அம்மாகிட்ட இப்பத்தான் பால் உண்ண மூஞ்சியாயிருக்குது? ஆனால் அதுபத்தி எனக்கென்ன?

புன்னகை புரிந்தாள். அவனும் இளித்தான். அவன் தோளைத் தொட முயன்றான். அவன் கையை உதறினாள்.

''நோ, நோ, நோ! ரூப்பி, ரூப்பீ!'' விரல்களைச் சுண்டிக் காட்டினாள்.

பான்ட் பைக்குள் கைவிட்டு ஒரு நோட்டை எடுத்து நீட்டினான்.

''நோ! நோ!'' தலையைப் பலமாய் ஆட்டினாள். இவங்க கிட்ட சமயத்துலே கறந்தாத்தான் உண்டு.

இன்னொரு நோட்டு.

''நோ? நோ?''

சிரித்துக்கொண்டே இரண்டு வெள்ளி ரூபாய்களை அவள் கையுள் திணித்துத் தன் கையை விரித்தான்.

பணத்தை இடுப்பில் சொருகிக் கொண்டாள்.

ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு அசட்டுச் சிரிப்பில் நின்றனர். சுற்றுமுற்றும் காலியாத் தானிருந்தது. ஆள் இல்லை. அவங்களுக்குத் தெரியும். புரிஞ்சுக்கிட்டு ஒதுங்கிடுவாங்க. ஒரு புளைப்பு நடக்குதில்லே?

அவள் கையைப் பற்றி இழுத்தான். இப்போது அங்கே ஒரு சொந்தமும் முரட்டுத்தனமும் தெரிந்தன. நேரத்தை விலைக்கு வாங்கியாச்சில்லே?

அவன் கண்கள் கொதித்தன. அவள் தலைமயிரை பற்றித் தன் பக்கமாய் இழுக்க முயன்றான். அங்கு கட்டிய செண்டு மல்லியின் மணமயக்கம் அவனை வெறியனாக்கியது.

அவளுக்குக் கொஞ்சம் பயமாயிருந்தது. அருவருப்பு வேறே. தவளைக் குடலை அறுத்த மாதிரி இதென்ன நிறம்?

அப்போது பின்னாலிருந்து அவன் தோளில் ஒரு கை விழ, திரும்பினான்.

இவன் வந்த சந்தடியே கேட்கவில்லையே! பள்ளத்தில் எப்படி இறங்கினான்? குதித்தால் பூட்ஸ் சத்தம் கேட்கல்லியே?

ஆனால் வந்தவனின் வழி வழி வர்க்கம் அதன் மூலத்திலிருந்தே நிழலுடன் ஐக்கியமாகப் பழகினவர்கள். காலடியில் கசங்கிய சருகின் காற்றசைவிலேயே அதை மிதித்தது இரையோ, எதிரியோ, அதன் திக்கையும் விவரங்களையுமே படிக்கத் தெரிந்தவர்கள். அரவத்தை அடக்கி ஆள்பவர்கள். கானகத்தின் மோனத்தை, இரவின் நிசப்தத்தை அவை தம்முள் அடக்கிய ரகஸ்யங்களைத் தமக்கு மட்டும் பேச வைப்பவர்கள்.

ஒழுங்கு உடை, கறுப்பு நீலம் கசங்கியிருந்தது. இரும்புக்குண்டு போன்ற உருண்டைத் தலையோடு தலையாய்க் குல்லாய் போன்ற குட்

---

தோலில் வழுக்கிவிழுவது, மற்றவர்.

லேகியம்: வாலிபத்தில் செய்த தவறுக்காகச் சாப்பிடுவது.

கூட்டுத் தயாரிப்பு: குழந்தை.

மக்கள்தொகை: குளிர்காலத்தில் அதிகமாவது.

தெய்வீகக் காதல்: முதலிரவில் சாதா காதலாக மாற்றப்படுவது.

அதிர்ஷ்டக்காரர்: சென்ஸார் போர்டு அதிகாரி.

நர்ஸ்: வலிக்காத ஊசி போடுபவர்.



'பங்காளிகள்ல யாரோதான் ஷாட்கட்னு சொல்லி ஞானவாசத்தை இந்த ரூட்ல திருப்பி விட்டுருக்கணும்!'
— ஹில்கூ

டைப் பொடிச் சுருட்டை மயிர். பெரிய கண்களில் அவன் வந்த இருள் கண்டத்தின் அடவிகளின் இருளும் அவைகளில் பதுங்கிய ஆபத்கரமும். இவையிரண்டையும் மீறி ஓர் அகண்ட சோகமும் கவிந்து விழிகளே அரைக் கண்ணில் சொக்கியிருந்தன. உடல் பூரா விலங்கு லாகவம் சோம்பிற்று.

ஜனமேதி ஜன்ம நிறப்பாகை முகத்தில் சிந்த, இருவரும் எதிர்எதிர் நின்றனர். இடையே இடம் விறுவிறுத்தது.

முதலில் ஆங்கிலேயன்தான் தாக்கினான். நீக்ரோவின் தோளில் பிரம்பால் அடித்தான். உடனே வயிற்றில் ஒரு குத்து விட்டதும் நீக்ரோ வயிற்றைப் பிடித்துக்கொண்டு சுருள் கையிலேயே அவன் முகத்தில் அடுத்தடுத்து இரண்டு 'குத்துக்கள். திலோ பயத்தில் உளறியபடி அவர்களிடையே பாய்ந்து பள்ளத்தின் சுவரோரமாய் ஒடுங்கி ஒடிப்போனாள்.

நீக்ரோ தலையை உதறிக் கொண்டான். மூக்கிலிருந்து ஒரு சிவப்பு நூல் புறப்பட்டது. மறுபடியும் வெள்ளையன் கை வீச இடம் கொடாமல் அவனை இரு கைகளாலும் அணைத்தான். நீக்ரோ இரண்டு அங்குலம் கூடவே உயரம். அதற்கேற்ப. நீண்ட கைகள். அந்தக் கரடி ஆலிங்கனத்தில் வெள்ளையன் திணறினான். சடக்கென மின்னல் வேகத்தில் இரு கைகள் அவன் குரல் வளையில் விழுந்து நெரிக்கத் துவங்கின.

வெள்ளையன் அந்தக் கைகளைப் பிய்க்க முயன்றான். தன் முழங்காலால் நீக்ரோவின் வயிற்றில் இடிக்க முயன்றான். ஆனால் அந்த மரணப்பிடி சிணுங்கவில்லை. அது தனக்கென்றே தனி உயிர் பெற்றுவிட்டது. கைகளின் வீச்சுக்கோ உடலின் நகர்ச்சிக்கோ, பள்ளத்தின் குறுகல் இருவருக்குமே இடம் கொடுக்கவில்லை.

வெள்ளையனுக்கு விழிகள் பிதுங்கின. வெளிவந்துவிடுமோ? பிய்த்துக்கொண்டு வெளிவந்துவிடும் போல், ரத்தம் முகத்தில் சதைக்கடியில் முட்டிற்று. மூச்சு! மூச்சு!! திண்டாடினான்.

தன் முகத்தை, கண்களை, விரல்களுக்குக் கிடைத்த இடத்தில், வெள்ளையன் கைகள், மூழ்குப்பிடியில் பிராண்டின இடங்களில், ரத்தம் பாளம் பாளமாய்க் கசிவதை அந்த வலியை நீக்ரோ உணரவில்லை. அவன் உடல், ஆவி, அகம், புறம் எல்லாம் ஓர் எண்ணம், ஒரே எண்ணத்தின் குறி — கழுத்தின் முறிவின் முனைந்த தருணத்தின் தவமாகி,



ஒருவிதமான பரவசத்தில் ஆழ்ந் தான்.

சட்டென்று ஒரு தும்மல் சத் தம்.

நீக்ரோவின் முகம் ஆச்சர்யத் தில் கோணிற்று. பற்கள் இளித்தன. கழுத்தின் மேல் அவன் பிடி தளர்ந் தது. எதிரி மேல் சாய்ந்தபடி, மெது வாய்ச் சரிந்து, காலடியில் பஸ்மமாய் குமுங்கிப் போனான்.

ஆங்கிலேயனுக்கு மூச்சு இரைத் தது. சிதறுண்ட நினைவுகூட யுக நேரம் கண்டது. பார்வை நிலையுற்ற தும் கையில் ரிவால்வரும், அதன் குழாயினின்று சுருண்ட புகைநூலும் புதிதாயிருந்தன. துப்பாக்கியைப் பான்ட் பையுள் திணித்துக் கொண் டான். தலை மயிருள் கைவிட்டுக் கோதிக் கொண்டான். வேர்வை கொட்டிற்று. பிரம்பு போன இடம் தெரியவில்லை. அதுபற்றி நினைவு மில்லை. உடல்பூரா ரணமாய் வலித் தது.

நீக்ரோவின் உடல் மேல் கால் வைத்து ஏறி– இடமில்லை– தாண்டு கையில் கடைசி வலிப்பில் நீக்ரோ வின் உடல் புரண்டு நீண்டதும் வெள்ளையனுக்குக் கால் பிசகி இரண்டு கைகளும் பிடிக்கு அந்தரத் தில் துழாவின... பிடரி, பள்ளத்தின் கோணத்தில் பலமாய் மோதிய வேகத் தில் அதன் சிமெண்ட் கூரில் கழு வேறிற்று. கால்கள் தரையில் படா மல் உடல் தொங்கிற்று. கால்கள் உதைத்துக் கொண்டன.

ஆகாய நீலத்தைக் கட்டாய மாய் மல்லாந்துவிட்ட முகத்தில் மாலைச் சூரியன் கண்களை நேரே பறித்தான். மேலே வேகமாய்ப் பெருகிக்கொண்டே வரும் அவனு டைய தனியிருளில், மரணாவஸ்தை யையும் தாண்டி, பல ஆயிரங்கள் தூரமும் நேரமும் தாண்டிவிட்டு வந் திருக்கும் காதலியின் முகத்தைக் கடைசி நினைவு, முழு முயற்சியுடன் கூட்ட முயன்றது.

ரேடியோவைத் திருப்பிவிட்ட முழு இரைச்சலில்–

"In the mirror of my eyes
Lemme fed tho see of you
as you'd be seeing you
in my eyes!"

என்கிற பாட்டுக்கு ஏற்ப

மாற்றான் கட்டித் தழுவிய இறுகலுள்
மார்பில் மார்பகம் குழைந்து குலைய
தொடைக்கு மேல் ஏறிவிட்ட
உள்ளாடையின் ஓரத்து லேஸ்
அந்தரங்கங்கள் களவு காட்ட
ஜிக் ஜிக் ஜிகு ஜிகு
ஜக் ஜக் ஜகு பிகு
ஜிட்டர்பக்.

அவள் ஆடிக் கொண்டிருந்தாள்.

---







—எஸ். அர். எம்.

# ஒற்றைக் கண்ணாடி

**கவர்னர்** சென்னா ரெட்டிக்கும், தமிழக முதல்வருக்கும் 'ராசி' ஏற்பட்ட மாதிரி தெரியவில்லை. டெல்லி மேலிடத்திலிருந்து ஏதாவது சமிக்ஞை வந்தாலாவது கடுமையான நடவடிக்கை எடுக்கலாமென்றால், அதற்கும் வழியில்லையே என்று நொந்து கொள்கிறாராம் கவர்னர்.

**சுப்பிரமணிய** சுவாமிக்கு ஒரு நல்ல கௌரவமான பதவி தரலாமென்று எண்ணியிருக்கிறாராம் பிரதமர் நரசிம்மராவ். சுவாமி காத்துக் கொண்டிருக்கிறார்.

**மத்திய** உள்துறை அமைச்சர் எஸ்.பி. சவாணும் இணை அமைச்சர் ராஜேஷ் பைலட்டும் ஏழு மாதங்களாகப் பேசிக் கொள்வதில்லையாம்.

**முதல்வர்** ஜெயலலிதா தன் அமைச்சரவை சகாக்களிடம், ''நாம் எதற்கும் பயப்பட வேண்டாம். டெல்லியிலுள்ள பெரும் புள்ளிகளின் இரு வாரிசுகள் நமக்குக் கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதற்கான விடியோ ஆதாரம் நம்மிடம் உள்ளது,'' என்று சொன்னாராம்.

**டெல்லியில்** வை. கோபாலசாமி, உண்ணா விரதம் இருக்கப் போகிறார் அல்லவா? சென்னையிலிருந்து 500 பேர் ரயிலில் டெல்லி செல்ல ரிசர்வ் செய்திருக்கிறார்கள். ''என்னய்யா, நாம செய்ய வேண்டிய காரியத்தை இவர்கள் செய்து விளம்பரம் தேடிக் கொள்ளப் பார்க்கிறார்களே,'' என்று அறிவாலய வட்டாரம் கடுப்படிக்கிறதாம்.

கேசவ் தாழ்ந்த குரலில் சொன்னான்: ''வேலை தர்றேன்னு சொல்லிட்டாங்கடா லோகு.''

''அடி சக்கை! அதுக்கு ஏண்டா இப்படி சோகமா பிடில் வாசிக்கிறே? சந்தோஷமா சொல்லவேண்டியது தானே?''

''1000 ரூபா டெபாசிட் கட்டச் சொல்றாங்க!''

லோகு நொடியில் காற்று இறங்கிய பலூன் ஆனான். ''எதுக்குடா இப்படியே பண்றானுங்க? எதுக்கு ஆயிரம் ரூபா? பணத்துக்கு எங்கேடா போவே?''

''அதுதான்டா எனக்கும் தெரியலை.''

கங்கம்மாவுக்குத் துல்லியமான காது. ஊர் அக்கப்போர்களில் அவ

# கங்கம்மா

ளுக்கு ஆர்வம் அதிகம் என்பதால் இந்த மாதிரி விஷயங்களை அவள் காது நன்றாகவே வாங்கிக் கொள்ளும். கேசவனும் லோகுவும் பேசிக் கொண்டது நன்கு கேட்டது அவளுக்கு.

கங்கம்மாவின் இட்லிக் கடையைச் சுற்றி நின்றுகொண்டும் உட்கார்ந்துகொண்டும் சுமார் ஏழெட்டுப் பேர். கங்கம்மாவின் இட்லிக் கடை அந்தப் பகுதியில் கொஞ்சம் பிரசித்தம். ரிக்ஷாக்காரர்களை அந்தச் சந்தின் பெயரைச் சொல்லிக் கேட்டால் ''லெப்ட்ல திரும்பி ரைட்ல போ. போயி, கங்கம்மா இட்லிக் கடை எங்கன்னு கேளு. கரீட்டா சொல்லுவாங்க.'' என்பார்கள்.

கங்கம்மா மீண்டும் ஓரக்கண்ணால் இருவரையும் பார்த்துவிட்[டு]
இட்லித் தட்டை இறக்கினா[ள்]
இட்லிகளைக் கொதிக்கக் கொதி[க்க]
எடுத்துச் சட்டிக்கு மாற்றினாள். [...]
டைக் கண்டே மரத்துப்போன [...]
வேறு எவரும் என்றால் தண்[ணீர்]
தெளித்துத்தான் இட்லியை எ[...]
பார்கள். அப்போதுதான் இட்லி[...]
எடுக்கவும் வரும். கைக்கும் இதம[ாக]
இருக்கும். கங்கம்மாவுக்கு அதற்[கெ]
லாம் பொறுமையில்லை.

''இந்தாப்பா ஏழுமலை! [...]
தானே இட்லி கேட்டே?'' எ[ன்று]
கேட்டபடி தலைப்பாகை கட்டியிரு[ந்த]
வனின் காய்ந்துபோன தட்டில் [...]
லியை வைத்தாள். காரச் [...]
டினியை ஸ்பூனில் எடுத்து அதை[...]
தட்டில் வைத்தாள்.

''இன்னும் கொஞ்சம் சட்[...]
வையேன்! என்னமோ ஷோ கா[...]
பிக்கிறியே!'' என்றான் ஏழும[லை]

கங்கம்மா முகம் மாறினா[ள்].
''முதல் மூணு இட்லிக்கே வெறு[...]
சட்டினியா வழிச்சுத் தின்னுட்டே[...]
இன்னும் வைக்கணுமாம் இன்னு[...]
உன்ன மாதிரி நாலு ஆளுங்க [...]
தாப் போதும்யா. நான் திரு[...]
வும் ஏறக்கட்ட வேண்டியதுதா[ன்]
நெல்லூருக்கு.'' வார்த்தைகள்[...]
தணல்.

கங்கம்மா கொஞ்சம் கோ[...]
காரி. கொஞ்சம் கறார் பேர்வழி[...]
கூட. தகராறு என்று போகமா[...]

**லேனா தமிழ்வாண[ன்]**

ள். மூண்டது என்றால் அந்தச்
தே போர்க்களமாகிவிடும்.

கங்கம்மாவுக்கு அறுபது வய
அதற்கு மேலும் இருக்கலாம்.
ர்ளைக் குட்டிபற்றி வரலாறு
லை. கணவன்? அவனைப் பற்றி
ராவது பேச்சு எடுத்தால் சட்டை



யைப் பிடித்துக் கொள்ளாத குறை யாய் உலுக்கி எடுத்துவிடுவாள். அப்படி என்னதான் கெடுதல் செய்து விட்டான் அந்தக் கிழவன்? அதைக் கேட்க எவருக்கும் தைரியம் இல்லை.

''ரெண்டு பேருக்கும் சூடா நாலு இட்லி கொடு.'' லோகுதான் துணிந்து கேட்டான்.

கங்கம்மா முறைத்தாள். ''ஆமா பெரிய தொரைங்க ரெண்டு பேரும். வந்துட்டானுவ! எங்கப்பா பாக்கிப் பணம்? மாசம் பொறந்தா சம்பளம் வாங்குறவனுங்க மாதிரி, ஒண்ணாந் தேதியே பாக்கியைச் செட்டில் பண்றேன்னு சொன்னீங்களா இல்லையா? இன்னிக்கு என்ன தேதி? அதிகாரம் பண்ண வந்துட்டானுவ, அதிகாரம்.''

லோகுவுக்கு அவமானமாக இருந்தது. வாயில் வந்த வார்த்தைகளைக் கட்டுப்படுத்திக் கொண்டான். லோகு பற்றிக் கேசவுக்குத் தெரியும். ''டேய்! கிழவி பெரிய பஜாரிடா. அவகிட்ட வாய்க் குடுக்காத. நம்ம மேலேயும் தப்பு இருக்கு. ரெண்டு

---

ஷேக்ஸ்பியர் பிறந்த வீடு.



''ஷேக்ஸ்பியர் பிறந்ததும் இறந்ததும் ஒரே நாளில் தானாம். தெரியுமா?''

''இங்கிலீஷ்காரர்னா இங்லீஷ் காரர்தான். பிறந்த ஒரே நாள்ல அத்தனை டிராமாவையும் எழுதி வச்சுருக் காரே.''

—படம் : கோமதி நடராஜன்

---

பேருக்குமே வேலை கெடச்ச பாதிக்கிற வரைக்கும் கிழவி வேணும். சும்மா இரு,'' என்று திருப்பிக்கொண்டு தாழ்ந்த கு பேசினான்.

கங்கம்மா அதோடு வில்லை.

''இதுக்கே வழியக் காணே இன்னும் ஆயிரம் வேற கட்ட கிறீங்க. எப்ப எனக்குப் பணம் போகுதோ தெரியலை. அந்த வனுக்குத்தான் வெளிச்சம்!'' கு கேலித் தொனி அப்பட்டமாக பட்டது.

'ஓ! இவள் காதில் வி விழுந்துவிட்டதா?'

பிறகு என்ன நினைத்தா தெரியவில்லை. இலையில் டிரண்டு இட்லிகளை வைத்து வரிடமும் நீட்டினாள்.

''ஊருக்குப் போ. என சேர்த்து வாங்கிக்கிணு வா.'' நோட்டு ஒன்றை எடுத்துப் பார் தான் எழுதி வைத்திருந்ததை சத்தில் படித்தாள். ''ரெண்டு கணக்கிலயும் 168 ரூபா நிக் இத்தக் குடுக்கிற வழியைப் பா முதல்ல,'' என்றாள் கங்கம்மா றைப் பிடித்தால் விட மாட்ட உடும்புப் பிடி.

''என்னடா பண்ணப் போ பணத்துக்கு?''

கேசவனிடமிருந்து இல்லை.

லோகு மெதுவாகப் னான். ''டேய் கங்கம்மாகிட்டே கேட்போம்டா!''

''உனக்கு என்னடா ஏற்கெனவே திட்டிக்கிட்டு காடா. அவகிட்ட வாயைக் காத.''

''நீ சும்மா இரு. நான் கறேன்.''

அவர்கள் தங்கியிரு ஆதியப்பன் தெருவில். அதுவும்

ட்டை மாடியின் படிக்கட்டு அறை
வீட்டுக்காரர் தொழுப்பேட்டுக்
ர். 'பசங்க ஒதுங்கிக் கிடக்கட்டும்'
று சொற்ப வாடகைக்கு விட்டிருந்
. வாடகையை வசூல் செய்வதில்
ர் குறியாய் இருந்தது இல்லை.
ம்மூர்ப் பசங்கடி! நாளைக்கு
ா வந்தானுங்கன்னா நம்மளை
ாச்சுக்குவானுங்கடி. படிக்கட்டு
தானடி! எவன் இதுக்கு வாட
க்கு வருவான்?'' என்பது அவர்
மனைவிக்குச் சொன்ன சமா
ாம்.

அறைக்குப் போய்விட்டு இரவு
பதரை மணிக்கு மீண்டும் கங்
மா கடைக்கு வந்தார்கள்.

கங்கம்மா கடையை ஏறக்கட்டி
டு இட்லித் துணியைக் கசக்கிக்
ண்டிருந்தாள்.

கடை நேரம் முடிந்தால் அவ
ம் கொஞ்சம் அரட்டை அடிக்
ம் என்பது லோகுவுக்கு நன்
த் தெரிந்திருந்தது.

''என்னப்பா விஷயம்? மறுபடி
வருக்கீங்க. பாக்கி கொண்டு
ிருக்கீங்களான்ன?''

கேசவனுக்குத் 'திக்' என்றது.

''இல்ல கங்கம்மா. உன்னயத்
பார்த்துட்டுப் போலாம்னு...''

வாக்கியம் முடியவில்லை என்
அது ஏதோ அடி
ப்படும் சங்கதி என்
கங்கம்மாவுக்குத்
யும்.

''சொல்லு! நான்
ன்னா செய்யப்
றேன் உங்களுக்கு?''

''அந்த ஆயிரம்
ய நீ குடுத்தின்னா
வன் வேலையில
்து சீக்கிரமே கழிச்
ான்.''

கங்கம்மாவின் முகம்
கோணலானது.

''இன்னடா! விளை
யாடறீங்களா? ஆயிரமா வோணும்?
குடுத்து வச்சவனுங்க மாதிரி கேக்கு
றீங்களே! இன்னா தைரியம்டா உங்
களுக்கு? நானே அல்லாடிக்கிட்டிருக்
கேன். வந்துட்டானுங்க பெரிசா. நல்லா
வாயில வருது எனக்கு. எடத்தைக்
காலி பண்ணுங்க முதல்ல. இல்
லைன்னா பேஜார் ஆயிடுவீங்க ஆமா.
நானும் போனாப் போவுது போனாப்
போவுதுன்னு பாக்கிய வசூல் பண்
ணாம இருந்தா... திமிரா?''

கேசவனும் லோகுவும் மிரண்டு
போனார்கள். ஒரு வார்த்தையும்
பேசாமல் நகர்ந்தார்கள்.

கொஞ்சம் முன்னால் போன
கேசவன் திரும்பவும் கங்கம்மாவை
நோக்கி நடந்தான்.

''தெரியாமக் கேட்டுட்டோம்
கங்கம்மா. மனசில வச்சுக்காத. கிடச்
சது ஒரே வேலை. அதுவும் கை நழுவிப்
போகுதேன்னு இருக்கு. எவன் கையப்
பிடிக்கலாம், யார் காலில விழலாம்
கிற நிலைமை. தப்பா நெனச்சுக்
காதே. நாங்க வர்றோம்.''

கங்கம்மா ஒன்றும் பேச
வில்லை.

இரவு மணி இரண்டு.

திரும்பிப் படுத்த லோகு, அறை
யில் விளக்கு எரியவே, விழித்துப்



பார்த்தான்.

கேசவன் பாயில் உட்கார்ந்து கொண்டிருந்தான். தலையணையை மடியில் வைத்திருந்தான்.

''டேய்! தூங்கல?''

''தூக்கம் வரலை.''

''ஏன்?''

''பணத்துக்கு என்ன பண்ற துன்னு தெரியலை. நான் எப்படியும் வேலைல சேர்ந்தாகணும்.''

ஒரு நிமிடம் யோசித்த லோகு, ''தொழுப்பேடுக்குப் போயி அப்பா அம்மாவைப் போய்ப் பார்த்துக் கேளேன்டா.''

''அங்க இருக்கிற நிலைமை எனக்குத் தெரியும்டா. நான் போய்ப் பணம் கேட்டா, நீயும் எங்க்ளை மாதிரி தார் ரோடு போடு. தெனமும் 50 ரூபா கூலி கெடைக்கும்னு அப்பா சொல்வாரு. அவரு வேலை பார்க் கிற இடத்தில ரோடு காண்ட்ராக்டரு ரொம்ப மோசம். அட்வான்ஸ் கேட்டா அடிக்கவே வருவான்.''

''கொஞ்சம் நிலம் இருக்கேடா உங்களுக்கு?''

''அதை அப்பா ஏற்கெனவே அடகு வச்சு சாப்பிட்டுட்டாரு. வானம் பார்த்த பூமி. விளைச்சல் எதுவும் இல்லை. நீ உன் வழியில ஏதாச்சும் உதவ முடியுமான்னு பாரேன்.''

''டேய் கேசவா! என் நிலைமை நல்லாயிருந்தா உன்னைய இவ்வளவு நேரம் நான் பேசவிடுவேன்னு நினைக் கறியா? மெட்ராசுக்குக் கொண்டு வந்த பணம் அத்தனையும் காலி. இனிமே வீட்ல பணம் கேட்டா, போதும் நீ மெட்ராஸ்ல இருந்ததும் பாங்க. உனக்கு ஒரு வழி பண்ணி வச்சிட்டுதான் நான் ஊருக்குப் போவேன்.''

லோகு யோசித்தான். அப்புறம் எழுந்து டிரங்குப் பெட்டியைத் திறந் தான். ''இந்தா 25 ரூபா. நீ தொழுப் பேடுக்குப் போ. எதுக்கும் வீட்ல கேட்டுப் பாரு. நான் விடிஞ்சதும் நம்ம ஹவுஸ் ஓனர்கிட்ட கேட்[டு] பார்க்கிறேன்.''

நான்கு தினங்கள் கழி[ந்து] கேசவ் வந்தான். மனதில் சோர[்வு] கை, வெறுங்கை. ஹவுஸ் ஓன[ர்] கை விரித்துவிட்டாராம். லே[ாகு] சொன்னான்.

இருவரும் ஏக்கங்களை[யும்] சோர்வுகளையும் பரிமாறிக்கொண்[டு] அன்றிரவு தூங்கிப் போனார்கள்.

காலை. ஆறுமணி இருக்கு[ம்]. ஏழுமலை வந்து கதவைத் தட்[டி]னான்.

''கங்கம்மா நெஞ்சு கு[த்]துன்னு நேத்து ராத்திரிலேர்ந்து ஒ[ரே] ரப்சர் பண்ணுதுப்பா. போ[ய்ப்] பாருங்க. என்னான்னு போ[ய்க்] கேளுங்க.'' சொல்லிவிட்டுப் போ[ய்க்] கொண்டே இருந்தான்.

லுங்கியோடு இருவரும் ஓட[்ட]மும் நடையுமாய்ப் போனார்கள்.

கங்கம்மா கடையை ஒட[்டி] மரவட்டை மாதிரிச் சுருண்டு கி[டந்]தாள். அவளுடைய வாழ்க்கை[யே] அந்தப் பதினைந்து சதுர அடிக்கு[ள்] தான்.

''கங்கம்மா...! கங்கம்மா[...!]'' கேசவ் மெலிதாய்க் குரல் கொ[டுத்]தான்.

''ம்ம்.... ம்ம்ம்'' என்றா[ள்].

உடம்பு நன்கு வியர்த்திருந்த[து].

ரிக்ஷா பிடித்தார்கள். டா[க்]டர் புஷ்பராஜிடம் அழைத்து[ப்] போனார்கள். கடிகாரத்தைப் பார[்க்]காமல் பேஷண்டைப் பார்க்கிற ஒ[ரே] நபர் அந்தப் பகுதியில் அவர்தான்.

---

லைட்டா தண்ணி அடிச்சு வி[...] கன்னுதானே கூப்பிட்ட?

— ஹில்[...]

ஸ்டெத்தை நெஞ்சில் வைத்த
மே அவர் முகம் மாறியது.

ஸ்டெத்தை எடுத்து மடக்கி
டு அமைதியாகச் சொன்னார்.

''இறந்துட்டாங்க.''

இருவரும் அதிர்ந்துபோனார்
. ''என்ன சொல்றீங்க டாக்டர்!
ஷால ஏத்தும்போது மூச்சு இருந்
ச்சு டாக்டர்.''

''அப்போ வழியிலதான் இறந்
ருக்காங்க.''

அவர்களுக்கு அழுகை வர
லை. ஆனால் மனசை யாரோ
செவதுபோல் இருந்தது. இதுவரை
னுபவித்திராத சுமை.

என்ன செய்வது இந்த உடலை?

கங்கம்மா இட்லிக் கடை
கே பழைய சேலையால் போர்த்தப்
டுக் கிடந்தாள்.

கங்கம்மா ஏதாவது சேமித்து
த்திருப்பாளா? அவள் வைத்
ந்தால் உண்டு. இல்லாவிட்டால்
க்கம் செய்யப் பணத்துக்கு எங்கே
வது? அவளது உடமைகளை
ல்லாம் அலசியபோது, துணிப்
பில் கடைசியாக இருந்த புடவை
கீழே ஒரு பழைய கவர் இருந்
.

அதில்—

கேசவன் என்று எழுதப்பட்
ந்தது.

ஆடிப் போனான் கேசவன்.
ன்னடா லோகு இது! கங்கம்மா
பேரை எழுதியிருக்குது?''

''உனக்குத்தாண்டா. டெபா



சிட்டுக்காகச் சேர்த்திருப்பாடா கிழவி.''

லோகு கவருக்குள் இருந்த அந்த கற்றைப் பணத்தை எண்ணினான். அழுக்கழுக்காய்ப் பத்து ரூபாய், ஐந்து, இரண்டு, ஒன்றாய் நிறையவே இருந்தன. எல்லாம் சேர்ந்து 900 ரூபாய்.

''டேய்! கங்கம்மா நம்மகிட்ட சொல்லாமச் சேர்த்திருக்குடா. முழுப் பணமும் சேர்ந்ததும் தரலாம்னு வச்சிருக்கும். நீ அதிர்ஷ்டக்காரன்டா. இந்தா எடுத்துக்க. நூறு ரூபாய எப்படியும் புரட்டிடலாம். டெபாசிட்டைக் கட்டிடு. செத்தும் கொடுத்திருக்காடா கிழவி. அநாதைப் பிணம் கெடக்குன்னு சொல்லிக் கார்ப்பரேஷனுக்குப் போன் பண்ணிடுவோம். அவங்க போலீசுக்குச் சொல்லித் தூக்கிட்டுப் போயிடுவாங்க. அப்புறம் அது அவுங்க தலைவலி.''

கேசவன் கையமர்த்தினான். ''இல்லடா. ஊருக்கெல்லாம் பொல்லாத்தனம் காட்டினாலும், என்கிட்ட அவளுக்கு ஏதோ ஒரு கரிசனம். என் அப்பா அம்மாகூட செய்ய நினைக்காத காரியத்தைச் செய்ய நெனச்சிருக்காடா. எனக்கு இந்தப் பணம் வேணாம்.''

''என்னடா கேசவ்! ஏன்டா இப்படிப் புரியாமப் பேசுறே! நீ நல்லா இருக்கணும்கிறதுதானடா அவளோட கடைசி ஆசை? அதையேதான் நானும் சொல்றேன். உன்னை எவனும் கேள்வி கேட்க முடியாதுடா. இது உன் பணம்டா. பேசாமப் பணத்தை எடுத்துக்கிட்டு நீ புறப்படு. நான் பார்த்துக்கறேன் மத்ததை.''

''வேண்டாம்டா லோகு! நான் சொல்றதைக் கேளு. வேலை முக்கியமில்லைடா எனக்கு. இந்தப் பணத்தை வச்சு கங்கம்மாவை நல்லபடியா அடக்கம் பண்ணுவோம். கங்கம்மா அநாதைப் பிணமில்லை. நாம இருக்கோம்டா அவளுக்கு.''

கேசவனுடைய தழுதழுத்த குரலில் உறுதியும் சேர்ந்திருந்தது.

நாட்டு நடப்பு

# பாகிஸ்தான் வாங்கிய போர் விமானம்?

தினசரி பத்திரிகைகளில் கடந்த இரண்டு மூன்று வாரங்களில் வந்த சில முக்கியமான செய்திகளை மக்கள் எந்த அளவிற்கு தெரிந்து வைத்திருக்கிறார்கள் என்று வ.ஆ. அம்பேத்கார் மாவட்டத்தைச் சேர்ந்த 10 பேரைச் சந்தித்து 10 கேள்விகளைத் தந்து 10 நிமிடத்திற்குள் விடை எழுதித் தரவேண்டும் என்று சொன்னோம்.

தந்தார்கள். அவர்களின் பதிலிலிருந்து ஒரு விஷயம் மட்டும் தெளிவாய்த் தெரிந்தது. பெரும்பாலானவர்களுக்கு ஞாபக மறதி அதிகம் என்று.

''இது நெஞ்சிலேயே இருக்கு, வரமாட்டேங்குது!''

''அடடா... ரெண்டு நாளைக்கி முன்னாடி பேப்பர்ல வந்ததே!''

''நேத்துகூட டி.வி.யில சொன்னானே!''

அப்புறம் யோசித்து... யோசித்து எழுதித் தந்ததுதான் இவை.

ஞாபக மறதிக்கு வல்லாரை நல்ல மருந்தாம். ஆனால் அதை மறக்காமல் சாப்பிட வேண்டுமே!

எல்லாருமே, கற்பழிப்பு வழக்கில் தலைமறைவாகியிருந்த சப் இன்ஸ்பெக்டர் சதாசிவம் பெயரை டக்கென்று சரியாக சொன்னார்கள். ஒருவேளை சி.பி.சி.ஐ.டி.யினரால் செய்யப்பட்ட விளம்பரமாகவும் இருக்கலாம்.

**கேள்விகள்:**

1. *உலக அழகியாகத் தேர்வு செய்[யப்] பட்ட இந்தியப் பெண்ணின் பெய[ர்]*
2. *அ.தி.மு.க.வின் புதிய பொரு[ளா] ளர் யார்?*
3. *பாராளுமன்றம் யார் அதிகா[ரத்] தைக் குறைக்கத் தீர்மானம் நி[றை] வேற்ற உள்ளது?*
4. *கலைஞர் சமீபத்தில் எத்தன[ை] யாவது பிறந்தநாளைக் கொ[ண்] டாடினார்?*
5. *கற்பழிப்பு வழக்கில் தலைம[றை] வாகியிருந்து சரணடைந்த [சப்] இன்ஸ்பெக்டரின் பெயர்?*
6. *உலக அளவில் எந்தப் படம் சக்[கை] போடு போட்டுக் கொண்டி[ரு] கிறது?*
7. *இந்தியா வெற்றிகரமாக ஏ[வி] விட்ட ஏவுகணையின் பெயர்?*
8. *சென்னைக்கும் மைசூருக்கும் [இ]டை பத்தில் விடப்பட்ட விரைவு வண்[டி] யின் பெயர் என்ன?*
9. *விமானப் பணிப்பெண்ணிட[ம்] தவறாக நடந்து கொண்டதா[ல்] தன் அமைச்சரை பதவி நீக்[கம்] செய்த முதல்வர் யார்?*
10. *பாகிஸ்தான் அமெரிக்காவிட[ம்] எந்த வகையான போர் விமான[ம்] வாங்க உள்ளது?*





பியர்ஸ் ப்ரோஸ்னன்

ஷான் கானரி

ரோஜர் மூர்

திமோத்தி டால்ட்டன்

# கோல்டன் ஐ நாயகன்

ஷான் கானரி, ரோஜர் மூர் வரிசையில் ஐந்தாவது புதிய ஜேம்ஸ்பாண்ட் அறிமுகமாகியுள்ளார். பெயர் பியர்ஸ் ப்ரோஸ்னன். ஐரிஷ் நடிகர்.

முதல் நான்கு ஜேம்ஸ்பாண்டுகளை விட ஹாலிவுட்டில் பரபரப்பாகப் பேசப்படுகிறார். இவ்வளவுக்கும் இவர் ஜேம்ஸ்பாண்ட்டாக நடித்த 'கோல்டன் ஐ' இன்னும் ரிலீஸ் ஆகவில்லை.

முந்தைய சோவியத் ரஷ்யாவில் நிலவிய துப்பாக்கிக் கலாசாரத்தை மையமாக வைத்து கோல்டன் ஐ உருவாக்கப்பட்டுள்ளது. நியூ ஜெலண்டர் மார்டின் டைரக்‌ஷனில் எடுக்கப்படும் இந்தப் படம் 1995–இல் வெளிவரப் போகிறது.

இந்தப் படத்தைத் தயாரிக்கிற ஆல்பர்ட் ஆர். ப்ரோக்கோலிதான், முதன்முதலாக 1962–இல் 'மை நேம் இஸ் பாண்ட், ஜேம்ஸ் பாண்ட்!' என்ற வார்த்தைகளை ஹாலிவுட்டில் ஒலிக்கச் செய்தவர்.

பிரிட்டிஷ் எழுத்தாளரான ஐயான் ஃபிளமிங்கின் மர்ம நாவல்களைப் படித்த ப்ரோக்கோலி, அதில் வரும் ஒற்றர்களின் வீரதீரச் செயல்களைக் கண்டு பிரமித்துப் போனார். அதன் விளைவுதான் 'டாக்டர் நோ' என்ற முதல் ஜேம்ஸ் பாண்ட் படம். இதில் ஜேம்ஸ் பாண்டாக நடித்த ஷான் கர்னரி, முதல் படத்திலேயே தனக்கு இணையாக இன்னொரு ஜேம்ஸ் பாண்ட் உருவாக முடியாது என்பதைக் காட்டிவிட்டார்.

டாக்டர் நோவைத் தொடர்ந்து ஷான் கானரி ஆறு படங்களில் ஜேம்ஸ் பாண்டாக வந்து முத்திரை பதித்து ஹாலிவுட்டின் முதல் ஜேம்ஸ்பாண்ட் என்ற பெருமையைத் தக்கவைத்துக் கொண்டார்.

ஆன் ஹெர் மெஜஸ்டிஸ் சீக்ரெட் ஸர்வீஸ் (1969) என்ற ஒரே ஒரு படத்தில் மட்டும் தோன்றிய ஜார்ஜ் எலஜென்பே இரண்டாவது ஜேம்ஸ் பாண்ட் ஆவார்.

மூன்றாவது ஜேம்ஸ்பாண்ட் ரோஜர் மூர். அதிகமாக பேசப் பட்டவர். கவர்ச்சி, திகில், கொலை, உளவு என்ற பாணியில் ஓர் ஒழுங்கு முறையைத் தன் படங்களில் கொண்டு வந்தவர். இவரது ப்ளஸ் பாயிண்ட் உயரமானவர் என்பதுதான்.

திமோத்தி டால்டன், 'த லிவ் விங் டே லைட்ஸ், (1985) என்ற படத்தின் மூலம் நான்காவது ஜேம்ஸ் பாண்ட்டாக அடியெடுத்து வைத்தார். இவரது 'லைஸென்ஸ் டு கில்' (1989) இந்தியாவில் பரபரப்பாக ஓடிய படம்.

இவருக்கு அடுத்து ஐந்தாண்டு இடைவெளிக்குப் பின்னர் ஐந்தாவது ஜேம்ஸ்பாண்டாக அறிமுகமாகிறார் பியர்ஸி ப்ரோஸ்னன்.

ப்ரோஸ்னன் இந்திய தொலைக்காட்சி நேயர்களுக்கு முன்பே அறிமுகமானவர்தான். 'ரெமிங்டன் ஸ்டீல்' என்ற ஸ்டார் ப்ளஸ் ஸாட்டிலைட் தொலைக்காட்சித் தொடரின் ஹீரோ இவர்தான். அண்மையில் ஒளிபரப்பப் பட்ட 'அரவுண்ட் த வோர்ல்ட் இன் 80 டேஸ்' என்ற டி.வி. தொடரிலும் நடித்திருக்கிறார்.

ப்ரோஸ்னன் 1987 இல் 'த போர்த் ப்ரோட்டோகால்' என்ற படத்தில், இங்கிலாந்திற்கு அணு ஆயுதத்தைக் கடத்தும் ரஷ்ய ஏஜன்டாக நடித்தது நல்ல வரவேற்பைப் பெற்றுத் தந்தது.

குஷ்பு அம்மாவாகிறார்
– பக்கம் 19

இந்தியாவில் நடந்த ஒரு கதையை மையமாக வைத்து, சசி கபூரும் சையத் ஜாஃப்ரேயும் எடுத்த 'த டிஸீவர்ஸ்' (ஏமாற்றுக்காரர்கள்) என்ற படத்தில் முரட்டு ஆங்கில அதிகாரியாக நடித்தவர் இவரே.

ப்ரோஸ்னன் நிலைத்து நிற்பாரா என்பதுதான் இப்போது ஹாலிவுட்டின் ஆராய்ச்சியாக உள்ளது. அது இவருக்கு ஜோடியாக வரும் பெண் ஜேம்ஸ்பாண்ட்டைப் பொறுத்தும் அமையக்கூடும். கவர்ச்சியும் துணிச்சலும் நடிப்பும் மிக்க பெண் ஜேம்ஸ் பாண்ட் கிடைக்க வேண்டும்.

உருஸ்லா ஆண்ட்ரஸ், டன்யா ராபர்ட்ஸ், கிரேஸ் ஜோன்ஸ் போன்ற பெண் ஜோடிகளின் கவர்ச்சியும் ஒத்துழைப்பும்தான் கானரியும் ரோஜர் மூரும் நிலைத்து நிற்க ஒரு காரணமாக அமைந்தன.

இப்போது ப்ரோஸ்னனின் 'கோல்டன் ஐ'யிலும் கிளாமராக ஒரு நடிகை நடித்துள்ளாராம். இவரது கம்பீரமான குரலும், வசீகரமான தோற்றமும் ஜேம்ஸ்பாண்ட் ரசிகர்களைக் கவரக் கூடும்.

18 ஆவது முறையாக (கோல்டன் ஐ தான் 18 ஆவது படம்) வால்தர் பி பி கேயைப் (ஜேம்ஸ் பாண்ட் பயன்படுத்தும் துப்பாக்கி) பயன் படுத்தும் பியர்ஸ் ப்ரோஸ்னனுக்கு இப்போதே மாணவர்கள் மத்தியில் அதிக செல்வாக்கு உருவாகிக் கொண்டிருக்கிறது.

ஆமாம், ஜேம்ஸ்பாண்ட் என்பவர்கள் யார் தெரியுமா?

சுடுவதற்கும் முத்தமிடுவதற்கும் லைசென்ஸ் பெற்றவர்கள் இவர்கள். நிஜவாழ்வில் அல்ல; துப்பறியும் சினிமா உலகில்.

—இரா.

# சூழ்நிலைதான் முக்கியக் காரணம்

இளம் குற்றவாளிகள் இல்லம் சென்று விசாரித்தபோது சொல்லப்பட்ட நிகழ்ச்சி இது: (பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன)

காஞ்சீபுரம் அருகில் ஒரு கிராமம்.

அந்த வீட்டின் சமையல் அறையில் சுகுணா, விறகு அடுப்போடு போராடிக்கொண்டிருந்தாள். கண்களில் எரிச்சல் அழுகையாய் வந்தது. திரும்பிக் கிணற்றடியில் பார்த்தாள். தங்கை பவானியும், ரமாவும் சிரித்துப் பேசியவாறு துணிகளுக்கு சோப்புப் போட்டுக் கொண்டிருந்தார்கள். இவர்களிடம் அந்த விஷயத்தை எப்படிச் சொல்வது? அவளுக்கே வயது 12தான்.

''சோறாக்கியாச்சா?'' அதிகாரமாய்க் கேட்ட தகப்பனைப் பார்த்தபோது எரிச்சலும் துக்கமும் வந்தன.

சுகுணாவுக்கு அம்மாவின் நினைவு வந்தது. மனநிலை சரியில்லாதவள். ஓடிவிட்டாள் வீட்டை விட்டு. மூத்த பெண் என்பதால் பொறுப்புக்கள் சுகுணாவின் தலையில். தங்கைகளுக்குச் சோறு ஊட்டுவது, தலை பின்னிவிடுவது, சமையல் என்று எல்லாமும் செய்தாள். படிப்புக்கு முற்றுப்புள்ளி.

அப்பனோ பெரிய குடிகாரன். இரவு, வேலையிலிருந்து வரும்போதே வாயிலிருந்து சாராய நெடி வீசும். தங்கைகளைச் சாப்பிட வைத்



துத் தானும் சாப்பிட்டுவிட்டுக் காத்திருப்பாள்.

இரவு வீட்டுக்கு வரும் பெரியசாமி, தள்ளாடியவாறு உள்ளே சரிவான். ஏற்கெனவே மனைவி ஓடிப் போன துக்கம். குடி போதை வேறு தலைக்குமேல் இருக்கும் நேரம்.

அம்மா செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் செய்வதால் மூத்த பெண் சுகுணாவின் உருவத்தில் அவளின் அம்மாவையே பார்த்தான். மனைவி போலவே பாவிக்க ஆரம்பித்தான்.

முதல் நாள் அதிர்ச்சியில் மிரண்டு போய்விட்டாள் சுகுணா. தனக்கு என்ன நேர்ந்தது என்றுகூட அவளுக்குப் புரியவில்லை.

மீண்டும் மீண்டும் அது நிகழ்ந்தது.

சில நாட்கள் இவளுக்கு மயக்க மருந்துகொடுத்து விட்டு அவனும் குடி மயக்கத்தில் ஆட்டம் போட்டான்.

சுகுணா சுபாவமாகவே யாரிடமும் எதையும் பேசாதவள். தனக்குள் மறுகும் ரகம். தன்னையும் விடக் குறைந்த வயசுத் தங்கைகளிடம் இந்த விஷயத்தை எப்படிப் பகிர்ந்து கொள்வது? குழம்பினாள். திணறினாள்.

அவ்வப்போது பக்கத்துவீட்டு டி.வி. யில் சினிமா பார்க்கப்போவது ஒன்றுதான் ஒரே பொழுது போக்கு. அன்றைக்கும் அப்படித்தான் போனாள். டெலிவிஷனில் 'பால நாகம்மா' படம் பார்க்க நேரிட்டது. அதில் பார்த்த ஒரு காட்சி இவள் மனதை அசைத்தது. கொடுமை செய்யும் மந்திரவாதியைக் கொன்றால் தப்பில்லை என்ற வாதம் பதிந்தது.

ஏற்கனவே தனக்கு நேர்ந்து கொண்டிருக்கும் வித்தியாசமான அவஸ்தையினால் ஹிஸ்டீரியாவில் பாதிக்கப்பட்டவள் போல் நடந்து கொள்வது வழக்கமாகியிருந்த நிலையில்— (எல்லோரும் அடிக்கடி 'சாமி' வருவதாய் நம்பினார்கள்).

அன்று—

என்றும் போல் கம்பெனி வேலைகளை முடித்துக்கொண்டு தலை வரைக்கும் குடித்துவிட்டுத் திரும்பிய பெரியசாமி வீட்டுக்குள் வந்ததும் முதல் வேலையாக சின்னப் பெண்கள் இருவரையும் கடைக்கு அனுப்பிப் பால் வாங்கி வரச் சொன்னான்.

கதவைத் தாழிட்டான். பெற்ற மகள் என்றும் பாராமல் வழக்கம் போல பலாத்காரம் செய்ய ஆரம்பித்தான். ஆனால், சுகுணா வழக்கத்



திற்கு மாறாக அதற்கு இடம் கொடுக்காமல் நேராய்ச் சமையலறைக்குப் போனாள். அங்கிருந்த கத்தியை எடுத்தாள். தன்னை நெருங்கிக் கட்டிப்பிடிக்க முயன்ற அப்பனின் வயிற்றில் தன் பலமனைத்தையும் திரட்டி ஓங்கி ஒரே குத்தாய் அப்படியே செருகினாள்.

ரத்தம் பெருகியது. குடல் சரிந்தது. சரிந்தான்.

இப்போது சுகுணாவும், தங்கைகளும் சென்னையில்தான் இருக்கிறார்கள். சுகுணா கல்யாணத்துக்குக் காத்திருக்கிறாள். அப்பா வேலை செய்த இடத்திலிருந்து கிடைத்த பணம் இதற்கெல்லாம் உதவுகிறது.



பேட்டி, தொகுப்பு: பாமாகோபாலன்
படம்: மேஜர்தாசன்

நடிப்பு: 'மகாநதி' வைசாலி, ஷா.
படம்: ப்ரவீன்குமார்



சமூகப் பாதுகாப்புத் துறையில் 'இளைஞர் வழிகாட்டி நிலைய'த்தில் பணிபுரியும் சைக்கியாட்ரிஸ்ட் பெற்றி டேவிட் இது பற்றி என்ன சொல்கிறார்?

''ஏழ்மையினால் மட்டும்தான் குற்றங்களைச் செய்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. வீட்டுச் சூழ்நிலைதான் முக்கியக்காரணம். மனைவியை இழந்த கணவன், மூத்த பெண்ணிடம் தவறாக நடந்து கொண்டான். யாரிடமும் தன் நிலையைப் பகிர்ந்துகொள்ளாத பெண் என்ன செய்தாள்? கடைசியில் அந்த அப்பாவையே கொலை செய்துவிட்டாள். டி.வி.யில் பார்த்த படம் அதற்கான தைரியம் கொடுத்திருக்கிறது.

கொடுமை செய்பவனைக் கொல்வது தப்பில்லை என்பது அவள் வாதம். இங்கு வந்தபிறகும், அவள், தான் செய்தது தப்பே இல்லை என்றுதான் சொன்னாள். பதிமூன்று வயதில் கொலையின் தீவிரம் தெரியாதுதான்.

இளம் குற்றவாளிகள் அனேகமாய் இதுபோன்ற செயல்களைப் பதிமூன்று பதினைந்து வயதில்தான் செய்கின்றனர். பிறகு மிகவும் வருந்தி, இங்கு வந்தபிறகு மனம் மாறி, திருந்தி வாழ விரும்புகின்றனர்.

பல கேஸ்களில் இங்கு வந்த பிறகு வெளியே போகவே விரும்பாமல் இங்கேயே தங்களைச் சீர்செய்து கொள்ள விரும்புகிறார்கள். இங்கே இருந்துவிட்டுப் போனவர்கள் இப்போது நன்றாய்ப் படித்துப் பாஸ் செய்து, நல்ல வேலைகளில் இருக்கிறார்கள். நிறையப் பேர்கள் கல்யாணப் பத்திரிகைகூட அனுப்புகிறார்கள்.

நல்ல நண்பர்கள், நல்ல வீட்டுச் சூழ்நிலை, பெற்றோரின் அரவணைப்பு, கவனிப்பு, எல்லாம் இருந்தால் நிச்சயம் இளம் குற்றவாளிகளின் எண்ணிக்கைக் குறைய வாய்ப்பு உண்டு.



ஏ.ஸி.பி. என்னை அவசரமாகக் கூப்பிட்டிருந்தார். மாசிலாமணியைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு கமிஷனர் ஆபிசுக்குச் சென்றபோது கோபிநாத் கடுப்பில் இருந்தார். என் சல்யூட்டை வாங்கிக் கொண்டு ''வாய்யா! என்னாய்யா ஆய்கிட்டு இருக்கு உங்க போலீஸ் டிப்பார்ட்மெண்ட்டு?''

''உங்க போலீஸ் டிப்பார்ட்மெண்ட்ன்னா?'' என்றேன் ஆச்சரியமாக.

''டிப்பார்ட்மெண்ட்டை சேந்தவன்னே சொல்லிக்க வெக்கமா இருக்குது.''

நான் அவரை 'விவரமா சொல்லுங்க ஸார்,' எனக் கேட்க முடியாது. மேலதிகாரி. அவர் மீசையை நீவிக் கொண்டே ஃபோன் பேசி இரண்டு மூன்று ஃபைல் பார்த்து முடியும் வரை காத்திருந்தேன்.

''உன் ஃப்ரெண்டு குணசீலன் தெரியுமில்லை? உன் ஃப்ரெண்டுதானே அவன்?''

''ஆமா ஸார்.''

''குணசீலனும் நான்கு கான்ஸ்டபிள்களும் சேர்ந்து ஒரு கீழ்சாதிப் பெண்ணை ரேப் பண்ணியிருக்காங்க. பாளாப் போற பொண்ணு ஸ்டேசன்லயே உயிரை வுட்டுருச்சு. கலாட்டா நடக்குது. ரைட்டர் ரூமை சூறையாடிட்டாங்களாம். ஜீப்பை கொளுத்திட்டாங்களாம். மாலைக்குள்ள கைது பண்ணலை, தலை உருளும். வெய்ட் பண்ணு. வாரண்டு ஏற்பாடு பண்ணிக்கிட்டு இருக்காங்க. வந்ததும் அவனைப் போய்ப் பார்த்து அரஸ்ட் பண்ணிக்கிட்டு வரணும். உன் ப்ரெண்டுதானே? நல்லபடியாச் சொல்லிப் போடு. ரெசிஸ்ட் பண்ணாம இருக்கச் சொல்லு. கையும் களவுமா மாட்டியாச்சு. அவனை பேரண்ட் ஸ்டேசன் பக்கம் போக

சுஜாதா

விடாதே. கொளுத்திருவாங்க. அத்தனை கோபத்தில் இருக்காங்க. அவனுக்கு இப்ப பத்திரமான எடம் போலீஸ் கஸ்டடிதான்.''

''குணசீலனா?''

''ஆமா. என்ன பொருத்தமான பேரு பாரு. ஏன்யா இப்படி புத்திபோவுது உங்க பேச்மேட்டுங்களுக்கு? போலீஸ் ட்ரெய்னிங் காலேஜ்ல என்ன எளவை சொல்லித் தந்தாங்க?'' எப்படி பதில் சொல்வேன்? குணசீலனா என்கிற அந்த அதிர்ச்சி நீங்கா நிலையில் வாய் பேசாமல் நிற்க, அவர் தொடர்ந்தார். சீலனும் நானும் ஒன்றாய் ஒருவார இடைவெளியில் போலீசில் சேர்ந்தவர்கள். ஒரே ஊர், ஒரே காலேஜ், ஒரே பயிற்சி, போஸ்டிங். அங்கிருந்து பிரிந்து நான் ஃபாரன்சிக் பக்கம் போய்விட, சீலன் அத்தனை சென்னை போலீஸ் நிலையங்களையும் பார்த்துவிட்டு முரட்டு ஆசாமி என்கிற புகாரின் பேரில் செங்கல் பட்டுக்கு மாற்றலாகி, மாற்றலை ஏமாற்றுவதற்காக நகர வெளிப்புறத்திலுள்ள ஒரு சிறு நிலையத்தில் பொறுப்பேற்று ''அது என்ன பேரு மகப்பேறா, என்னா போலீஸ் டேசன்யா அது.''

''மடிப்பேறுங்க. வண்டலூர் போற வழியிலங்க.''

''அங்கதான் சம்பவம் நடந்திருக்கு. சௌகரியமான இடம். புருஷனைக் காணோம்னு புகார் கொடுக்க வந்திருக்காங்க. இருட்டனப்புறம் தனியா பொம்பளையை ஸ்டேஷன்ல நிறுத்தறதே சட்ட விரோதம். நாலு பேரும் சேர்ந்து லாக்கப் ரூம்ல படுக்கவெச்சு கிளிச்சிருக்காங்க. உன் ஃப்ரண்டுதான் 'துவக்க உரை.' தாங்க முடியாத எமர்ரேஜ் ஆய்ட்டுது- தாலுகா ஆசுபத்திரியில வஜைனல் ஸ்வாபெல்லாம் எடுத்து ரிப்போர்ட் எளுதிட்டான். டாக்டர் கடுப்பாயிட்டான். காலைல ஃபோன் செய்தான். ரிக்கார்டை மாத்தப் பாத்திருக்காங்க. ராத்திரியே கிராமத்துக்கு பாடியை அனுப்பிச்சு, உடம்பு சரியில்லை, வழிலயே இறந்துட்டாள்னு அனுப்பிட்டாங்க. இடையில் புருஷன்காரன் வந்துட்டான். டாக்டரும் கிராமத்தில வந்து தகவல் சொல்லிட்டாரு. கிராமமே சூழ்ந்துகிட்டாணுக. கைல பச்சைப்பிள்ளையை தூக்கிக்கிட்டு சிட்டிக்கு அலையறான் புருஷன் காரன்.

உன் நண்பன் ஓடி வந்துட்டான். அசோக் நகர்ல சொந்த வீட்ல தான் தலைமறைவா பதுங்கி இருக்கான்னு தகவல். போய்க் கூட்டி வந்துரு. அவன் மேலதிகாரி எஸ்.பி. இருக்காரு சுந்தரவேலுன்னு. அவர் கிட்ட ஒரு வார்த்தை நான் சொல்லிக்கிறேன். நீ போய்க் கூட்டி வா விசாரிக்கலாம்.''

''சரி ஸார்,'' என்றேன். என் குரல் கம்மியிருந்தது.

''எனக்கும் வருத்தமாத்தான் இருக்குது. குணசீலன் மாதிரி ஒரு போலீஸ் அதிகாரி உம் மாதிரி நூறு பேர் கட்டிக் காத்ததை ஒரே நாள்ள



''பூக்களைப் பறிக்காதீங்கன்னு போர்ட் வைச்சது தப்பா போச்சி.''
– எம்.கே. வேங்கவேல்

கலைச்சுர்றாங்க. எப்படிப்பட்ட ஆளய்யா இந்த குணசீலன்.''

''தெரிஞ்ச வரைக்கும் நல்லவன்தான். கொஞ்சம் முரட்டு சுபாவம் உள்ளவன். அடிப்பான். தேர்ட் டிக்ரி எல்லாம் உண்டு. ஆனா இந்த லெவலுக்குப் போவான்னு நான் எதிர்பார்க்கலை ஸார்.''



''பொண்டாட்டி, கைப்பிள்ளை எல்லாம் இருக்குதாமே?''

''இருக்கு ஸார்.''

''மனைவியைத் தெரியுமா?''

''கல்யாணத்தின் போது பார்த்தது.''

அரஸ்ட் வாரண்ட் வந்தது. ஜீப்பில் ஏறிக்கொண்டு புறப்பட்டேன். மனசில் அலை அலையாக எண்ணங்கள் ஓடின. நானும் சீலனும் பிக்னிக் போனது, மதகடியில் நீரில் குதித்து அந்த கட்டுமஸ்தான தேகத்தைக் கண்டு வியந்தது. அவன் புன்னகை. மேற்செல்லும் மீசை. எப்போதும் கண்களில் இருந்த பிளேடு கூர்மை. அவன் கனம். ஹாக்கி நன்றாக ஆடுவான். கோல் கீப்பர். அவனைத் தாண்டி ஏதும் போகாது. போலீஸ் ட்ரெயினிங் காலேஜில் செகண்ட் பெஸ்ட்டாக வந்து வெள்ளிப் பதக்கம் பெற்றவன். எப்படி, எந்தக் கட்டத்தில் விகாரப் படுத்தப்பட்டு மாறிப் போனான். எங்கே மாறுகிறார்கள்? பயிற்சியெல்லாம் சரியாகத்தானே இருந்தது. ஒரு போலீஸ் அதிகாரியின் கடமைகள் என்னவென்று சரியாகத்தானே சொல்லித் தந்தார்கள். அதனுடன் தேசபக்தி, கடமை உணர்ச்சி, சமூகப் பொறுப்பு எல்லாம் சேர்த்து உருவேற்றி ஆரோக்கியமான உணவு, எண்ணங்கள். என்னவெல்லாம் கற்றுக் கொடுத்து டி.ஜி. வந்து மார்பில் மெடல் குத்தினபோது சீலன் கண்களில் எத்தனை பெருமை ஒளிர்ந்தது. அவன் போய் அபலைப் பெண்ணைக் கற்பழித்தானா? எங்கே ஏற்பட்டது இந்த சிதைவு? ஏதாவது காரணம் இருக்கத்தான் வேண்டும். எங்கள் பயிற்சியில் எல்லாம் தவறே இல்லை. அவற்றை நடைமுறை உலகத்துக்குப் பயன்படுத்தும்போது விகாரங்கள் வந்துவிடுகின்றனவா?

அசோக் நகரை நோக்கி ஜீப் செல்ல, எப்படி இந்த மாறுதல் வந்திருக்கும் என்று யோசித்துப் பார்த்தேன். ஆசையா? அதிகாரம் இருக்கிறது என்கிற முரட்டுத்தனமா? எது? இல்லை, அபலைகளை அனாதைகளை ஏழைகளை யாரையாவது பார்த்தால் கையாலாகாமையால் சமூகத்தின் மேல் வரும் வெறுப்பும் கோபமும் சிலவேளை அவர்கள் மேலேயே மூர்க்கத்தனமாக வெடிக்கும் என்று சைக்காலஜி பாடங்களில் படித்தேனே அது போலவா?

பச்சை அரசியலானது
கலைஞரின் அணுகுமுறை.
வீரமணி பரபரப்புப் பேட்டி
—பக்கம்: 33

கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் சிக்னலில் நின்றபோது—

சத்ய மோகன் ஃபோட்டோப் படங்களைக் காண்பித்தார். ரேப்பான பெண்ணைப் பார்த்தால் தலையில் புழுதியும் தடித்த வெறும் கழுத்துமான பெரிய திறந்த வாயில் நிறைந்த பற்களுமாக, எப்படி இது நிகழ்ந்திருக்கும். புரியவே இல்லை.

அசோகரின் ஸ்தம்பம் அபத்தமாக சாலை நடுவே எதையும் நிரூபிக்காமல் நின்று கொண்டிருக்க அதை வலம் வந்து ஈ.எஸ்.ஐ. ஆசுபத்திரியைத் தாண்டினதும் முழுமையாக மூன்று ப்ளாக்குகள் கடந்து தார்போட சிறு கற்கள் கொட்டியிருந்த அரைத் தெருவில் இருந்த வீடு, ஒரு கற்பழிப்புடன் எந்தவிதத்திலும் இணைக்க முடியாதபடி மிக அமைதியாக இருந்தது. ஜீப்பை நிறுத்திவிட்டு கான்ஸ்டபிள்களை வரவேண்டாம் என்று மெல்ல அணுகினேன். வாசல் கதவு பாதித் திறந்திருந்தது. உள்ளே டி.வி. கேட்டது.

கதவின் மணியை அழுத்த, கொஞ்ச நேரம் கழித்து ஒரு பெண் கையில் குழந்தையுடன் வாசலுக்கு வந்தாள்.

என் சீருடையைப் பார்த்ததும்

கதவை முழுவதும் திறந்தாள்.

''வணக்கம். சீலன் இருக்காரா?''

''இருக்காரு. நீங்க?''

''என் பேரு பழனி. சீலனோட அதே பாட்ச். நான் உங்க கல்யாணத்துக்கு வந்திருக்கேன். ஞாபகமிருக்குதா?''

அவள் கண்கள் என்னை அடையாளம் தேடின. ''உள்ள வாங்க உக்காருங்க,'' என்று கீழே இறைந்திருந்த விளையாட்டுச் சாமான்களை நகர்த்தினாள்.

''சீலன் இருக்காரில்லை?''

''இருக்காரு. குளிச்சிகிட்டு இருக்காரு. உக்காருங்க''

''பரவால்லை.''

''உக்காருங்க ப்ளீஸ். உக்கார வைக்கலைன்னா கோவிச்சுப்பாரு. என்ன சாப்பிடறீங்க?'' என்றாள்.

அவளுக்கு என் தங்கை சுகுணாவின் வயது இருக்கும். கொஞ்சம் அவள் போலத்தான் இருந்தாள். குழந்தை கீழே விட்டதும் அழ ஆரம்பித்தது. அதை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டாள். மீண்டும் கர்ப்பமாக இருப்பதை வயிறு காட்டியது.

''எதையோ தண்ணி குடிச்சதில ஜுரம்ங்க. அதான் நச்சு நச்சுன்னு அழுவுது.''

நான் ''பாப்பா இங்க பாரு! பேரு என்ன?'' என்று கேட்டேன்.

''கவிதா!'' என்றாள்.

''பல் வந்துருச்சா?''

''நிரடுது,'' என்றாள், அதன் வாயில் விரலை விட்டு. அது கக்கென்று இருமிவிட்டுக் கண்ணீர் விட்டது.

குணசீலனின் மனைவியைப் பார்த்தேன். இளம் தாயின் அனைத்து அங்க லட்சணங்களும் அலுப்புக்களும் உடலில் தெரிந்தன. கல்யாணமாகி இரண்டு வருஷம்தான் ஆகியிருக்க வேண்டும். உடம்பில் ஓவர் ... வாங்கிய அலுப்பு இருந்தது. மா... சற்றே துவண்டு போய், முதுகு ... க்க் கூன் போட்டு தலை மயிர் சரிய... வாரப்படாமல் இவள் கல்யா... தில் பார்த்தபோது எத்தனை ... காகப் பளிச்சென்று இருந்தாள் ... பது ஞாபகம் வந்தது. என்னிட... ஃபோட்டோ கூட இருக்கிறது.

''என்ன விஷயமா வந்தி... ஏதாவது சாப்பிடறீங்களா?''

'கைது செய்ய' என்று சொ... முடியுமா?

''நீங்க இந்த வீட்டுக்கு எ... வந்திங்க?''

''வந்து மூணு மாசமாச்... வேலைக்காரி கிடைக்கலை.''

''சொந்த வீடா?''

''ஆமாம்.''

''துணி துவைச்சுப் போட்... இவருக்கு யூனிபார்ம் இஸ்தி... போட்டு, ரெண்டு நாளா லீவ்... இருக்காரா அதனால் சமாளிச்... முடியுது. போலீஸ் டிப்பார்ட்மெண்... டில் எல்லாருக்கும் லீவா? ரெண்... நாளா போகவே இல்லையே? இரு... ருந்துதான் மோட்டார் சைக்கி... எடுத்துட்டு மடிப்பேறு போய் வ... வாரு.''

காலை பேப்பரே பார்... தில்லையா! உன் கணவன் பே... கொட்டை எழுத்தில் வந்திரு... கிறதே! ''பேப்பர் பார்த்திங்களா?...



என்று கேட்டேன், ''எனக்கு டயம் எங்கங்க? இந்தப் பொண்ணுக்குத்தான் ஃபுல் டைம் அட்டென்ஷன் தேவைப் படுதே. ஜுரம் வேற. இதையும் பார்த்துக்கிட்டு, வீட்டு வேலையும் பார்த்துக்கிட்டு, துணியும் தோச்சு கிட்டு சமையலும் செய்யணும். உங்க ளுக்குக் கல்யாணம் ஆயிருச்சா?

''இல்லைங்க.''

''இவரு வயசுதானே உங்களுக் கும்.''

''ஆமாம்.''

''ஏன் கல்யாணம் பண்ணிக் கலை?''

நான் மௌனமாக இருக்க—

''நல்ல காரியம் செய்தீங்க. எம்மாதிரி இன்னொருத்தி வயிற்றை சாச்சுகிட்டு வரப்போறவங்களுக் கெல்லாம் அவரு குளிக்கிறாரு, பல் தேய்க்கிறாருன்னு பதில் சொல்லிக் கிட்டு இருப்பா!''

நான் அவள் முகத்தைப் பார்த்தேன். வெறுப்போ கோபமோ இல்லை. களைப்புதான். ஒரு முழு புகத்தின் களைப்பு.

''செய்யணும்.''

''அப்பா அம்மா யாரையாவது கூப்பிட்டு வெச்சுக்கலாமே?''

''அவங்க ரெண்டு பேரும் போய்ட்டாங்க.''

''சீலன் சைடுல?''

''அவங்க துபாய்ல ஒருத்தரும் தளித்தலையில ஒருத்தரும் இருக் காங்க. மருதூர்ல நெலம் இருக்கு தில்லை. துபாய்ல இவர் பிரதர் இருக்காரு. வயசானவங்களையும் சேர்த்துப் பராமரிக்கணும். ஒண்டியா மாளிக்க வேண்டியிருக்கு.'' குழந்தை அவள் மடியை நனைக்க அதை முழங்காலில் லேசாக அடிக்க, அது உதட்டைப் பிதுக்கிக் கொண்டு அழ ஆரம்பித்தது.

''வேண்டாம் கண்ணு அப்பா வருவாரு. அப்பா வந்து ஆட்டோல போகலாம். கார்ல போகலாம். பெரிய காரு. அங்கிள் கூட்டிட்டுப் போவாரு.''

சன்னலுக்கு வெளியே தெரிந்த ஜீப்பைக் காட்டி அது என்ன என்ற போது குழந்தை சட்டென்று அழு கையை நிறுத்திவிட்டு அவளை யோசனையுடன் பார்த்தது. ''என்ன காரு?''

''அம்பா.''

''அம்பாசிடர்ல வரது சுரேஷ் மாமா. இந்த மாமா எதில வந்தி ருக்காங்க.''

''ஜீ.''

''அத்தனை காரையும் அடை யாளம் கண்டுபுடிக்குது. இதை எப் படியாவது மெடிக்கல் படிக்க வெக்க ணும்னு சொல்றாரு.''

''நீங்க கூட எம்.எஸ்ஸி. பண்ணிருக்கீங்க போலிருக்கே.''

''ஆமாம் பாட்டனி.''

''வேலைக்குப் போகலாமே.''

''இத வெச்சுகிட்டா?'' என்று என்னை நிமிர்ந்து பார்த்தாள். கண்களில் சோகம் தெரிந்தது. ''நான் தான் படிச்சும் ஏதும் பயன் இல்லாம இந்த மாதிரி பீத்துணி தோச்சுகிட்டு இருக்கேன்.''

அவள் சட்டென்று கட்டுப் படுத்த முடியாமல் அழுதாள். ''உங்க ப்ரெண்டு கிட்ட சொல் லுங்க. என்னை ஒரு மனுஷியா நடத்தச் சொல்லுங்க. அடிமாடா இல்லை. மனுஷியா.''

எனக்கு வெலவெலத்துப் போனது. 'எப்படி இவள் கணவனைக் கைது செய்து போவதை சொல்லப் போகிறேன்!'

''நாசியா வேற காலை எழுந்த உடனே பெரட்டுது. டாக்ட ரானா சோகை. ரத்தம் போதாது,

---

''என் மனைவியின் டி.வி.யிலே ஆடுற ஆசையை தீர்த்துட்டேன்.''

ரத்தம் போதாதுங்கறாங்க.''

எனக்குக் கவலையாக இருந்தது. எப்படிச் சொல்லப் போகிறேன். நண்பனின் மனைவியே மன்னிக்கவும். நான் உனக்கு ஆறுதல் சொல்ல முடியவில்லை. மாறாக உன் புருஷனை சிறைக்கு அழைத்துச் செல்லப் போகிறேன். நீ என்ன செய்வாய், எப்படிச் சமாளிப்பாய், யார் உனக்கு ஆதரவு. இதையெல்லாம் நான் கேட்கத்தான் வேண்டுமா? என்ன ஓர் உத்தியோகம் இது! யார் மேல் நான் இரக்கப்படுவது? அனுமதியின்றிக் கற்பழிக்கப்பட்ட இறந்து போன பெண்ணின் மேலா? அனுமதியுடன் கற்பழிக்கப்பட்ட உயிருள்ள மனைவி மேலா?

நான் சொல்லிவிட்டேன்.

''பாருங்க மிஸஸ் குணசீலன். இந்தச் செய்தியை உங்ககிட்ட சொல்லியே ஆகணும். உங்க கணவரை நான் கைது பண்ணிக் கூட்டிட்டுப் போக வந்திருக்கேன்.''

''எதுக்கு? என்ன காரணமா?'' என்று அவள் நெற்றியைச் சுருக்கிக் கொண்டாள்.

''அவர் மேல ஸ்டேஷன்ல ஒரு குற்றச்சாட்டு. நிரூபிக்கப்படலை. நல்ல லாயரா பார்த்து விடுதலை பெற்றுடலாம்.''

''என்ன குற்றச்சாட்டு?''

நான் தயங்கினேன்.

''சொல்லுங்க ப்ளீஸ்.''

''ஒரு பெண்ணை பலாத்காரம் பண்ணிட்டதா குற்றச்சாட்டு. இவரும் நாலு கான்ஸ்டபிள்களும்.''

''இவ அப்பாவா?'' என்று குழந்தையைக் காட்டினாள்.

வ்வ் என்று வசீகரமாகச் சிரித்தது குழந்தை.

''ஆமாம். அது உண்மையா இல்லையான்னு நிரூபிக்க வக்கீலைப் பார்க்க ஏற்பாடு செய்யறேன். குற்றச்சாட்டுதான். டிப்பார்ட்மெண்ட்டில சஸ்பெண்டு பண்ணிருக்காங்க.''

எனக்கு ஒரு யோசனை ச டென்று தோன்றியது. ''மிஸ குணசீலன், நீங்க இருக்கற ஸ்திதியி என்னால ஒண்ணு செய்ய முடியு உங்க நிலைமையில உங்க கணவ இந்த சந்தர்ப்பத்தில அரெஸ் பண்ணிகிட்டுப் போறது எனக் கொடிய செயலாப்படுது. ஓர் உத செய்யறேன். நான் இப்ப வந் தையே மறந்துருங்க. சாயங்கால வரேன். உங்களுக்கு உங்க கணவ கிட்டப் பேசி முடிவு பண்ணி மாற் ஏற்பாடுகளைச் செய்ய அவகாச தரேன். அதுக்கு முன்னாடி ஆண் சிப்பேட்டரி பெயிலோ வேற ஏ பாடோ துபாய்க்குப் போக ஏற்பாடே அவரால் செய்ய முடியுமான்னு பாருங்க. நான் என்னைப் பொறுத் வரையில் இந்தச் சலுகை குணசீல என் நண்பன்கிறதுக்காக இல்லை உங்க பரிதாபமான நிலையில் ம தாபிமானத்தோட உங்களுக்கு உ வறதுக்காகத்தான்...''

''ரேப் பண்ணாரா?''

''அப்படித்தான் குற்ற சாட்டு.''

''கட்டின பெண்டாட்டி நா இருக்க .....ப்ப'' என்று அவள் கதற அழுகை கட்டுக்கடங்காமல் போ அந்தக் குழந்தை அவள் முகத்தை திருப்பி வேடிக்கை பார்த்தது. தா அழாமல் அம்மா அழுவது அதற் வியப்பாக இருந்தது.

''ஸாரி, வெரி ஸாரி. நா இதை உங்ககிட்ட சொல்லியிருக்க கூடாதோ? இருந்தாலும் உங்களுக் உதவி செய்யணும்ங்கற எண்ணத்தி தான்...''

அவள் குழந்தையை அள்ளி கொண்டு இடுப்பில் வைத்து கொண்டு நிறைய அழுதபின், கன் னத்தில் கண்ணீரைத் துடைத்து கொண்டாள்.

''உதவி எதும் வேண்டாம் அழைச்சுட்டு போங்க,'' என்று உள்ளே சென்றாள்.

சாடிஸ்ட். சந்தேகமேயில்லை.

எத்தனை நாளைக்குத்தான் பாறுப்பது. பொறுத்தாச்சு. இனி ம் முடியாது. முடித்துக் கொள்ள வண்டியதுதான், இன்றோடு. அது ம் நிரந்தரமாகவே.

ஆட்டக் கடிச்சு, மாட்டக் டிச்சு, கடைசியா மனுஷன கடிச்சக் தையாகிவிட்டது. கதையாக இருந் ால் பரவாயில்லை. இது வாழ்க்கை. ாம்பத்திய வாழ்வு. ஒரு குழந் தக்கு என்னைத் தாயாக்கிய இனிய றவு. புனிதமானது.

விட்டில் பூச்சியாக இருந்து, ளக்கு என்னை சுட்டிருந்தால் ரவாயில்லை, இந்தக் கோபம் வந்தி க்காது.

''ஜெயந்தி, வந்திடு. என் ளக்கின் வெளிச்சத்தில் உன் பய ாத்தைத் தொடரலாம். அதுவும் தந்திரமாகவே.''

அன்று ராகேஷிடமிருந்து ப்படித்தானே அழைப்பு வந்தது. ானும், ஒரு சிட்டுக் குருவியைப் ால, இரத்த பாசத்தை எல்லாம் ட்டு விடுதலையாகி வந்தது, வனை நம்பித்தானே. உஷாவுக் த் தாயானதும், அந்த உறவுக்கு ர்த்தம் கொடுக்கத்தானே. ஆனால் ட்டுக் குருவி...

அந்தக் குருவி அன்று தவறிப் ாய் ராகேஷ் அறைக்குள் நுழைந்து ட்டது. பிடிக்கவில்லை என்றால் ரட்டி விட்டிருக்கலாம். கதவுகளை ல்லாம் அடைத்து விட்டு, ஃபேனை கமாகச் சுழல விட்டு, போதாததற்குக் ழந்தை உஷாவையும் அழைத்துக் ாண்டு, அறைக்குள்ளேயே விரட்டி ரட்டி ஆனந்தப்பட்டிருக்கிறான். ஷாவையும் குஷிப்படுத்துகிறானாம்!

அது ஃபேனில் பட்டு, தரை ல் விழுந்து துடிப்பதைக் கண்டு த்திருக்கிறான். கை கொட்டிச் ப்பு வேறு.

''இனிமேல் வருவியா? இனி ல் இந்த ரூமுக்குள்ள வருவியா?''

# அல்லால் மூச்சை நிறுத்திவிடு

இந்த வார்த்தைகளின் உக்கிரத்தை உணரும் பக்குவம் இல்லாத குழந்தைக்கு அது நல்ல விளையாட்டுத்தான். ஆனால், அதுவே மனத்திற்குள் பதிந்துபோகும் என்று கூடவா ராகேஷுக்குத் தெரியவில்லை.

கடைசியில் அது இறந்தே போயிற்று. அப்போது அவன் காட்டிய பொய்த் துக்கம், அவனுக்குள் இன்னொரு முகம்.

பொழுது போகாமல் அடம் பிடித்த உஷா, 'விளையாட்டுக் காட்டுகிறேன், வா!' என்று ராகேஷ் அழைத்தபோது, உள்ளம் பூரித்துப் போனாள். எனக்கு வயிற்றில் அச்சம் இருந்தது.

'வீல்' என்ற கத்தல், உஷாவினுடையதுதான். அவன் கை கொட்டிச் சிரிக்கும் ஒலி லேசாய். பதறிப்போய் எட்டிப் பார்த்த எனக்கு ஆத்திரம் ஆத்திரமாய் வந்தது.

'அங்கே நின்று மரத்தைப் பார்த்தால் தேன்கூடு தெரியும்.' அப்பா சொன்னதை நம்பி குழந்தை மரத்துக்குக் கீழே நின்று அண்ணாந்து பார்த்திருக்கிறாள். கீழே எறும்புகளின் ஆக்கிரமிப்பு. கடி. வலி. வலி... எறும்புகள் வலிது. வலி வலியது.

காலை உதறிக்கொண்டு ஓடி வந்து கட்டிக் கொண்டாள் என்னை. அன்று உதறியது ஆரம்பம்தான். முடிவாக— நாள் நினைவிலில்லை.

செல்லமாக உஷாவின் மூக்

- இரா. மணிகண்டன்

கப் பிடித்தவன் வாயையும் சேர்த்து றுக அடைத்துக் கொள்ள, அது ச்சுவிடத் திணறிக் கொண்டு, கயையும் காலையும் ஓங்கி ஓங்கி உத க் கொண்டு, கண்கள் இரண்டும் மலே சொருகி, குழந்தை உயிர் ச்சுக்காகப் போராடிக் கொண்டி ப்பதைப் பார்த்துப் பார்த்து வன் ரசித்துக் கொண்டிருந்தானே, ன்னைப் பார்த்ததும், 'வெடுக்' ன்று கையை எடுத்துவிட்டு, ''சும்மா, ளையாட்டு,'' என்று பல் இளித் னே, அன்றுதான்.

'பாவி மனுஷா.' அவனைத் ள்ளிவிட்டுக் குழந்தையை அள்ளிக் ாண்டது நான்தான். முழுசாக வனைத் தள்ளிவைத்தது குழந்தை ாசு.

அது நடந்ததற்குப்பின் அவள் கேஷிடம் போனதே இல்லை. ம். ஏதோ பூதத்தைப் பார்த்து ட பீதி, அச்சம். அதை அவ ல், சொல்ல முடியவில்லை. ளர்ந்து கொண்டாள்.

ராகேஷுக்கு என்ன ஆகிவிட் . ஏதாவது மூளைக் கோளாறு... ல சைக்கியாட்ரிஸ்ட்டிடமும், இவரே முறை காட்டியாகிவிட்டது. ற்கான எந்த அறிகுறியும் இல்லை றுதானே பதில் வந்தது.

ஒருவேளை, ஸ்ரீராம் சொன் போல் இருக்குமோ? ''மனைவி ல் சந்தேகம் கொள்ளும் ஆண்கள், திரத்தை, வெறுப்பை இப்படி காட்டுவார்களாம்.'' அன்று நா மனசுக்கு ஆறுதலாக இருக் ம என்று கேட்கப் போய், ஸ்ரீராம், படிப் பேசிவிட்டானே! சந் கம்! அதுதான் காரணமோ?

அப்படியென்றால், இந்த ாம்தான் அதற்குக் காரணமாக க்குமோ? அன்று திடீர் பஸ் ரைக் என்று தன் ஸ்கூட்டரி ய என்னை வீடு கொண்டு வந்து த்தானே, சீனியர் கிளார்க் ாம்.

எதையோ பறிகொடுத்தவன் போல், வாசலில் நின்றிருந்த ராகேஷ், ஸ்ரீராமோடு ஒரே வண்டியில் நான் வந்திறங்கியதைப் பார்த்ததும், ஓடிப்போய் ஸ்ரீராம் கையைப் பிடித் துத் தாங்க்ஸ் சொன்னானே... கட்டாயப்படுத்தி, வீட்டுக்குள் அழைத்துப்போய், காப்பி குடிக்க வைத்தானே. அது வேஷமோ? போலி யான உபசரிப்பாக இருக்குமோ?

ஸ்ரீராமை சிகரெட் எடுத்துக்கச் சொன்னானே, அவனே லைட்டரில் நெருப்பையும் பற்ற வைத்தானே.

அந்த நெருப்பு; சிகரெட்; சாம்பல். இதுவரை கரப்பான் பூச்சி யையும், பல்லியையும் இம்சித்து வந்தவன், அசந்து தூங்கும் என்னை அந்தச் சிகரெட் நெருப்பால் தினம் தினம் சுட்டுச் சுட்டு, அணுவணுவாகக் கொல்கிறானே, ஆனந்திக்கிறானே!

என்ன என்று கேட்டால், 'ஸாரி, தெரியாமல் பட்டுவிட்டது.'

எத்தனை நாளைக்குத்தான்



''எனக்கும் என் மாமியாருக் கும் நடந்த சண்டையில குறுக்க வந் திட்டார் டாக்டர்!''

– தேனி. எஸ். மாரியப்பன்

றுப்பது. நரகத்தில்கூட நடக்
து இந்தக் கொடுமை. அதைவிட,
நாள் காலில் விழாத குறையாய்
னிடமே மன்னிப்புக் கேட்டு
ஞ்சிக் கெஞ்சி அழுகிறானே,
த்தைப் பாவமாக வைத்துக்
ண்டு. அந்தக் கொடுமையை
கே போய்ச் சொல்வது?

தீர்மானித்து விட்டேன். வேண்
ம். எதுவும் வேண்டாம். இன்
டு எல்லாவற்றிற்கும் முற்றுப்
ளி. நமக்கு நாமே விடுதலை
டுத்து...

ஒன்று, இரண்டு, மூன்று...
ல் எண்ணிக்கை என்ன வேண்டிக
க்கு. அப்படியே எல்லா மாத்
ரையையும் கலக்கி, தப்பித் தவறிக்
பிழைத்துவிடக் கூடாது. உஷா,
தாண்டி நமக்குக் கடைசி...
ா என்ன பாவம் செய்தாள்? உன்
சு மனம் ஏற்கெனவே சிதைக்கப்
டுவிட்டதே!

''தட்...தட்... டொக்...
ாக்...''

கதவைத் திறந்தேன்.

''என்னடி? எவ்வளவு நேரமா தட்டுறது? அப்படி எவன் நெனப்பிலடி மெய்மறந்து இருக்க?''

பேசு. எவ்வளவு பேச முடியுமோ, பேசு! எல்லாத்துக்கும் ஒரு முடிவு. நீயே புரிஞ்சுக்கவே. பேசு. எப்படி வேணும்னாலும் பேசு.

''என்னடீ? நான் பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறேன், நீ பாட்டுக்கு மூஞ்சிய உம்முனு வெச்சுக்கிட்டு... எவன்டீ உம் மனசுக்குள்ள இருந்துகிட்டு என்னோட பேசவிடாம தடுக்கிறது?''

''சாப்பிட வாங்க.''

''வேண்டாம். ஃப்ரண்ட் வீட்டுல பார்ட்டி. சாப்பிட்டாச்சு.''

''சரி, இந்தாங்க பால்.''

வாங்கிக் கொண்டான். முகத்தில் வெறுப்பை அப்பியிருந்தான்.

நான் கொடுத்த பாலை எடுத்

## டாபி  டிக்ஷ்

ந்த வாரம் முழுவதும்
சவம்

மல் இருக்கத் தேவைப்படுவது.

கோந்து: ஹாலிவுட் நடிகர்
களின் உதட்டில் இருப்பது.

தாவணி: நடிகைகளின் ஜாக்
டுக்கு நடுவில் இருப்பது.

பிறந்த நாள்: பொய் சொல்லும்

சிபாரிசு: அழகான பெண்ணுக்
தேவையில்லாதது.

தன்னம்பிக்கை: ப்ரா அணியா

பூரிப்பு: ஜாக்கெட் டைட் ஆவதற்குக் காரணம்.

கனவுக் கன்னி: மேக்கப் கலைக்காத நடிகை.

விபத்து: மலையாளப் பட போஸ்டர்களால் ஏற்படுவது.

வள்ளல்: கொள்ளையடித்த பணத்தில் கொஞ்சம் கொடுப்பவர்.

புதுமுகத் தேர்வு: பூட்டிய அறைக்குள் நடப்பது.

ஆறு வித்தியாசங்கள் விடை:

1. கம்பி
2. கண்டக்டர் அருகிலிருப்பவர்
3. சிறுவன் முதுகு பை
4. ஐஸ் கிரீம்
5. அமர்ந்திருப்பவர் கால்
6. பெண்ணின் கை

துக் கொண்டு கூடத்துக்குச் சென்றான்.

அவன் அதைக் குடிக்குமுன் சமையலறையில் நான் குடிப்பதற்காக வைத்திருந்த விஷம் கலந்த பாலை, சுவாமி படத்துக்குமுன் மன்னிப்புக் கேட்டுவிட்டு உஷாவை ஒருமுறை கண்ணீருடன் பார்த்துவிட்டு, அதை எடுத்து மடக்கென்று குடிக்குமுன்—

''நில்லுடி!'' எரிச்சலாய்த் தடுத்தான்.

''தெரியும்டீ. எனக்கு நல்லாத் தெரியும். நீ பால்லகூட விஷம் கலந்து எனக்குக் கொடுப்பேன்னு. புருஷன் இம்சிக்கிறான். அவன் சாடிஸ்ட்ன்னு ஊரெல்லாம் சொன்ன தானே நீ?''

அவன் கையில் நான் கொடு பால் தம்ளர் பருகாமல் அப்படி நிரம்பி இருந்தது.

''எனக்கு உன்மேல நம்பிக் இல்லை. இந்தா இந்தப் பாலை நீ குடி. இதுல விஷம் இருக்கான்னு என குத் தெரிஞ்சாகணும்.''

நான் அந்தப் பாலை வாங் குடிக்க, எனக்காக வைத்திரு பாலை எடுத்து அவன், புன்ன யுடன் குடிக்க ஆரம்பித்தான்.

'நில்லுங்க. அதில்... அதில்

வேண்டாம். சொல்ல வே டாம். மனசக் கல்லாக்கிக்க. விடுதல உனக்கும் உஷாவுக்கும் சின்னஞ் ஜீவனுக்கும்கூட.

புன்னகை மாறாமலேயே தப் பாலைக் குடித்துவிட்டு திரு அடைந்தவன்போல் படுக்கைக் போனான்.

---

*அண்ணாவின் அறிவுரைகளை இன்றுவ தி.மு.க. வேதவாக்கியமாகக் கொண்டு செயல்பட்டு வ கிறது.*
—கருணாந

*தி.மு.க. வேதவாக்கியங்களை நம்புகிறதா?*

*இருநூறு பெண்களைக் கற்பழித்ததாகக் குற்ற சாட்டப்பட்ட சாமியார், ''இது வீண் பழி. அரசிய தலைவர்களுடன் எனக்குத் தொடர்பு உண்டு,'' என்றா*
—ராஜ்கோர்ட் செ

*குற்றத்தை ஒப்புக் கொண்டுவிட்டார்.*

*கேரள எல்லைப் பகுதியில் சந்தன வீரப்பன் ந மாடுவதாகத் தெரிகிறது.*
—கோவைச் செ

*தேவாரத்துக்குத் தகவல் கொடுங்கள்!*

*போதிய நிலக்கரி கைவசமுள்ளதால் தமிழ்நா டில் மின்தட்டுப்பாடு வராது.*
—அமைச்சர் கண்ணப்

*சென்னை தமிழ்நாட்டில்தானே இருக்கிறது?*

# ஜன்னல் கன்னி]



எக்மோர் ஸ்டேஷனுக்குள் நுழைந்த சமயம் ''அடடே! சுமதியா?'' என்ற குரல் கேட்டுத் திரும்பிய சுமதி, பக்கத்தில் வந்து நின்ற மாமாவைப் பார்த்துக் கொஞ்சம் விடுக்கிட்டாள். அவர் வெற்றிலை பாயை மென்று கொண்டே, வேட்டியைத் தூக்கிக் கட்டிக் கொண்டு, என்னம்மா, ஊருக்குக் கிளம்பியாச்சா?''

''ஆமாம் மாமா!''

''வா, போகலாம். உன்னை வழியனுப்பிச்சுட்டுப் போறேன். சும்மாத்தானே இருக்கேன்...'' என்றபடி அவளுடைய பையை வலுக்கட்டாயமாக வாங்கிக் கொண்டார். சுமதிக்கு வெறுப்பாக இருந்தது. இந்த மாமாவுக்கு பரமேஸ்வரன் என்று பெயர். அம்மாவுக்கு தூரத்து உறவு. உபகாரம் பண்ணுவதுபோல் அஞ்சு, பத்து பிடுங்கிக் கொண்டு போய் விடுவார்.

''மாமா, நான் போய்க்கறேன். பரவாயில்லை.''

''அதனாலென்னம்மா... ஆபீஸெல்லாம் எப்படி இருக்கு? ஒண்ணும் ப்ராப்ளம் இல்லையே?'' கேட்க ஆரம்பித்தார்.

''ம்.''

''அப்பா அம்மா சௌக்கியமா? ஊருக்கு ஒருமுறை வரணும். டிக்கெட் ரிஸர்வ் பண்ணிட்டியோ? நான்கூட ஆமதாபாத் போயிட்டு வரலாம்னு இருக்கேன். என் தங்கைப் பையன் சரவணன் காந்தி நகரில் இருக்கான். ஓ.என்.ஜி.சி.யில பெரிய ஆபீஸர். பத்தாயிரம் சம்பளம்.''

''சரி.''

''வரன் ஏதாவது அமைஞ்சதா சுமதி?'' என்றார்.

''இல்லை மாமா. அடடா, டைம் ஆச்சு போலிருக்கே?''

''இன்னும் இருபது நிமிஷம் இருக்கு. சோழன்தானே? என் தங்கை பையன்னு சொன்னேனே? ஆமதாபாத் சரவணன்! அவனுக்கு இன்னும் கல்யாணம் ஆகலை. குஜராத்திப் பெண்களெல்லாம் சுத்தற தாம். பய கண்டுக்கறதே இல்லை. தஞ்சாவூர் பொண்ணைத்தான் பண்ணிப்பேன்னு ஒரே பிடிவாதம். சுமதி... கேக்கறியா?''

''ம்.''

''உனக்குப் பார்க்கலாமான்னு ஒரு யோசனை. என்ன சொல்றே? பிக்கல் பிடுங்கல் கிடையாது. நிலம் கூட வாங்கிட்டானாம் அங்கே. ஒரு கெட்டப் பழக்கம் கிடையாது. தடை செய்யப்பட்ட பகுதியிலன்னா வேலை செய்யறான்,'' என்று ஜோக் போல சிரித்தார். மாமா சொல்வது அத்தனையும் பொய் என்று அவளுக்குத் தெரியும்.

ஹேமமாலினி

''சரி, மாமா! நான் கிளம்பறேன். இந்தாங்க வைச்சுக்கோங்க,'' என்று பத்து ரூபாயை நீட்டினாள். பறிக்காத குறையாக வாங்கிக் கொண்டார்.

''உனக்குக் கொடுக்க வேண்டியதெல்லாம் கணக்கு வைச்சிருக்கேன். கிராமத்துல நிலம் வித்ததும் முதல் பைசல் உனக்குத்தான். ஜாக்கிரதையாப் போய்ட்டு வாம்மா! வரட்டுமா?'' என்றவர் கையசைத்து விட்டு நகர்ந்தார்.

சுமதி சில வினாடிகள் அப்படியே நின்றுவிட்டு பையை மறுபடி எடுத்துக்கொண்டு நடந்தாள்.

கம்பார்ட்மெண்ட்டினுள் ஏறி அமர்ந்தாள்.

சுமதி பையைத் திறந்து கண்ணாடியை எடுத்துத் தன் முகத்தைப் பார்த்தாள். முப்பத்தி மூன்று வயதாகிவிட்டதைப் பொய் ஏதும் இல்லாமல் பளிச்சென்று காட்டியது. நெற்றிக்கு மேல் படபடத்த முடிக்கற்றைகளில் ஒன்று வெள்ளி நிறத்தில் இருந்ததைக் கவனித்துத் திடுக்கிட்டாள். இளமை கலைகிறது. இன்னும் ஏழே வருடங்களில் நாற்பதைத் தொடப் போகிறாள்.

கண்ணாடியை மறுபடி பைக்குள் வைத்து மூடியபோது சத்தம் கேட்டு நிமிர்ந்தாள்.

ஓர் இளைஞன் —ஆம், இளைஞன் என்று சொல்லலாம். பெரிய சூட்கேஸை லக்கேஜ் பகுதியில் திணித்துவிட்டு, உஸ்ஸென்று மூச்சு விட்டபடி அவள் எதிரே அமர்ந்தான். சுமதிக்கு மனம் டைப் படித்தது. அவன் வசீகரமாக இருந்தான். முப்



பதுகளின் நடுவில் இருப்பவன். தலையைப் படிய வாரி, கூர்மையான கண்களுடன், அருமையாக அயர்ன் செய்த துல்லிய உடைகளில் அவளை நேரடியாகக் கண்களுக்குள் பார்த்தான்.

பார்வையைத் தழைத்துக் கொண்டாள்.

''எக்ஸ்க்யூஸ் மி?''

அவன்தான்.

''மேடம், ஐ'யாம் கார்த்திகேயன். ஓ.என்.ஜி.சி.யில இருக்கேன். ஆமதாபாத். டிரெய்ன் அநியாயத்துக்கு லேட்டு. நான் கும்பகோணம் போறேன். நீங்க?'' என்றான்.

அவனுடைய பரிச்சயமே இல்லாத சகஜம் சுமதிக்கு சட்டென்று புரியவில்லை.

அவன் புன்னகை செய்து, ''ஸாரி, இப்படித் தடாலடியா பேசறேனேன்னு தப்பா நினைச்சுக்காதீங்க. ஐ'யாம் வெரி டாக்கடிவ். பேசாட்டி மண்டை வெடிச்சிடும். அதுவும் இந்த சோழன் ரொம்ப மோசம்ங்க. ஆளே இருக்க மாட்டாங்க. வேர்கடலை, மாங்கா விக்கறவன்தான் ஏறுவான், இல்ல்லன்னா பிச்சைக்காரங்க லொள்ளு பண்ணுவாங்க. விழுப்புரம் தாண்டினா ஸ்கூல் காலேஜ் பசங்க மொய்ச்சுப்பாங்க. என்ன நான் பாட்டுக்குப் பேசிட்டே இருக்கேன், நீங்க ஏதும் பேசமாட்டேங்கறீங்க? ஊமையா?''

சுமதி தடுமாறினாள். ''வந்து... நான்...''

''உங்க பேர் என்ன?''

''சு...ம...தி...''

''எங்கே வேலை பாக்கறீங்க?''

''ஏ.வி.எஸ். கம்பெனில ஸ்டெனோ.''

''கல்யாணம் ஆயிடுச்சுங்களா?''

சுமதியை அடிக்கடி தாக்கும் கேள்வி.

''இல்லை.''

''எனக்கும் இல்லை,'' என்றான்.

சுமதி அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''அட்லீஸ்ட், இந்த பிஸ்கட்டாவது நீங்க சாப்பிட்டுத்தான் ஆகணும்...'' என்று காஷுநட் பிஸ்கட்டுகளைப் பிரித்துக் கொடுத்தான். மறுக்க முடியவில்லை. மொச்மொச் என்று சாப்பிட்டபடி பேச ஆரம்பித்



''அவரு இதுக்கு முன்னால ட்ரெயின்லே பாடிட்டிருந்தாராம்!''

–லட்சுமி ஆவுடைநாயகம்.

தான். அவன் பேசுவது சுமதியை ஏனோ வசீகரித்தது. அவன் கண்களில் இயல்பான நட்பும், உரிமையும் ஒருவித தாலாட்டும்கூட இருந்தது. வேகமாகப் பேசினாலும் கேட்கத் தூண்டும் குரல்.

''ஊருக்குப் போறீங்களா சுமதி?''

''ஆமாம். மாயவரம் தாண்டி தேரடிமருதூர்.''

''அப்பா அம்மா அங்கே இருக்காங்களா?''

''ஆமாம்.''

''நீங்க மெட்ராஸ்ல வேலை? ரொம்பக் கொடுமைங்க. லேடீஸ் ஹாஸ்டலா?''

''ஆமாம்.''

''எனக்கு அம்மா கிடையாது. அப்பா மட்டும்தான். வடகால் கிராமத்துல நிலம் வைச்சிருக்கார். பிடிவாதக்காரரர். நான் வடக்கே காந்திநகர்ல க்வோர்ட்டர்ஸ் வாசம். அப்பா கிராமத்தை விட்டு நகர மாட்டார். என்ன பண்றது சொல்லுங்க. 'ஸெல்ஃப் குக்கிங்'னு ஒரு தண்டனை இருக்கு கேள்விப்பட்டிருக்கீங்களா?''

சிரித்தாள்.

''சிரிக்கிறீங்க. என்ன இருந்தாலும் பெண்களோட கைமணம் தனிதான். நீங்க சமைப்பீங்களா?''

''சுமாரா,'' என்றாள். அவனோடு பேசுவது இப்போது மிக சகஜமாகி ஆச்சர்யமான நெருக்கம் வந்துவிட்டது.

''சுமார் போதுங்க. நல்ல வீட்டு சாப்பாட்டுக்கு நாக்கு ஏங்குது. குஜராத்தி சமையல் அலுத்துப் போச்சு. வரட்டு வரட்டுன்னு காய்ஞ்ச ரொட்டி, இல்லைன்னா கலர் கலரா தித்திப்பு, இது ப்ரொஹிபிஷன் வேற. கொடுமை.''

''கல்யாணம் பண்ணிக்க

---




இந்தியா:

அமெரிக்கா அணு ஆயுதச் சோதனையை நிறுத்த வேண்டும்.




அமெரிக்கா:

இந்தியா ஏவுகணை வெடிப்புச் சோதனைகளைக் கைவிட வேண்டும்.

க. கணேச

அன்றும்...

இன்

வேண்டியதுதானே மிஸ்டர் கார்த்தி கேயன்?''

''பொண்ணு கிடைக்க லையே?'' என்றான் ஊடுருவிப் பார்த்து. சிலீரென்றது.

''என்ன வயசு உங்களுக்கு?'' என்றான்.

''முப்பத்தி மூணு.''

''இன்னுமா கல்யாணம் பண் ணிக்கலை? ஏன்?'' அவன் குரலில் ஆச்சர்யம் இருந்தது.

''வசதி இல்லை.'' என்றாள் சுருக்கமாக.

''ஃப்ளாட்டர் பண்றேன்னு நினைக்காதீங்க. உங்களைப் பார்த்தா இருபத்தஞ்சு வயசுக்கு மேல சொல்ல முடியலை...''

''பொய்.''

''இல்லைங்க. எனக்கு முப் பத்தி ஆறு ஆகுது. மாமா மாதிரி ஆயிட்டேன். இப்பத்தான் ரியலைஸ் பண்றேன்.''

சுமதி எதுவும் சொல்ல வில்லை.

''பெண்களை நினைச்சா சில சமயம் பயமா இருக்குங்க. எங்க ஆஃபீஸ்ல சுகன்யான்னு ஒரு மது ரக்காரி இருக்கா. சான்ஸ் கிடைச் சாப் போதும்... அய்யய்யோ! அவ ளைப் பார்த்தாலே ஓடுவேன். இந்த குஜராத்திப் பொண்ணுங்க இருக்கே, எல்லாம் ஷாரூக்கான் பைத்தியம். நமக்கு அதெல்லாம் ஒத்து வராது. நம்ம ஊர்ப் பக்கம்தான் சரி. என்ன சொல்றீங்க?''

''நான் என்ன சொல்ல முடியும்?''

''ஸாரி. வீட்டுல கஷ்டம்னு சொன்னீங்க இல்லை? மிஸ் சுமதி, எனக்கு இந்த அலட்டல், தயக்க மெல்லாம் பிடிக்காது. நேரடியா கேக்கறேன். என்னைக் கல்யாணம் பண்ணிப்பீங்களா?'' என்றான் அவன்.



''பஸ்சுல எப்பவும் புதுமண ஜோடிகள் பக்கத்துலயோ அல்லது காதலர்கள் பக்கத்துலயோதான் உட்காருவேன்!''

''ஏன் அப்படி?''

பக்கம் பார்க்க: 103

''என்னது!''

''கல்யாணம். வித்தவுட் எனி ஃபார்மாலிட்டீஸ். எங்கப்பா தலை யாட்டறதுக்காகவே காத்திருக்கார். நோ ப்ராப்ளம். இதை விதின்னு தான் சொல்லணும், சோழன் எக்ஸ் பிரஸ்ல நீங்களும் நானும் சந்திக்க ணும்னு சொர்க்கத்துல நிச்சயம் பண்ணியிருக்காங்க. என்ன சொல் றீங்க சுமதி?''

''மி...ஸ்...ட...ர்... கா...ர்...த்...தி...கே...ய...ன்...''

''அதிர்ச்சியாயிட்டீங்களா? இப்படி தடாலடியா கேக்கறது தப்பு தான். என்ன பண்றது? உங்க அப்பா அம்மா பத்திக் கவலைப் படாதீங்க. மாசா மாசம் எவ்வளவு ரூபா அனுப்பறீங்க?''

''ஆயிரம்...''

''நான் ரெண்டாயிரம் கொடுக் கிறேன். என் சம்பளம் எவ்வளவு தெரியுமா? ஒம்பதாயிரம் ப்ளஸ் அல வன்ஸ். உங்க வேலையை விட்டுட்டு ஜம்னு நவஜீவன் பிடிச்சு குஜராத்

போயிடலாம். கிர் ஃபாரஸ்ட்ல தேனிலவு. அடுத்த வருஷம் குழந்தை. சிமன் நகர்ல ப்ளாட் வாங்கிப் போட்டிருக்கேன். வீடு கட்டிடலாம். என்ன சொல்றீங்க?''

''என்னால, நம்ப முடியலை.''

''சிம்பிளாக் கல்யாணம் பண்ணிக்கலாம். ரிஜிஸ்ட்ரேஷன் ஆஃபீஸ்ல பழைய நண்பர்கள், உங்க அப்பா, அம்மா மற்றும் என் அப்பா போதும். ரிஸப்ஷன்லாம் வேஸ்ட். தாலி கட்டிடறேன். உப்பிலியப்பனை சேவிச்சுட்டு மூட்டை கட்டிடலாம்.''

''என் கிட்டே நகை, பணம் எதுவும் இல்லை.''

''எதுவும் வேண்டாம்மா. நான் வாங்கித் தர்றேன் நகை. கட்டின புடவை, ஜாக்கெட்டோட வந்தாப் போதும் சுமதி.''

சுமதிக்குக் கண்களில் நீர் வழிய, அதைப் பார்த்துப் பதறியவன் கர்சீஃபினால் துடைத்து விட்டான். ''அழாதே சுமதி. கல்யாணமாகாம கன்னியாயிருக்கிற[illegible] எவ்வளவு கஷ்டம்னு எனக்கு[illegible] புரியும். கண்ணைத் தொடை[illegible] சுக்கோ. உன் விலாசம் கொடு[illegible] நாளைக்கு அப்பாவோட வீட்டுக்[illegible] வர்றேன். வாசல் தெளிச்சுக் கோல[illegible] போட்டு வை. என்ன?... உடனே[illegible] அடுத்த முகூர்த்தத்தில் க[illegible] யாணம்.''

ரயில் சடாரென்று நின்றது[illegible] சுமதி திடுக்கிட்டுக் கண் விழித்[illegible] நிமிர்ந்து பார்த்தாள். எதிர் ஸீ[illegible] வாலிபன் கடலூர் ஸ்டேஷனி[illegible] இறங்கிக் கொண்டிருந்தான். ஒ[illegible] பெண், கைக்குழந்தையுடன் அ[illegible] னருகே வந்து சிரிக்க... அவன் குழ[illegible] தையை ஆவலாக வாங்கி[illegible] கொண்டு...

ரயில் மீண்டும் கிளம்பியது[illegible] சுமதியின் எதிரில் அவன் விட்[illegible] விட்டுச் சென்ற பத்திரிகை மட்டு[illegible] படபடத்தது.



# தாட்சா

ஒரு வாரமாகவே நிலை கொள்ளவில்லை பசுபதிக்கு. இருபது வருடங்களுக்கு முன்பு – திருச்சி, தெப்பக்குளத் தெருவில் 'தரதர' வென நாலைந்து முரட்டு ஆண் பிள்ளைகளால் இழுத்துச் செல்லப் பட்ட தாட்சாயிணிதான் நெஞ்சம் முழுக்க வியாபித்திருந்தாள்.

''என்னை விட்டுடுங்க... ப்ளீஸ்... என்னை விட்டுடுங்க. நான் இனிமே அந்த வீட்டுப் பக்கம் போகவே மாட்டேன். அய்யய்யோ, இப் படி நடுத்தெருவுல மேல் புடவைய உருவறீங்களே... உங்களுக்கெல்லாம் அக்கா, தங்கை கிடையாதா... பசுபதி, பார்த்துட்டு நிக்கறியேடா, சொல்லுடா... என்னை விட்டுடச் சொல்லுடா...''

தாட்சாயிணியில் குரல் – இப்பொழுதுகூட காது ஜவ்வு கிழிவது போல...

முப்பது வயசுப் பெண்ணை உடம்பில் துணியில்லாமல் கதறக் கதற விரட்டியதும்... அதைப் பார்த்தபடி – நெஞ்சு கொள்ளாத சந்தோஷத்துடன் அவன் கைகட்டி, இறுமாப்புடன் நின்றதும்...

அன்றைக்கு அப்படி விரட்டப்பட்டவள் செய்த ஒரே குற்றம்– பசுபதியின் தந்தை ராமநாதனுக்குத் தன் பக்கத்தில் படுக்க இடம் கொடுத்ததுதான்.

அது எப்படி நேர்ந்தது என்று யோசித்துப் பார்த்தால், இன்றைக் கும் பசுபதிக்குப் புரியாத புதிராகத்தான் இருக்கும்.

அப்போது – பசுபதிக்கு இருபது வயசு. இதோ, இப்பொழுது மருமகளிடமும், பேரக் குழந்தைகளிடமும் ஒன்றுமில்லாத அல்ப விஷயங்களுக்கெல்லாம் எகிறிக் குதிக்கும், 'எப்பொழுதுமே மகன் தன்னை கவனிப்பதே இல்லை' – என அக்கம்பக்கத்து வீட்டினரிடமெல் லாம் புகார் படிக்கும், எத்தனை நல்ல புடவை வாங்கித் தந்தாலும் 'த்ச்' என்று அலட்சியமாய் இடது கையால் ஒதுக்கும் அம்மா...

அனுராதா ரமணன்



அன்றைக்கு இந்த வீட்டின் முடிசூடாத ராணியாக இருந்தாள். அப்பாவின் சம்பாத்தியம் முழுக்க — அம்மாவின் கையில்தான்.

ஆபீசுக்குப் போய் வர சில்லறை கூட பெண்டாட்டி கொடுத்துதான் செலவழித்த அப்பா— எப்படி இந்த தாட்சாயிணியைப் பிடித்தார்?

நிச்சயமாய் ராமநாதனின் சொத்து சுகத்துக்காக இல்லை... வேறு ஏதோ ஓர் ஈர்ப்பு... லயிப்பு... இல்லை பேதமை, மடமை, அசட்டுத்தனம்... தாட்சாயிணிக்கு அவரிடம் இருந்திருக்க வேண்டும்.

''ஏண்டீ, அரிசி உளுந்து ஊறப் போடுங்க, மத்தியானம் வந்து அரைச்சுத் தர்றேன்னு சொன்னாளே இந்த தாட்சா... மணி ஏழாயிடுச்சு. இன்னும் வரல்லே,

இனிமே எப்ப களைஞ்சு... எப்ப அரைச்சு...''

லட்சுமியின் கேள்விக்குப் பக்கத்து வீட்டுப் பெண் பதிலளித்தாள்.

''உங்களுக்கு விஷயமே தெரியாதா... தாட்சாயிணிக்குக் குளிர் காய்ச்சலாம். எழுந்திருக்கவே முடியாமப் படுத்திருக்காளாம். அவளுக்குத் துணையின்னு சொல்லிட்டு ஒரு குருட்டுச் சித்தி இருப்பாளே... அவதான் திருவானைக்கா பஸ் ஸ்டாண்டுக்கு வந்து, நம்ம வாத்தியார் பையன்கிட்ட சொல்லி அனுப்பியிருக்கா. அஞ்சு மணிக்கே விஷயம் வந்துடுச்சே... குளிர் காய்ச்சல்னா – இன்னும் அஞ்சாறு நாளைக்கு எழுந்திருக்க முடியாது அவளாலே.''

இத்தனையையும் கேட்டுக் கொண்டு, சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்த ராமநாதன் – பெண்டாட்டி சாப்பிட்டு முடித்து, எச்சில் இலையை வாசலில் கொண்டு எறியும்போது சொன்னார்

''நாளைக்கு விடிகாலமே லால்குடிக்குப் போகலாம்னு இருக்கேன்.''

''இப்ப என்ன அங்கே கல்யாணம்?''

''குத்தகைக்காரன் ஆபீசுக்கு வந்திருந்தான். நம்ம நிலத்தை ஒட்டி ரோடு போடப் போறதா பேசிக்கறாங்களாம். நான் ஒரு தடவை வந்து தாசில்தாரைப் பார்த்துட்டா நல்லதுன்னு சொன்னான். ரோடு போட்டதுக்கு அப்புறம் கதறிப் பிரயோசனமில்லே.''

போனவர் நாலு நாள் கழித்துதான் வந்தார். ஆனால் அவரது துரதிருஷ்டம் குத்தகைக்காரன் மறுநாளே இவர் வீடு தேடி வந்ததுதான்.

பற்றாக்குறைக்கு அன்று நடுப்பகலே – வாத்தியார் பையன் – பசுபதியின் வயசுதான் – வீடு தேடி வந்து சொல்லி விட்டுப் போனான்.



''இன்டர்வ்யூ வெறும் 'ஐவாஷ்' தான்னு சொன்னாங்க...''

–என். பத்மஜா

அப்போது குத்தகைக்காரனும் அதே கூடத்தின் ஒரு மூலையில் படுத்திருந்ததுதான் விசேஷம்...

''உங்கப்பாவை ! தாட்சாயிணி வீட்டுலே பார்த்தேன்டா...''

''உளறாதே. அவர் லால்குடிக்குப் போயிருக்கார்?''

''யார் சொன்னது? இப்ப வர்றியா... அழைச்சிட்டுப் போய் காட்டறேன். என்கூட வேலை செய்யற மெக்கானிக் ஒருத்தன் –தாட்சா வீட்டுக்குப் பக்கத்துலதான் இருக்கான். அவனைப் பார்க்கப் போனப்பதான் இவரைப் பார்த்தேன். என்னைப் பார்த்துட்டு ஓடி ஒளிஞ்சிட்டார்டா. அப்புறம் என் ஃபிரண்டுதான் சொன்னான். அந்த சார்தான் நாலு வருஷமா அந்தம்மாளை 'மெயின்டைன்' பண்றாருன்னு.''

நாலு நாள் கழித்து வந்தவரை, தலைக்கு ஒரு பக்கமாய்ப் பிடித்து பந்தாடியதும் – அம்மா, புடவையைக் கிழித்து உத்தரத்தில்

மாட்டி தூக்குப் போட்டுக் கொள்ள முயற்சித்ததும், சின்னவன் விஜயன், ஆத்திரம் தீர அப்பாவின் சட்டையைப் பிடித்திழுத்து நார் நாராய்க் கிழித்ததும், இத்தனையும் போதாதென்று பெரியப்பா, சித்தப்பா, அத்தை என்று அத்தனை பேருக்கும் விஷயம் போய் — எல்லாரும் கூடி...

ராமநாதனும் எதுவுமே சொல்லாமல் தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தார்.

குடும்பமே — பசுபதி என்ன முடிவெடுக்கப் போகிறான் என்றே காத்திருக்க...

அம்மாவின் குமுறல் கிளப்பிய ஆவேசத்தில், அவன், தனக்குத் தெரிந்த அடாவடித்தனத்துக்கும் ரவுடித்தனத்துக்கும் பேர் போன நண்பர்களிடம் சொல்லி...

''என்னை விட்டுடுங்க. ப்ளீஸ், அய்யோ, யாராவது வாங்களேன். எல்லாரும் பார்த்துட்டு நிக்கறீங்களே... பசுபதீ... என்னைக் காப்பாத்துடா...''

நடுத் தெருவில் கூனிக் குறுகி, தரையோடு கவிழ்ந்து தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் வழி தெரியாமல் பதை பதைத்து...

வீட்டுக்கு வந்து அம்மாவையும், சுற்றத்தினரையும் வளைத்து உட்கார வைத்துக் கொண்டு நடந்ததை கதை கதையாய்ச் சொன்ன போது—

அப்பா விதிர்விதிர்த்துப் போய், சட்டை கூடப் போடாமல் திருவானைக்காவலுக்கு ஓடியதை ஒருவித அசுரத் திருப்தியுடன் கண்டு ரசித்து...

இப்போது நினைத்தால் அவமானத்தில் உடம்பு சிறுத்துப் போகிறது பசுபதிக்கு.

அதற்கு அப்புறம் அப்பா அதிக நாள் இல்லை. தினமும் நடந்தோ, பஸ் பிடித்தோ திருவானைக்காவலுக்குப் போய் — பூட்டிக் கிடக்கும் தாட்சாயிணியின் வீட்டுத் திண்ணையில் பரக்கப் பரக்க விழித்தபடி உட்கார்ந்து, சில சமயங்களில் பூட்டைப் புரட்டிப் பார்த்து, சில சமயங்களில் புழக்கடைப் பக்கம் போய் நின்று மெள்ளக் குரல் கொடுத்து...

அப்பொழுதெல்லாம் பசுபதி, அவரை ஓர் அதட்டல் போட்டு அழைத்து வருவான்.

''தாட்சாயிணிக்குப் பைத்தியம் பிடிச்சிடுச்சு. பட்டணத்துல பைத்தியக்கார ஆசுபத்திரியில இருக்காங்களாம். நீயும் போறியா?''

ஆறு மாதங்கள் போல இந்த அலைபாயல். அப்புறம் ஆறு மாதங்கள் படுத்த படுக்கை.




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ஆ

புருஷனுக்கு உடம்பு துடைத்து, மலஜலம் எடுக்கக்கூட முன் வர வில்லை லட்சுமி.

‘‘எப்பவும் அவ பேரைத் தானே சொல்றார். அவளே வந்து செய்யட்டும். என்னைப் பொறுத்த வரைக்கும் புருஷன்கற உறவு எப் பவோ விட்டுப் போச்சு!’’

அப்பா கண்ணை மூடிய போது – நாலு குழந்தைகளுக்கும் ஒரு பொட்டு அழுகை வரவில்லை. பசுபதியாவது இறுதிச் சடங்குகளைச் செய்ய முன்வந்தான். விஜயன் – அங்கிருந்து அம்மா மண்டபத்தில் போய் உட்கார்ந்து விட்டான்.

இருபது வருடங்களுக்குப் பிறகு – சமீப காலமாய் பசுபதிக்கு அப்பாவின் நினைவு அடிக்கடி வரு கிறது. அதுவும் அம்மாவின் இரைச்ச லையும், மனைவியின் பிடிவாதத்தை யும் பார்க்கும்போது...

லட்சுமியை விடவும் அவன் மனைவி மாலதி – கணவனை தன் கைப்பிடிக்குள்ளேயே வைத்திருக் கிறாள்.

நாற்பது வயசுக்கும், ராத்திரி இரண்டு வாழைப்பழம் வாங்க வேண்டுமென்றால்கூட பசுபதி, அவள் கையை எதிர்பார்க்கும் நிலைமை.

அப்பாவை மட்டுமின்றி தாட் சாயிணியையும் அடிக்கடி நினைக்க வைத்தது.

‘தாட்சாயிணியைப் போய்ப் பார்க்கணும்.’

அவன், ஆபீஸ் விஷயமாய் சென்னை வந்தவன் – தேடி விசாரித்து, கீழ்பாக்கம் மனநலக் காப்பகத்துக்கு வந்து... வரும் வழி யிலேயே அவளுக்காக ஒரு நூல் புடவை வாங்கி...

காப்பகத்தின் அலுவலகத் தில் நோயாளியின் பெயர் விசாரித்த இவனை அதிசயமாய் பார்த்து, இவன் கூடவே ஒரு வார்டு பாயை யும் அனுப்பினார் ஒரு மருத்துவர்.

அங்கே–

ஒரு மூலையில், இன்னமும் உடலைக் குறுக்கியபடி, இரு கை களாலும் மார்பை மறைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள் அவள்...

வார்டு பாய், தாட்சாயிணி யைப் பார்த்து குரல் கொடுத்தான்.

‘‘உன்னையப் பார்க்க வந் திருக்காரு... எழுந்து வா...’’

அவள் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே தலையை நிமிர்த் திப் பார்த்தாள். தலை பஞ்சு பறந்து, முகத்தில் சுருக்கம் விழுந் திருந்தாலும் கண்களின் தீர்க்கம் குறையவில்லை.

பசுபதி, பரிவுடன் அருகில் போய் நின்றான்.




ித்தியாசங்கள் உள்ளன. விடை : 51’ம் பக்கம்



**86'ம் பக்கத்தில்
2007–ல் பிரதமராகப்
போவது யார்?
என்று
யாகவா முனிவர்
சொல்லியிருக்கிறார்.**

''தாட்சா, நான்தான் பசுபதி. ராமநாதன் பையன்.''

அவள் இதற்குப் பதில் பேசாது, அவனையே பார்த்தாள்.

''கடைசி வரைக்கும் அப்பா உன்னையே நினைச்சிட்டு... ப்ச்.. என்னவோ ஒரு வெறி... வேகம்... நான் அப்படி செஞ்சிருக்கக் கூடாது தாட்சா... இந்தா, புடவை.''

அவள் இப்போதும் அவன் மீது வைத்த கண்ணை எடுக்காமல், உதடு நடுங்க உட்கார்ந்திருக்க, அவனே புடவையைப் பிரித்து, அவளுக்குப் போர்த்திவிட–

அப்படிப் போர்த்தும்போது அவனது சட்டைப் பையிலிருந்த மணிபர்ஸ் அவள் காலடியில் விழ...

பர்ஸின் முகப்பில் பசுபதி பெற்றோருடன் சிறுவயதில் எடுத்துக் கொண்ட புகைப்படம்...

நடுங்கும் விரல்களால் அந்தப் புகைப்படத்தை பர்ஸிலிருந்து தனியே உருவுகிறாள் தாட்சாயிணி.

அப்போது–

அந்தப் புகைப்படத்தின் பின்னாலேயே ரகசியமாய் ஒளிந்திருந்த பெண்ணின் போட்டோவும் வெளியே வந்துவிழ...

அவள் கண்களை இடுக்கியபடி அதையும் எடுத்துப் பார்க்கிறாள். உதடு பிரிந்து கரகரத்த குரலில் கேள்வி பிறந்தது.

''இ... இதாரு...''

''.........''

''உன்... உன்னோடப் பெண்டாட்டியா?''

'சட்'டென இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாதவனாய் திணறுகிறான் அவன்.

என்ன்வென்று சொல்லுவான்...

இவள் என் பெண்டாட்டி இல்லை. ஆனால் ஐந்தாறு வருடங்களாய் இவள் நிழலில்தான் என மன ரணங்களுக்கு ரகசியமாய் மருந்து போட்டு வருகிறேன் என்றா...

இல்லை – நான் தலை சாய்ந்து இளைப்பாற எனக்குத் தோள் கொடுக்கும் நல்ல துணை இவள் என்றா?

அவன் தவிக்க – தாட்சாயிணியின் தளர்ந்த முகத்தில் கீற்றாகப் புன்னகை. பர்ஸை எடுத்து அவனிடம் கொடுத்தவள் – தன் மீது அவன் போர்த்திய புடவையையும் எடுத்து அவனிடமே கொடுக்கிறாள்.

''வச்சுக்க. என்னிக்காவது ஒரு நாள் உபயோகப்படும்.''

அவள் குரலில்தான் நடுக்கம் இருந்ததே தவிர – வார்த்தைகளில் துப்பாக்கித் தோட்டாவின் அழுத்தம்.



அட்டையில்:
ஜோதி மீனா
படம்: செல்லப்பா

# துரத்தும் ரணம்



ஜூலை 7'ம் தேதி ஆர்
ர் கானன்டாயில் இறந்து
4 வருஷங்கள் ஆகிவிட்டன.
அவர் எழுதிய பிரசித்தி பெற்ற
ஷெர்லாக் ஹோம்ஸ் கதைகளி
லயே அதிகம் திகிலும் சுவா
ஸ்யமும் கொண்ட கதை இது.
HE SPECKLED BAND' 'புள்ளி
ட்ட கயிறு'.

1883ம் வருடம், ஏப்ரல் மாதம். சரி
ாக விடியாத காலையில் என் படுக்கையின்
ருகே நிழலாடுவதை உணர்ந்து விழித்துப்
ார்க்கையில் ஆச்சர்யம். ஷெர்லாக் ஹோம்ஸ்.

''மன்னிக்க வேண்டும் வாட்சன். காலையில் உன்னைத் தொந்தரவு செய்து ட்டேன்.''

''என்ன ஆயிற்று? ஏதாவது மோச ான செய்தியா?''

''இல்லை. என்னை ஓர் இளம் பெண் ார்க்க வந்திருக்கிறாள். இவ்வளவு காலையில், ற்றவர்களின் தூக்கத்தைக் கெடுக்கும் அவ ரத்தில் இருக்கும் இளம் பெண்களிடம் ண்டிப்பாய் விஷயம் இருக்கும். நீயும் டனிருந்தால் நன்றாயிருக்கும். வா, கீழே மர்ந்திருக்கிறாள் போய்ப் பார்க்கலாம்.''

''இதோ,'' என்றவாறே எழுந்து, சில மிடங்களில் தயாரானேன்.

வரவேற்பறையில் கறுப்பு உடை ணிந்து ஜன்னல் ஓரத்தில் அமர்ந்திருந்த ள் எங்களைப் பார்த்ததும் எழுந்தாள்.

''குட் மார்னிங். நான்தான் ஷெர் ாக் ஹோம்ஸ். இவர் என் நெருங்கிய நண்பன் வாட்சன். இவர் முன் நீங்கள் ஏதுவானாலும் சொல்லலாம். பயப்படத் தேவையில்லை. ஏன் கைகள் நடுங்குகின்றன?'' ஹோம்ஸின் குரலில் பரிவு இருந்தது.

''பயம்'' என்று அவள் சொல்லும் போதே அவளின் பயத்தை உணர முடிந்தது. ஷெர்லாக் ஹோம்ஸ் அவளைப் பார்வையால் அளந்தார்.

''பயப்படாதீர்கள். என்ன விஷயம்?''

''நீங்கள்தான் என்னை எப்படியாவது காப்பாற்ற வேண்டும். என்னைச் சுற்றி நடக்கும் மர்மங்கள் என்னை பைத்தியமாய் ஆக்கி வருகின்றன. தயவு செய்து எனக்கு உதவுங்கள்'' அவள் குரலில் பயமும் பரிதாபமும் கலந்து இருந்தன.

''நான் உங்களுக்கு உதவுவதென்று தீர்மானித்து விட்டேன். உங்கள் பிரசினையைக் கூறுங்கள்.''

''என் பெயர் ஹெலன் ஸ்டோனர். இப்போது என் வளர்ப்புத் தந்தையுடன் இருக்கிறேன். என் வளர்ப்புத் தந்தை இங்கிலாந்தின் மிகப் பெரிய பணக்காரக் குடும்பமாக இருந்த ராய்லாட்ஸ் ஆஃப் ஸ்டாக் மோரான் குடும்பத்தை சேர்ந்தவர். ஆனால் அவர் காலம் வருவதற்குள் எல்லா சொத்தும் அழிக்கப்பட்டு இருநூறு வருடத்திய வீடு ஒன்றும் சில ஏக்கர் நிலமும் மட்டுமே என் வளர்ப்புத் தந்தைக்கு மிஞ்சியது. நல்ல வேளையாக அவர் டாக்டருக்குப் படித்திருந்ததால், கல்கத்தா சென்று அங்கு பணி புரிந்தார். அப்போது ஏதோ ஒரு பொருளைக் காணவில்லை என்பதற்காக வீட்டில் இருந்த சமையல்காரனை அடித்ததில்

ஷெர்லாக் ஹோம்ஸ்

அவன் இறந்துவிட்டான். அதற்காக அவருக்குப் பலவருட சிறைத்தண்டனை கிடைத்தது. இந்தியாவிலிருக்கும் போது தான் என் தாயைத் திருமணம் செய்தார். இளம் விதவையான என் தாய் மறுமணம் செய்யும்போது நானும் என் சகோதரியும் இரட்டையர்கள். என் தாய் கொஞ்சம் பணம் வைத்திருந்தாள். அதை என் வளர்ப்புத் தந்தையிடம் கொடுத்து, எங்கள் திருமணம் நடந்தது. வருடாவருடம் அதிலிருந்து பணம் கொடுக்க வேண்டும் என்று சொல்லியிருந்தாள். அவர் சிறைத் தண்டனை முடிந்து நாங்கள் இங்கிலாந்து திரும்பிய கொஞ்ச நாளிலேயே என் தாய் ரயில் விபத்தில் மரணமடைந்தாள். அதன்பிறகு நாங்கள் வளர்ப்புத் தந்தையின் பழங்காலத்து ஸ்டோக் மாரான் பங்களாவில் வசித்தோம். எங்கள் தாய் விட்டுச் சென்றிருந்த பணம் எங்கள் செலவுக்குப் போதுமானதாய் இருந்தது.

இந்த நேரத்தில்தான் எங்கள் வளர்ப்புத் தந்தையின் குணத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. பெரிய கோபக்காரராய் மாறியிருந்தார். நாங்கள் வசித்த கிராமத்தில் அடிக்கடி அடிதடி கலாட்டாக்கள் செய்து ஊர்மக்களின் வெறுப்பை சம்பாதித்தார். இரண்டு முறை கோர்ட் கேஸ் வரைப் போய்விட்டது. ஊ வெளியே வசித்த நாடோடிகள்தாம் அ டைய நண்பர்கள். எஸ்டேட்டுக்குள்ளே அவர்களுக்குக் கொஞ்சம் இடமும் கொ திருந்தார். இதுவும் கிராமத்தாருக் பிடிக்கவில்லை. என் தந்தைக்கு இந் விலங்குகள் என்றால் மிகவும் பிரிய எஸ்டேட்டுக்குள் ஒரு சிறுத்தையை வைத்திருந்தார். அதுவேறு கிராமத்தாரு எரிச்சல். தினமும் சண்டைதான். இந்த யத்தில்தான் என் சகோதரி திடீரெ இறந்தாள். என் அத்தை மூலம் அவளுக் திருமணம் நிச்சயிக்கப்பட்ட பதினைந்தா நாள் அவள் மர்மமான முறையில் இ தாள்...''

இதுவரை மௌனமாகக் கண்க மூடியபடி கேட்டுக் கொண்டிருந்த ஹோம் மெதுவாய் கண்களைத் திறந்து அவள பார்த்து, ''இன்னும் விரிவாக கூற யுமா?'' என்று வினவினார்.

''இரண்டு வருடங்களுக்கு முன்பு திருந்தாலும் எனக்கு நன்றாக ஞாபகம் கிறது. அன்று இரவு படுக்கைக்குச் செ முன் ஜூலியா, என் அறைக்கு வந்து னுடன் பேசிக் கொண்டிருந்தாள். 'யா இரவில் விசில் அடிக்கிறார்கள். உன கேட்கிறதா?'' என்று கேட்டாள். ந 'இல்லை' என்றேன். அவளுக்குக் கட சில நாட்களாக இரவில் ஒரு மெல்லிய வ கேட்கிறதாம். என் அறைக்கு அடுத்த அ அவளுடையது. அதற்கடுத்து டாக்டரு யது. மூவரின் ஜன்னலும் தோட்டப் வெளியைப் பார்த்து இருந்தது. ஒருவே டாக்டரின் கூட்டாளிகளான நாடோ கூட்டத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கு என்ற சந்தேகம் இருவருக்கும் வந்தது. அ வும் கொஞ்சநேரம் அவளுடைய திரும தைப் பற்றி பேசிவிட்டுப் படுக்கச் சென்ற அவள் கதவைப் பூட்டும் சத்தம் எனக் தெளிவாகக் கேட்டது. காற்றும் மழை கடுமையாக இருந்த அந்த இரவில் திடீ ஒரு கூக்குரல். ஜூலியாவுடையது. ந அறையைவிட்டு வெளியே ஓடி வந்து பா கையில் ஜூலியா முகம் வெளுத்து, வலி துடித்துக் கொண்டிருந்தாள். நான் அவளை தாங்கிப் பிடித்தேன். என்னைப் பார் தும் ஹெலன் அது... அது... புள் போட்ட கயிறு என்று கூறியவாறே டாக்ட அறையை நோக்கி கை காட்டினாள். தான் அவள் செய்த கடைசி சைகை. என் யிலே அவள் உயிர் பிரிந்தது. அந்த நே தில் எனக்கும் ஒரு மெல்லிய விசில் சத்த



''நீங்க கார் மெக்கானிக்கா இருக்கலாம். அதுக்காக இப்படியா?''

— கேரவ்

தைத் தொடர்ந்து இரும்பு மோதும் சத்த
ம் கேட்டது.''

''இது குறித்து யாரும் விசாரணை
த்தவில்லையா?''

''அறையின் எல்லாக் கதவுகளும் உள்
கம் பூட்டப்பட்டு இருந்தன. ஜன்னலில்
ரும்பு கிராதிகள் போடப்பட்டிருந்தன.
ர், தரை எல்லாம் நன்றாக சோதனை
டப்பட்டது. ஒன்றும் கண்டுபிடிக்க இயல
வில்லை.''

''எப்படி இறந்திருப்பாள் என்று
கள் நினைக்கிறீர்கள்?''

''ஏதோ திடீர் பயத்தால் ஏற்பட்ட
ிர்ச்சியில் இறந்திருப்பாள் என்று நான்
னைக்கிறேன்.''

''இறக்கும்போது புள்ளி கயிறு பற்றி
றினாள் என்றீர்களே அது என்ன?''

''அது அவளே கற்பனை செய்து
ண்டது என்று தோன்றுகிறது. எங்கள்
களாவிற்குப் பின்னால் குடியிருந்த
டோடிக் கூட்டத்தில் சிலர் புள்ளிப்
ாட்ட கைக் குட்டைகளைத் தலையில்
டி இருப்பார்கள். அவர்களைக் குறித்த
ம், அவள் மனத்தை பாதித்திருக்
ாம்.''

''சரி, மேலே கூறுங்கள்.''

''என் சகோதரியின் மரணத்துக்குப்
ிகு இரண்டு வருடங்கள் தனிமையிலேயே
ித்தேன். இரண்டு நாட்களுக்கு முன்பு எங்
பங்களாவின் மேற்குப் பக்க அறைகளின்
பேர் வேலை ஆரம்பிக்கப்பட்டதால்,
ன் ஜூலியா தங்கியிருந்த அறைக்கு மாறி
வள் உறங்கிய அதே கட்டிலில் படுக்க
ண்டியதாயிற்று. நேற்று இரவு அவளு
டய மரணத்தைப் பற்றி நினைத்தவாறே
ித்திருந்த எனக்கு அவள் மரணத்தின்
து கேட்ட அதே மெல்லிய விசில் ஒலி
ட்டது. நான் சடக்கென்று எழுந்து விளக்
கப் போட்டேன். எனக்கும் ஒன்றும் புலப்
வில்லை. இரவு முழுவதும் விழித்திருந்து
லையில் எழுந்து உங்களிடம் ஓடி வந்தேன்.
கள்தான் எனக்கு வழி காட்டவேண்டும்.
சகோதரிக்கு ஏற்பட்ட கதி எனக்கும்
படுமோ என்று பயமாயிருக்கிறது.''

''நல்ல காரியம் செய்தீர்கள்'' என்று
றிய ஷெர்லாக் ஹோம்ஸ் தொடர்ந்து
ஆனால் நீங்கள் உங்கள் வளர்ப்புத் தந்தை
ப் பற்றிய உண்மைகளைச் சொல்ல
ல்லை. அவர் உங்களைக் கொடுமைப்படுத்து
தைக் கூறவில்லை'' என்று கூறியபடி அவள்



''தையல் போடப் போறோங்க...''

– சுதர்ஸன்

அணிந்திருந்த கையுறையை லேசாக நகர்த்தி
னார். அந்த இடத்தில் சிவந்த கன்றிப்
போன விரல் தடங்கள் தெரிந்தன.

''மன்னிக்கவும். அவர் கொஞ்சம்
முரடர்'' என்ற அவள் பதிலளித்த பிறகு
அங்கு நீண்டதொரு மௌனம் நிலவியது.

''நான் உங்கள் கேஸை எடுத்துக்
கொள்ள முடிவு செய்துள்ளேன். உங்க
ளுடைய பங்களாவைப் பார்க்க வேண்டும்.
எப்போது வரலாம்? உங்கள் வளர்ப்புத்
தந்தை இல்லாத நேரமாக இருந்தால் நலமா
யிருக்கும்.''

''இன்று மதியம் வாருங்களேன்.
அவர் வீட்டில் இருக்க மாட்டார்.''

''சரி, மதியம் நாங்கள் இருவரும்
வருகிறோம். இப்போது நீங்கள் தைரியமாய்
வீடு திரும்பலாம்.'' அவள் போனபிறகு
ஷெர்லாக் ஹோம்ஸ் என்னிடம் கேஸைப்
பற்றி விவாதித்துக் கொண்டிருந்தார்.

அப்போது நாங்கள் உட்கார்ந்திருந்த
அறையின் கதவு படீரென்று திறந்து, ஆஜானு
பாகுவான மனிதர் ஒருவர் உள்ளே நுழைந்
தார்.

''உங்களில் யார் ஷெர்லாக்
ஹோம்ஸ்?''

''நான்தான்'' என்று அமைதியாக
ஹோம்ஸ் பதிலளித்தார்.

''நான் தான் டாக்டர் ராய்லட்.
என்னுடைய வளர்ப்பு மகள் இங்கு வந்தாள்
என்பது எனக்குத் தெரியும். அவள் என்ன
சொல்லியிருந்தாலும், என் விஷயத்தில்
நீங்கள் தலையிட்டால் அவ்வளவுதான், நான்

பொல்லாதவனாய் ஆகிவிடுவேன்'' என்று கூறி நெருப்பு கிளறிவிடுவதற்காக வைத்திருந்த கம்பியை ஒரு நொடியில் வளைத்து எறிந்து விட்டு வந்த வேகத்திலே வெளியேறினார்.

அவர் கத்தியபோதும், திட்டிய போதும் ஹோம்ஸ் முகத்தில் மாறாத சிரிப்பு மட்டும் இருந்தது. பிறகு என்னிடம் ''மதியம் தயாராய் இரு வாட்சன். எனக்கு இப்போது சில வேலைகள் இருக்கின்றன'' என்று கூறி வெளியே கிளம்பினார்.

ஷெர்லாக் ஹோம்ஸ் திரும்பி வரும் போது அவர் கையில் சில காகிதங்கள் இருந்தன.

''தாயின் உயிலைக் கண்டுபிடித்து விட்டேன் வாட்சன். அதன்படி மகள்கள் இருவருக்கும் திருமணம் முடிந்தால் ஆளுக்கு இருநூற்றி ஐம்பது பவுன்டுகள் தரவேண்டும் என்று இருக்கிறது. கடைசியில் டாக்டருக்கு மிஞ்சுவது ரொம்பக் கொஞ்சம். ஆக டாக்டருக்குக் கொலை செய்வதற்கு காரணங்கள் உள்ளன. இன்று அங்கு போய்ப் பார்த்ததால் தெரிந்துவிடும். நீ எதற்கும் உன் துப்பாக்கியையும் எடுத்து வா.''

ஸ்டோக்மோரன் கிராமத்தில் ஹெலனின் பங்களாவைக் கண்டுபிடிப்பதில் சிரமமேற்படவில்லை. வாசலிலேயே எங்களை வரவேற்ற ஹெலனின் முகத்தில் மகிழ்ச்சி.

ஹோம்ஸ் காலையில் டாக்டர் வந்து மிரட்டியதை விவரித்தார். அவள் முகம் வெளுத்தது.

''ஐயோ எனக்கு மிகவும் பயமாயி கிறது. என்ன செய்வாரோ தெரிய லையே'' என்ற அவள் குரலில் பதட் அப்பட்டம்.

''பயப்பட வேண்டாம். நாங் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்வோ நீங்கள் முதலில் வீட்டைச் சுற்றிக் காட் கள்.''

அவள் எங்களை அழைத்துச் செ றாள். வீட்டின் இடது புறம் முற்றிலும் யோகிக்க முடியாத நிலையில் இருந்த வலதுபுறம்தான் கொஞ்சம் நவீனமாக னல்களுக்குத் திரை போடப்பட்டிருந்த ஜன்னல்களை ஒட்டி வெட்டப்படாத வெளி ஹோம்ஸ் அருகில் சென்று ஆரா தார். வரிசையாக இருந்த மூன்று ஜன்ன களில் முதல் ஜன்னலை சுட்டிக் காட் ''இதுதான் நீங்கள் முதலில் இருந்த அ அல்லவா?''

''ஆமாம். இப்போது அங்கு வே நடப்பதால் நடு அறைக்கு மாறிவிட்டே டாக்டரின் அறைக்கு அடுத்த அ ஜன்னல் வழியே நோட்டமிட்டவா ''ரிப்பேரைப் பார்த்தால் அப்படியொன் முக்கியமானதாகத் தோன்றவில்லையே.''

''எனக்கென்னவோ என்னை அறைக்கு மாற்ற டாக்டரின் யுக்தி என்று தோன்றுகிறது.''

ஹோம்ஸ் ஜன்னலருகே சென்று கவனமாக ஆராய்ந்தார். முழு பலத்தை உபயோகித்து ஜன்னலைத் திறக்க மு றார் முடியவில்லை. ஜன்னல் உள்புறம பூட்டப்பட்டிருந்தது. பிறகு பூதக் கண்ண கொண்டு ஜன்னல் கீல்களை ஆராய்ந்தா

''ம்ஹூம். பூட்டியிருக்கும் ஜன்ன வழியே யாராலும் உள்ளே நுழைந்திரு முடியாது. சரி உள்ளே சென்று பா போம்.''

அருகிலிருந்த ஒரு சிறிய க வழியே வீட்டினுள் சென்றோம். மூன் அறைக் கதவுகளும் தெரிந்தன. ஹெல தற்போது உபயோகிக்கும் நடு அறை மட்டுமே பார்க்க ஹோம்ஸ் விரும்பினா அந்த அறை சாதரணமாய் இருந்தது. ஒ மூலையை பீரோவும், மற்றொரு மூலைய படுக்கையும் ஆக்கிரமித்திருந்தன. ஜன்ன ஒட்டி டிரெஸிங் டேபிள் போடப்பட்டி தது. ஹோம்ஸ் அறையில் ஒரு நாற்காலி அமர்ந்து அமைதியாய் அறையை நோட் மிட்டார்.



''சைட் அடிப்பது தாங்காம, பொம்மை அறைஞ்சிடுச்சாம்!''
— கடுவை கோபால்சாமி

'இந்த மணிக்
யிறு எங்கே
பாகிறது'' கட்
ல் அருகே தொங்
க் கொண்டிருந்த
ணிக் கயிற்றை
ட்டிக் காட்டிய
டி ஹோம்ஸ்
கட்டார்.

''வேலைக்காரர்
ளை அழைப்ப
தற்காகப் போடப்
பட்டது. என்
கோதரி இறப்ப
தற்கு சில நாட்கள்
முன்புதான் கட்
டப்பட்டது.''

''ஏன், அவள்
கேட்டிருந்தாளா?''

''அப்படியிருக்
காது. அவள்
அதை உபயோகப்
படுத்தி நான்
பார்த்ததில்லை.''



ஹோம்ஸ் எழுந்து மணிக் கயிற்றை அசைத்தார். எங்கும் எந்தச் சத்தமும் எழ வில்லை.

''என்ன இது வேலை செய்ய வில்லை?'' என்றாள் ஹெலன்.

''மிகவும் சுவாரசியமாக இருக்கிறது. இந்த கயிறு மேலே இருக்கும் சாளரத்துடன் ஒன்று விடுகிறது.''

''இதை நான் கவனிக்கவே இல் லையே?''

''அது மட்டுமில்லாமல், இந்த சாள ம் வெளியே திறக்காமல், அடுத்த அறைக் ள் திறக்கிறது. வாருங்கள் அடுத்த அறைக் ள் சென்று பார்ப்போம்.''

டாக்டரின் அறை சற்றுப் பெரியதாக இருந்தது. ஒரு கட்டிலும், புத்தக அலமாரி ம் இருந்தன. ஓரத்தில் பெரிய இரும்பு ரோ ஒன்று இருந்தது. ஹோம்ஸ் அந்த ரோவை ஆராய்ந்தார். அதைத் தட்டியபடி.

''இதில் என்ன இருக்கிறது?''

''டாக்டருடைய வியாபார சம்பந்த ான பேப்பர்கள், முன்பு ஒருமுறை பார்த் ருக்கிறேன்.''

''உள்ளே பூனை இல்லையே.''

''ஏன்?''

''இதோ பாருங்கள்'' என்று கூறிய படி பீரோவிலிருந்து பால் ஊற்றியிருந்த தட்டை எடுத்தார்.

''எங்கள் வீட்டில் பூனை கிடையாது. ஆனால் ஒரு சிறுத்தையும், குரங்கும் இருக்கிறது.''

''மிஸ். ஹெலன் இனிமேல் நீங்கள் கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க வேண் டும். நாங்கள் சொல்வதுபடி நடந்தால் நல் லது. இன்றிரவு உங்கள் அறையில் நாங்கள் தங்க வேண்டியிருக்கும். உங்கள் வளர்ப்புத் தந்தை வீடு திரும்பியதும் ஏதாவது காரணம் சொல்லி நீங்கள் உங்கள் ரூமுக்குச் சென்று கதவைப் பூட்டிக் கொள்ளுங்கள். அவர் படுக்கைக்குச் சென்றவுடன், நீங்கள் ஜன் னலை மெதுவாய்த் திறந்து அதில் ஒரு விளக்கை வையுங்கள். நானும், வாட்சனும் பங்களாவுக்குத் தள்ளியிருக்கும் விடுதியி லிருந்து கவனித்துக் கொண்டிருப்போம். அதன் பின் நீங்கள் சத்தமில்லாமல் உங் களுடைய பழைய அறைக்கு மாறிவிடுங்கள். நாங்கள் திறந்திருக்கும் ஜன்னல் வழியே உங்கள் அறைக்குள் வந்து விடுவோம்.'' என்று சொல்லி அங்கிருந்து கிளம்பினோம்.

நாங்கள் தங்கியிருந்த விடுதியிலிருந்து ஸ்டோனர் பங்களா தெளிவாகத் தெரிந்

தது. ஹெலன் அறை ஜன்னலில் விளக்கொளி தெரிந்ததும் பங்களாவுக்குக் கிளம்பினோம்.

பங்களா காம்பவுண்ட் அருகே வந்து விட்டோம். மரங்களும், புதர்களும் அதிகம் இருந்த தோட்டத்துக்குள் நுழைய சற்றுக் கஷ்டப்பட வேண்டியிருந்தது. திடீரென்று ஒரு புதரிலிருந்து ஏதோ விருட்டென்று ஓடியது.

''பயப்படாதே வாட்சன், டாக்டரின் செல்லப் பிராணி குரங்குதான் அது.''

சத்தமில்லாமல் ஜன்னல் வழியே அறைக்குள் நுழைந்தோம்.

''நாம் விளக்கை அணைத்துவிட்டுத் தான், காத்திருக்க வேண்டும். அவன் சாளரத்தின் வழியே ஒருவேளை பார்க்கலாம்.''

நான் தலையாட்டினேன்.

''தூங்கிவிடாதே. எதற்கும் உன் துப்பாக்கியைக் கையிலேயே வைத்துக் கொள்.''

இருவரும் பேசாமல் காத்திருந்தோம். திடீரென்று சாளரத்தில் ஓர் ஒளிக்கீற்று தோன்றி மறைந்தது. அதைத் தொடர்ந்து மண்ணெண்ணெய் விளக்கு பற்ற வைக்கும் நாற்றம். அப்போதுதான் அந்த சத்தம் கேட்டது. மெல்லிய விசில் சத்தம். அடுத்த விநாடி ஹோம்ஸ் கட்டிலிலிருந்து எம்பி குதித்து, தீக்குச்சி பற்ற வைத்து அவருடைய கைத்தடியை மணிக் கயிற்றை நோக்கி வீசினார்.

தீக்குச்சி வெளிச்சத்தில் ஹோம்ஸின் முகம் வெளுத்து, பதட்டத்துடன் இருந்ததைக் கவனித்தேன். அவர் இப்போது சாளரத்தை நோக்கிப் பார்த்தார். திடீரென பெரிய ஓலம் ஒன்று அடுத்த அறையிலிருந்து எழுந்தது. துப்பாக்கியையும், விளக்கையும் எடுத்துக்கொண்டு பக்கத்து அறைக்கு ஓடினோம்.

பக்கத்து அறையான டாக்டர் அறையைத் திறந்தால் உள்ளே டாக்டர் கால் இரண்டும் நீட்டி வாய்ப் பிளந்து, தாடை தூக்கி நாற்காலியில் கிடந்தார். அவர் மடியில் நாய் கட்டும் சங்கிலி கிடந்தது. அவர் தலையில் மெல்லிய மஞ்சளில், புள்ளி போட்ட கயிறு ஒன்று கிடந்தது.

''அதோ புள்ளி போட்ட கயிறு'' ஹோம்ஸ் கிசுகிசுத்தார்.

நாங்கள் மற்றொரு அடி எடுத்து வைப்பதற்குள் அந்தக் கயிறு மெல்ல அசையத் தொடங்கியது. அது கயிறல்ல பாம்பு. முக்கோண வடிவத் தலையுடன் அதைப் பார்க்கவே பயங்கரமாய் இருந்தது.

''இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட மிகக் கொடிய விஷப் பாம்பு இது'' என்று ஹோம்ஸ் மெதுவாய்க் கூறியபடி டாக்டரின் மடியிலிருந்த சாட்டை எடுத்து சுருக்கு முடிச்சுப் போட்டு பாம்பை லாகவமாகப் பிடித்து ரூமிலிருந்த இரும்பு பீரோவுக்குள் எறிந்தார்.

எப்படிக் கண்டுபிடித்தார் என்பதை மறுநாள் ஹோம்ஸ் வீடு திரும்பும்போது விளக்கினார்.

''முதலில் நம்மை நாடோடிக் கூட்டமும், பெண் மரணத்தின்போது கூறிய புள்ளிப் போட்ட கயிறு என்ற வாக்கியமும் திசை திருப்பி விட்டன. மரண பயத்தில் அந்தப் பெண், பாவம் வேறுவிதமாக அவளால் கூற முடியவில்லை. ஆனால் அந்த அறையைப் பார்த்தபிறகு யாரும் ஜன்னல் வழியே உள்ளே நுழைய முடியாது என்பது தெரிந்தது. அப்புறம் தரையுடன் பிணைக்கப்பட்ட கட்டில், அதன் மேல் தொங்கிய போலி மணிக் கயிறு, அதன் அருகிலிருந்த சாளரம் இவையெல்லாவற்றையும் டாக்டரின் இந்திய பின்னணி, மற்றும் அவர் வளர்க்கும் மிருகங்கள் ஆகியவற்றோடு இணைக்கும் போது வேறு விதமான எண்ணங்கள் தோன்றின. மரணமடைந்தப் பெண்ணை பரிசோதித்த மருத்துவர்களால் என்ன விஷம் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இவையெல்லாம் பாம்பாக இருக்குமோ என்று யோசிக்க வைத்தன. சாளரத்தின் வழியே, மணிக் கயிறு மூலம் கட்டிலுக்கு பாம்பை இறக்கி, கட்டிலில் படுத்திருப்பவர் அசையும் போது பாம்பைக் கொத்த செய்வது தான் திட்டம். பாம்பைத் திரும்ப வரவழைப்பதற்காகத்தான் இந்தப் புறம் கட்டில் பால் வைக்கப்பட்டிருக்கிறது. பாம்பின் சத்தம்தான் அந்த விசில் சத்தம். இரும்பு பீரோவை மூடிய சத்தம்தான் அந்த இரும்பு ஒலி. ஆனால் பாம்பு இன்றுதான் கடிக்கும் என்று உத்திரவாதமாகக் கூற முடியாது. ஆனால் என்றாவது ஒருநாள் கண்டிப்பாய்க் கடித்துவிடும். நம்மைக் கொத்த வந்த பாம்பு நாம் எதிர்கொண்டு தாக்கியதும் பயந்து வந்த வழியே ஓடியிருக்கிறது. அந்த முனையில் இருந்த டாக்டரை ஒரே போடாகப் போட்டுவிட்டது. டாக்டரின் மரணத்துக்கு நான்தான் காரணம் என்றாலும் எனக்கு மன்னிப்பு உண்டு என்று நினைக்கிறேன்' ஷெர்லாக் ஹோம்ஸ் சிரித்தார்.

**தமிழில்: ரஞ்சன்**



# யாகவா முனிவரின் பரபரப்பு பேட்டி!

வேளச்சேரியிலிருந்து தா
ரம் போகும் வழியில் ஓர் ஒ
குப்புறமான இடம். மேடவ
கம். பள்ளிக்கரணை தான
யுள்ள சிற்றூர். மண்வாசல
யுள்ள கிராமப் பகுதி.

பளபளப்பான வழவழ
தரை, கான்கிரீட் வீடு. முன்
கம் ஒரு பந்தல். பந்தலுக்கு
பால் மணல் கொட்டிய மை
னம். சுற்றிலும் புஷ்பச் செ
கள். தஞ்சாவூர் பண்ணை
போன்ற தோற்றம்.

பக்கவாட்டில் உள்ள 'கே
வழியே பந்தலுக்குள் நுழை
தால் நெடிய சட்டை போட்ட
தலை நரைத்த ஒரு மனி
'வாங்க வாங்க' என்று வரவே
கிறார். இவர்தான் யாகவ
முனிவர் என்று சொல்லிய
விட்டால் நம்பவே தோன்றா
சிரித்த முகம், பட்டைய
நரை மீசை, மிலிட்ட
காரர் மாதிரி ஒட்டவெ
டப்பட்ட நரைக் கிர
புத் தலை.

ரேஷன் கடை க்யூ
பாமாயிலுக்காகக் க
துக் கொண்டிருக்கும்
சாதாரண மனிதர்போ
காணப்படுகிறார்.

பந்தலில் இரண்டு மூ
நாற்காலிகள் போடப்பட்டி
தன.

ஒரு சின்ன மேசையில் ராட
டு இன் ஒன் டேப்ரிகார்டர்.

அருகில் ஒரு சிகரெட் பாக்கெட்.

ஒரே சமயத்தில் இரண்டு மனநிலைகளில் தடுமாற்றம் எதுவுமின்றிப் பேசுகிறார். இரண்டு தனித் தனி track-ல் பதிவு செய்யப்பட்ட உரையாடலை மாற்றி மாற்றிக் கேட்டால் வியப்பாக இருக்கும் அல்லவா, அது போல. உதாரணம்: உங்கள் சொந்த ஊர் எது என்று பேச்சைத் துவக்கும்போது, ''திருநெல்வேலி மாவட்டம் அம்மன்புரம் கிராமம். இலக்குவ நாடார் இசக்கியம்மையார் ஈன்றெடுத்த இரட்டையர்களில் இளையவனாகப் பிறந்த லட்சுமணன் என்கிற நான். பிறவியின் பெயர் லட்சுமணன். என் பிறவி 54 (டிராக் மாறி அவரே தொடருகிறார்) என் வயது 5000. 1986-ம் ஆண்டிலிருந்து உலகமெங்கும் பேரழிவு. கர்மாவை அழிப்பதற்கு 11-11-1993லிருந்து அதிகாலை 1.54க்கு 111 கோடி முனிவர்களையும் 111 ஒற்றர்களையும் ஏவிவிட்டு விட்டு நான் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். நான் ஒரு மனிதன் அல்ல.''

பொட்டுக் கடலையும் நாட்டுச் சர்க்கரையும் கலந்தது போன்ற உரையாடல். ஒன்று பிசுக் பிசுக் என்று மனதில் ஒட்டிக் கொள்ளும். கடலை போன்ற பகுதி எல்லோருக்கும் எளிதில் புரியக் கூடியது. யாகவா முனிவரின் அதாவது லட்சுமணனின் அப்பா நான்காவது வயதில் இறந்துவிட்டார். அம்மாதான் கஷ்டப்பட்டு வளர்த்தார். நிலபுலன்கள் கிடையாது. சிறிய வீடு ஒன்று இருந்தது. கட்டுக் குத்தகைக்கு வாங்கிப் பயிர் வைத்து நிலச் சொந்தக்காரருக்குக் கொடுத்தது போக மீதியைச் சாப்பாட்டுக்கு வைத்துக் கொள்வார்களாம்.

சொந்தக் கிராமத்தில் ஆடு மாடு மேய்ப்பதுதான் யாகவாவின் வேலை. மழைக்குக் கூடப் பள்ளிக்கூடத்தில் ஒதுங்கியது கிடையாது.

''40 பிறவிகள் வெளிமாநிலத்திலும் மேற்பகுதி 11 பிறவிகளும், உங்கள் தமிழ்நாட்டில் மூன்று பகுதிகளும், மதுரையிலும் பிறந்தேன், தஞ்சையிலும் பிறந்தேன், நெல்லைச் சீமையில் தாமிரவருணி நதிக்கரையில் வருவான் வருவான் என்று காத்துக் கொண்டிருந்தாயே அவன்தான் நான் என்று கூறுகிறேன்.'' (டிராக் மாறிய பேச்சு)

''1941ம் ஆண்டு மார்ச் மாதம் 2ம் தேதி காலை 9 மணிக்குப் பிறந்தேன்.'' (சாதாரணப் பேச்சு.)

இவருக்கு இரண்டு மூத்த சகோதரிகள் உண்டு. தங்கம், கனி. (உரத்த குரலில்) ''நான் கர்மாவைத்தானே செய்வேன்? மனிதனே ஏன் தவறு செய்கிறாய்? தண்ணீரைப் போலத் தரை ஆடினால் என் செய்வாய் நீ? நீ கலகத்தைச் செய்கிறாய். நான் பல உக்கிரங்களை ஏவி விடுகிறேன். யுவ நவ என்ன என்னென்ன என்னவ என்னஹாய உவாய உக்ரஹா'' இதற்கு என்ன பொருள்?

''அக்கினியை ஏவிவிடுவேன். பூகம்பத்தை ஏவி விடுவேன். இடி



''நாயாக உழைப்பேன்னு சொன்னவனை வேலைக்குச் சேர்த்துக்கிட்டேன்.''

— ச. ஜான்ரவி

மின்னலை ஏவி விடுவேன். ஆகாயப் பொறியை ஏவி விடுவேன். சூறா வளியை ஏவி விடுவேன்.'' 5000 வருடங்களுக்கு மேலாக உள்ள இனன்யா மொழியில் பேசுவதாகக் கூறுகிறார். எந்த மொழி ஆராய்ச்சி வல்லுநர்களும் இவர் பேசும் இனன்ய மொழியை இனம் கண்டு பிடித்துக் கருத்துக் கூறியதாகத் தெரியவில்லை.

''சம்ஸ்கிருதம் என்கிற வட மொழி வழக்கில் இருப்பது உண்மை யானால் இனன்யா மொழியும் அந்த ரகத்தைச் சார்ந்ததுதான். இது பட்சிகளும் மிருகங்களும்கூட புரிந்து கொள்ளக்கூடிய தேவ பாஷை.'' என்பது இவருடைய விளக்கம்.

இனன்யா மொழியில் இவர் வேகமாகவும், ஆவேசமாகவும் பேசும்போது, இவர் சொல்லுகிற விளக்கத்தை மறுத்துக்கூற எந்த ஆதாரமும் இல்லாததால், தலையை ஆட்டி ஒப்புக் கொண்டதுபோல நடிக்க வேண்டியிருக்கிறது.

25'ம் வயதில் திருமண[illegible] நடைபெற்றது. மனைவியின் பெய[illegible] புஷ்பம்மாள். அருண், சரண் என்[illegible] இரண்டு புதல்வர்கள். 8'ம் வகுப்[illegible] வரை மட்டுமே படித்துவிட்டு அப்ப[illegible] செய்து வந்த ரியல் எஸ்டே[illegible] பிஸினெஸ் செய்து வருகிறா[illegible] களாம். (முனிவரின் காம்பவுண்டு[illegible] குள்ளேயே தனி இடத்தில் குடும்ப[illegible] வசித்து வருகிறது)

இவரைப் பேட்டி கண்[illegible] 'சண்டே', 'இந்து' போன்ற ஆ[illegible] கில நாளேடுகளிலும் மற்றும் சிறி[illegible] பெரிய தமிழ்ப் பத்திரிகைகளிலு[illegible] பெரிய மனிதர்கள் பலர் கட்டு[illegible] எழுதியிருக்கிறார்கள்.

யாகாவாவிடம் ஏதோ ஓ[illegible] அபூர்வ சக்தி இருப்பதாக நினைத்[illegible] இவரைக் காண வரும் வி.ஐ.பி.[illegible] கள் தொழிலபதிபர் டி.டி. வாசு[illegible] கல்வியாளர் வேங்கடசுப்ரமண்யம்[illegible] முன்னாள் கேரள கவர்னர் பா[illegible] ராமச்சந்திரன், மத்திய அமைச்ச[illegible] தங்கபாலு மற்றும் உயர்நீதிமன்[illegible] நீதிபதி பாஸ்கரன் போன்ற பலர்.



இரண்டு மனநிலைகளில் பேச்சு



மூன்றெழுத்தில் ஒரு புதிய மதம் தோன்றுமாம்.

எக்ஸ்பிரஸ் ஸ்டார் டெல்லர் ன்கிற ஆங்கில ஆருடப் பத்திரிகை காராஷ்டிர மாநிலத்தில் 3'ம் தேதி தோன்றிய நில நடுக்கத்தைப் ற்றி 21'ம் தேதியே முன்கூட்டிச் சான்னார் என்று எழுதிற்று.

'சண்டே' என்கிற ஆங்கிலப் த்திரிகையில், மங்களராஜ் என்ப ர் தன் மனைவியின் கான்சர் நாய்க்காக ஆபரேஷன் செய்ய ாமா என்று கேட்க வந்ததாகவும், வர் வெறும் தண்ணீரைக் குடிக் ச் செய்தே ஆபரேஷனின்றிக் குணப் டுத்தியதாகவும் ஒரு கட்டுரை வளியிட்டிருந்தது. சில கேள்வி ளுக்கு அவர் சொன்ன பதில்கள்:

**1994'ம் வருடம் பிற்பகுதியில் ன்னென்ன நடக்கும்?**

''உலகம் முழுவதும் மதக் லவரங்கள் நிகழும். மழை சூறா ளியால் பலபேர் மடிவார்கள்.''

**தென் இந்தியாவில்?**

''உன் ஊரை மட்டும் நினைக் ாதே. உலக முழுமைக்கும் நான் சொல்லுகிறேன்.''

**நல்ல விஷயங்களாக எதுவுமே நடக்காதா?**

''அற்புதமான குழந்தைகள் தோன்றுவார்கள். ஜனனத்திலேயே கவி பாடுவார்கள். தண்ணீருக்குப் பஞ்சம் இராது.''

**ஜெயலலிதா ஆட்சி பற்றி?**

''அது பற்றி நான் ஒன்றும் சொல்லமாட்டேன். அதுதான் தெரிந்த விஷயமாக இருக்கிறதே?'' என்றார். (உஷார் முனிவர்.)

மூன்றெழுத்தில் ஒரு புதிய மதம் தோன்றும். தரை, காற்று, தண்ணீர் மூன்றும் சேர்ந்து அதன் பெயர் அமையும் என்று மற்றொரு கேள்விக்குப் பதில் சொன்னார்.

**''சிகரெட் பிடிப்பதால் உங்கள் உடலுக்குத் தீங்கு வராதா?'' என்று தயங்கிக் கேட்டபோது—**

''என்ன செய்வது? ஆடு மேய்க்கும்போது தரையில் கிடந்த பீடியை எடுத்துக் குடித்தேன். பின்னர் அதுவே பழக்கமாகிவிட்டது. அதிகமாக இப்போது நான் சிகரெட் குடிப்பதில்லை,'' என்றார்.

# தண்ணீரால் ஏற்பட்டுள்ள உங்களது பிரச்சினை கீழ்குறிப்பிட்டவைகளோ அல்லது மற்றவைகளோ...



1. உங்கள் உடல் நலம் தண்ணீரால் ஏற்படும் நோய்களால் அடிக்கடி பாதிக்கப்படுகிறது.
2. மிகவும் நல்ல சோப்பை உபயோகித்தாலும்; தேவையான நுரையும் வருவதில்லை, சருமமும் சுத்தமடைவதில்லை.
3. கெய்சரிலும், வாஷிங் மெஷினிலும் உப்புக் கரை படிந்து, இவற்றின் உள் பாகங்கள் நாசமாகிவிடுகின்றன.
4. எவ்வளவு நல்ல சுத்திகரிக்கும் பவுடரையோ, வில்லைகளோ உபயோகித்தாலும் துணிகளிலிருந்து பழுப்பு நிறைந்த அழுக்கையோ, கறைகளையோ நீக்கமுடிவதில்லை.
5. உங்களது கவனத்தையும் மீறி, உங்கள் தலைமுடி உதிர்கின்றது
6. நீங்கள் உபயோகிக்கும் பாத்திரங்கள் எவ்வளவு சுத்தப் படுத்தியும் பளபளப்பாவதில்லை.
7. உங்களது துணிகள் துவைத்த பின் மஞ்சளாகிவிடுகின்றன, தண்ணீரும் மஞ்சள் கலராயுள்ளது.
8. தண்ணீர் உப்புகரிப்பதால் அதை குடிப்பதற்கோ, சமைக்கவோ பயன்படுத்த முடிவதில்லை.
9. தேவைக்கு வேண்டிய அளவு சுத்தப்படுத்தப்பட்ட தண்ணீர் கிடைப்பதில்லை, உடல் நலம் குன்றி, தேறும் நிலையில், எதிர்பார்க்குமளவிற்கு தண்ணீர் சுத்தமாயிருப்பதில்லை.
10. எவ்வளவு கவனமாக தண்ணீரை உபயோகப்படுத்தினாலும் அளவாக அதை பயன்படுத்த முடிவதில்லை.

## ...எங்களால் அவற்
## முழுமையாக தீர்க்
## முடியும்

டெல்ட்டா தண்ணீர் ஆய்வா
அழைத்து உங்கள் பிரச்சினை
அவரிடம் சொல்லுங்கள்,
விஷயங்களை அவர் பார்
கொள்வார். மிகச்சி
மிகச்சிக்கனமான முடிவை
சொல்வார் உங்கள் தேவைக்
சாதனங்களை சிபாரிசு செய்வ

**உங்களது தண்ணீர் பிரச்சினை**
**தரம் பிரித்து தீர்வு**
**சொல்ல எங்களை அணுகுங்**

''2007-ம் ஆண்டு மார்ச் மாதம் 3'ந்தேதி நான் இவ்வுலகை விட்டு நீங்குவேன்,'' என்கிறார் யாகவா முனிவர். தனது கல்லறை யைத் தானே கட்டி, 'ரெடி'யாக வைத்திருப்பதாகவும் கூறினார்.

இனிமேல் நடக்கப் போவ தாக யாகவா முனிவர் சொன்ன செய்திகளில் முக்கியமானவை:

1. வியாழன் கிரகத்தின்மீது வால் நட்சத்திரம் மோதும்போது, பூமிக்குப் பாதிப்பு ஏற்படாது.

2. இந்தியா பாகிஸ்தானுக்கு இந்த ஆண்டு முடிவுக்குள் சண்டை மூளும். இந்தியா ஒரு வார கால கெடுவுக்குள் பாகிஸ்தானை வெல் லும். பிரதமர் நரசிம்மராவுக்கு 'மவுசு' கூடும்.

3. இந்தியா, சீனா, ஜப்பான் ஒன்று சேர்ந்து உலகத் தலைமையை ஏற்கும். மேலை நாடுகளின் அதி காரம் மாறி, கீழ் நாடுகளில் ஆதிக் கம் மேலோங்கும்.

4. பாரதப் பிரதமர் மீண் டும் அடுத்த தேர்தலில் பிரதமர் ஆவார். காங்கிரஸ் கட்சி பெறும்.

5. ப்ரியங்கா அரசிய ஒரு ராணி போல வருவார். ஆ 2007-ம் ஆண்டு (அதாவது ப்ரிய வின் 35ஆவது வயதில்தான்) மர் ஆவார்.

பேட்டி துவங்கிய 1 நேரத்திற்குப் பிறகு பலத்த பெய்தது. யாகவா முனிவரி ருந்து விடைபெறும்போது து னம் விடவில்லை.

அவர் சொன்னபடி நட லாம். நடக்காமல் இருக்கலா

யாகவா முனிவரை நம்பு வர்கள் மாறிக் கொண்டே இருப் கள்.

மக்களுக்கு வேண்டியது தம் நம்பிக்கைகளைச் செலுத்த வது ஒரு முனிவர்!

மக்கள் நம்பத் தயாராக இ கும்வரை முனிவர்கள் தோன் கொண்டே இருப்பார்கள்.

பேட்டி, படங்கள்: பா



''சாப்பிடும்போது படி தேன்னா கேட்டாத்தானே

— எம்.கே. வேங்க

# கோலம்

திரைச் சீலை விலக்கி ஜன்னல் பார்த்தபோது, நன்றாய் விடிந்திருந்தது.

என்றைக்கும் போகும் திசை நோக்கிக் கண்கள் போக, வழக்கம் போல் எதிர்வீட்டு வாசலில் அழகான கோலம்.

இன்றைக்கு மாவிலைத் தோரணக் கோலம்.

இந்த மாடிக்கு வந்த அன்றையிலிருந்து ராஜவர்மனுக்குத் தவறாமல் அமைந்துவிட்ட பழக்கம் இது. ஜன்னலுக்கு வெளியே செல்லும் பார்வை முதலில் பதியும் இடம் எதிர்வீட்டு வாசல்தான்.

தினசரி என்ன அழகான கோலங்கள்.

ராஜவர்மனும் எத்தனையோ வாசல்களில் கோலங்கள் பார்த்திருக்கிறான். இத்தனை அழகாய், எந்த வாசலிலும் பார்த்ததில்லை.

தனக்குத்தானே ரசித்து அனுபவித்துப் போட்டாலொழிய, இத்தனை அழகாய் வர வாய்ப்பில்லை. அவன் படுத்திருக்கும் இடத்திலிருந்து ஜன்னலைத் திறந்ததும், இந்த வாசல் தெரிவதில் எந்த விதப் பிரயத்தனமும் இல்லாமலேயே கண்களில் இந்த இடம் பட்டது.

இத்தனை அழகாய்க் கோலம் போடுவது யார் என்பதைத் தெரிந்து கொள்ள மனம் ஏங்கியது. காலையில் கண்விழித்துப் பார்க்கும் போது, கோலம் போடப்பட்டு முடிந்திருக்குமேயல்லாமல், யார் போடுவது என்பதைப் பார்க்க முடியவில்லை. அந்தக் கைவண்ணத்திற்குரிய கரம் யாருடையது என்பது தெரியவில்லை.

முதல் நாள்...

மறு நாள்...

அதற்கடுத்த நாள்...

திரும்பத் திரும்ப எத்தனை



அமுதவன்

நாள் முயன்றும் பார்க்க முடிய வில்லை.

தன்மீதே கோபம் வந்தது அவனுக்கு. என்ன இது பீடைத் தூக்கம்? விடிந்த பிறகு எழும் சோம் பேறிக்கு எந்த அற்புதக் காட்சி தான் கிடைக்க முடியும்? விடிவதற்கு முன்பேயே எழுந்தால் அல்லவா பார்க்க முடியும்?

மறுநாள் விடியற்காலையில் எழுந்திருப்பதற்காகவே அலாரம் வைத்துவிட்டுப் படுத்தான். நாலரை மணிக்கே தூக்கம் கலைந்துவிட்டது.

ஜன்னல் வழி பார்த்தான்.

அப்பாடா... நல்ல வேளை யாய் இன்னமும் கோலம் போடப் படவில்லை.

இரண்டு பக்க ஜன்னலையும் திறந்து வைத்துக் கொண்டு உட் கார்ந்தான். வெளிச்சம் தெரியக் கூடாது என்பதற்காக விளக்குப் போடவில்லை. தலைவரின் வருகைக் காக மேடையையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் தொண் டர் போலக் காத்திருந்தான்.

இரண்டொரு நிமிடங்களில் கதவு திறக்கப்பட்டது. பரபரப் படைந்தான் அவன். வைத்த கண் வாங்காமல், அவளையே பார்க்க ஆரம்பித்தான்.

அந்தப் பெண் வெளியே வந் தாள்.

பரக் பரக்கென்று வாசல் கூட்டினாள். தண்ணீர் தெளித் தாள். மூலையில் கொணர்ந்து வைக்கப்பட்டிருந்த கோலமாவுக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு குனிந்தாள்.

இரண்டு நிமிடங்கள்கூட ஆகியிருக்காது. கோலம் போட்டு முடித்துவிட்டுக் கதவை மூடிக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

ராஜவர்மனுக்கு ஆச்சரியமாயி ருந்தது. வந்ததும் தெரியவில்லை, போனதும் தெரியவில்லை. இரண்டே நிமிடங்களில் என்னவொரு அற் புதம்.

கீழே இறங்கி வந்து பார்த் தான். இன்றைக்கு தேர்க் கோலம். நான்கு பக்கங்களுக்கும் நான்கு தேர்கள் புறப்படத் தயாராய் நின்று கொண்டிருந்தன.

மறுநாள் அதே நேரத்துக்கு எழுந்தான். ஜன்னல் வழியே பார்வை பதித்தான். ஐந்தே நிமி டங்களில் அந்தப் பெண் வந்தாள். கடமையே கண்ணானவள் போல் நிமிடம்கூடத் தாமதிக்காமல், நிமிடம் கூட வீணாக்காமல் தன்னுடைய வேலையை முடித்துக் கொண்டாள். கதவை மூடிக்கொண்டு உள்ளே போய்விட்டாள்.

இன்றைக்கு மயில் கோலம்.

அவனுக்கு இப்போதெல் லாம் பழகிவிட்டது. அலாரம் இல்லா மலேயே எழுந்து கொள்ள ஆரம்பித் தான். அவளும் இவனை ஏமாற்ற விரும்பாதவள் போல் சரியான நேரத்திற்கு வந்தாள். தன்னுடைய காரியத்தை முடித்தாள். போய்க் கொண்டே இருந்தாள். அவளுடைய உருவத்தைத்தான் பார்க்க முடிந் ததே தவிர, முகத்தைப் பார்க்க முடியவில்லை. தெரு விளக்கின் வெளிச்சத்திலும், லேசான பனிமூட் டத்திலும், முகம் தெளிவாகத் தெரிய வில்லை. அதுவும் தவிர, மாடியை நோக்கி நிமிர்ந்தாள் என்றால், ஒரு வேளை முகத்தை நன்றாகப் பார்க்க முடியலாம். அவள் எதற்காக நிமி ரப் போகிறாள்...?

அந்த முகத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உந்தித் தள்ள தடதடவென்று படிகளில் இறங்கினான். ரொம்ப அவசர மாய்ப் போகிறவன் போல் அவ ளைக் கடந்து போனான்.

ம்ஹூம்... அவள் சலனப் படவே இல்லை.

குனிந்து கோலம் போட்டுக் கொண்டிருந்தவள், முடிந்ததும் உள்ளே போய்விட்டாள்.

அடுத்த நாளும் அதேபோல்

அவளுடைய பக்கவாட்டு உருவமும், வெளேரென்ற கையும்தான் மனதில் பதிந்ததே தவிர, முகம் பதியவில்லை.

நான்காவது நாள் படியிறங்கியவன் கடந்து செல்லாமல் அங்கேயே அப்படியே நின்றான். அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்தான்.

பலன் இருந்தது.

சட்டென்று திரும்பி அவனைப் பார்த்தாள். கொஞ்சம் மிரண்டவள் போலும், அவனுடைய அத்துமீறிய செய்கையை விரும்பாதவள் போலும், வேக வேகமாய்க் கோலத்தை முடித்துக் கொண்டு கதவைப் படாரென்று அறைந்து மூடியபடி உள்ளே போனாள்.

மனதுக்குக் கொஞ்சம் கஷ்டமாயிருந்தாலும் அவளுடைய முகத்தைப் பார்க்க நேர்ந்துவிட்ட சந்தோஷம் அவனுக்குள் இருந்தது. எத்தனை அழகான முகம்... அவள் முகத்தில் தெரிந்த மிரட்சிகூட முயல் குட்டியின் மிரட்சிபோல் எவ்வளவு அழகு...

அந்த முகம் அன்றைக்குப் பூராவும் அவனை வதை செய்தது.

எப்போது விடியும் என்று காத்திருந்தான். எதிர்வீட்டுக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. இதுநாள் வரை இருந்த சுதந்திரம் பறிபோய் கொஞ்சம் தயங்கிக் கொண்டே, கொஞ்சம் பயந்துகொண்டே வருகிறவள் போலத்தான் அவள் வெளி வந்தாள்.

இன்றைக்கு என்ன ஆனாலும் சரி. பேசியே தீருவது என்று ஏற்கெனவே முடிவு செய்து வைத்திருந்தான்.

அவள் வாசல் தெளிக்கும் வரை காத்திருந்து கோலம் போடத் துவங்கியதும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அருகில் சென்று நின்றான்.

''கங்கிராஜுலேஷன்ஸ்... ரொம்ப அழகாய்க் கோலம் போடறீங்க. இத்தனை அழகான கோலங்களை நான் இதுவரைக்கும் எங்கேயும் பார்த்ததே இல்லை,'' என்றான்.

அவள் ஒன்றும் பேசவில்லை. சரேலென்று நிமிர்ந்தாள். முகம் அதிர்ச்சியையும் கோபத்தையும் ஒரு சேரக் காட்டிற்று. அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் உள்ளே சென்றாள்.

மறுநாள் அவனுக்கொரு அதிர்ச்சி காத்திருந்தது. காலை குறிப்பிட்ட நேரத்திற்கு எழுந்து ஜன்னலைத் திறந்து வைத்துக் காத்திருந்தான். நேரம் ஆயிற்று. அவள் வரவில்லை.

பொறுமையுடன் மேலும் காத்திருந்தான்.

எவ்வளவு நேரமாகியும் வரவில்லை.

அவன் அலுவலகத்துக்குப் போகும்வரைக்கும் அன்றைக்குக் கோலம் போடப்படவே இல்லை.

---



''ஒரு அடி பின்னால போங்க சார்! ஃபோகஸ் சரியா வரலே..!''
– சுதர்ஸன்


பல தேசப்
பெருமைகளை
முகத்திலே பிரதிபலிக்கும்
பேரெழில் பெண்மணி
குடிகூராவின மூன்று இன்டர்நேஷனல் ப்யூட்டி டால்க்குகள். உலகிற் சிறந்த நறுமணங்கள் நிரம்பியவை. பட்டுப்போன்று மென்மை யானவை. உங்கள் முகத்திற்குப் பேரெழில் சேர்ப்பவை. பல தேசங் களின் பெருமைகளின் சிறப்பை உங்கள் முகத்தில் பிரதிபலிக்கச் செய்பவை.
Cuticura
Lavender
Mist
Cuticura
Classic
Cuticura
International
BEAUTY TALCS

அந்த வழியாகக் கடந்து செல்லும் போது, வாசல் வெறுமையாய் இருந்தது அவனுக்கு என்னவோ போல் இருந்தது. மனதுக்குக் கஷ்டமாக இருந்தது. இந்த நிலைமைக்கு நாம் தான் காரணமோ என்று குற்ற



உணர்வு எழுந்தது.

மறுநாள் காலை, நல்ல வேளையாய் அவள் வாசல் தெளித்தாள். இங்கிருந்து பார்த்தபோது கொஞ்சம் பதட்டத்துடனேயே அவள் செயல்படுகிறாள் என்பதுபோல் பட்டது. மனதில் தைரியம் வர வழைத்துக் கொண்டு ''என்னுடைய குறுக்கீட்டிற்காக மன்னித்து விடுங்கள்,'' என்று சொல்லிவிடும் தீர்மானத்துடன் கீழிறங்கி வந்தான்.

அருகில் வந்து லேசாகக் கனைத்து, 'குட் மார்னிங்' என்றான். அவள் நிமிரவில்லை. ஆனால், கோடு இழுத்துக் கொண்டிருந்த கை நின்றது.

''தொந்தரவு படுத்தறதா நினைச்சீங்கன்னா, சொல்லிருங்க. மன்னிப்புக் கேட்டுக்கறேன். நான் உங்க கைத்திறனைப் பாராட்டற ரசிகன். அவ்வளவுதான். ஒரேயொரு வேண்டுகோள்... என்னுடைய தொந்தரவுக்காக கோலம் போடறதை மட்டும் நிறுத்திராதீங்க. நேற்றைக்கு வெறுமையாயிருந்த வாசலைப் பார்க்க என்னவோ போலிருந்தது. திலகமில்லாத நெற்றியைப் பார்க்கிற மாதிரி இருந்தது.''

அவன் முடிப்பதற்குள் நிமிர்ந்தாள் அவள். ''என்னைப் போல இருந்ததுன்னு சொல்றீங்களா?'' கேட்டுவிட்டு சரேலென்று உள்ளே போய்க் கதவை அறைந்து மூடிக் கொள்ள, அதிர்ந்துபோய் நின்றான் ராஜவர்மன்.

படாரென்று தாக்கிய அடி. கொஞ்சமும் எதிர்பாராத சமயத்தில், எதிர்பாராத இடத்தில் எதிர்பாராமல் விழுந்த அடி. இயல்பிற்கு வரவே அவனுக்குக் கொஞ்ச நேரம் பிடித்தது.

அன்றைக்குப் பூராவும் அவனுக்கு எதுவுமே ஓடவில்லை. எதற்காக இப்படி? ஓர் அழகிய சித்திரத்தின் மறுபக்கம் ஏன் இப்படி ஒரு விபத்தைச் சந்தித்திருக்க வேண்டும்? இவ்வளவு பெரிய சோகத்தை உள்ளே வைத்து அழுத்திக் கொண்டு எப்படி அவள் விரல் வழியே வண்ண மயமானக் கலை அசாதாரணமாய் வழிகிறது.

அவனுக்குள் திடீரென்று ஒரு வேகம் வர, நோட்டுப் புத்தகத்தைப் பிரித்துக் காகிதம் ஒன்றை எடுத்தான். பரபரவென்று எழுதினான்.

''சிநேகிதியே... உன்னுடைய கலைக்கு ரசிகன் நான். இந்த அறைக்கு குடிவந்த நாள் முதற்கொண்டு உன்னுடைய கைவண்ணத்தை அணு அணுவாக ரசித்து வருகிறவன். வாசலில் போடப்படும் உன்னுடைய கோலத்தை முதலில் ரசிப்பேன். அப்புறம் வியப்பேன். அதைத் தொடர்ந்து வருத்தப்படுவேன். இத்தனை அழகான கோலம் இன்னும் சிறிது நேரத்தில் கால்களால் மிதிக்கப்படும்... வாகனங்களின் சக்கரங்களால் சிதைக்கப்படும்... காற்று வாக்கில் அழிக்கப்படும். அப்படி அழிந்து போகாமல் அங்கேயே காவலுக்கு உட்கார்ந்து கொள்ளலாமா? என்றுகூட நினைத்துக் கொள்வேன்.




சாலையோரச் சேறை வேண்டுமென்றே வாரியிறைக்கும் ஆட்டோக்காரரை...

இவ்வளவு அழகான திறமையை வைத்திருக்கும் உன்னுடைய பின்னணி இத்தனை சோகமானதா? சிநேகிதி சம்மதம் சொல்... உன்னுடைய கோலத்திற்கு மட்டுமல்ல, உனக்கும் காவலாக நான் இருக்கிறேன். கோலம் போடும் உன்னுடைய சித்திர விரல்களுடன் என்னுடைய விரல்களைக் கோர்த்துக் கொள்ளத் துடிக்கிறேன். இப்படிக்கு உன்னுடைய ரசிகன்.''

ராஜவர்மன் கடிதத்தை ஒப்படைத்துவிட்டு அவளுடைய பதிலுக்காகப் படபடக்கும் இதயத்துடன் மறுநாள் வரைக்கும் காத்திருந்தான். அவன் எதிபார்த்தபடியே மறுநாள் அவனிடம் ஒரு கடிதத்தைத் தந்தாள் அவள்.

அவசர அவசரமாய் மாடிக்கு ஓடிப்போய் கடிதத்தைப் பிரித்தான்.

''அன்பரே, வணக்கம். என்னுடைய கோலங்களை மிகவும் ரசித்திருக்கிறீர்கள். இத்தனை தூரம் கோலங்களுக்காகவே ரசனையை வளர்த்துக் கொண்ட முதல் ரசிகர் நீங்களாகத்தான் இருக்கவேண்டும். இதற்காக உங்களுக்கு நன்றி.

நான் போடும் கோலங்கள் கால்களால் மிதிக்கப்படாமல் வாகனங்களால் சிதைக்கப்படாமல் காற்றால் அலைக்கழிக்கப்படாமல் காவலுக்கு உட்காரப் போவதாக எழுதியிருக்கிறீர்கள். சிரிப்புத்தான் வந்தது. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நியதி இருப்பது போல் கோலத்திற்கும் ஒரு நியதி உண்டு. கால்களால் மிதிக்கப்பட்டும், சிதைக்கப்பட்டும் அலைக்கழிக்கப்பட்டும் ஈ எறும்புகளால் மொய்க்கப்பட்டும் அழிந்து போவதுதான் கோலங்களுக்கு விதிக்கப்பட்ட நியதி. அதுதான் இயற்கை. நீர் தெளித்து வாசலில் இடப்பட்டு சிறிது நேரம் அழியாமல் இருக்கிறதே அந்த நேரம் மட்டும்தான் அதற்கு சாசுவதம். அதன் ஆயுள் அவ்வளவுதான். அதனைத் தொடர்ந்து பாதுகாத்துக் கொண்டு உட்காருவதென்பது நடைமுறை சாத்தியமல்ல. இதையெல்லாம் தெரிந்துதான் நான் தினசரி கோலம் போட்டுக் கொண்டு இருக்கிறேன். என்னுடைய வாழ்க்கைக் கோலமும் போடப்பட்ட சிறிது காலத்திலேயே சிதைந்துவிட்டது. அதனுடைய ஆயுளும் அவ்வளவுதான் என்று நினைக்கிறேன். கோலத்தை ரசிப்பவர்கள் எல்லாம் அதற்குக் காவலராக வந்துவிட முடியாது. நீங்கள் ஒரு ரசிகராகவே இருங்கள். அது ஒன்றே எனக்குப் போதும். நன்றி. இப்படிக்கு, வனமாலா.''

கடிதத்தை முடித்துவிட்டு ஜன்னல் பக்கம் பார்வையைச் செலுத்தினான் அவன். சதுரம் சதுரமாய்ப் போடப்பட்ட ஒரு சதுரங்கக் கோலம் அவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது.

ஆறு வித்தியாசம் விடை:

1. மாடி வீட்டு ஜன்னல்
2. நாய்
3. பேண்ட் பாக்கெட்
4. காது
5. மாடியில் நிற்பவர் மூக்கு
6. மரக்கிளை



கூவத்தில் ரெண்டு ரவுண்ட் நீச்சலடிக்க வைப்பேன்.

# காதல் வேகம்

அத்தியாய[ம்]

6

குமார் : நாஸ் ரேவதி : சங்கவி
விக்ரம் : விஜய் செல்வி : ராகவி
தம்பு : ரவிராஜ் அம்மா : லலிதா
இன்ஸ்பெக்டர் : வெங்கி

புகைப்படங்கள் : பிரவீன்குமார்
உதவி : மணிவண்ணன்
ஏற்பாடு : சந்துரு
மேக்கப் : நாகராஜ்
கதை : குமுதம் கதை இலாகா

**முன் கதைச் சுருக்கம்**

தான் விரும்பும் ரேவதியின் வீட்டிற்கு குமார் செல்ல, ரேவதியின் அம்மா, ரேவதியைக் காணவில்லை என்கிறார். குமாரின் கையில் டைரி ஒன்று சிக்குகிறது.














# கல்யாணியைத் தேடி

*முப்பது வருடம் கழித்து வரப்போகும் பி.எஃப்.—ஐ நம்பியிருக்கும் சாதாரண ஜீவனான என் வாழ்க்கையில் நடந்த அதிசயம்!*

'டட்'டென்று சின்ன தாய்ச் சப்தம் கேட்டது. தொடர்ச்சியாய் என் முழங்கால் ஈரம் உணர்ந்தது. எலெக்ட்ரிக் டிரெயினின் நெரிசல் மிகுந்த ஆட்ட நேரக் காலையில் அவஸ்தை கொண்டு ஓரக் கண்ணால் காலைப் பார்க்க, காரணம் புரிந்தது. சாம்பார்.

எல்.ஐ.சி.யில் பத்தாயிரம் ரூபாய் பாலிசி போட்டு அதைக்கூடக் கட்ட வழியில்லாமல் முப்பது வருடம் கழித்து வரப்போகும் பி.எஃப்.—ஐ நம்பியிருக்கும் சாதாரண ஜீவன் நான். என் தினசரி வாழ்க்கை உப்புச்சப்பற்றது. ஜெயலலிதா காரில் சட்டசபைக்குச் செல்லும் போது ரோட்டோரத்தில் நின்று டாட்டா காட்டியதுதான் என் வாழ்க்கையிலேயே நான் செய்த பெரிய சாதனை.

ஆறு இட்லி கொள்ளும் டிபன் பாக்ஸில் எட்டு இட்லிகளை அமுக்கி அமுக்கித் திணிப்பதுதான் தாம்பத்யத்தின் தலையாய கடமை என்று நினைத்த என் சம்சாரத்தின் செயற்பாடு இப்போது வெளிச்சமாயிற்று.

எப்போதடா எழும்பூர் வரும் என்று காத்திருந்தபோது, எழும்பூர் வந்தது.

நெரிசலில் பதறிச் சிதறி,

ப்ரியா கல்யாணராமன்



வெளியில் வந்தபோது, அவனைப் பார்த்தேன்.

தந்திக் கம்பத்தின் மேல் சாய்ந்து கொண்டு போவோர் வருவோர்க்கெல்லாம் பிட் நோட்டீஸ் கொடுத்துக் கொண்டிருந்தான். ஒவ்வொருவரையும் சகோதரன் போலவும், மைத்துனன் போலவும் நினைத்துக் கொடுத்த அவனது பவ்யம், தொழிலுக்குக் கற்றுக்குட்டி என்று புரிய வைத்தது.

அவசரமாய்த் தாண்டிச் சென்ற என்னையும் புன்னகையுடன் நோக்கி நோட்டீஸ் நல்கினான். சாம்பார் சிந்துகிறதோ, அதற்காகத்தான் புன்னகைக்கிறானோ என்று ஐயப்பட்டேன்.

ஆபீஸ் அவசரத்திலும் ஒரு கையில் மஞ்சள் பையும் இருந்ததால் நோட்டீஸை சட்டைப் பைக்குள் திணித்து கொண்டேன்.

ஆபீஸ் போவதற்கு சாம்பார் பட்டுக் கையெல்லா கலர் மாறிவிட, துடைத்து கொள்ளக் காகிதம் தேடுகையில் பிட் நோட்டீஸ் ஞாபகம் வ தது.

பிரித்துப் பார்க்கையில் ந ரில் புதிதாக வந்திருக்கும் சூர சர்க்கஸின் விளம்பரத்தாள் எ பது தெரிந்தது. 'குடும்பத்துட வருக வருக' என்று கூவியிரு தது. நோட்டீஸ் உதவி நாகப்ப ஜவுளி சமுத்திரம் என்று பி கோடு மாதிரி அனாதையாய் கீழே தெரிந்தது.

ஈரம் போகத் துடைக் முன்பு யதேச்சையாய் நோட் ஸின் பின்பக்கம் பார்த்தவ அதிர்ந்து போனேன்.

*என்னைக் காப்பாத்து ஆபத்துல இருக்கேன். தற்கொலை செஞ்சுக்கப் போறேன். கல்யாணி.*

என்று கோணல் மாணலா அவசர அவசரமாய் அதில் எழு தப்பட்டிருந்தது.

திடுக்கிட்டு, மறுபடியு படித்தேன்.

நிஜம். யாரோ எழுதியிரு கிறார்கள்.

யார், ஏன்?

மையமாய் யோசித்ததி யாரோ தமாஷுக்கு விளையா கிறார்களோ, என்று நினை தேன். இருக்காது. கையெழு தில் ஓர் அவசரமும் பரபரப்பு தெரிகிறது.

ஒருவேளை...

மைத்துனிக்கு மா டைப்பு என்று பொய்க் காரண

சொல்லி, லீவ் போட்டு, ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓடினேன்.

பெண் என்பதால் இல்லை... யார் ஆபத்தில் மாட்டியிருந்தாலும் காப்பது கடமை.

பிட் நோட்டீஸ்காரன் இன்னமும் விநியோகித்துக் கொண்டிருக்க, அவசரமாய் நெருங்கினேன்.

''கல்யாணி... கல்யாணி, தெரியுமா?''

''பீரா? முப்பது ரூபாயாச்சே!'' என்றான் அசுவாரஸ்யமாய்.

பெண்ணொருத்தி ஆபத்தில் இருக்கிறாள். கிண்டலைப் பார். கறுவிக் கொண்டே, நோட்டீஸைக் காண்பித்தேன். அவனிடமிருந்த மற்ற தாள்களைக் கவிழ்த்துப் பார்த்தேன். எல்லாம் வருக, வருக என்றதே தவிர... எதிலும் பின்னால் எதுவும் எழுதப்படவில்லை.

கல்யாணி... யார் நீ?

''யார்யா எழுதியிருப்பா?''

''தெரில சார்,'' என்று நபும்சகனைப் போல் அவன் என்னைப் பார்த்தான். ''சர்க்கஸ்ல நோட்டீஸ் கொடுத்தாங்க. நூறு கொடுத்தா எட்டு ரூபா. காலைலேர்ந்து ரெண்டாயிரம் கொடுத்திருக்கேன். நூறுக்கு எட்டுன்னா, ஆயிரத்துக்கு....''

சட்... நான் வீணாக்கும் ஒவ்வொரு நிமிடமும் ஆபத்து என்று புரிந்தது. சர்க்கஸுக்குப் பநூன்தான் நிர்வாகி என்பது தெரிந்தது.

சர்க்கஸ் கூடாரம் நோக்கி ஓடினேன். கல்யாணி, சர்க்கஸில் பணிபுரிபவளாய் இருப்பாள். தமிழ்ப்பெண். வடக்கத்தியான் கையில் சிக்கியிருப்பாள். காப்பாற்றாமல் விடுவதில்லை.

சர்க்கஸ் கூடாரம், அதற்





கென்று ஒரு மணத்தைக் கொண்
டிருந்தது. ஒட்டகத்தின் சிறுநீர்
இத்தனை நாற்றமா? ஒட்டகத்
தைக் கட்டிக்கோ, மூக்கைப்
பொத்திக்கோ! சர்க்கஸ் பெண்
களும், நீர் யானைகளும் அழ
காக இருந்தன. ஒரு மைல்
தள்ளி நின்ற ஒட்டகம் ஒன்று
தன் நாக்கை நீட்டி என் சட்
டைக் காலரை ஏதோ பதார்த்
தம் போல் வெகு சுவாரஸ்ய
மாய் இழுத்தது. ஒருவேளை,
என் வியர்வை நாற்றம் அதற்
குப் பிடித்திருக்கலாம்.

பபூன் தாஸிடம், ''கல்
யாணி,'' என்றேன்.

''ஏன் பாக்கணும்?''

''குடும்ப விஷயம்.''
பொய் சொன்னேன். அவன்
உஷாராகிவிடக் கூடாது.

''சரி, வா!'' கிட்டத்
தட்ட கைப்பிடித்தே அழைத்
துச் செல்ல, கல்யாணியைப்
பார்த்ததும், கதிகலங்கிப்
போனேன். கல்யாணி ஒரு
வாலில்லாக் குரங்கு. என்ன
தான் கல்தோன்றி மண் தோன்
றாக் காலத்தே தமிழ் தோன்றி
யிருந்தாலும், வாலுள்ள குரங்
குக்குக் கன்னித் தமிழ் எழுத
வராது என்று என் சின்னஞ்சிறு
அடங்கிய மூளை தெரிவித்த
தால், சொறிநாய் மாதிரி வெளி
யில் வந்தேன்.

கல்யாணி... கல்யாணி...

ஒரு பெண் ஆபத்தில்
இருக்கிறாள். எங்கே இருக்கிறாய்
கல்யாணி? இந்த நகரத்தில்
எந்த மூலையில் நீ! எப்படி?
என்ன ஆபத்து?

எப்படி ஓர் இக்கட்டான
நிலையிலிருந்தால் அவள் பிட்
நோட்டீஸில் எழுதியிருப்பாள்
என்று தோன்றிற்று. அது ஏன்
என் கையில் கிடைக்க வேண்டும்?

நோட்டீஸ் அச்சடிக்கப்
பட்ட இடம், மந்தைவெளி என்று
காணப்பட்டது.

ஆபத்திலிருக்கும் பெண்
ணுக்கு உதவாமல் விட்டால்
என்ன மனித ஜென்மம்.

மந்தைவெளி பஸ்ஸில்
ஏகக் கூட்டம். கல்யாணி... கல்
யாணி... ஒருத்தனும் கவலை
யின்றி ஜாலியாய்ப் பயணம்
போகிறார்கள்.

சாதுவான நான் கண்டக்
டரை நெருங்கியபோது கிட்டத்
தட்ட மந்தைவெளியே நெருங்கி
விட்டது. டிக்கெட்டுக்குக் காசெ
டுக்கப் பர்ஸைப் பார்த்தால்...
காணோம். பிக்பாக்கெட்.
ஐயோ...

''கண்டக்டர்... என் பர்ஸ்... பர்ஸ்...''

பஸ் கிரீச்சிட்டது.

''சாவு கிராக்கி. டிக்கெட் எடுக்காம ஏமாத்த இப்படி ஒரு ரூட்டா? கஸ்மாலம்! பாத்தா பேமானியாட்டம் கீறே. இறங்குடா மூதேவி!''

கீழே உதிர்ந்தேன். இல்லை, உதிர்க்கப்பட்டேன்.

கல்யாணி... கல்யாணி... என்று கமல்ஹாசன் பீம் பாய், பீம் பாய் சொல்லும் நிலை.

பிரிண்டிங் பிரஸ்ஸை அணுகும்போது செருப்பு படாரென்று அறுந்தது.

உலகிலேயே செருப்பு தைப்பவருக்குக் கடன் வைத்த முதல் ஆள் நானாகத்தான் இருப்பேன்.

பிரஸ் என்று பெயரே தவிர, முதலாளியே முதலாளி. முதலாளியே தொழிலாளி.

தொப்பை அதிரச் சிரித்தது அந்த அபிஷ்டு.

''கல்யாணி பட்டணம் பொடிதான் போடுவேன். மற்றபடி லேடீஸ் வாசனையே இங்க கிடையாது. ஆத்துலகூட தவறிப்போய் வருஷம் எட்டாறது.'' குலுங்கிய அவரே, எனக்குப் பெண் போல் தெரிந்தார்.

''சீரியஸான விஷயம் சார். அச்சடித்தவுடனே சர்க்கஸ்லே கொண்டு போய்க் கொடுத்தீர்களா?''

''சர்க்கஸுக்குப் போறதாவது? அச்சடிச்சவா நாகப்பா ஜவுளி சமுத்திரமாச்சே. அவாதான் வந்து எடுத்துண்டு போனா.''



அந்தச் சமுத்திரம் பக்கத்திலேயே இருந்தது. கையிலும் காசில்லாததால் நடராஜா நட.

பிரதி வெள்ளிக்கிழமை விடுமுறை என்று போர்டு என்னை வரவேற்றது.

பிரதி ஞாயிற்றுக்கிழமை மட்டுமே லீவ் விடும் பக்கத்துக் கடையில் ஜவுளி சமுத்திரத்தின் வீட்டு முகவரி கிடைத்தது.

ஓடு... ஓடு... ஓடு...

நீ சோம்பல் படும் ஒவ்வொரு நிமிடமும் ஒரு பெண்ணின் உயிர் துடிக்கிறது.

மணிரத்ன வெயிலில், தவிப்போடு அந்தப் பங்களாவை நெருங்கினேன்.

நான் அந்தப் பங்களா கதவைத் தட்டியபோது, ஓர் இளம்பெண் என்மேல், ரத்தத்துடன் விழுந்தாள்.

(தொடரும்)


இயற்கை
அழகிற்கு
சருமப்பாதுகாப்பிற்கு 18 மூலிகைகள்!
மெடிமிக்ஸ்
ஆயுர்வேத சோப்
முகப்பரு
வேர்க்குரு
பொடுகு
கரும்புள்ளி
சொறி
தேமல்
SILVER JUBILEE YEAR
25
1969
1994
MEDIMIX
MEDIMIX
AYURVEDIC TOILET SOAP
ZEST/MS/110



# கல்யாணியைத் தேடி

முன்கதைச் சுருக்கம்: சராசரி மனிதனான என் கைக்குக் கிடைத்த பிட் நோட்டீஸின் பின்புறத்தில் 'என்னைக் காப்பாத்து, தற்கொலை செஞ்சுக்கப் போறேன் – கல்யாணி,' என்று கோணல் மாணலாக எழுதியிருக்கக் கல்யாணியைத் தேடினேன். நான் அந்தப் பங்களா கதவைத் தட்டியபோது ஓர் இளம்பெண் என்மேல் ரத்தத்துடன் விழுந்தாள்.

பங்களா கதவைக் கல்யாணி திறப்பாள், என்னம்மா பிரசினை? எஸ்.எஸ்.எல்.சி. ஃபெயிலா, காதலன் கோபித்துக் கொண்டானா? என்று கேட்கலாம் என நினைத்தால் இதென்னடா எழவு?

கொலையா, கற்பழிப்பா, பிணமா?

அலறி அடித்து விலகினேன்.

விழுந்தவள் ஜங்கென்று முறைப்புடன் எழுந்தாள்.

இவள்தான் கல்யாணியோ என்று நினைத்தபோது என் முதுகில் தொபீரென ஓர் உதை விழுந்தது. தடுமாறித் தேய்ந்தேன்.

திரும்பியபோது வாட்டசாட்டமாய் சரத்குமார் உடம்புடன் நாசர் முகத்துடன் நின்ற அவனைப் பார்த்தேன்.

''ஏண்டா, பரதேசி நாயே, தனியா இருக்கற

ப்ரியா கல்யாணராமன்



பொண்ணுகிட்ட தினமும் இந்த நேரத்துல கதவைத் தட்டிக் கலாட்டா பண்ற எச்ச எலை நீதானா?'' இப்போது என் முகத்தில் ஒரு குத்து விழுந்தது.

''கல்யாணி, கல்யாணி.''

''என் தங்கச்சி கண்ணம்மாவைக் கல்யாணின்னு செல்லமா வேற கூப்பிடறியாடா?'' அந்தப் பயில்வான் அண்ணன் என்னை இறுக்கிப் பிடித்துக் கொண்டு, அந்த மூதேவிப் பெண்ணைக் கனிவுடன் நோக்கி, ''என்ன தங்கச்சி, எனக்குப் புடிக்குமேன்னு ரத்தப்புட்டு செய்ய வச்சிருந்த ஆட்டு ரத்தம் கீழ கொட்டிடுச்சேன்னு பாக்கறியா? பரவாயில்லம்மா. இல்லேன்னா பல நாளா உன்னை டபாய்ச்சிட்டிருக்கிற இவனைப் புடிக்க முடியுமா?''

''ஐயோ, சகோதரி, அது நான் இல்லை என்று சொல்லேன்.''

அந்தப் பெண் பத்தினி போல் தலைகுனிந்து நிற்க, ''நீ உள்ள போம்மா. இந்தப் பயலை போலீஸ் ஸ்டேஷன்ல முட்டிக்கு முட்டித் தட்டி இவன் ரத்தத்தையே கொண்டு வரேன்.''

வெட்டப் போகும் ஆட்டைப் பிடிப்பது போல் என் கழுத்தை இறுக்கிப் பிடித்தான்.

கதிகலங்கிப் போனேன். பேசக்...கூட... மு.. முடியவில்லை.

அந்தத் தடியன் கசாப்புக் கடைக்காரன் போலவும், நான் ஆடு போலவும் எனக்குத் தோன்றிற்று. ''மே... மே... கல்யாணி... கல்யாணி...''

கூட யாரோ சேர்ந்து கொள்ள, என்னைக் கசாப்புக் கடைக்கு– ஸாரி, போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒட்டிக் கொண்டு போனார்கள். தெருத் திருப்பத்தில் எல்லாம் ஸ்பீட் பிரேக்கர் போல் உதை விட்டார்கள்.

ஆடாக மாறிவிட்ட மாதிரி ஓர் அச்சம். உதட்டில் ரத்தம்.

''புல் கூடத் தின்ன முடியாதபடி பண்ணிவிட்டாயே, கல்யாணி...''

போலீஸ் ஸ்டேஷனில் தான் என் வாய் திறந்தது. ''சார்... நான் நாகப்பா ஜவுளிக் கடைக்காரர் வீட்டுக்குத் தான் போனேன். அதே நம்பர் தான்... 96.''

கசாப்புக்கடை சொன்னான். ''டுப் விடறான் சார்.

ஜவுளிக்கடைக்காரங்க வீட்டு நம்பர் 69. இவன் டெய்லி என் தங்கச்சிகிட்ட வந்து டுபாகூர் பண்றான் சார். ரத்தம் வர்ற மாதிரி அடிங்க சார்.''

ஐயோ... டுபாகூர் என்ற வார்த்தைக்குக்கூட அர்த்தம் தெரியாதே... கல்யாணி... அடிப்பாவி!

''நான் அப்படிப்பட்ட ஆள் இல்லை சார். ஜே.ஜே. கம்பெனியில் குமாஸ்தாவா வேலை பாக்கறேன். கல்யாணம் ஆனவன் சார். வீட்ல பொண்டாட்டி தேடிட்டிருப்பா சார்.''

பாஸிங் ஷோ சிகரெட் பெட்டி மாதிரியிருந்த போலீஸ், ''நீ ஏன் நாகப்பா ஜவுளிக்காரங்க வீட்டுக்குப் போகணும்?''

கல்யாணி, கல்யாணி... என்றபடி பிட்நோட்டீசுக்காக சட்டைப் பைக்குள் கை விட, அது காணவில்லை. ஐயோ! கல்யாணி பற்றி இங்கு சொல்லக் கூடாது. சொன்னால் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து நேராய்க் கீழ்ப் பாக்கத்திற்குத் தள்ளி விடுவார்கள். எங்கே நோட்டீஸ்? கசாப்பு அடித்த அடியில் அவன் வீட்டு வாசலிலேயே விழுந்துவிட்டதோ?

''எதுக்குப் போனே?''

''லீவு நாள்ல கணக்கு எழுதித் தரலாமான்னு கேக்க.''

ஆடு மாதிரி நான் லாக்கப்பில் தள்ளப்பட்டேன். லுங்கி கட்டியிருந்த ஒருவன், ''என்ன குரு, ரேப்பிங்கா?'' என்றான்.

சிவ சிவா...

இந்த நிலை யாரால்? உன்னால்தானேடி கல்யாணி! எங்கே இருக்கிறாய்?





அவ பேர் என்ன?''

''கல்யாணி... கல்யாணி...'' என்றேன் அறியாமல்.

''அப்ப, நிசம்தானா?'' பார்யாள் அலறினாள்.

என் மனசு பூராவும் கல்யாணியிடமே இருந்தது. இத்தனை அல்லலுக்கும் காரணம், யாரடி நீ? எங்கே இருக்கிறாய்? லாக்கப் பார்த்திருக்கியா நீ?

விடுவதில்லை.

ஆட்டோ சிக்னலில் நின்ற போது மனைவியின் பர்சுடன் தடாரென குதித்து நிமிஷமாய் ஓடினேன். அவள் கூக் குரல் தேய்ந்து மறைந்தது. பின்னால் சமாளித்துக் கொள்ளலாம்.

இப்போது எனக்கு அந்த பிட் நோட்டீஸ் அவசியம் தேவை. 96'ம் நம்பர் பக்கம் போனால் கசாப்பு, என்னை நிற்க வைத்தே ரத்தம் கறந்துவிடுவான்.

வேறு வழியில்லை.

முதலில் ஓர் ஓட்டலுக்குப் போய் வயிறு வெடிக்கச் சாப்பிட்டுவிட்டு, வேக வேகமாய் நடந்தபோது, மூடி திருடப்பட்டிருந்த பாதாள சாக்கடை ஒன்றில் எலி மாதிரி விழுந்தேன். அது முழுவதும் அசிங்கம் அடைத்திருந்ததால் செத்த எலி மாதிரி கொழ கொழவென எழுந்தேன். உடம்பெல்லாம்... சட்டையெல்லாம்... தலையெல்லாம்... உவ்வேக்.

பக்கத்திலேயே ஒரு பார்க் இருந்தது என் அதிருஷ்டம்.

பிச்சைக்காரன் மாதிரி உள்ளே ஓடி அங்கு தேங்கியிருந்த குட்டைத் தண்ணீரில் உடம்பை

அப்போது, ''என்னங்க...'' என்று அலறியடியே என் திருமதி, கம்பியை நோக்கி ஓடிவந்தாள். ''நீங்க இப்படிப் பண்ணலாமா? போலீஸ்காரங்க சொல்லித்தான் எனக்கு விஷயம் தெரியும். கல்லுக் குண்டாட்டம் நான் இருக்கும் போது... ஐயோ...'' என் பத்தினி படபடவென்று மாரில் அடித்துக் கொண்டு அழுதாள்.

''போலீஸ் ஸ்டேஷன்ல அழாதடி. தப்பா நினைப்பாங்க.''

இனிமேல் 96'ம் நம்பர் வீட்டுப் பக்கம் போகக்கூடாது என்று பலத்த எச்சரிக்கையின் பேரில் விடப்பட்டேன்.

ஆட்டோ பிடித்தேன்.

''எங்கிட்ட இல்லாத எதை அவகிட்டக் கண்டீங்க? புத்தி ஏன் இப்படிப் போவுது?

யும் துணியையும் அலசி... காயப் போட்டேன்.

கடவுளே!

துணி காய சாயந்திரம் ஆகிவிட்டது. எல்லாம் நல்லது தான்.

இருள் நேரத்தில் பதுங் கிப் பதுங்கி அந்தக் கசாப்பு வீட்டை நெருங்கினேன்.

நல்லவேளை, கதவு திறந் திருக்கவில்லை.

தேடினேன்.

வாசல் துப்புரவாயிருந் தது.

தேடினேன். ஓரத்தில் குப்பை குமித்து வைக்கப்பட்டி ருந்ததைக் கண்டேன்.

கலைத்தேன். துழாவி னேன்.

கண்டேன் பிட்நோட் டீசை.

பரவசமாய் அதை எடுத் துப் பார்க்கும்போது குப்பை மேட்டை ஒட்டியிருந்த ஜன்னல் திறக்க, என்னைக் கண்ட அந்த 'ரத்தத்' தங்கச்சி, 'ஆ'லறி னாள்.

அவளின் அண்ணன்கார னும் என்னைப் பார்த்துக் கையில் அரிவாளுடன் விரட்ட,

ஓடினேன். ஓடினேன். வாழ்க்கையின் ஓரத்துக்கே ஓடி னேன்.

சந்து, பொந்து, சந்துக் குள் பொந்து, பொந்துக்குள் சந்து என்று தப்பித்து ஓடி, ஒரு முட்டுச் சந்தில் வழியின்றி நான் நின்றபோது...

அங்கே நின்றிருந்த 2



பேர் என்னைத் தரதரவென ஒரு குடிசைக்குள் இழுத்துப் போனார்கள்.

அய்யய்யோ, யார் இவர் கள்?

ஆசியா கண்டம் விட் டால் ஆப்பிரிக்காவா?

எங்கேயோ அவர்களைப் பார்த்த மாதிரி இருந்தது.

தன் புறங்கையால் என் மூஞ்சியில் அடித்து ''பிச்சைக் கார நாயே,'' என்றான் ஒரு வன்.

''யார்... யாருய்யா நீங்க?''

இன்னொருத்தன் ஒரு கயிறை எடுத்து அங்கிருந்த ஒரு கதவில் என்னைக் கட்டிப் போட் டான்.

அங்கிருந்த தேசலான ரேடியோ ஒன்று, கேட்ட பாடல்



'கல்யாணி' ராகம் என்றது. ஆ!

''யாருய்யா நீங்க?''

''தெரீலயா மச்சான்? காலைல மந்தைவெளி பஸ்ல வந்தியேடா மூதேவி. ஞாபக மில்லை? உங்கிட்ட பிக்பாக் கெட் அடிச்சது நாங்கதான்.''

''திருட்டுப் பசங்களா... ஏன்டா என்னை அடிக்கறீங்க?''

மறுபடியும் உதை. ''அந் தப் பஸ்ல எப்பவும் நல்ல துட்டு கிடைக்கும். உன் பர்ஸ்ல செமை துட்டு இருக்கும்னு நாங்க இறங் கிட்டோம். பார்த்தா ரெண்டு ரூபாயும் கந்த சஷ்டிக் கவசமும். அதுவும் செல்லாத ரெண்டு ரூபா. மாச ஆரம்பத்துல ரெண்டு ரூபா உள்ளவன் ஏன்டா பஸ்ல ஏறறே... மூதேவி... நடந்து போகலாம்ல?''

''கல்யாணி... கல் யாணி...''

''கேவலம் எங்க தொழி லுக்கே கேவலம். நூறு ரூபாய்க் குக் கம்மியா எந்தப் பேமானி பர்ஸ்ல பணம் வச்சிருந்தாலும், கண்டுகிட்டு அடிச்சுப் போடறது எங்க வழக்கம். இனிமே பர்ஸ்ல கம்மியாப் பணம் வைப்பியா?'' தொம்தொம்மென்று, கட்டிப் போட்ட என்னைச் சாத்திவிட்டு அவர்கள் காஜா பீடி பிடிக்க... மயக்கம் வந்தது. எல்லாம் யாரால்? கல்யாணியால் கல் யாணியைத் தேடியதால்...

மறுநாள் காலையில்தான் நான் கண் விழித்தேன். ஏதோ துர்நாற்றம் வீசியது. அது என் உடையிலிருந்துதான் வந்தது. அந்த இருவரையும் காண வில்லை. முதல் பஸ்ஸில் 'கடமை'யாற்றப் போயிருப் பார்கள் என்று தோன்றியது.

''கல்யாணி... கல் யாணி...''

கட்டவிழ்த்து, தெரு வைச் சுற்றிக் கொண்டு 69ம் நம்பர் நாகப்பா ஜவுளிக்காரர் வீட்டுக் கதவைத் தட்டினேன்.

இது சரியான வீடாய் இருக்க வேண்டும் என்று கட வுளைப் பிரார்த்தித்தேன். மறு படியும் ரத்தத்துடன் ஒரு பெண் விழுந்தால் என்ன ஆவது என்ற பயத்தில் நான் இருந்தபோது... அந்த வீட்டுக்குள்ளிருந்து ''கல்யாணியைக் கொன்னாச்சு. பாடியை என்ன பண்ணலாம்?'' என்று ரகசியமாய்க் குரல் கேட் டது. அது எனக்குப் பழக்கப் பட்ட குரலாய் இருந்தது.

அது... அது...

(அடுத்த இதழில் முடியும்)

# நீங்கள் கணவன்-மனைவிதானா?



யானைக்கு போரடிக்குமோ?

'இது காதலர்கள் பூங்கா அல்ல,' 'மறைவிடத்திற்கோ, அடர்ந்த காட்டுப் பகுதிக்கோ செல்ல அனுமதியில்லை. மீறுபவர்கள் தண்டிக்கப்படுவார்கள்,' 'மாலை 6.30 மணிக்குள் வெளியேறிவிட வேண்டும்...'

– இது போன்ற அறிவிப்புப் பலகை எந்தப் பூங்காவின் நுழை வாயிலில் வைக்கப்பட்டுள்ளது?

வண்டலூர் அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா– அதாவது மிருகக் காட்சிசாலை உள்ள பூங்காவில்.

கழுத்தில் தாலியும், கால் விரல்களில் மெட்டியுமாக ஓர் இளந் தம்பதி சென்றால், நுழைவுச் சீட்டுத் தருகிறார்கள்.

இளம்பெண் ஒருத்தியும், வாலிபனும் இணைந்து சென்றால், கவுண்டரில் கேட்கப்படும் கேள்வி: ''கணவன், மனைவியா?'' 'இல்லை' என்ற பதில் தரும் இந்த ஜோடியை உள்ளே செல்ல அனுமதிப்பதில்லை.

இளம் காதலர்களாக வந்தால், ஏமாற்றம்தான்.

இது தவிர, இளம் பெண்கள் தனியாக வந்தாலும் கேள்விதான். கூட அப்பா, அம்மா இப்படி பெரியவர்கள் வந்தால்தான் அனுமதி.

ஏமாற்றம் அடையும் காதல் ஜோடிகள் பூங்காவிற்கு வெளியே கால்கள் உரசிக் கொண்டு நிற்கின்றனர். வழக்கம்போல் கிசுகிசுப்பான பேச்சுகள். போவோர் வருவோர் அந்த ஜோடிகளைப் பார்த்துக் கொண்டு கமெண்டு அடித்துக் கொண்டு செல்கின்றனர்.

அங்கு வேலை செய்யும் காக்கி உடுப்புக்காரர்களையும், துப்

அறிவிப்பு எச்சரிக்கைகள்



புரவு செய்யும் பெண்மணிகளிடமும் பேசியபோது திரட்டியவை:

''மூணு, நாலு மாசத்துக்கு முன்னாடி ஒரு சம்பவம் நடந்து போச்சு. யாரோ நாலு பேர் ஒரு பெண்ணை அழைச்சுட்டு வந்து, உள்ளாற போய் அவளை அசிங்கப் படுத்தி நாசம் பண்ணிட்டாங்க. அந்தப் பெண்ணை அப்படியே வுட்டுட்டுப் போயிட்டானுங்க. அந் தப் பெண் முனகிட்டிருக்கு. யாரோ பார்த்துட்டு தகவல் சொல்ல, ஆஸ்பத்திரிக்குப் போச்சு. போலீ ஸூம் பார்த்துட்டுப் போச்சு. இந் தச் சம்பவத்திற்குப் பிறகு இந்த போர்டு எழுதி வச்சாங்க. கல்யா ணம் ஆகாத ஜோடிகளை உள்ளே அனுப்பக் கூடாதுன்னு. டிக்கெட் டும் தர்றதில்லே. இளவயசுப் பெண் களைப் பாதுகாக்க, நல்லது செய் யத்தான் இப்படிச் செஞ்சிருக் காங்க.''

''அட! பொய்த்தாலி கட் டிட்டு ஏமாத்திட்டுப் போறதில் லையா?''

''உண்டுங்க. உள்ளாற குப் பையை கூட்டறவங்ககூட சொல் வாங்க. நிறைய மஞ்சக் கயிறும், மஞ்சளும் விசிறியடிச்சிருக்காங்க. ஏமாத்தறதுன்னு முடிவாயிருச் சுன்னா, என்ன வேணா செய்ய றாங்க. நாடு கெட்டுப் போயிடுச்சு. யார் நல்லதுக்குச் சொல்றாங்கன்னு புரிஞ்சுக்க மாட்டேங்கிறாங்க.''

இப்போது ஒய்விடங்கள் வெறிச்சென்று இருக்கின்றன. ஒரு வருடம் முன்பு பார்த்தபோது, காத லர்கள் படுத்த நிலையில், ஒருவர் மடியில் ஒருவராய், சீண்டிக் கொண்டு, விஷமம் செய்து கொண்டு, ஹ்ம்...

'கொர்ர்' என்ற ஒலி.

'மூதாதையர் இல்லம்' என்ற பலகையுடன் மனிதக் குரங்கு உறு மிக் கொண்டிருந்தது. கண்களில் ஏதோ சோகம்.

காதலர்களைக் காணவில்லை என்பதனாலா?

— பாமா கோபாலன்
படங்கள்: மேஹர்தாசன்

**ஆறு வித்தியாச விடைகள்:**

1. *வாட்ச்*
2. *ஜாக்கெட் டிஸைன்*
3. *சுவரில் மாட்டிய சட்டை*
4. *கிலுகிலுப்பை கைப்பிடி*
5. *ஆணின் தலைமுடி*
6. *விளக்குச் சுடர்*



மறைவான புதர்கள்... இப்போது அனுமதி இல்லை.



# கல்யாணியைத் தேடி

*தைச் சுருக்கம்.*

*'என்னைக் காப்பாத்து, தற்கொலை செஞ்சுக்கப் போறேன். கல்யாணி,' என்று க்குக் கிடைத்த பிட்நோட்டீஸின் பின்னால் கிறுக்கலாய் எழுதியிருந்தது. ஒரு பெண் லிருக்கிறாள் என்ற உண்மை புரிந்ததால், அந்த நோட்டீஸை அச்சடித்த ஜவுளிக் ாரர் வீட்டுக் கதவைத் தட்டினேன். அப்போது அந்த வீட்டுக்குள்ளிருந்து 'கல்யாணி கொன்னாச்சு. பாடியை என்ன பண்ணலாம்?' என்று குரல் கேட்டது.*

ல்யாணியைக் கொன்னாச்சா? ஹா! இத்தனை பாடுபட்டும் பரேஷன் லாரியில் கசியும் தண் மாதிரி எல்லாம் வீணாகிவிட் .

அந்தக் குரல் எனக்குப் பழக் ட்டதாய் இருக்கிறதே என்று யோசிக்கும்போது கதவு திறந் முப்பது வயது மதிக்கத்தக்க நபர் கடுப்பாய் எட்டிப் பார்த் அவருக்குப் பின்னால் டி.வி. எஸ்.வி. சேகர், 'கல்யாணி யை என்ன பண்ணலாம்?' கையில் ஒரு பிராவைத் க் கொண்டு அசடு வழிந்தார். பொறுப்பாய்க் கதவு திறந்தவன் பொறுப்பில்லாமல் பதில் பகர்ந்தான்.

''டி.வி. கல்யாணியைத் தவிர வேற எவளையும் எனக்குத் தெரி யாது. நோட்டீஸ் எல்லாம் சைடுல மாடிக்கு அடியில இருக்கு. வேணும்னா எடுத்துட்டுப் போ.''

''கல்யாணின்னு...''

''இந்தத் தெருவுலயே யாரும் கிடையாது.'' கதவு டபாரென்று மூடப்பட்டது.

மாடிப்படிக்கடியில் இருந்த நோட்டீஸ் குவியல்களைப் பார்த் தேன். இங்கு வந்து யாராவது எழுதி

ப்ரியா கல்யாணராமன்



யிருப்பார்களா?

ரோட்டோரமாய் மழைத் தண்ணீரில் நோட்டீஸில் கப்பல் செய்து கொண்டிருந்த சிறுவர்களிடம் பேசிப் பார்த்தேன்.

யார்... யார்...

பிரஸ்ஸிலிருந்து நேராய் இங்கு வருகிறது. இங்கிருந்து சர்க்கஸ் ஆள் வந்து எடுத்துப் போகிறான். இடையில் யார்...?

மறுபடியும் அந்தப் பங்களாவின் கதவு திறந்தது. வயதான ஒருவர் எட்டிப் பார்த்தார்.

''நான்தான் இந்த வீட்டுக்கும், ஜவுளிக் கடைக்கும் முதலாளி. என் சொந்த சொத்து. என்னை யாரும் இங்க மதிக்கிறதில்லை. உங்ககிட்ட பேசினது என் பையன் தான். சரியான பொண்டாட்டி தாசன்.''

''கல்யாணி... கல்யாணி...''

ஜவுளிக் கடையில், கேஷியராய் வேலை பார்க்கும் துரைச
என்பவன்தான் பிரிண்ட்டிங் பிரஸ்
லிருந்து, போஸ்டர் கட்டை எடு
வந்திருக்கிறான். வழக்கமாய் மு
நாள் சாயங்காலம் கடை விட
போகும்போது நோட்டீஸ்க
வாங்கி, தன் வீட்டில் வைத்திரு
மறுநாள் காலை இங்கு கொ
போடுவான் என்று தகவல் கி
தது.

துரைசாமியின் முகவரி
யும் கிழவரே சொல்ல, ஆன
கண்ணீருடன் ஓடினேன். பசி
வயிற்றைக் கிள்ளியது. இங்கே
பிரியாணி சாப்பிட்டால் அங்கே
யாணி கறியாகி விடுவாள். தட
வென ஓடினேன்.

துரைசாமி வீட்டைக் க
பிடித்து நெருங்கும்போது, வீட்
குள்ளிருந்து ஒரு நிலவு வந்து
மார்மேல் மோதிற்று.

நான் அப்படியே நொறு
போனேன். இத்தனை அழ
ரோஜாப்பூக்களை ஒன்று சேர்த்
குவித்த மாதிரி நிறமும், மண
சர்க்கஸ் மணத்தால் விண்டி
என் மனசுக்குப் பன்னீர் ஒத்த
கொடுத்த மாதிரி ஒரு சில்லி
என் மேல் மோதிய இடம் அவ
மார்பகமாகவும் இருந்ததால்,
சில்லித்துப் போனேன். சித
டேன்.

''கல்யாணி,'' என்
தெரியாமல்.

''நான்தான்,'' என்
தேவதை.

பிட் நோட்டீஸை நீட்டி
உடனே என் கையைப் பற்றித்
தடவென என்னை மொட்
மாடிக்குக் கிட்டத்தட்ட தள்
கொண்டு போனாள்.

''நீயா கல்யாணி? நீயா எ
னாய்?''

''நாதா, என்னை மன்னி
கள்.''



''மன்னிப்பாவது, என்ன
து உனக்கு?''

''மன்னியுங்கள் ஸ்வாமி.
எனக்கேற்ற மணாளன்.''

''பைத்தியமா நீ. விளை
டுக்கா எழுதின? எத்தனை
ச்சல் தெரியுமா? சாப்பிடல.
பு அறுந்து போச்சு, பர்ஸ்
ாமப் போயிடுச்சு. லீவ்
..''

''ஐ லவ் யு,'' என்றாள்
ணி.

''என்னது? என்னது?''

''ஐ லவ் யு.'' என்று என்
த்தில் பச்சக்கென்று ஒரு
மிட்டாள். ''எனக்குத் தகுந்த
கன் நீங்கள்தான். வீட்டில்
த மாப்பிள்ளை பார்க்கிறார்
னக்குப் பிடித்தவன் கிடைக்கா
ால் தற்கொலை செய்து
ளலாம் என்றிருந்தேன். அத
நான் அப்படி எழுதினேன்.

ஐ லவ் யு. எதையும் அலட்சி
டுத்தாதவன்தான் எனக்குத்
வனாக வேண்டும் என விரும்பி
பிட் நோட்டீஸில் எழுதிய
ட நீங்கள் அலட்சியப்படுத்த
ல.

ஐ லவ் யு. துப்பறியும் மனப்
மையை நான் நேசித்தேன்.
நாளுக்குள் என்னை நீங்கள்
பிடித்து விட்டீர்கள்.

ஐ லவ் யு. சின்ஸியாரிட்டி
வன்தான் எனக்கு வேண்டும்.
ாட்டு, சாப்பிடாமல் செருப்ப
எத்தனை சின்ஸியாரிட்டி
ிடம். ஐ லவ் யு, நம் திரு
தை எப்போது வைத்துக்
ளலாம் டியர்?''

ஐயோ, ஐயோ. சாஷ்டாங்க
கல்யாணிக்குச் சலாமிட்டேன்.
ாம் சரி கல்யாணி. உன்
த்தில் இல்லாத ஒன்று என்னி
ண்டு. நான்... நான்... கல்
மானவன். சாதுவான பெண்
டாட்டி. முரடான ஒரு குழந்தை.
இட்லி, சாம்பார்.''

''ஆ'' என்றாள் அவள்.

''நிஜம் கல்யாணி. அதனால்
என்னை நீ சகோதரனாக...''

''நோ... நோ... நான்
என்ன அழகில்லையா?''

''சேச்சே... கொள்ளை
யழகு...''

''பின்? அழகாயில்லாததால்
தங்கையானாள், பிஸினஸெல்லாம்
வேண்டாம். ஜவுளிக்கடை நோட்
டீஸ்கள் எத்தனை வருஷமாய் இங்கு
வருகிறது. இதோ பாருங்கள்,
கிரிக்கெட் மாட்சுக்கான நோட்டீசு
இன்று தான் வந்தது. எத்தனை
வருஷமாய் நானும் இதுபோல் எழுதி
னேன். ஒருத்தனும் கண்டுபிடிக்க
வில்லை. நீங்கள்தான் கண்டீர்கள்.
கண்டேன் கணவனை.'' மொட்டை
மாடியில் காதலுடன் கல்யாணி
என்னை நெருங்க,

''நான் கல்யாணமானவன்.''

''ஸோ வாட், என்னைச்
சின்ன வீடாக வைத்துக் கொள்ளுங்
கள்.''

''என்னது... என்னது.''

''என்னைச் சின்ன வீடாக.''

''அபச்சாரம், அபச்சாரம்.''

''விபச்சாரம்தான் தப்பு.
சின்ன வீடு வைத்துக் கொள்வது
தவறில்லை என்று சாஸ்திரங்களே
கூறுகிறது.''

''அது காமசாஸ்திரம்.''

''ஐ லவ் யு. நம்ம கல்யாணம் எங்க கோவில்லயா, சர்ச்லயா, மசூதிலயா?''

நான் ஏகபத்தினி விரதன், சுமார் சம்பளக்காரன். வழுக்கை ஆரம்பிக்கும் தலையன் என்றெல்லாம் கல்யாணியைச் சமாதானப் படுத்தி, ''நான் உன் சகோதரன் மாதிரி.'' என்றேன்.

அவள் காதை இறுகப் பொத்திக் கொண்டு கத்தினாள். ''முடியாது. அந்த வார்த்தை மட்டும் வேண்டாம்.''

கிட்டத்தட்ட காலைப் பிடித்துக் கெஞ்சினேன். ''கல்யாணம் ஆகாத இளைஞன் ஒருவன் நிச்சயம் உனக்குக் கிடைப்பான்.''

''உங்களை மாதிரி புத்தி சாலியாக் கிடைக்கமாட்டானே.''

''சத்தியமாக் கிடைப்பான்.''

ஓரளவு சமாதானக் கொடி நீட்டினாள்.

''சரி. உங்களுக்காக. ஒரு மாதம் காத்திருக்கிறேன்.'' கீ குவிந்து கிடந்த நோட்டீஸ் குவி களில் ஒன்றை எடுத்தாள். என எழுதியது போலவே...

என்னைக் காப்பாத்து. ஆ துல இருக்கேன். தற்கொலை செஞ் கப் போறேன்.

—கல்யா

என்று வழக்கம்போல் கோண மாணலாய் எழுதி டி.வி.யில் பரி குரியவர்களைத் தேடும் நடிகை போ மலையான பிட் நோட்டீஸ்கள் அதைக் கலந்தாள்.

''மிஸ்டர், இதோ இந் கட்டு நாளைக்குப் போவுது. க வுள்ட்ட வேண்டிக்கோங்க. இதை பார்த்துட்டு கல்யாணம் ஆகா ஒருத்தன் என்னைத் தேடி வரணு கட்டிக்கணும். இல்லேன்னா நீ தான் என்னோட சின்ன வீடு. ஜாக ரதை,'' என்று மனோகரமா சிரித்தாள்.

(முற்று



# இரண்டாவது மனைவி

## ரஞ்சன்

மங்கையற்கரசியை என் தலையில் கட்டும்போது என் வயது இருபத்தி ஆறு.

என் பெயர் தன்ராஜ். கஷ்டப்பட்டு பி.ஏ. வரை படிச்சிருக்கேன். எனக்குப் படிக்க வேண்டிய எந்தவித அவசியமும் இல்லை. பணக்கார அப்பா. ரொம்ப கண்டிப்பு. என்னை முக்கி முக்கி படிக்க வைச்சுட்டார். எங்க டிரான்ஸ்போர்ட் கம்பெனில பதினைஞ்சு லாரி ஓடுது. இருந்தும் படிப்பு தாண்டா செல்வம் என்பார். பழைய காலத்து ஆசாமி. அடிபட்டு முன்னுக்கு வந்தவர். எண்ணி எண்ணிதான் காசு கொடுப்பார். அதற்கு கணக்குக் கேட்பார். பி.ஏ. பாஸ் பண்ணினதும் பிசினஸ் கற்றுக் கொள் என்று சொல்லி தினமும் லாரி புக்கிங் ஆபீஸுக்குக் கூட்டிட்டுப் போய்விடுவார். அவருடன் உட்கார்ந்து கணக்குகள் பார்க்க வேண்டும். எந்த லாரி எங்கே போயிருந்ததுன்னு டிரிப் ஷீட் எழுதணும்.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். கொட்டிக் கிடக்குது. அதை அனுபவிக்காமல் லாரி ஷெட்டில், டீசல் நாத்தத்தில் காலத்தைக் கழிக்கணும்னா எவ்வளவு கஷ்டம். இருக்கிற சொத்தே இரண்டு தலைமுறைக்கு வரும் என்பது எனக்கு நல்லாத் தெரியும். ஆனால் என்ன செய்வது? எல்லாம் அப்பா சம்பாதித்தது. நான் பிறந்த நாலாவது மாசமே எங்கம்மா செத்துப் போயிட்டாங்க. ஒரே பையன். சொத்து எல்லாம் எனக்குத்தான். ஆனால் அப்பாவுக்குப் பிறகுதான்.

இப்படி இருக்கையில் ஒரு நாள் அப்பாவுக்கு ஆபீஸில் இருக்கும்போது மார் வலிக்க ஆஸ்பிடல் போறதுக்குள்ள அவர் போய்ச் சேர்ந்து விட்டார். அப்பாவின் திடீர் மரணம் அதிர்ச்சியை அளித்தாலும் மனத்தில் ஒரு மூலையில் லேசாய் சந்தோஷம் இருந்ததை நான் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

ஆனால் அப்பா இறப்பதற்கு முன் அவருக்கு மட்டும் சந்தோஷத்தை அளித்த ஒரு காரியத்தைச் செய்திருந்தார். எனக்கும் தூரத்துச் சொந்தக்காரப் பெண் ஒருத்திக்கும் (சொத்து வெளியே போய்விடக் கூடாதாம்) திருமணம் செய்து வைத்திருந்தார்.

பெண்ணின் பெயர் மங்கையர்க்கரசி. முதலில் எனக்கு அந்தப் பெயரைப் பிடிக்கவில்லை. ஒரு வாரம் கழிந்த பிறகு பெண்ணையும் பிடிக்கவில்லை. 'அத்தான், அத்தான்' என்று அடிக்கு ஒரு தடவை கூப்பிடுவது சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. மங்கையர்க்கரசி நல்ல பெண்தான். அல்ல பெண்மணி. குடும்ப ஸ்திரி.

சூரியன் எழு முன்னே எழுந்து, கணவன் கால்களைத் தொட்டு, தாலியைக் கண்களில் ஒற்றி, பின்

**உன்னையே நம்பி வந்தேனே. என்னை மோசம் பண்ணிட்டியே, பாவி. உன்னை... உன்னை...**

மஞ்சள் தேச்சுக் குளிக்கும் ரகம். ஒரு நைட்டி வாங்கி வந்து போட்டுக்கன்னு சொன்னபோது 'போங்க அத்தான், வெக்கமா இருக்கு'ன்னு சொல்லி கடைசி வரை போடாமல் வேலைக்காரக் குட்டிக்குக் கொடுத்து விட்டாள். என் அலைவரிசையே வேறு. அது அவளுக்குப் பிடிபட வில்லை. இவளோடு எப்படி வாழ்க்கை நடத்த முடியும். ஆனால் என்ன செய்வது? 'அப்பா இனிமேல் இதுக்கெல்லாம் விடிவு' என்று அப்பா இறந்தவுடன் எண்ணினேன்.

அப்பாவுக்குத் தெரியாமல் எனக்கு ஒரு நண்பன் இருந்தான். பெயர் பாஷா. சென்னை நகர சொர்க்கங்களை விரல் இடுக்கில் வைத்து, கேட்கும்போது எடுத்துக் கொடுக்கும் திறமை படைத்தவன். அப்பா இறந்த பிறகு அவனுடன் நெருக்கத்தை அதிகப்படுத்திக் கொண்டேன். இவ்வளவு நாள் செய்ய வேண்டும் என்று கணக்குப் போட்டு வைத்திருந்த பாவங்களை யெல்லாம் செய்தோம். ஒரு நாளும் இரவு இரண்டு மணிக்கு முன்பு வீடு திரும்பியதில்லை.



இந்த சூழ்நிலையில்தான் மீராவைச் சந்தித்தேன். குரோம் பேட்டை கிட்ட ஒரு பங்களாவில ஸ்பெஷல் டான்ஸ் இருக்குன்னு பாஷா அழைத்துப் போயிருந்தான். அங்கே இரண்டாவதாக ஆட வந்த நடன மாதுதான் மீரா. கண்டதும் காதல் என்பார்களே அதுதான் அப்போது நடந்தது. கோயில் சிலை போல் இருந்த மீராவின் கண்களில் காந்தம். பார்த்ததும் பச்சக்கென்று ஒட்டிக் கொண்டது.

''பொண்ணு யாரு?'' பாஷா காதைக் கடித்தேன்.

''ஆந்திர இறக்குமதி. சூப்ப ராக்கீதுல!'' என்று சொல்லி கண் ணடித்தான்.

''எனக்கு வேணுமே.''

''முடிச்சறலாம். என்ன ஐந் நூறு, ஆயிரம் இருக்கும்.''

''இல்லை பாஷா. இது வேற,'' என்று நான் சொன்ன தைக் காதில் போட்டுக் கொள்ளா மல் சிக்ஸிடி பைஃவ் பீடாவை கன்னத்தில் இடுக்கிக் கொண்டு ஆட்டத்தில் லயித்தான். அன்று இரவு பாஷாவினால் செய்ய முடி யாதது எதுவுமில்லை என்பது மீண் டும் நிரூபணமானது. அந்த இரவுக் குப்பின் தொடர்ந்து ஒருவாரம் குரோம்பேட்டை சென்றேன். அவ் வளவும் சொர்க்கம்.

தினமும் குரோம்பேட்டை செல்வதற்கு, உனக்கு இருக்கும் வசதிக்கும் அந்தஸ்த்துக்கும் சிட்டி யில் மீராவுடன் குடும்பமே நடத்த லாம் என்று பாஷா கூறிய யோச னையின்படி நானும் மீராவும் கே.கே.நகரில் ஒரு சின்ன பங்களா வில் குடியேறினோம். எவ்வளவு பெரிய மாற்றம் பாருங்கள். இரண்டு மாதம் முன்புவரை அப்பாவுக்கு அடங்கி டீசல் நாத்தத்தில் புழுங் கிக் கொண்டிருந்தவன், இன்று



சின்ன வீடு வைத்திருக்கிறேன். மங்கையர்க்கரசிதான் பாவம். என்ன செய்வது வேறு வழியில்லை. மீரா நைட்டி போடுவாள். மங்கையர்க்கரசி போடுவாளா?

ஒரு நாள் மீரா "எத்தனை நாள்தான் இப்படியே இருப்பேன். எனக்கு ஒரு தாலி கட்டுங்கள்," என்றாள். 'எனக்கு; எந்தவித



க்வாலிடி மாரி
ருசிக்க
காரணம்
வேண்டாம்
காலம்
வேண்டாம்
25
YEARS
Kwality's
KWALITY'S
KWALITY'S
Marie
என்றும். எங்கும். எப்பொழுதும்
ULKA - 40341 R

ட்சேபமும் இருக்கவில்லை. மறு
ளே ஏ.சி. மாருதியில் திருத்தணி
சன்று மாலை மாற்றிக் கொண்
_ாம்.

ரொம்ப நாளாக ஒரு நெக்
ஸ் வேண்டுமென்று மீரா கேட்டி
ந்தாள். அதற்காக தி.நகர் உஸ்
ான் ரோடு போயிருந்தேன். அங்கே
ன் மீரா எவனோ ஒரு தாடிக்கார
டன் ஆட்டோவிலிருந்து இறங்
க் கொண்டிருந்தாள். தாடிக்
ரன் அவள் இடுப்பைப் பிடித்
ருந்தது கண்டிப்பாய் அவள்
ழுந்துவிடாமல் இருப்பதற்காக
ல்ல. மீரா ஹாண்ட் பேக்கி
ருந்து பணத்தை எடுத்துக் கொடுக்
றாள். என் பணம். பாவி. இரு
ரும் கறுப்புக் கண்ணாடி போட்டி
ந்த ஒட்டலுக்குள் நுழைந்தார்
ர். அங்கு நிற்கப் பிடிக்காமல் வீடு
ந்தேன்.

எப்படி ஏமாற்றி விட்டாள்.
வ்வளவு எளிதில் ஏமாந்துவிட்
_ன். எங்கோ இருந்தவளை எவ்
ளவு உயரத்தில் கொண்டு போய்
வத்தேன். எனக்கிருந்த ஆத்திரத்
க்கு அவள் கழுத்தை நெறித்துக்
கான்றுவிடலாம் என்றிருந்தது.
ாத்திருந்தேன். வரட்டும். வந்த
ம் ஒரு வழி பண்ணி விடுகிறேன்.

அவள் கேட்டைத் திறந்து
ள்ளே வந்தபோது நான் வராந்
ாவில் உட்கார்ந்து புகை விட்டுக்
காண்டிருந்தேன். என்னைப்
ார்த்து 'ஹாய்' சொல்லி சிரிப்பை
திர்த்து, படுக்கையறைக்குள்
ழைந்தாள். 'இந்தச் சிரிப்பில்தான்
த்தனை காலம் ஏமாந்திருந்தேன்.
னிமேல் ஏமாறமாட்டேன்.'

மேரியின் ஆட்டுக்குட்டி
பால் அவள் பின்னாலேயே போய்
எங்க போயிட்டு வர்றே?'' என்
ரலில் இருந்த இறுக்கத்தை அவள்
ணர்ந்திருக்க வேண்டும். புடவை




**சினிமாஸ்கோப்:** பருமனான பெண்கள்.

**பருவப்பெண்:** முகத்தில் பரு உள்ளவள்.

**ஸ்கர்ட்:** ஆண்களுக்குப் பிடித்தது, காற்றடிக்கும்போது.

**தியேட்டர் முதலாளி:** படம் ஓடும்போது ஏ.ஸி.ஐ அணைப்பவர்.

**அம்னீஷியா:** கதாநாயகனுக்குப் பாதி படத்தில் ஏற்படுவது.

**தொடாதே அபாயம்:** இளம் பெண்களின் பனியன் வாசகம்.

**அல்லி ராஜ்யம்:** பெண்கள் கல்லூரி.

**கணவன்—மனைவி:** லாட்ஜ் போலீஸ் ரெய்டுகளில் சிக்கிக் கொள்பவர்கள்.

**இன்டர்வ்யூ:** கான்வென்ட்டுகளில் அப்பா அம்மாவுக்கு வைக்கப்படுவது.

மாற்றிக் கொண்டிருந்தவள், என் னருகே வந்து,

''காலைல சொல்லிட்டுத் தானே போனேன். கண்ணாள னுக்கு என்ன கோபம்?'' என்று என் தாடையைத் தடவி, கன்னத்தைக் கிள்ளினாள். சாகசம்.

நான் நேராக விஷயத்துக்கு வந்தேன். ''உன்னை காலைல தி.நகர்ல பார்த்தேன். ஒரு தாடிக் காரனோடு,'' என்று நான் சொன்ன போது அவள் முகத்தில் எந்தவித சலனமும் இல்லை. என்னை ஆழ மாய்ப் பார்த்தவாறே.

''எப்போ இருந்து சி.ஐ.டி. வேலை?'' என்று சொல்லிச் சிரித் தாள். என்ன ஓர் அலட்சியம் பாருங் கள். இந்த நேரத்திலும் சிரிக் கிறாள்.

''உன்னையே நம்பி வந் தேனே. என்னை மோச பண்ணிட்டியே. பாவி. உன்னை... உன்னை...'' என்று கத்தியவாறே அவள் மீது பாய்ந்தேன். ஆத்திர தில் நடுங்கிக் கொண்டிருந்த என் கரங்களை எளிதாக விலக்கினாள் நிதானமாய்க் கட்டிலில் போய் அமர்ந்தாள்.

''என்ன நடந்துடுச்சின்னு இப்படி கூச்சல் போடுறீங்க. ஊர றிஞ்சு தாலி கட்டின பொண்டாட்டி யையே விட்டுட்டு வந்துட்டிங்க என்னை மட்டும் காலம் பூரா வைச்சு காப்பாத்துவிங்களா? உா களை மட்டும் நம்பியிருந்தா பின் னால கஷ்டமாயிரும். உனக்கு என் விசுவாசத்தை கேட்க என்ன உரிமை இருக்கு?'' என்று சொல்லி கட்டிலில் மல்லாந்துப் படுத்தாள்.

அந்த நேரத்தில் எனக்கு மங்கையர்க்கரசியின் முகம் ஞா கத்துக்கு வந்தது.

## அறிவியல்

எவரெஸ்டு சிகரம் உயரமா கிக் கொண்டு வருகிறது. நூறு வரு ஷத்தில் அது ஓர் அடி உயரம் அதிக மாகியிருக்கிறது. இந்த நூற்றாண் டில் இன்னும் வேகமாக வளரும் என்று சொல்கிறார்கள். ஆனால் பூமியின் காந்த சக்தி கரைந்து கொண்டு வருகிறது. கி.பி. 1670'ல் அளந்ததிலிருந்து இப்போது பதி னைந்து சதவிகிதம் குறைந்து விட்டது. இப்படியே போனால் இன்னும் இரண்டாயிரம் வருஷத் தில் நம் காந்த சக்தி பூஜ்யமாகி விடும். விண்ணிலிருந்து வரும் கதிர் வீச்சுக்களைப் பூமியின் காந்த சக்தி யில் திசை திருப்ப முடியாமல் கொஞ்சம் கஷ்டப்படுவார்கள். ஆனால் இரண்டாயிரம் வருஷம் கழித்து மனிதர்கள் அபார முன் னேற்றம் அடைந்து பூமியை விட்டே விலகி வேற்றுக் கிரகத்தில் குடி பெயரலாம். எல்லா வேலைகளை யும் இங்கே ரோபாட்டுக்கள் செய்ய லாம்.

ஒரு நவீன மனிதனுக் உண்டான அன்றாட தேவை களையும் ஆடம்பரங்களையு அளிப்பதற்கு வருஷத்துக்கு குறைந்தபட்சம் இருபது ட கச்சா பொருள் பூமியிலிருந் தோண்டியும் நோண்டியும் எடுக் வேண்டும்.

மனிதன் தன் சுற்றுச் சூ லில் வருஷத்துக்கு நூறுகோடி ட



அசுத்தங்களைக் கலந்து நாசமாக் கிறான். நாசமாக்கி விட்டு கரு தரங்குகளில் இதைப் பற்றி கவலை பட்டுப் பேசுகிறான். அதோடு சர்

– என்

# புத்தகம்



**நீதிமன்றத்தில் சாட்சிகள் விசாரணை ஒரு சாதனை**
*(ஏ. சுப்ரமணியன் –பக்: 200 ரூ. 60 –மணியம் பதிப்பகம், 1, வீரபாண்டியபுரம் நடுத் தெரு, தேவகோட்டை–623 302)*

ஆசிரியர் திரு. ஏ. சுப்ரமணியன் அவர்கள் சிறந்த, மூத்த குற்றவியல் வழக்கறிஞர். அவர் 32 ஆண்டுகளுக்கு மேலாக வழக்கறிஞர் தொழில் செய்து வருவதுடன், இடையில், சில ஆண்டுகள், நீதித்துறையில் நடுவராகப் பணியாற்றிய அனுபவமும் உள்ளவர்.

பல்வேறு அத்தியாயங்களில், ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ள எடுத்துக்காட்டுகள் இளநிலை வழக்கறிஞர்களுக்கு மிகவும் உதவியானது.

நான், ஒரு பெண்ணிற்காக, வாழ்க்கைப் பொருளுதவி வழக்கு (கு.வி.மு.ச. பிரிவு 125) நடத்தினேன். அவருடைய உடல் நிலை மோசம். எலும்புக்கூடு மட்டுமே இருப்பது போலத் தோன்றுமளவிற்கு ஒல்லியாக இருப்பார். கணவனுக்கு, மனைவியைப் பிடிக்கவில்லை போலும். தனக்கு அமர்த்தப் பட்டுள்ள வழக்கறிஞரிடம், அவர் சொல்லியிருக்க வேண்டும். அதையே எதிர்த்தரப்பு வழக்கறிஞர் தன் எதிர் உரையில் எழுதி விட்டார். "The private part of the petitioner, does not admit even the little finger of the respondent."

நான், என் கட்சிக்கார மனுதாரர் மூலம், அவருக்கு ஏற்கெனவே கருச்சிதைவு ஏற்பட்டிருக்கிறது என்றும், (எதிர் மனுதாரர், தன் மனைவியான மனுதாரருக்கு, ஏற்கெனவே அப்படியொரு கடிதம் எழுதியிருந்தார்.) அவர் உடலில் குறைபாடு எதுவும் இல்லை என்றும், மருத்துவச் சோதனைக்கு அவர் தயாராக இருக்கிறார் என்றும் சாட்சியம் (பதில்) வாங்கி விட்டேன். எதிர்மனுதாரர் சொல்கிறபடி குறைபாடு எதுவும் அவருக்கு இல்லை என்றும் மனுதாரர் சாட்சியம் கொடுத்துவிட்டார்.

நான், வேறு யாரையும் மனுதாரரின் சார்பில், சாட்சியமாக விசாரிக்கவில்லை. எதிர் மனுதாரர், மனுதாரரை வெறுக்கிறாரென்பதும், சேர்ந்து வாழ விருப்பமில்லையென்பதும், அவர் மனுதாரரைப் புறக்கணிக்கிறாரென்றும் உறுதியாகிவிட்டது. வாழ்க்கைப் பொருளுதவி சம்பந்தப்பட்ட எந்தப் பிரிவிலும், ஒரு பெண், தன் கணவனுக்கு உடற்சுகம் தராவிட்டால், ஜீவனாம்சம் மறுக்கப்படலாம் என்று சொல்லப்படவில்லை என்று பதிலளித்தேன்.

''எதிர்த்தரப்பு வாதம் மணமுறிவு பெறுவதற்குக் காரணமாக இருக்கலாமே தவிர, ஜீவனாம்சம் தர மறுப்பதற்கு, அது காரணமாக முடியாது,'' என்றேன்.

இம்மாதிரி சுவாரசியமான பல வழக்குகள்.

–புத்தகப் புழு

---

**உங்கள் வீட்டை நீங்களே கட்டலா(மா)மே!**
*(சி.எச். கோபிநாத ராவ் –பக்: 202 –ரூ. 110 –சி.எச். கோபிநாத ராவ், 19, ஆலிவர் ரோடு, சென்னை–600 014)*

கடைக்கால் போடுவதிலிருந்து வீடு கட்டி முடித்து மின்சார இணைப்புத் தரும் வரை செய்ய வேண்டிய பணிகள், செலவுகள் பற்றி விவரமாகக் கொடுக்கப்பட்டுள்ளது – விளக்கப்படங்களுடன்.

நூலாசிரியர் கட்டிடக்கலை வல்லுநருங்க.

---

**நபி மொழிகள்**
*(தொகுப்பு: அல் ஹாஜ் குலாம் ரசூல் –பக்: 338 –ரூ. 45 –காஜியார் புக் டிப்போ, முஸ்லிம் தெரு, எம். சாவடி, தஞ்சாவூர்–613 001)*

தருமம் அல்லாஹ்வின் கோபத்தை அணைத்து விடுகிறது; துர்மரணத்தைத் தடுத்து விடுகிறது – போன்று நபிமொழிக் கிரந்தங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட நபி மொழிகள்.

ஒவ்வொரு பொன்மொழிக்கும் தலைப்பு கொடுத்திருக்கிறது நல்லா இருக்கு.

---

**அன்பே... அருளே...**
*(பரணீதரன் –பக்: 112 –ரூ. 10 –விகடன் வெளியீடு, 757, அண்ணா சாலை, சென்னை–600 002)*

முப்பது ஆண்டுகளுக்கு மேலாக ஸ்ரீகாஞ்சி மகானின் தரிசனங்களால் தனக்குக் கிடைத்த பல்வேறு அனுபவங்களையும், பெரிய வரது அமுதவாக்கில் பெற்ற பேற்றினையும் நூலாசிரியர் பரவசத்துடன் சொல்லியிருக்கிறார்.



ஓவியமெல்லாம் மணியம் செல்வன் போட்டிருக்காரு.

# அழுக்கு

உள்ளூர் கீத்துக் கொட்டகையில் இரண்டாவது ஆட்டம் முடிந்ததும், சின்னான் இருந்த தெரு பரபரப்பு அடைந்தது. அவரவர் கழுதைகளைக் கிளப்பிவிட்டார்கள்.

முத்தன் கழுதைகளை அடுத்து, சின்னான் தன் கழுதைகளை ஓட்டிவிட்டான். கழுதைகள் மீது பொறுக்கப் பொறுக்க, அழுக்குப் பொதிகளைக் கட்டிவிட்டிருந்தான். பின்னால் கடிவாயன், பழநி ஆகியோரின் கழுதைகள் சேர்ந்து கொண்டன. பழநி பெண்டு பிள்ளைகளோடு வெள்ளாவித் துறைக்குக் கிளம்பியிருந்தான்.

''தை... தை... டுர்ர... டுர்ர...'' கூட்டத்தை விட்டு ஒதுங்க முயலும் கழுதைகளை அடித்து விரட்டியபடி சில பெரிசுகள் பக்கவாட்டில் நடந்து வந்தனர்.

கழுதைகள் மூச்சுமுட்ட அந்தச் சரளைக்கல் பாதையில் உந்தி உந்தி உரசலாக நடந்தன.

''வெள்ளி காண்றதுக்குள்ள துறைக்குப் போயி சேந்திடோணும். அல்லாட்டி, தெக்குத்துக்காரனுக நம்ம அடுப்புப் பக்கமே அடுப்புப் போட்டுக்கிட்டு இடஞ்சல் பண்ணுவானுக. சொன்னபேச்சு கேட்கவும் மாட்டானுக. டேய்... வெரசமா நடையை போடுங்க டோய்...''

பாட்டா அதிகாரத்தோடு எச்சரித்தார். ரெண்டு மூணு தலைமுறையைப் பார்த்தவர். அதனால் எல்லாருக்கும் அவர்மேல் மரியாதை.

கூத்துக்கார காமு அவனாக இட்டுக்கட்டி உரக்கப் பாடிக் கொண்டே கழுதையை வெரட்டி விட்டான்.

## இரா. மணிகண்டன்

காமுவின் பாடலைக் கிண்டல டித்து, சில விடலைகள் விசிலடித் தனர். நடுத்தரப் பெண்டுகள் 'கொல்' என்று சிரித்தனர்.

'இந்த ஆட்டத்துக்கெல்லாம் நான் வரல' என்பதுபோல், எதி லும் பிடிப்பு இல்லாமல் சின்னான் வெள்ளாவிக் குச்சியைத் தோள் மேல் கிடத்திக்கொண்டு பின்னால் நடந்து வந்தான். குச்சியின் முனை யில் இருந்த கவட்டையில் ஊர்க் கவுண்டர் பேத்தி, புதிதாக ஆளா கிக் கழட்டிப்போட்ட முட்டுச் சீலை (தீட்டுச் சீலை)யைச் சொருகி இருந்தான்.

பாட்டாவின் யோசனைப் படி லேசாக விடிந்து கொண்டிருக்கும் போதே அந்தக் கூட்டம் கொட்டக் குடி ஆத்துப்பாலத்தைத் தாண்டி, தங்கள் வெள்ளாவித் துறைக்குள் இறங்கிவிட்டது. அவரவர் வெள் ளாவி அடுப்பை ஆக்கிரமிக்கும் பணியில் மும்முரம் காட்டினார் கள். அங்கங்கே சின்னச் சின்ன டேராக்கள் எழுந்தன. பெண்டு பிள்ளைகளோடு வந்தவர்கள் கொஞ்சம் பெரிய டேரா போட்டுக் கொண்டார்கள். சாரலுக்கு அது தான் வசதி.

அந்தக் காலைப் பொழுதி லும் சில பொடிசுகள் சம்சாரி வீடுகளில் வாங்கி வந்திருந்த கூட் டாஞ் சோற்றை அள்ளித் திணித் துக் கொண்டிருந்தனர்.

சின்னான் அழுக்குத் துணி களை உப்பு மண்ணில் ஊரப் போட்டான். அவை உச்சிப் பொழுது வரை ஊறின.

அதை அப்படியே போட்டு விட்டு ஆத்துக்குள் இறங்கினான். கொட்டக்குடி ஆறு பரந்து விரிந்து லேசாக நகர்ந்து கொண்டிருந்தது. பாதத்தை மூடிக்கொண்டு போகும் அளவே தண்ணி.

நடு ஆத்தில் குனிந்து பெரிய பள்ளம் தோண்டினான். அதில் குக்குர உட்கார்ந்துகொண்டு முது குக்குத் தண்ணியை அள்ளி அள்ளி விட்டுக்கொண்டான். காக்கா குளி யல்தான் என்றாலும் மனதுக்கு இதமாக இருந்தது.

கரையில் நாணல் அடர்ந்தி ருந்தது. இடையிடையே தென்னை மரங்கள் தெரிந்தன. நாணல் புதருக்குள் இருந்து ஏதோ பழக் கப்பட்ட குரல் கேட்பது போன்ற உணர்வு. எழுந்து நின்று பார்த் தான்.

அவளேதான். நாணலோடு நாணலாய் நின்று கொண்டு, 'உஸ்... உஸ்...' என்று சின்னா னைப் பார்த்துக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

சின்னான் சடக்கென்று பள் ளத்துக்குள் உட்கார்ந்து கொண் டான். எதையும் கண்டு கொள்ளாத வனைப் போல வேக வேகமாக தண்ணீரை அள்ளி அள்ளி முது குக்கு விட்டான்.

''என்ன, காலம்பரந்தெ வந் தீகளா?''

கேட்டுக் கொண்டே தயக் கம் இல்லாமல் சின்னான் குளிக்கும்




''கடையில அடகு வைக்க முடி யுமா சார்?''

—ப. ராசுக்குட்டி

*தளராத முயற்சி வெற்றிக்குக் கை கொடுக்கும் !*
*தரமான பயிற்சி சாதனைக்கு வழி வகுக்கும் !!*

**3,28,686**★ மாணவ மாண

புரிந்துள்ளது விவேகானந்தா க

அடித்தளமாக அை

●கல்வித்தகுதிக்கேற்ப ப

●ஆசிரியரே நேரில் சொல்

தமிழ் விளக்கங்கள் கொண்

தரும் கேள்வி-பதில் பகு

கணித்து ஆலோசனை வழ

●பயிற்சி பெறுவோ

தொடர்பு வகுப்புகள் (**Conta**

★ *15.7.94 மாலை 5.30 மணிக்கு கல்வி நிலையக் கம்ப்யூட்டரில் பதிவாகியுள்ள மாணவ, மாணவியரின் எண்ணிக்கை*

★★ இம்மாத நேர்முகத் தொடர்பு வகுப்பு (**Contact Class**) கோவையில் நடைபெறுகிறது

மொட்டை




இடத்திற்கே வந்துவிட்டாள்.

''ஆமாம்... ஆமாம்...'' படபடப்போடு பதில் சொன்னான்.

''சின்னு... இதுக்கு முன்னாடி ரெண்டு மூணு தவா வெள்ளாவி வைக்க வந்தும், என்னோட முகம் கொடுத்துப் பேசாம போயிட்டையே, ஏன்?'' நீட்டி முழக்கிக் கொஞ்சியபடிக் கேட்டாள்.

''அது... அது...''

''ஏ... எனக்குக் கல்யாண ஆயிட்டதனாலையா?''

''அப்படி எல்லாம் ஒண்ணும் இல்ல. எங்க ஊர்க்காரங்க பார்த்தா வம்பு. நான் வாரே...''

சின்னான் பிடி கொடுக்கா மல் நழுவிக் கொண்டானே தவிர ஏதோ ஒன்றில் சிக்கிக் கொண்ட உணர்வு. கரையேறிய பின்னரும் அவனது மனசு ஆத்துக்குள்ளேயே இருந்தது.

என்ன செய்கிறோம் என்ற பிரக்ஞையே இல்லாமல் உப்புநீரில் நனைத்துப் பிழிந்து வைத்திருந்த துணிகளை வெள்ளாவிச் சட்டியில் போட்டுக் கொண்டிருந்தான். சாரல் வருவதும் போவதுமாக இருந்தது.

பொழுது சாய்ந்து இருட்டத் தொடங்கிவிட்டது. அங்கங்கே வெள்ளாவி அடுப்பில் தீ மூட்டத் தொடங்கிவிட்டார்கள். சின்னானும் அடுப்பில் சுள்ளிகளைத் திணித்துப் பற்ற வைத்தான்.

தீ மடமடவென்று எரிந்தது. குலதெய்வம் கருப்பனார் அப்பன் சக்திதான் இந்தச் சாரலிலும் அடுப்பு அணையாமல் எரிகிறது போலும். தீ ஜ்வாலைகளை வெறித்துப் பார்த்தபடி, குக்குற உட்கார்ந்து கொண்டான். குளிருக்கு இதமாக இருந்தது. மனசுக்குள் குறுகுறுத்த எண்ணங்களை அசை போட்டான்.

''சின்னு! மூக்கும் முழியுமா

இ.வா.சி.



கும்பலாய் சிரிப்பதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை.

படம்:
கே. லோகநாதன்,
சென்னை.

கருகருன்னு கல்லுக்குண்டாட்டம் இருக்க. வெள்ளாவித் தொறையில அங்ஙன இங்கன மனச அலைய விட்டுடாதப்பா. வெள்ளாவி வெக்கிறவங்க மனசு சுத்தமில்லைன்னா வெள்ளாவித்துணி தீஞ்சுப்போகும். அப்புறம் சம்சாரிகிட்ட மருவாத இருக்காது. கொஞ்ச காலமா தெக்குத்திக்காரிக சொந்த வேலைய விட்டுட்டு, நம்ம தொறைக்கு வெளுக்க வாராளுக. அவளுக அவ்வளவு நல்லவளுக இல்லப்பா. தொறையில என்னென்னமோ அசிங்கமெல்லாம் நடக்குது. நீ கொஞ்சம்



வேக்காணமா நடந்துக்கோப்பா.''

ஒவ்வொரு தடவை வெள்ளாவிக்கு வரும்போதும் மாரிக் கிழவி தனக்குச் சொல்லும் அறிவுரை, இப்போது நினைவுக்கு வந்து வந்து போனது.

சாரல் காலம் என்பதால் இருட்டின் அடர்த்தி அதிகம். பக்கத்து வெள்ளாவியில் ஒரு குழந்தைச் சிணுங்குவதும், அதை யாரோ அரற்றித் தூங்க வைப்பதுமான சத்தம் கேட்டு அடங்கியது.

சிந்தனையில் களைத்துப் போனவன், பெண்ணின் குரல் கேட்டு, அதை எதிர்பார்த்து இருந்தவன்போல் திரும்பிப் பார்த்தான். தெற்கத்திக்காரியேதான். சாரலுக்குச் சாக்குப் பை ஒன்றைக் கொங்காணியாக மடித்துத் தலைக்குப் போட்டிருந்தாள்.

''க்கும்... கொஞ்சம் நெருப்புத் தாரீகளா?''

அடுப்புக்கு நெருப்பு கேட்டு ஏழெட்டு வெள்ளாவியைத் தாண்டி வந்திருக்கிறாள்.

எதற்கோ கட்டுப்பட்டவன் போல், ''ஓ... தாராளமா!'' என்றவன், தொடர்ந்து, ''நெருப்பு வாங்க உம் புருஷன அனுப்பியிருக்கலாம்ல,'' என்று கேட்டு வைத்தான்.

''அவுக ஊருக்குள்ளாற போயிருக்காக. இன்னும் கொஞ்சம் அழுக்கு இருக்கு. எடுத்துட்டு காலம்பறந்தான் வருவாக.''

புருஷன் எங்கே போயிருக்கிறான் என்பது அவளுக்குத் தெரியும். அது சின்னானுக்கும் தெரிந்த விஷயம்தான். பக்கத்தில் பட்டை சாராயம் அடிக்கப் போயிருப்பான். மப்புத் தலைக்கேறி அங்கேயே படுத்துக்கிடந்து விட்டுக் காலையில் எழுந்துதான் வருவான்.

''அதுசரி, எப்படி நெருப்ப எடுத்திட்டுப் போவ?''

''நீங்கதான் கொஞ்சம் ஒத்தாசப் பண்ணோணும்.''

இந்த உத்தரவை எதிர்பார்த்தவன்போல் அடுப்பில் இருந்து எரிந்து கொண்டிருந்த இரண்டு மூன்று சுள்ளிகளை எடுத்துக் கொண்டு காற்றில் அணைந்து போகாமல், அவளது கொங்காணிக்குள் நுழைந்து கொண்டான்.

அவளும் தாராளமாகவே அவனை ஒட்டிக் கொண்டு நடந்தாள். அந்த ஸ்பரிசத்தில் அவனது மனம் கொஞ்சம் திக்கு முக்காடித்தான் போனது.

தெக்கத்திக்காரியின் அடுப்புப் பக்கம் வந்ததும் அவள், அவன் கையை பிடித்து அடுப்புக்குள் சுள்ளியை வைத்தாள். அடுப்புப் பற்றிக் கொண்டது. சின்னான் மனமும் தான். குனிந்து அடுப்பில் சுள்ளியை வைத்தப் பின்னரும், அவனது கையை விட்டு தன் கையை அவள் எடுப்பதாகத் தெரியவில்லை. அவனும் எடுக்கச் சொல்லவில்லை.

அவனைச் சேர்த்து இழுத்து அப்படியே தரையில் உட்கார்த்தினாள். பெண்மையின் மென்மையான இளஞ்சூட்டில் அவன் கரைந்து போனான்.

நீண்ட நேரம் அவள்மேல் கவிழ்ந்து கிடந்தவனுக்கு ஏதோ தீய்ந்து போன வாசம் எட்டியிருக்க வேண்டும். 'துணி ஏதாவது தீய்ந்து போயிருக்குமோ?' பயம் கவ்விக் கொண்டது.

மாரிக்கிழவி வெள்ளாவிக்

## நான் ஆனை

பஸ் ஸ்டாப்பை விட்டு 50 அடி தள்ளி நிறுத்தும் பேருந்து டிரை வரை...



குக் கிளம்புமுன் சொன்னது நினைவுக்கு வந்தது. பதறிப் போனான். இவனைத் தாங்கிக் கொண்டு இன்பச் சிரிப்பில் முனகிக் கொண்டே இறுகத் தழுவி இருந்தவளை உதறிக் கொண்டு ஓடினான்.

'கடவுளே! கருப்பனாரே! தான் பயந்ததுபோல் எதுவும் நடந்துவிடக் கூடாது. பரம்பரைத் தொழில் தர்மத்தை மீறி தவறு செய்துவிட்டேனே!' என்று மனம் அடித்துக் கொண்டது.

தெற்கத்திக்காரியின் வெள்ளாவியிலிருந்து அவன் வெளியேறுவதை இரண்டொருவர் பார்த்திருக்கக் கூடும். எதையும் பொருட்படுத்தாமல் தன் அடுப்புப் பக்கம் போனான். சட்டிக்கருகில் மூக்கை வைத்து உறிஞ்சி உறிஞ்சிப் பார்த்தான்.

அதற்குள் அங்கே மாரிக் கிழவியும் வந்துவிட்டாள். அவள் எப்படி இந்த நேரத்தில் இங்கே வந்தாள்? அவனால் யோசிக்க முடியவில்லை. சின்னானுக்கு உதறல் எடுத்தது. அவனது முகத்தையும் நடுக்கத்தையும் பார்த்து மாரிக்கிழவி சந்தேகப்பட்டிருக்க வேண்டும்.

''என்னடா சின்னு? என்னவோ போல இருக்க. தப்புப் பண்ணுனவனாட்டம் முழிக்கிறே? சட்டிய வேற மோந்து மோந்துப் பாக்குற? என்னாச்சு உனக்கு?''

''அது வந்து... வந்து... ஏதோ தீஞ்சுப் போன வாசனை...''



— எஸ். வரதராஜன், சென்னை.

''என்னடா சொல்ற?'' கிழவி ஒரு மாதிரியாக அவனைப் பார்த்துக் கொண்டே மூக்கை சட்டிப் பக்கம் வைத்து உறிஞ்சிப் பார்த்தாள். என்ன நினைத்தாளோ, அவசரம் அவசரமாக வெள்ளாவிச் சட்டியை இறக்கி வைத்தாள்.

சின்னானுக்கு மனம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. 'எங்கே கருப்பனார்சாமி நம்மைக் காட்டிக் கொடுத்து விடுவாரோ என்ற பயம். அப்படி ஏதாவது ஆகிவிட்டால், கிழவியின் மூஞ்சியில் முழிக்கவே முடியாது. அதைவிட, சம்சாரிகள் முன்னால் மானம் மருவாதியெல்லாம் போயிடும்.' இப்படி அவனது மனம் துடித்துக் கொண்டு இருக்கும்போதே கிழவி சட்டியை இறக்கி, துணிகள் எல்லாத்தையும் எடுத்துப் பார்த்தாள்.

''ஏலாய்... சின்னு! துணி நல்லா வெளுத்திருக்குடோய்... எனக்குத் தெரியும்ப்பா, என் பேரனைப் பத்தி. அப்படியா நான் வளர்த்திருக்கேன்?'' பாட்டிக்குச் சந்தோஷமும் பெருமிதமும் தாங்க முடியவில்லை.

சின்னானுக்குப் போன உயிர் திரும்பி வந்தது.

''அடுத்த வெள்ளாவிக்கு வாரதுக்குள்ள உனக்கு ஒருத்தியக் கெட்டி வச்சு, துணைக்கு அனுப்பினாதாண்டா எனக்கு நிம்மதி. என்னடா, நான் பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறேன், நீ என்னடான்னா எதையோ கண்டு அரண்டவன் மாதிரி நிக்குறையே. போயித் துணியப் பிழிஞ்சு வையேண்டா!''

குனிந்து ஆவியோடு இருந்த துணிகளைப் பிழியத் தொடங்கினான். அவனுக்கு மனசு வலித்துக் கொண்டு வந்தது. மனசுக்குள் இருந்த அழுக்கு உறுத்தியதில், கண்ணிலிருந்து நீர் வழியத் தொடங்கியது.

## இதோ பெண்மை

# தாரக மந்திரம்

நான் செய்த முதல் தப்பு நேற்று அந்தக் கச்சேரிக்குப் போனது. இரண்டாவது தப்பு? இருங்கள். அதையும் சொல்லத் தான் இருக்கிறேன்.

பாண்டியன் ஹோட்டலில் மாசா மாசம் நடக்குமே, அந்த சபா வில் நானும் என் அருமைப் பெண் டாட்டி சுகன்யாவும் மெம்பர்கள். சுகன்யா வாய்ப்பாட்டு கற்றுக் கொண்டவள். அவளுக்காகத்தான் இந்த மெம்பர்ஷிப்!

எனக்கு ஒன்றும் அப்படி கர் நாடக சங்கீதத்தில் நாட்டம் எது வும் கிடையாது. இருந்தும் என் தலையெழுத்து! நேற்று டி.வி.யிலும் ஒன்றுமில்லை என்பதாலும், பிரபல மான பாடகர் சபாவில் பாடுகிறார் என்று தெரிந்ததாலும் – போய் விட்டேன்.

அது முதல் தப்பு.

கச்சேரி ஆரம்பிக்குமுன் பத்மாவைப் பார்த்தேன். அட! பத்து வருடங்களில் அவள் துளியும் மாறவில்லை. மாறாக கலிஃபோர் னியா வாழ்க்கை அவளை இன்னும் அழகாக ஆக்கியிருக்கிறது. என் னைப் பார்த்தவுடனேயே அவளும் என்னைத் தேடி வந்துவிட்டாள்.

'ஹாய் தேர்... வாட் எ சர்ப்ரைஸ்? உன்னை இங்கே பார்ப் பேன்னு எதிர்பார்க்கவேயில்லையே. எப்படி இருக்கே? கல்யாணம் ஆயி டுச்சா? கொழந்தைங்க உண்டா?' அவள் வழக்கம்போல வளவள வென்று பேசினாள். அவள் பக்கத்தில் நின்றுக் கொண்டிருந்த இன்னொரு பெண்ணை, கண் இமைக்காமல் கவ னித்தேன். இவளை எங்கேப் பார்த் திருக்கிறேன்?

என் பார்வையைப் புரிந்து கொண்டவளாய், 'மீட் மை கஸின் மீனா. அவங்க வீட்டிலேதான் நான் இப்போ தங்கியிருக்கேன்.'

பத்மா அவ[...] அறிமுகப் படுத்த ஆரம்பிக்கும்[...]
கும் நினைவுக்கு வந்[...]
ளிக் கூட் நாட்களில்[...]
அடித்த' குமரிப் [...]
இவள்? அப்போது[...]
யாத இந்தப் பெண்[...] ண்ட
தொடர்ந்திருக்கி[...] மயத்தில்



மாகக் காதல் மட
வேறு கொடுத்திரு
கிறேன்.

பத்மா தொடர்ந்
பேசினாள். ''சுந்தரப்
நாளைக்கு நீ உ
பெட்டர் ஹாஃபை
கூட்டிக்கிட்டு வாயேன்
நாம நாலு பேரும் எங்
யாவது டின்னர் சாப
பிடப் போகலாம்
எனக்கும் உன் ஒய்
பைப் பார்க்க ஆசை
யாக இருக்கு. வரியா
மீனாவும் நாளைக்கு
ஃப்ரீதான்,'' என்றாள்

மீனாவும் வருகிறாள்
என்றவுடனே யோசிக்
காமல் ''கட்டாயம் கூட்
டிக்கிட்டு வரேன்,'' என்று
ப்ராமிஸ் பண்ணினேனே
அது...

அது இரண்டாவது
தப்பு.

வீட்டுக்கு வந்தவுடன்
சுகன்யாவிடம் நடந்த
தைச் சொன்னேன். அவள்
கேட்டு விட்டு ''என்னங்க
நீங்க? என்னை ஒரு
வார்த்தை கேட்டிருக்கக்
கூடாதா? நாளைக்கு
சாயந்திரம் எனக்கு நாலு



மணிக்கு ரேடியோ ரெகார்டிங். பசங்களை அம்மாகிட்டே விட்டுட்டுப் போகணும்.''

அத்தோடு விட்டிருக்கக் கூடாதா? ''நான் வராட்டா என்ன? நீங்க போய்ட்டு வாங்களேன்,'' என்றாள்.

''இல்லே சுகு, உன்னைப் பார்க்கணும்னுதான் ஆசைப்படறாங்க. வேண்டாம். நான் கான்சல் பண்ணிடறேன்.''

''சே சே வேணாம். நீங்க போயிட்டு வாங்க,'' என்று மறுத்துத் தேனொழுகப் பேசினாள் என் தர்மபத்தினி.

மறுநாள் சாயந்திரம் நான் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த போது வீடு அமைதியாக இருந்தது. மேசை மேல் ஒரு வெள்ளைக் காகிதம் மட்டும் படபடத்தது.

'சாயந்திரம் நான் வீடு திரும்ப நேரம் ஆகும். அதனால் எட்டு மணி சுமாருக்கு குழந்தைகளை அம்மா வீட்டிலிருந்து அழைத்து வந்துவிடுங்கள்,' என்று சுகன்யா தான் எழுதியிருந்தாள்.

விஸிலடித்தபடியே குளித்தேன். ஆஃப்டர் ஷேவ் லோஷனைத் தெளித்துக் கொண்டேன். ஜீன்ஸ் பேண்ட், சில்க் ஜிப்பாவோடு கிளம்பிப் போய்விட்டேன்.

ராத்திரி திரும்பி வர பத்து மணி ஆகிவிட்டது. இதற்குள் குழந்தைகளை சுகன்யாவே அழைத்து வந்திருப்பாள். அதனால் என்ன? என் சுகுதான் 'அண்டர்ஸ்டான்டிங் ஒய்ஃப்' ஆயிற்றே. அவளைப் பார்க்கவென்றே மீனாவும், பத்மாவும்கூட வந்திருந்தார்கள். நான் நினைத்தபடியே வீட்டு வாசலில் விளக்கு எரிந்து கொண்டிருக்க, கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தோம்.

சாதாரணமாக எனக்காகக் காத்திருக்கும் சுகன்யா இப்போது கண்ணில் படவில்லை. அதனால் அவர்கள் இருவரையும் வரவேற்பறை சோபாவில் உட்கார வைத்துவிட்டு நான் மட்டும் மாடிக்குப் போனேன்.

படுக்கை அறை கதவைத் திறந்த போது சுகு மும்முரமாக வாரப் பத்திரிகை எதையோ படித்துக் கொண்டிருந்தாள்.

நான் மெதுவாக அவள் தோளைத் தொட்டேன். ''சுகு கண்ணா...'' என்றேன். அவள் படாரென்று என் கையைத் தட்டிவிட்டாள்.

''ஸாரிடா... வர லேட்டாயிடுச்சு,'' என்றேன்.

அவள் பதில் பேசவில்லை. ''நான் சீக்கிரமாத்தான் கிளம்பணும்னு பார்த்தேன். முடியலை. நாங்க எங்கே போனோம்னு நீ கேட்கலையே?''

முதல் முறையாக தர்மபத்தினி திருவாய் மலர்ந்தாள். ''உங்ககிட்டே சிகரெட் நாத்தம் வருது...''

''ஓ... அதுவா? சும்மா பேருக்குத்தான் பத்த வச்சேன். அது இருக்கட்டும், கீழே வா சுகு. உன்னைப் பார்க்கிறதுக்காக அவங்க ரெண்டு பேரும் ஆசையா காத்துக்கிட்டிருக்காங்க.'

அவள் என்னைக் கோபமாகப் பார்த்தாள். ''என்னை விட்டுட்டு நீங்க மட்டும் டின்னர் சாப்பிடப் போவீங்க. ரெண்டு பேரையும் பார்த்ததிலே உங்களுக்குத் தலைகால் புரியலை. எட்டு மணிக்கு அம்மா வீட்டிலிருந்து பசங்களை அழைச்சிக்கிட்டு வரணும்னு சொல்லியிருந்தேன். அது உங்களுக்கு ஞாபகம் இல்லை. இப்ப நான் கீழே வரணுமாக்கும். என்னாலே முடியாது. ஊஹூம். நான் மாட்டேன்...''

என் அனுபவத்தில் கண்டறிந்த உண்மை, இந்த சமயத்தில்

வாயை இறுக்க மூடிக்கொண்டு வெளியே போய்விடுவதுதான்.

படுக்கை அறைக் கதவைச் சாத்தி விட்டு கீழே இறங்கி வந்தேன்.

''ஸாரி... என் மிஸஸ் படுக்கப் போய்ட்டாங்க. பாவம் தூங்கட்டும்னு வந்துட்டேன். அடுத்த முறை பார்க்கலாம்...'' நான் சொன்ன அதே நிமிஷம், சுகன்யா பழைய கவர்ச்சி சிரிப்போடு கீழே இறங்கி வந்தாள்.

அவர்களுக்கு குங்குமப்பூ போட்டுக் காய்ச்சிய பாலையும் கொடுத்து வாசல் வரை வந்து வழி அனுப்பினாள். எனக்கு அவளைப் பார்க்கப் பெருமையாக இருந்தது. மொபெட்டில் அவர்கள் இருவரும் கிளம்பிப் போன பிறகு கதவைத் தாழிட்டுவிட்டு உள்ளே வந்தேன்.

ஒரே தாவலாக மாடிப்படிகளைக் கடந்து பெட்ரூமுக்குப் போனால் கதவு சாத்தப்பட்டிருந்தது. தள்ளிப் பார்த்தேன். தட்டிப் பார்த்தேன். ம்ஹூம்... உள்பக்கம் பூட்டியிருக்கிறது. அது மட்டுமா? கதவுக்கு அருகிலேயே ஒரு ஜமக்காளம். ஒரு தலைகாணி.

கதவை இன்னும் பலமாகத் தட்டி கை வலிதான் மிச்சம். கடனே என்று படுக்கையைக் கீழே எடுத்து வந்தேன். அன்று மட்டுமல்ல. அதற்கப்புறமும் இரண்டு நாட்கள் சுகுவின் பாராமுகம்தான்.

மூன்றாம் நாள். அலுவலகம் முடிந்த பிறகு நேரே என் வீட்டுக்குப் போகாமல் சுகுவின் அப்பாவைப் பார்த்துப் பேசலாம் என்று தோன்றியது. அவர் எனக்கு மாமனார் மட்டுமில்லை. சொந்த மாமா வேறே. சின்ன வயசிலிருந்தே என்னோடு நன்றாகப் பேசுவார். சுகுவை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று அவரைக் கேட்டுப் பார்க்கலாம்.

அவர் வராந்தாவில் ஈஸி சேரில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு க்ராஸ்வேர்ட் போட்டுக் கொண்டிருக்க, மாமி என்னைப் பார்த்ததும் வழக்கம்போல் புடவையை இழுத்துவிட்டுக் கொண்டு, காப்பியையும் கொடுத்துவிட்டு உள்ளே போனவுடன் மாமா நேரிடையாகவே கேட்டார். ''என்ன சுந்தரம்... அன்னிக்கு ஒண்ணு இல்லே, ரெண்டு குட்டிகளோட வெளியே போய்ட்டியாமே. உன் பொண்டாட்டி புலம்பித் தள்ளிட்டாளே,'' என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என்ன மாமா நீங்க? புரியாம பேசறீங்க. நடந்தது என்னன்னு சொன்னா நீங்க என் பக்கம் தான் நியாயம் இருக்குன்னு சொல்வீங்க...''

''நீ சொல்ல வேண்டாம். நானே சொல்றேன். உன் பொண்டாட்டிகிட்டே நீ டின்னருக்கு ஃப்ரண்ட்ஸோட போறதா சொல்லியிருப்பே. அவளையும் பல தடவை வான்னு கூப்பிட்டிருப்பே. அவ வராம நீயும் போகலைன்னு சொல்லியிருப்பே. ஆனா அவ ரொம்ப வற்புறுத்தி போய்ட்டுத்தான் வரணும்னு சொல்லியிருப்பா. நீயும் ஸ்கூட்டர்லே கிளம்பி போயிருப்பே. ராத்திரி திரும்பி வந்தா எதிர்பார்க்காத மண்டகப்படி. அவ்வளவுதானே...'' ஏதோ கூடவே இருந்து பார்த்தவர் மாதிரி விளக்கிச் சொல்ல நான் ஆச்சரியப்பட்டேன்.

''அதேதான் மாமா.''

''கல்யாணம் ஆகி எவ்வளவு வருஷம் ஆறது உனக்கு? இன்னும் பொம்பளை மனசு தெரியலை... ''என்னோட பல வருஷ அனுபவத்

---

*''ஆத்திரத்தில மனைவியை பொம்பளையா நீன்னு கேட்டுட்டேன்.''*
*– எஸ். சீனிவாசப்ரியன்*

---

லாம்.

ஆறு வித்தியாசங்கள்
1. சிறுமியின் முடி
2. ஜன்னல் கம்பி
3. நாய் தாடை
4. புடவை டிசைன்
5. டெலிபோன் ஸ்டாண்ட்
6. சுவரிலுள்ள ஸ்விட்ச்

திலே சொல்றேன். நீ தப்பு பண்ணினா மனைவிகிட்டே மன்னிபபு கேளு. அவ தப்பு பண்ணினா...''

அவர் சின்ன இடைவெளி கொடுக்க, ''அவ மன்னிப்பு கேட்கணும்,'' என்றேன்.

''அதுதான் இல்லை. அப்பவும் நீதான் கேட்கணும்,'' என்றார் அருமை மாமனார்.

''ரொம்ப யோசிக்காதே. நான் சொன்னதைச் செய். சரண்டர். அதுதான் நமக்கெல்லாம் தாரக மந்திரம். காலாகாலத்திலே வீட்டுக்குப் போய் சேர்,'' என்றார்.

நான் வெளியே வந்து கொஞ்ச தூரம் நடந்தபோதுதான் மாமியாரிடம் சொல்லிக் கொள்ளவில்லை என்று உறைத்தது. திரும்பி வாசற்படி ஏறும்போது உள்ளேயிருந்து பேச்சுக்குரல் கேட்க சட்டென்று நின்று விட்டேன்.

''உன் பொண்ணும் ஒன்னை மாதிரியேத்தாண்டி சீதா. இருபது வருஷம் முன்னாடி உன் உறவுக்கார பொண்ணு ஜானகி நம்ம வீட்டுக்கு வந்து ரெண்டு நாள் தங்கிட்டுப் போன பிறகு நீயும்தான் முகம் கொடுத்துப் பேசாம ஸ்ட்ரைக் பண்ணினியே ஞாபகம் இருக்கா?'' மாமனாரின் குரல்.

''ஆமாம். கல்யாணம் ஆன நாளா நீங்க என்னை எதுக்கும் கோபிச்சதில்லை. நான் தப்பு பண்ணாகூட கூசாமே நீங்களே மன்னிப்புக் கேட்டுடுவீங்க. உங்க மாப்பிள்ளையும் உங்களை மாதிரியேதான். அதனாலேதான் என் பொண்ணு என்னை மாதிரி!''



''அப்படின்னா?'' எனக்கு அட்வைஸ் பண்ணின மாமனார் இப்போது கேள்வி கேட்டார்.

''தம்பதிகள் சண்டையே போடாம இருந்தா அப்புறம் வாழ்க்கையிலே என்ன சுவாரசியம் இருக்கு?''

நான் அதற்கு மேல் அங்கே ஏன் நிற்கிறேன்? முனைக்கடையில் கொஞ்சம் அல்வாவும், பூக்காரியிடம் ஆயிரம் மல்லிப்பூவும் வாங்கிக் கொண்டு வீடு நோக்கி வேகமாக நடந்தேன். என்ன ஆச்சரியம்! சுகன்யா வாசலிலேயே நின்றிருந்தாள். எனக்கு மிகவும் பிடித்த ஊதா நிற ஜார்ஜெட் சேலை.

அவள் கையில் மல்லிப்பூவையும் அல்வாவையும் கொடுத்தேன்.

''சாரி சுகு... அன்னிக்கு உன்னை விட்டுட்டு...'' நான் பேச ஆரம்பித்தபோது அவள் என் உதடுகளில் தன் பட்டு விரலை வைத்து என்னைத் தடுத்தாள்.

''ஷ்... ஒண்ணும் பேச வேண்டாம். கொழந்தைங்களைப் பக்கத்துத் தெருவுக்கு விளையாட அனுப்பிச்சிருக்கேன்...'' என்றவள் மல்லிப்பூவைத் தலையில் வைத்துக் கொண்டே, என்னை மிகவும் காதலுடன் பார்த்துக் கொண்டே, மாடியை நோக்கி நடக்க, நான் அவளை ஆட்டுக்குட்டி மாதிரி தொடர்ந்தேன்.

என் மாமியார் சொன்னது ரொம்பச் சரி!



ஷயா கல்யாணராமன்

கடற்கரையோரம் அந்தச் சிறுவனின் உடல் கிடத்தப்பட்டிருந்தது. வயது 12 இருக்கலாம். விரிந்திருந்த கண்கள் வெளியில் தெரியாதபடி அவன் கைகளே மறைத்திருந்தன. பச்சை கலரில் காட்டன் பேண்ட். பொருத்தமில்லாத காவிக் கலர் சட்டை. பட்டன் கூடப் பிரிபடாமல் நாசூக்காய்க் காணப்பட்டது. வாசனை கண்ட ஈக்கள் அவனுடைய பாதத்தில் அமர்ந்தன. கடல் நீர், காலை நனைத்ததும் சிதறி ஓடின.

சிறுவனின் உடலினருகில் காவலர்கள் இருவர் கவலையுடன் காத்திருக்க, தொலைவில் சுண்டல் வியாபாரம் ஜரூராய் நடந்து கொண்டிருந்தது. வரிசையாய்ச் சுண்டல், மிளகாய் பஜ்ஜி, வறுத்த மீன் கடைகள்.

நான் வந்தது மீன் பஜ்ஜி சாப்பிட. முழுசாய் வறுத்த மீன், கடற்கரை தவிர வேறெங்கும் கிடைப்பதாய் எனக்குத் தெரியவில்லை. தோல் சீவி, எலும்பு நீக்கி ஓட்டல்களில் தரப்படும் மீன் எனக்கு உடன்பாடில்லை. அது ஏதோ சைவப் பதார்த்தம் போல் அரூபை தரும். மீனென்றால் எலும்பு தட்டுப்பட வேண்டும். இது வால், இது கண் என்று மீன்தான் என்று நிச்சயமாய்த் தெரியவேண்டும். கண்ணையும், வாலையும் ஒடித்துப் போட்டு, இரண்டாய்ப் பிளந்து எலும்பு நீக்கி, கறுப்பாய்க் கரைந்து போயிருக்கும் கழிவை நீக்கிக் கடித்துத் தின்பதுதான் மீன் சாப்பிடுவதின் தாத்பர்யம் என்று எனக்குள் ஒரு விதியே உண்டு. அதுவும் ஆடம்பரமின்றி கடற்கரை மணலை மலையாய்க் குவித்து உப்புத் தண்ணீரால் அதனை நனைத்து அதன் மேல் ஸ்டவ்

வைத்து மீன் பஜ்ஜி விற்கும் கிழவியின் ரெகுலர் கஸ்
மர் நான்.

மூன்றே ரூபாய்க்கு முழு மீனையும் தந்
நிறைய பேசிக் கொண்டிருப்பாள் கிழவி. மற்
கடைக்காரர்கள் போல் வருவர் போவர்களை
சின்னதாய் சாத உருண்டையை வைத்துவிட்
ஊரிலுள்ள காக்கை எல்லாவற்றையும் கூ
பிடல் போல, கைப்பிடித்து அழைக்க மாட்
டாள். தலைகுனிந்திருப்பாள். தன்னை
தேடி வருபவர்களிடம் மட்டும் அன்
கலந்து மீன் தருவாள். 'நல்லா இருக்க
ராசா' என்பாள். பதில் சொன்ன
லும், இல்லாவிடினும் ஏதாவது பேசி
கொண்டிருப்பாள். பிச்சைக் கார
கிளை ஒழிக்க வேண்டும் என்பாள்
மனிதர்களுக்கு மானம் வேண்டு
என்பாள். ஔவைப் பாட்
யுடன் மீன் சாப்பிடுவ
போலிருக்கும்.



அந்தச் சிறுவனைப் பார்த்ததும் கூட்டத்தைக் கண்டு அருகில் சென்றேன். என் நெஞ்சுக்குள் ஆதர்ச அலை ஒன்று எழும்பிற்று. சிறுவனையே பார்த்துக் கொண்டிருந்தேன். எங்கோ இவனைப் பார்த்த மாதிரி ஒரு நெருடல். இன்னும் சற்றுத் தள்ளி ஒரு மஞ்சள் பையில் சில மீன்களிலிருந்தன. மீன் பிடிக்க வந்தவன் பிழைக்கவில்லை.

காவலர்கள் லேசாய் முணுமுணுத்தனர். வேன் வர வேண்டும். ஒருவர் மட்டும் விலகி வந்து கிழவியிடம் சென்று மீன் பஜ்ஜி வாங்கினார். சங்கடமாய் ஒரு முறை டெட்பாடியைப் பார்த்துவிட்டு, திரும்பி நின்று மீன் முள்ளை நசுக்க ஆரம்பித்தார்.

இந்தச் சிறுவனும் பெரிய சைஸ் மீன் போல் எனக்குத் தோன்றினான். ஜீவகாருண்யமும், வள்ளலாரும் மனசுக்குள் எட்டிப் பார்த்தார்கள்.

இறந்தவன் முகத்தைப் பார்த்துவிட வேண்டும் என்ற அவா எழும்பிற்று. எங்கே பார்த்திருக்கிறோம் இவனை?

என் இனிய மாலைப் பொழுது வீணாயிற்று. பாரம் அகற்றி, காற்றாட சந்தோஷ மனிதர்களைப் பார்த்தபடி பஜ்ஜி சாப்பிடலாம் என்றால் இப்படி சுமை ஏறிவிட்டது. மனிதர்களைப் பிடிக்காமல் போய்விட்டது.

கடவுளே... இவனை எங்கே பார்த்திருக்கிறேன்?

ஓரமாய் மணலில் உட்கார்ந்தேன். மண் மட்டுமே ஈரம் என்று புரிந்தது. மனசு என்றும் மனிதர்கள் என்றும் தன்மானம் எனவும் நித்தம் முணுமுணுக்கும் கிழவி கூடக் கொஞ்சமும் கவலையின்றி மீன் வியாபாரம் செய்து கொண்டிருந்தது எனக்கு நாற்றமெடுத்தது.

எல்லோரும் ஏன் இப்படி மாறிவிட்டார்கள். அல்லது நான் மட்டும் மாறவில்லையா? காலடி பட்டுபட்டு மணல் எத்தனை மென்மையாயிருக்கிறது. காலடி பிறந்தவர் போல் மனங்கள் மென்மையுறாதா? மென்மை பெறாதா?

தவிப்போடு மணல் உதறி எழுந்தேன்.

கிழவி அருகில் சென்றேன்.

''வா தம்பி,'' என்றபடி புரசை இலையில் பஜ்ஜியை வைத்தாள் கிழவி.

''வேண்டாம்,'' என்று விலகி நின்றேன்.

லேசாய் நிமிர்ந்து என் முகம் பார்த்து, அடுத்த கஸ்டமரைக்



''என் பேர்ல ஒரு எஸ்டேட் வாங்கறதா சொன்னீங்களே? எப்போ வாங்கப் போறீங்க?''
— 'பட்டுக்கோட்டை பெரியப்பா' படத்தில் 'விசு, மோகினி.

கவனித்தாள்.

தள்ளி நின்றபடியே கவனித்தேன். எத்தனை குழந்தை பெற்றிருப்பாள். எத்தனை மனிதர்களைக் கண்டிருப்பாள். ம்கூம். ச்சே.

வழக்கம் போல் கிழவி முணுமுணுக்காமல் மௌனம் காத்தது கொஞ்சம் இதமாய் இருந்தது. இவளும் பாதிக்கப்பட்டிருக்கிறாள் என்பது புரிந்தது.

கிழவியின் மணல் மேடையில் ஏழெட்டு மீன்களே மிச்சமிருந்தன.

கிழவியைப் பற்றி நன்றாக எனக்குத் தெரியும். தினம் 50 பஜ்ஜி தான் போடுவாள். கூட்டம் நிறைய இருந்தாலும் பேராசைப் பட மாட்டாள். 'எண்ணெய், மாவு எல்லாம் போகத் தினம் 30 ரூபாய் நிக்குது. எனக்கும், என் பேரனுக்கும் பத்தாதா?' என்பாள்.

சடக்கென தலை நிமிர்ந்து ''ஒரு பஜ்ஜியாவது வாங்கிக்க தம்பி'' என்றாள் யாரையோ பார்த்து.

என்ன அவசரமோ என்று நினைத்துக் கொண்டேன். வருந்திக் கேட்பது வியப்பு தர, பஜ்ஜி சாப்பிடும் எண்ணம் ஒரு துளியுமின்றி கிழவிக்கு வியாபாரம் ஆகுமே என்பதால் வாங்கிக் கொண்டேன்.

சுற்றிச் சுற்றி வந்து என்னால் தினமும் அலட்சியப்படுத்தப் படும் நாய்க்கு மீன் பஜ்ஜியை விண்டு போட்டேன். நன்றியுடன் வாலாட்டித் தின்னும் இந்தக் கடற்கரை நாயும் ஒரு நாள் செத்துப் போகும்.

நாய்கள் பாய்ந்து பாய்ந்து முகம் நீட்டிச் சுவாரஸ்யமாய்த் தின்ன, எனக்கு அந்தச் சிறுவனின் முகம் ஓரளவு புலப்படலாயிற்று.

அவன்... அவன்...

மறுபடியும் கிழவியைப் பார்த்தேன். வழக்கமான உற்சாகமும் இதமான பேச்சும் பொக்கை வாய் ப்புன்சிரிப்பும் அவளிடம் இல்லையே ஏன்? தினமும் மீன் பிடித்துக் கொடுத்து ஓரமாய் உட்கார்ந்து கிழவிக்கு உதவி செய்யும் அவளது பேரனைக் காணவில்லையே, எங்கே என்று யோசித்தேன்.

மனத்துக்குள் பொறி தட்டிற்று.

ஒருவேளை கடலோரத்தில் இறந்து கிடந்த சிறுவனும், மஞ்சள் பையில் புது மீன்களும்..?

அப்படியானால்... அப்படியானால்... ஐயோ, கடவுளே.

---

## சின்னச் சின்னக் கவிதைகள்



அடையாளம் தெரியாமல்
ஆற்றுமணலில்
ஆயிரம் பாதங்கள்

* * *

குனிந்து நடக்கும் தாத்தா
தொலைத்த வயதைப்
பூமியில் தேடுவார்.

* * *

கடைசி வரிசையில்
சோகத்தோடு
சர்க்கஸ் கோமாளியின் மனைவி.

* * *

தவம் செய்கின்ற ரிஷி
சலங்கை ஒலிக்காகக்
காத்திருக்கிறார்.

* * *

விருந்தாளி பையில் திராட்சை
நீண்ட பேச்சு –
உறங்கிப் போன குழந்தை

– நா. விச்வநாதன்

இருட்டாக இருந்தது. ஸோடியம் வேப்பர் விளக்குகள் முடிந்தவரை வெளிச்சத்தை விசிறி படித்துக் கொண்டிருந்தன. மர நிழல்களில் பதுங்குகிற மாதிரி நடந்து வந்து கொண்டிருந்தான் அவன். நடையில் லேசான தள்ளாட்டம் தெரிந்தது. உடல் இனம் புரியாத அவஸ்தையில் சிக்கித் தவித்தது.

இன்று குடித்திருக்கவே வேண்டாம். காலையில் ஆபீசுக்குக் கிளம்பின போதே இன்று குடிக்கக் கூடாது என்று நினைத்துக்கொண்டு தான் வந்திருந்தான். ஆனால் ரமேஷ் வற்புறுத்தி இழுத்துக்



இந்துமதி



# அது புதிது



கொண்டு போய்விட்டான். அவன் மூன்றாவது ரவுண்டோடு நிறுத்திக் கொள்ள, இவன்தான் இப்படிக் குடித்திருக்கிறான். ஆரம்பித்த பிறகு எதையும் நிறுத்த முடிவதில்லை. நிறுத்துகிற எண்ணத்தைக்கூட யாராவது கலைத்து விடுகிறார்கள்.

'பெரிய புத்தன் இவன்.... வாடா....'

ரமேஷ் இல்லாவிட்டால் சுரேஷ், ஏதோ பெயரில் ஏதேதோ மனிதர்கள், ஏதேதோ காரணங்கள், வாரத்தில் மூன்று நாட்கள் தவறுவதில்லை.

சிகரெட் புகையை நெஞ்சு முழுதும் நிரப்பிக் கொண்டபோது உடம்பு ஏன் இப்படிப் படுத்துகிறது என்று யோசித்துப் பார்த்தான். புரியவந்தது. அந்தச் சுகத்திற்காக அல்லாடுகிறது. அந்த உணர்ச்சியைச் சுவைக்காமல் இருந்திருந்தால் கூடப் பரவாயில்லை. இரண்டு முறை அனுபவித்தாகிவிட்டது. ஜாக்பாட் விழுந்த மாதிரி யதேச்சையாகக் கிடைத்தது.

ஆபீஸில் எல்லோரும் போன பின் இவனும் அருணாவும் மட்டும் தனியாக இருந்தார்கள். அருணாதான் அருகில் வந்து தூண்டிவிட்டாள்.

''பாலா... இதைக் கொஞ்சம் பாரேன். நான் டைப் அடித்தது சரிதானே...?'' முகத்தருகில் வந்து முந்தானை விலகவிட்டாள். அவனது சுவாசம் கனமாயிற்று. புஸ் புஸ்ஸென்று மூச்சு வாங்கிற்று. இருபத்து மூன்று வயதிலும் அனுபவமற்ற பயம். அதற்காக ஏங்குகிற ஏக்கம். பார்வையில் புரிந்து கொண்டாள் அருணா. அவன் கையையெடுத்து மார்பில் வைத்துக் கொண்டாள். முதல் வினாடி தடுமாறிப் பின் சமாளித்துக் கொண்டான் அவன்.

அடுத்த முறையும் அதே மாதிரித்தான் நடந்தது. அருணாவிற்குப் பதில் புவனா. ஆனால் அந்த முறை அவன் தடுமாறவில்லை. மூச்சிறைக்கவில்லை. பழக்கப்பட்டவனைப் போல் நடந்து கொண்டான். மிக நல்ல அனுபவம்.

அந்த அனுபவத்தை எதிர்பார்த்துத்தான் இப்போது உடம்பு தவிக்கிறது என நினைத்துக் கொண்டான். நடுத்தெருவில் நின்று கொண்டு அந்த அனுபவம் வேண்டுமென்றால் எங்கிருந்து கிடைக்கும்....?

விளக்குக் கம்பத்தின் அடியில் நின்று மணி பார்த்தான். 10.30 ஆகியிருந்தது. 10.50க்கு ஒரு ரயில் இருக்கிறது. அதை விட்டால் 11.55க்கு மற்றொரு ரயில், அதையும் விட்டால் 1.30க்குக் கடைசி ரயில் உண்டு. பீச் ஸ்டேஷனிலிருந்து போய்க் கொள்ளலாம். மனமிருந்தால் வழி இல்லாமலா போய் விடும்...




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம் ...

ரயில் நிலையத்தின் காம்பவுண்டை நெருங்கினான். ஸ்டேஷனில் இன்னும் ஜனநடமாட்டம் குறையவில்லை. இவ்வளவு சீக்கிரம் வீட்டிற்குப் போய் என்ன செய்வதென்று தெரியாமல் நடந்து கொண்டிருந்தவனின் பக்கத்தில் ஒரு ரிக்ஷா வந்தது.

''சவாரி வேணுமா சார்...?''

இவன் வேண்டாமெனத் தலையாட்டினான். கால் வினாடி யோசித்த ரிக்ஷாக்காரன் குரல் தழைத்து மெதுவாகக் கேட்டான். ''வேற ஏதாச்சும்,வேணுமா சார்...?

'ஏதாச்சும்னா...?' சட்டென்று புரிந்து கொண்டான் இவன்.

''இங்கதான் சார், பக்கத்து வூடு. நானே கூட்டிக்கிட்டுப் போய்த் திரும்பி இட்டாந்து உட்டுடறேன்...'' இவன் மௌனமாக இருந்தான்.

''பதினெட்டு வயசு சார். காலேஜ் பொண்ணு. ரொம்ப நல்லா இருக்கும்...'' ரிக்ஷாக்காரனின் முகத்தை ஏறிட்டான்.

''எவ்வளவுப்பா ஆகும்...?''

''அதிகமில்ல சார், வெறும் இருநூறு ரூபாதான் சார். எனக்கு எதுனாச்சும் பார்த்துக் கொடுங்க சார். நீங்க தர்ற இருநூறு ரூபா அப்படியே அந்தப் பொண்ணுக்குப் போயிடும்.''

''எங்க இருக்கு...?''

''பக்கத்துலதான் சார். ஏறி உக்காருங்க.''

இவன் ரிக்ஷாவில் ஏறி அமர்ந்து கொண்டான். ரிக்ஷா நகர்ந்தது.

விபசாரியிடம், இதுவரை சென்றதில்லை. ஏன் இப்படியெல்லாம் செய்கிறோம் என்கிற குற்ற உணர்வு ஏற்பட்டது. தரம் தாழ்ந்து போகிறோமோ என்று தோன்றிற்று. ரிக்ஷாவை நிறுத்தச் சொல்லி திரும்பிப் போய்விடலாமா...?

மேல் மனது கேள்வி கேட்டதே தவிர, அடி மனது 'எப்படி இருக்கிறது என்று பார்க்கலாமே...?' எனத் தூண்டிவிட, அடி மனது வென்றது.

ரயில் நிலையத்தின் வெளிக் காம்பவுண்டைத் தாண்டி வந்தது ரிக்ஷா. இவன் சாய்ந்து கம்பீரமாக உட்கார முயன்றான். முடியவில்லை.

தடக் லடக்கென்று ஆடியபடி சென்றது ரிக்ஷா.

இவனது அலுவலகத்தில் நிறையப் பேர் இப்படிப் போய் வருகிறவர்கள்தான். லஞ்ச் நேரத்தில் கதை கதையாகச் சொல்வார்கள். தங்கள் பிரதாபங்களையெல்லாம் அவிழ்த்து விடுவார்கள். இவனது உற்ற சினேகிதன் சேகர்கூடப் போய்வந்திருக்கிறான். இவனிடம் சொன்னபோது இவன் அப்படியெல்லாம் போகக்கூடாது என்று அறி




யாசங்கள் உள்ளன. விடை: 46'ம் பக்கம்

வுரை கூறி இருக்கிறான். உள்ளீடு அற்ற வெறுமையானவர்கள்தான் இப்படியெல்லாம் போவார்கள் என்பது இவனது கணிப்பு. இப்போது இவனே போய்க்கொண்டிருக்கிறான்.

''ரிஸ்க் ஒண்ணுமில்லையேப்பா...?'' தன் குற்ற உணர்வை மறைக்க இவனாக ரிக்ஷாக்காரனிடம் பேச்சுக் கொடுத்தான்.

''அதெல்லாம் ஒண்ணும் இருக்காது சார். நீங்க புச்சு. அதனால பயப்படறீங்க...''

இவனிடம் போய் இதை எதற்காகக் கேட்டோம் என நொந்து கொண்டான். இப்படிக் கேட்டதன் மூலம் தன் அனுபவமற்ற தனத்தை அவன் புரிந்து கொள்ள உதவியது தவிர வேறு என்ன லாபம்...?

ரிக்ஷா போய்க்கொண்டே இருப்பது போல் தோன்றியது.

''என்னப்பா... இன்னும் எவ்வளவு தூரம் போகணும்...?''

''இதோ சார் வந்திடுச்சு...'' என்றவன், தொடர்ந்து ஏதோ பேசிக்கொண்டே வந்தது இவனை எரிச்சல் படுத்திற்று. தன்னை ஒரு ரெகுலர் கஸ்டமர் போல் நடத்தியது பிடிக்கவில்லை. நல்ல வேளையாக ரிக்ஷா ஓர் இடத்தில் நின்றது. வரிசையாக நின்றிருந்த ரிக்ஷாக்களில் ஒன்றாய் நிறுத்தி விட்டுச் சொன்னான்.

''சார்... எனக்கு ஒரு சிகரெட் குடுங்க சார்...''



ஆறு வித்தியாசங்கள் விடை:

1. பிரா
2. குருவியின் கால்
3. ஆன்டெனா
4. செங்கல்
5. ஜாக்கெட்
6. புடவை பார்டர்

ஆகிய ஆ.

## நான் ஆணையிட்டால்



சுவாரசியமாய்ப் பத்திரிகை படித்துக் கொண்டிருக்கும்போது கழுத்தை நீட்டிப் படிக்கும் ப்ரகிருதிகளின் கழுத்து.

---

கொடுத்தான்.

பற்ற வைத்துப் புகைத்துக் கொண்டே சற்று யோசிப்பவனாக நின்றான்.

''என்ன்ப்பா...?''

''இல்ல சார்... அங்கியே வச்சுக்கிடறீங்களா...? இல்ல, வெளிய கூட்டிக்கிட்டுப் போறீங்களா...?''

''இல்லப்பா.... வேணாம். அங்கயே இருந்துடலாம்.''

''அது தம்மாத்துண்டு வூடு சார்... வர்றவங்க வெளிய கூட்டிக்கிட்டுத்தான் போவாங்க. லாட்ஜுன்னா உங்க இஷ்டப்படி ஃப்ரீயா இருக்கலாம் சார்...''

''லாட்ஜுன்னா பயமா இருக்குப்பா... போலீஸ் ரெய்டு கிய்டுன்னு...''

''அதெல்லாம் வரமாட்டாங்க சார்.''

''அப்ப சரி. கூட்டிக்கிட்டு வந்துடு.''

''பணம் எடுங்க சார். ஆத்தாக்காரி கிட்டப் பணம் கொடுத்தாத்தான் பொண்ண வெளிய உடும்.''

பாண்ட் பாக்கெட்டிலிருந்து நான்கு ஐம்பது ரூபாய்த் தாள்களை எடுத்துக் கொடுத்தான்.



டினோசர் கழுத்து மாதிரி நீள மாகக் கடவது!

—ஏ.சு. சம்பத்ராஜ்

''சீக்கிரம் வாப்பா. நான் அந்த டீக்கடை பெஞ்ச்சுல உட் கார்ந்துக்கிட்டிருக்கேன்...''

''இதோ... அஞ்சே நிமிஷத் துல வந்துர்றேன் சார்...'' என்று விட்டுச் சரசரவென நடந்தான். சந்து திரும்புவது தெரிந்தது.

இவன் டீக்கடை முன்னால் வந்து உட்கார்ந்து கொண்டான். சுற்றிலும் பார்த்தான். எதிர் பெஞ்ச் சில் உட்கார்ந்திருந்த இரு இளைஞர் களும் தன்னை மாதிரி காத்திருப்ப தாகத் தோன்றியது. டீக்கடைக் காரன்கூட இதற்குக் கூட்டாகத் தான் இருப்பான். இந்த வட்டாரத் திலுள்ள ஒவ்வொருவனும் இதில் சம்பந்தப்பட்டவர்களாகத்தான் இருக்க வேண்டும்...

அவர்களெல்லாம் சாதாரண மாக அமர்ந்திருக்க, இவனுக்கு மட்டும் இப்படி டீக்கடை வாசலில் அமர்ந்திருப்பது அவமானமாகப் பட்டது. அதிகேவலமாகத் தோன் றியது. ரிக்ஷாக்காரன் வந்து கூட் டிக் கொண்டு போய்விட்டால் பரவா யில்லை என்று நினைத்துக் கொண் டான்.

'குற்றமும் செய்துகொண்டு, குற்ற உணர்விலும் வதைபட்டுக் கொண்டு..'

என்கிற விக்ரமாதித்யன் கவிதை ஞாபகத்திற்கு வந்தது. ச்சே...!

கைக் கடிகாரத்தைப் பார்த் தான். ரிக்ஷாக்காரன் போய் இரு பது நிமிடங்களாகிவிட்டன. வரு வானா மாட்டானா...? சந்தேகம் தோன்றியது. பணத்தை எடுத்துக் கொண்டு அப்படியே போய்விட் டானா? எங்கு போய்த் தேட முடி யும்...? ரிக்ஷாவை ஸ்டாண்டில் தானே விட்டுவிட்டுப் போயிருக் கிறான்.

எழுந்து ஸ்டாண்டில் போய்ப் பார்த்தான். வரிசையாக நிறுத்தப் பட்டிருந்ததில் எது அவனுடைய ரிக்ஷா எனத் தெரியவில்லை.

மறுபடியும் டீக்கடைக்கு வந் தான். டீக்கடைக்காரனிடம் விசா ரிக்க நினைத்து அடக்கிக்கொண் டான். இன்னமும் பத்து நிமிடங் கள் போயின. ரிக்ஷாக்காரன் வர வில்லை. நன்றாக ஏமாற்றி விட் டான் என்பது உறைத்தது. முட் டாளாக்கப்பட்ட உணர்ச்சியில் குமுறினான்.

'ராஸ்கல்... அயோக்கிய ராஸ்கல். ஊருக்குப் புதுசு என நினைத்துவிட்டான் போல...'

வேண்டும். நன்றாக வேண் டும். தினவெடுத்து அலைந்தால் இப்படித்தான் ஆகும். எல்லோரும் ஏன் தன்னை ஏமாற்றுகிறார்கள் என்கிற சுய இரக்கம் வேறு வந்து இம்சித்தது.

திடீரென ரிக்ஷாக்காரன் மீதிருந்த கோபம் அகன்றது. ஒரு விதத்தில் அவன் திரும்பி வராதது நிம்மதியாக இருந்தது. எதிலிருந்தோ தப்பி விட்ட உணர்வு ஏற்பட்டது. நல்ல காலம். இது வரை இந்தக் கேவலத்தைச் செய்ததில்லை.

'பொடி, பீடி, குடி. குட்டி ஒண்ணு பாக்கியில்லை...'

'ஐயோ... குட்டி இல்


CHIK
EGG
CHIK
JASMINE
CHIK
LIME
CHIK
BLACK
CHIK EXTRA RICH WITH QUAT

லேம்மா...'

'அப்படின்னா பாக்கியெல்லாம் இருக்காடா...?'

அம்மாவின் திட்டு ஞாபகத்திற்கு வந்தது. சிகரெட், குடி தவிர வேறு இல்லாமல்தான் இருந்தான். இது இன்று ஒட்டிக் கொள்ளும் போலிருந்தது. நல்ல காலம். ஒட்டிக் கொள்ளவில்லை. 'தாங்க்யூ ரிக்ஷாக்கார்...' வாய் விட்டுச் சொல்லியவாறு எழுந்தான். வீட்டுக்குப் போய்க் குப்புற அழுந்திப்படுத்தால் சரியாகி விடும்...

வேகமாக நடக்க ஆரம்பித்தான். பத்தடி சென்றிருப்பான். ஆட்டோ ஒன்று காலியாக வந்தது. இவனருகில் வந்தபோது வேகம் குறைந்தது. நிறுத்தி ஏறிக்கொண்டான். கடைசி ரயிலுக்கு நிறைய நேரமிருப்பது தெரிந்தது. ஸ்டேஷனுக்குப் போய் என்ன செய்வது...? கையில் புத்தகம் கூட இல்லை படிப்பதற்கு. வாங்கலாமென்றால் ஒரு கடை கூட இல்லை. என்ன செய்து...? பியர் குடிக்கலாமா...

ஆட்டோக்காரன் பேச ஆரம்பித்தான்.

''எங்க சார் போகணும்...?''



''புதுசா நேத்து ஒரு ப்ரா வாங்கினாளாம். அதான் இப்படிப் போட்டுக்கிட்டு அலட்டிக்கிறா.''

—எஸ்.எஸ். பூங்கதிர்

''அதாம்ப்பா யோசிக்கிறேன்.''

''ரொம்ப நேரமா டீக்கடை வாசல்ல நின்னுக்கிட்டிருந்தீங்க. என்ன சார் விஷயம்...?''

'ஒரு சினேகிதனுக்காகக் காத்துக்கிட்டிருந்தேன்' எனப் பொய் சொல்ல நினைத்து 'சீ' வேண்டாம் என்று அடக்கிக் கொண்டான். பின் ''ம்...'' என்றான் மய்யமாக.

''யாரு கிட்டயாவது ஏதுக்காவது பணம் கொடுத்தீங்களா சார்...?''

ஆட்டோக்காரன் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது. ஆனாலும் சுதாரித்துக் கொண்டான்.

''ஆமாம்ப்பா. ஒரு சைக்கிள் ரிக்ஷாக்காரன்கிட்ட கொடுத்தேன்.''

''எவ்வளவு சார்...?''

''இருநூறு.''

''ஏன் போவல...?''

''கூட்டிக்கிட்டு வரேன்னான்.''

''அவனுங்களையெல்லாம் நம்பலாமா சார்... கண்ணால பார்க்காமப் பணம் கொடுக்கலர்மா...? இந்த மாதிரி சில பேராலத்தான் சார் பேர் கெடுது...''

ஆட்டோக்காரன் திரும்பிப் பார்த்து சினேகமாகப் புன்னகைத்தான்.

''உங்களுக்கு வேணும்னா சொல்லுங்க. நான் கூட்டிக்கிட்டுப் போறேன்...''

இவன் பேசாதிருந்தான்.

''தொழிலுக்குப் புதுசு சார். இப்பத்தான் வந்திருக்கு. சின்னப் பொண்ணு. நல்லா இருக்கும் சார்...''

ஒரு கணம் யோசித்து ஏதோ முடிவிற்கு வந்தவனாகக் கேட்டான் இவன்.

''எவ்வளவு...?''

# சீக்கிரம் சொல்லுங்க பேனா துடிக்குது!

இந்த வாரம் குமுதத்தில் முதல் பக்கத்தில் முதல் வரியில் பரிசு என்று சொல்லிவிட்டு கடைசி வரியில் அடுத் தடுத்த இதழில் பாருங்கள் என்று சொல்லிவிட்டீர்களே! சீக்கிரம் சொல் லுங்க சார் எங்கள் பேனா துடிக்குது.

விழுப்புரம் டி.கே. ராஜேந்திரன்

**இலக்கியப் பரிசு**

இலக்கியப் பரிசுத்தொகை பிர மிக்க வைத்தது உண்மைதான்! போட்டி முடிவுகளைப் பிரதமர் திரு. நரசிம்ம ராவின் ஆட்சிக் காலத்திற்குள் அறிவிக்க முடியுமா?

பாண்டிச்சேரி பாண்டி அகமது

தமிழ் இலக்கியத்தை மேம் படுத்த இதேபோல் பொதுத்துறை நிறு வனங்களும், தனியார் நிறுவனங்களும் இலக்கிய சேவை புரிய வந்தால் தமிழ் இலக்கியம் தரமிக்கதாய் இருக்கும். ஏர் இண்டியா நிறுவனம் இவ்வளவு பெரிய பரிசுத் தொகையை அளிக்க முன்வந் திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது.

ஆராம்பாளையம் வை. கார்த்திகேயன்

**அறிவியலை நோக்கி...**

அறிவியல் சம்பந்தமாக நிறைய வெளியிடும்படி கேட்டிருந்த ஒரு மாண வரின் கடிதத்தைப் பிரசுரித்துப் பரிசும் அளித்துள்ளீர். இதைப் பார்க்கும் போது குமுதம் இதழை அறிவியல் இதழாக மாற்றி விடுவீர்களோ என எங் களுக்கெல்லாம் ஒரே பயமாக இருக் கிறது!

தெற்கு வாட்டாக்குடி
காசி. இராஜகோபாலன்

வருங்கால தலைமுறைக்குத் தமிழைப் பத்திரப்படுத்த அறி வியல் மட்டுமே உதவும் என் பதை நன்கு உணர்ந்து குமுதம் செயல்படுவது மகிழ்ச்சி.

மயிலாடுதுறை பாலகுரு

**புத்தி வந்துவிட்டது**

ஏதேது ஏழு ஒரு பக்க கதைகளை வெளியிட்டுவிட்டீர்களே! உங்களுக்கும் புத்தி வந்துவிட்டது!

மதுரை-16 எல். மீனாட்சிசுந்தரம்

**தெரியாத பெயர், விவரம் அறிந்தேன்**

'தெரியாத பெயர் விவரம்' பகுதியை 'தேவையற்றது' என்று எண் ணிய என் எண்ணத்தை லண்டன் வாச கரின் சேவையால் மாற்றிக்கொள்ள வேண்டியதாயிற்று!

கொமாரபாளையம் எஸ். சண்முகசுந்தரம்

**இந்துமதியா இப்படி?**

இதென்ன இந்துமதி இப்படி ஒரு கதையை எழுதிட்டாங்க?

சென்னை-5 மா. கண்ணன்

மது அருந்தினால் மனிதன் சகல வக்கிரங்களுக்கும் ஆட்படுவான் என் பதை இந்துமதி 'அது புதிது' கதை யில் அழகாகச் சொல்லியுள்ளார்.

மதுரை-1 என். புவனேஸ்வரி

**கேள்விக்கே இடமில்லை**

ரஜினி கமலுக்குப் பிறகு என்ற கேள்விக்கு இப்போது இருக்கும் எந்த நடிகரும் ஈடாக மாட்டார்கள்! இனி மேல் யாராவது பிறந்துதான் வரவேண் டும்.

பெரம்பூர் ஆர். கோதண்டராமன்

**குமுதம்—லக்ஸ் அவார்டைத் தூர்தர்ஷனிலாவது பார்க்கலாமா?**

நேரில் காணும் வாய்ப்பிழந்த எங்களுக்கு 'குமுதம்—லக்ஸ் அவார்ட்ஸ்' தூர்தர்ஷனிலாவது பார்க்க இயலுமா?

மணமேல்குடி எஸ். பிரேம்குமார்

எனக்குத்தான் லக்(ஸ்) இல்லை.

அயன்புரம் த. சத்தியநாராயணன்

நம்ம பிரஸிடெண்ட் லேகா இருக்காளே...
அவ வீட்டுக்காரர் ஒரு மாதிரியாம்.

லேகா, ஹேண்ட் பேக்கை எடுத்துக் கொண்டாள். கண்ணாடி ரொம்ப முக்கியம். வயது நாற்பதாகிறது. மெல்ல மெல்ல சாளேஸ்வரம் வருகிறது. அதுவும் லேடீஸ் கிளப்பில் மேடையில் அமர்ந்திருக்கும்போது திடீர் திடீரென்று எதையாவது வாசிக்கத் தந்து விடுகிறார்கள். கண்ணாடி இல்லாமல் கஷ்டம். அதற்காக பைஃபோகல் எக்ஸிக்யூடிவ் கண்ணாடியை எடுத்துக் கொண்டாள்.

இன்று பட்டிமன்றத் தலைப்பு—

'சமுதாயத்தில் பெண்கள், கண்களா? இல்லை புண்களா?'

இவள்தான் நடுவர்.

ஆண் ஆதிக்க சமுதாயத்தில் கண்களாக மதிக்கப்பட வேண்டிய பெண்மை புண்ணாக மாறி சீழ் பிடித்து வருகிறது. இதற்கு பாரதி மாதிரி அறுவை சிகிச்சை செய்து வெற்றி முரசு கொட்ட மீண்டும் ஒருவர் வந்து பிறக்க வேண்டும். பெண்கள் பிரசவங்களை மட்டுமல்ல, பிரளயங்களையும் பிரசவிக்க வேண்டும்.

''அக்கா...''

குரல் கேட்டுத் தன் சிந்தனைகளைக் கலைத்தாள் லேகா. எதிரில்...?

அவள் தம்பி மனைவி சுமதி.

''சுமதி... ராத்திரி டின்னர் முடிச்சுட்டுத்தான் வருவேன். எனக்காகக் காத்திருக்க வேண்டாம். நீ சாப்பிடு. அத்தானுக்கும் இன்னிக்கு வெளியே மீட்டிங் இருக்கு. ஸோ, பால் மட்டும் எடுத்து வை போதும்.''

சுமதி தலை ஆட்டிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

பாவம் சுமதி, இவள் தம்பி பூபாலுக்கு மனைவி ஆனது அவள் பாக்கியமா, அபாக்கியமா தெரியவில்லை. பதினைந்து வருடங்களுக்கு முன் நடந்த திருமணம். பெரியவர்கள் பார்த்து செய்த ஏற்பாடு. சுமதியைத் திருமணத்தில் முதல் நாள் தான் பூபால் பார்த்தான். பார்த்தவன் அதிர்ந்தான். இப்படி ஒரு கரிக்கட்டை, அழகற்றவள்... இவளா... இவளா என் மனைவி?

அன்றே ஓட இருந்தவனை லேகாதான் தடுத்து நிறுத்தினாள். ஊர் ஜனம் கூடி இருந்தது. திருமணத்திற்கு வந்தவர்கள் சீ... சீ' என்று காறி உமிழக் கூடாது என்று கண்ணீர் வடித்தாள்.

''அக்கா... யூ டூ?'' —என்று இரைந்து கத்தினான் பூபால்.

—விமலா ரமணி

''உன்னை நம்பித்தானே நான் பெண் கூடப் பார்க்காமல் திருமணத்திற்குச் சம்மதித்தேன். கடைசியில் பணம் இருக்கிறது என்பதற்காக இப்படி ஒரு கரிக்கட்டையை, அவலட்சணத்தை என் தலையில் எல்லோரும் கட்டி விட்டீர்களே... அப்பா, அம்மாவுக்கு வயசாச்சு,



தெரியவில்லை. உனக்குமா?'' என்று த்தினான்.

கடைசியில் அனைவரின் வற் புறுத்தலுக்காக சுமதியின் கழுத்தில் தாலி கட்டியவன், முதலிரவன்றே காணாமல் போய் விட்டான்!

சுமதியின் வாழ்க்கை, விமர் னத்திற்கு அப்பாற்பட்டது. வெறும் பிசாரிப்புக்களாகிப் போன வெறுமை நிறைந்த வாழ்க்கை. தலைவிதியை நொந்தபடி பத்து வருடங்கள் பிறந்த வீட்டில் கண்ணீர் வடித்தவள், பெற்றோர்களின் மரணத்திற்குப் பிறகு ஒரு நாள் துணிந்து லேகாவின் வீட்டு வாசலில் வந்து நின்று விட்டாள்!

வாங்கும் அடிகளை வசந்த ராகங்களாக மாற்றத் தெரிந்த சும தியை ஏற்பதைத் தவிர வேறு வழி யில்லை. லேகாவின் பெற்றோர் களும் மகன் காணாமல் போன சாபத்தில் மாண்டு போனபிறகு லேகாவே அவளுக்கு எல்லாமாகிப் போனாள்.

சத்துள்ள இவள் வாழ்வின் வித்து எங்கிருக்கிறது என்று தெரி யாமலே சுமதி இந்த வீட்டோடு இணைந்து போனாள். குடும்பத் தின் ஓர் அங்கத்தினர் ஆனாள். வாழ்க்கையில் சமையலும், சாப்பா டும் பழகிப்போன வழித்தடங்க ளாக இருந்த போதும், விலகிப் போகாத லேகாவின் அன்பு இவளை வாழ வைத்தது.

லேகாவின் ஒரே மகள் அபர்ணாவிற்கு சுமதியே எல்லா மாகிப் போனாள். மெல்ல மெல்ல அபர்ணாவின் முழுப் பொறுப்பும் சுமதியின் தலையில். லேகாவிற்கு இப்போது வீட்டுக் கவலை இல்லை. குழந்தைக் கவலை இல்லை. குடும் பக் கவலை இல்லை. இப்போது அவள் கவலைப்பட்டதெல்லாம் சமூ கத்தைப் பற்றி...

மத்திய தரக் குடும்பங்களில்

செவ்வாய் கிரகத்தில் தெரிந்த முகம். 25'ம் பக்கம்.

முன்னேற முடியாமல் தவிக்கும் பெண்களின் பிற்போக்குத் தன்மை பற்றி!

கால வசந்தத்து கல்யாண சந்தையில் விதை முதல்களாய், வீட்டு உபயோகப் பொருட்களாய் விற்பனைக்குத் தயாராக இருக்கும் பெண்கள் பற்றி சிந்தித்தாள். மகளிர் சங்கங்களில் பேசினாள். சமூக சேவை செய்தாள். வரதட் சணை பேரத்தால் விற்பனை ஆகா மல் வீட்டிற்குள் வியர்த்து கிடக்கும் பெண்மை பனிகட்டிகளுக்கு மலர் ஒத்தடம் தந்தாள்.

வீட்டுக்கு வந்தால் தலைவலி என்றால் இவள் தலையைப் பிடித்து விட சுமதி தயாராக இருந்தாள்.

கையில் காப்பியோடு காத்தி ருந்தாள். அபர்ணாவிற்கு கல்லை யும் பிசைந்து கனியாக்கும் கருணை யோடு நல்ல நல்ல கருத்துக்களை கதைகளாக்கி அமுதோடு சேர்த்து ஊட்டி வளர்த்தாள்.

இவள் கனவுகளில் பூபால் இல்லாததால் இவளின் நினைவுகூட நிர்வாணமாகத் தெரிந்தது. இவளது ஆகாயத்தில் பௌர்ணமிக்குப் பதி லாக அமாவாசைகளே அடிக்கடி வந்தன.

அன்று—

லேடீஸ் கிளப்பின் வருடாந் திர விழா.

புகழ் பெற்ற நடிகை விஜயம் வேறு. ஏகப்பட்ட பணிகள். எல்லாம் லேகாவின் தலையில். வழக்கம் போல் லேகாவின் கணவருக்கு

ஆபீஸ் மீட்டிங்.

லேகா மட்டும் விழாவிற்குச் சென்றாள். சிறுமி அபர்ணா தன் சினேகிதியின் வீட்டிற்குப் போய் விட்டாள். வரவர லேடீஸ் கிளப் அவளுக்கு போரடிக்க ஆரம்பித்து விட்டது.

அன்று லேடீஸ் கிளப்பில் நுழைந்தவுடனேயே ஏகப்பட்ட வாழ்த்துக் கடிதங்கள். விழா நிகழ்ச்சியை பாராட்டிய கடிதங்கள். அதில்...?

விழா ஆரம்பமானது. நடிகை போலீஸ் பாதுகாப்புடன் அழைத்து வரப்பட்டாள். நுழைவாயில் கொள்ளாத அளவு கூட்டம். நல்ல 'மார்க்கெட்' உடைய நடிகை!

நடிகை மேடை ஏறியபோது ஏற்பட்ட கூட்ட நெரிசலில், திடீரென்று விளக்கு அணைய... ஏகப்பட்ட கலாட்டா ஆனதில், சிறப்பு விழா செருப்பு விழாவாகி அனைவரும் தப்பித்தோம் பிழைத்தோம் என்று அரைகுறை விழாவில் வீடு திரும்ப நேர்ந்த அன்று... ஆட்டோவிற்காக இவள் காத்திருந்தாள்.

யாரோ இருவர் லேடீஸ் கிளப் வளாகத்தில் இருட்டில் கிசுகிசுத்துக் கொண்டிருந்தனர்.

''டீ... உனக்குத் தெரியுமா? நம்ம பிரஸிடண்ட் லேகா இருக்காளே... அவ வீட்டுக்காரர் ஒரு மாதிரியாம்.''

''என்ன சொல்றே?''

''என்ன சொல்றது? இவ பெண் பெருமையைப் பற்றி, வரதட்சணை வியாபாரத்தால் வ[illegible] பனை ஆகாமல் வீட்டிற்குள் முட[illegible] கிக் கிடக்கும் கன்னிப் பெண்[illegible] பற்றிக் கவலைப்படுகிறாள். இ[illegible] வீட்டிலே என்ன நடக்குது [illegible] யுமா? இவ வீட்டிலே இவளோ[illegible] தம்பி சம்சாரம் கல்யாணமாகி[illegible] கன்னி கழியாம கணவனுக்கா[illegible] காத்துக் காத்து காலத்தை வீண[illegible] கிட்டு இருக்கா. அவளோட உண[illegible] கள் இவளுக்குப் புரியவில்லை. இ[illegible] லேடீஸ் கிளப்பே கதின்னு கிடக்க[illegible] சும்மா சொல்லக் கூடாது. லே[illegible] வோட வீட்டுக்காரருக்கு நல்[illegible] மனசு! லேகாவுக்குப் புரியாதது அ[illegible] ருக்குப் புரிஞ்சிருக்கு. லேகாகிட்[illegible] அன்புக்குக் கெஞ்சறதைவிட வ[illegible] ளலா வாரி வழங்கற மைத்துன[illegible] மனைவி அமிர்தமா இருக்கா. லே[illegible] டட்டடங்க்...'' –அவள் கேலியா[illegible] சிரித்தாள்.

''இதெல்லாம் உனக்கு எ[illegible] படித் தெரியும்?''

''லேகா வீட்டிலே வேலை செய்யறவளும், எங்க வீட்டு வேலை[illegible] காரியும் ஒருத்திதான். அவதா[illegible] தினம் தினம் கதை சொல்லுவா[illegible] லேகா இந்தப் பக்கம் வந்தது[illegible] அவங்க அந்தப் பக்கம் அடிக்க[illegible] கூத்தைச் சொல்லுவா.''

''ஏன் லேகாகிட்டே அ[illegible] சொல்ல மாட்டாளா?''

''எப்படிச் சொல்லுவா? அ[illegible] தான் அடிக்கடி அவளுக்கு நிறை[illegible] பணம் கொடுத்து வாயை அடைக்[illegible] றாங்களே!''

நிஜமாக இந்த சம்பாஷணை[illegible] யைக் கேட்ட லேகாதான் வாய[illegible] டைத்து நின்றாள். நிஜமா? இது நிஜமாக இருக்குமா? ஒருவேளை... ஒருவேளை...? உடனே ஆட்டோ[illegible] பிடித்து வீட்டிற்கு ஓடினாள்.

ஆட்டோவில் வந்திறங்கி[illegible] லேகா, வாசலில் தன் கணவர் கா[illegible] நிற்பதைப் பார்த்து ஆச்சரியப்ப[illegible] டாள். அதிர்ந்து போனாள்.



நல்லதாகவே இருந்தாலும், சில சமயம் கெட்டதாக முடியும்.

அவளுக்கு வயது பதினாறு அல்லது பதினேழு இருக்கலாம். தமிழ் சினிமா டைரக்டர்கள் தேடிக் கொண்டிருக்கும் வசீகர முகம். அந்த இளம் வயதுக்கு அதிகமான உயர வளப்பத்துடன் லேசாக மேக்கப் செய்து கூச்சம், பயம், ஆர்வம், வெட்கம் எல்லாம் கலந்த முகத்துடன் டைரக்டர் வினோதராஜைக் குறுகுறுவென்று பார்த்தாள்.

அருகில் உட்கார்ந்திருந்த காமிராமேன் ஜோதிகுமார் ''ராஜ்! இது மாதிரித்தானே தேடிக்கிட்டிருந்தோம்! ஸெவன்ட்டி எம்.எம். மாதிரி இருக்கு பாருங்க கண்ணு!'' என்றான், அவளையே பார்த்து.

அந்தப் பெண்ணின் அருகே அவளுடைய அம்மா நின்றுகொண்டிருந்தாள். அவளுடைய வயதான பிரதிபோல்.

''பேரு என்னம்மா சொன்ன?''

''வான்மதிங்க,'' என்றாள் அம்மா.

''ஏன்? இந்தப் பொண்ணு பேசாதா? ஊமையா?''

# அரங்கம்

அவள் அவசரமாக ''இ...ல்...லை... ஸார்! பேசுவேன் ஸார்!'' என்று பதட்டமாக உடனே பதில் சொன்னது நயமாக இருந்தது.

''ஜோதி! நல்ல ஃபிகர்! ஏம்மா, நடிப்பியா நீ? முன் அனுபவம் இருக்கா?''

''நல்லா நடிக்கும்ங்க... புதுச்சத்திரத்துல ஸ்கூல் டிராமாவெல்லாம் இதாங்க ஈரோயினி...''

''ஏம்மா, அந்தப் பொண்ணே சொல்லட்டுமே?''

''மதி, சொல்லுடி! கேக்கறாரில்லை?''

அவள் லேசாகத் திடுக்கிட்டு ''வந்து ஸார்... நடிப்பேன் ஸார்! டிராமாவுல சகுந்தலை வேஷம் போட்டிருக்கேன்...''

**வான்மதியிடம், ''நீ மட்டும் வந்தாப் போதும்... உங்கம்மாவையெல்லாம் கூட்டி வராதே,'' என்றார் வினோதராஜ்.**

''சகுந்தலையெல்லாம் உத வாது. வாய்ஸ்கூட நல்லா இருக் கில்லை ஜோதி? டப்பிங் லொள் ளெல்லாம் இருக்காது போல...''

''ஆமா ஸார்! ஸ்ட்ரக்சர் தான் எப்படின்னு தெரியலை. முழுக்கப் போர்த்தியிருக்குது...''

''அதை அப்புறம் பார்த்துக் கலாம். மேக்கப் டெஸ்ட் செய் யணும் முதல்ல. ஸ்டில் பார்க் கணும்... ப்ரொஃபைல்ல எப்படி இருக்கும்னு தெரியலை, கொஞ்சம் திரும்பும்மா... ம்... வான்மதி, கிளாமரா நடிப்ப இல்லை?''

''ஸார்?''

''கிளாமர்னா தெரியாதா? சர்தான். எல்லாம் சொல்லிக் கொடுக்கணும் போல... கவர்ச் சியா நடிப்பியான்னு கேட்டேன்...''

''நடிப்பாங்க.''

''அட, நீ சொல்லும்மா.''

''நடிப்பேங்க.''

''சினிமா கவிஞர்கள் பாட் டெல்லாம் கேட்டிருப்பியே? 'மாங்கா ரெண்டு காய்ச்சிருக்கு... கைக்கு ரொம்பப் பசியிருக்கு'ன்னெல்லாம் எழுதுவானுங்க... கவர்ச்சி காட்டி னாதான் கட்டுப்படியாகும்... புரி யுதா?''

''ம்.''

வினோதராஜ் எழுந்து வான் மதியின் முகவாயை நிமிர்த்தி முகத் தைப் பார்த்து, தோளில் அழுத்த மாகக் கை வைத்து அவளைத் திருப் பினார். அவளுடைய பின் உரு வத்தைத் தீர்க்கமாகப் பார்த்து ''குட். கலர்தான் கொஞ்சம் கம்மி.''

''லைட்டிங்ல அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம் ராஜ்.''

'' 'வான்மதி'. நல்ல பேரு. அப்படியே இருக்கட்டும். இதப் பாரு, நீதான் ஹீரோயின்னு முடிவு பண்ணிட்டேன். ஹீரோயின் சப் ஜெக்டு. தெரியுதா? சொன்னபடி முரண்டு பண்ணாம நடிக்கணும். என்கிட்ட அக்ரிமெண்ட் ஸைன் பண்ணிட்டு எவனாவது சூட்கேஸ் நிறையப் பணம் காமிச்சா பால் மாறக் கூடாது. கேஸ் போட்டு வேன்... என்ன?''

''அய்யய்யோ! அந்த மாதிரி யெல்லாம் ஏதும் நடக்காது ஸார்,'' என்றாள் அம்மா.

''முதல்ல அப்படித்தானே சொல்வீங்க...! வான்மதி, நல்ல எதிர்காலம் இருக்கு உனக்கு. சூட் பரா ஒரு ரவுண்ட் வரப் போற மே...லே... போயிடலாம்... நாளைக்கு சாயங்காலம் என்ன பண்ற, அட்ரஸ் ஒண்ணு தா றேன்... அங்கே போ! மேக்கப் டெஸ்ட் எடுப்பாங்க... ஸ்டில் எடுப் பாங்க... என்ன டிரெஸ் கொடுத் தாலும் மறுக்காமப் போட்டுக்க... அங்கேயே வெய்ட் பண்ணு... எட்டு மணிக்கு நான் வந்து கூட்டிப் போறேன்...''

''எங்கே ஸார்?''

அதற்குப் பதில் சொல்லா மல் ''நீ மட்டும் வந்தாப் போதும்... உங்கம்மாவையெல்லாம் கூட்டி வராதே... அனாவசியமா இடை

---

## மொட்டை



ல் பண்ணாதீங்கம்மா...'' என்
ார் அம்மாவைப் பார்த்து.

''சரிங்க.''

மறுநாள் மாலை ஆழ்வார்
ிருநகரின் ஒரு பங்களா வீட்டு
ாடியில் வான்மதியை மேக்கப்
பாட்டு ஸ்டில் எடுத்தார்கள். அவ
ிடம் கொடுக்கப்பட்ட சில சிக்
ன உடைகளைக்கண்டு அவளுக்கு
அச்சமாக இருந்தது. வாயில் தொங்
கிய புகை பறந்த சிகரெட்டுடன்
ஸ்டில் காமிராக்காரன் ''ம். சீக்கி
ரம்மா... டைம் ஆவுது,'' என்
றான்.

அத்தனை ஸ்டில்களுக்கும்



போஸ் கொடுத்து முடித்தபோது வான்மதி வியர்த்துப் போயிருந் தாள். மறுபடி பழைய உடையை அணிந்து நாற்காலியில் அமர்ந்த பத்தாவது நிமிடம் வினோதராஜ் வந்துவிட்டார்.

''யு லுக் ப்ரெட்டி வான் மதி! வாம்மா!'' என்றவர் அவ ளுடைய கையை அழுத்தமாகப் பற்றிக்கொண்டு போர்டிகோவில் நின்றிருந்த சிவப்பு மாருதியில் அவளைத் திணித்தார். ''எங்கே போறோம்?''

''பார்ட்டி! ஃபைனான்ஸியர் ங்களாவுல... இன்னைக்கு ராத் திரி பார்ட்டி. எல்லார்கிட்டேயும் அறிமுகம்...''

வான்மதி திடுக்கிட்டுப் பார்த் தாள். அவர் சிகரெட் ஒன்று பற்ற வைத்துக்கொண்டு கலங்கலான கண்களுடன் சிரித்தார். கண்களில் துளிர்த்த கண்ணீரை மறைக்க, மெதுவாக முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

கார் ஒரு பெரிய வீட்டின் முன்னே நின்றது.

வான்மதி மெல்லிய குரலில் பரிதாபமான கண்களுடன் ''ஸார்! இத்தனை பேரு ஸார்? பயமா இருக்கு ஸார்...''

வினோதராஜ் புன்னகைத்து ''பயப்படாதே! இதுதான் பால பாடம். முதல் என்ட்ரிதான் அச் சமா இருக்கும். ஸ்டாராயிட்டேன்னு வயி, பேசவே அஞ்சுவானுங்க. அவங்களை எல்லாம் அப்ப பழி தீர்த்துக்கலாம். வா! அதோ பாரு ழ... நான் அப்புறமா வர் றேன்...'' என்றார். அவளது தோள்களை அணைத்து நடத்திச் சென்றார். அறைக்குள் சிலர் காத் திருந்தார்கள்.

வீடு எளிமையாக இருந்தா லும் வண்ணமயமாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. மின் விளக்குகள் அபார ஒளி வெளிச்சத்தைப் பாய்ச்ச, ஜோதிகுமார் காமிரா லென்ஸ் வழியே வான்மதியைப் பார்த் தான். டைரக்டர் வினோதராஜ் நெற்றியைத் தேய்த்துக்கொண்டு உதவியாளன் பிடித்துக்கொண்டி ருந்த ஸ்கிரிப்ட் பேடைப் படிக்க, வியர்வையில் நனைந்து கைகுட்டை யால் முகத்தைத் துடைத்துக் கொண்டு ஃபைனான்ஸியர் தணிகா சலம் நிற்க, கலைந்த, கிழிந்த ஆடை யுடன் வான்மதியைப் பார்த்து ''ஷாட் போகலாமா? எங்கேய்யா பாபு?''

பாபு எனப்பட்டவன் கிளாப் கட்டையை அடித்தான். கையில் கத்தியுடன் நின்ற வான்மதி எதிரே தாட்டியாக நின்ற வில்லனைப் பார்த்து உணர்ச்சிகரமாகத் தன் முதல் வசனத்தைப் பேசினாள்.

''டேய்! கிட்டே வராதே! என் கற்புக்கு ஒரு சின்னக் களங்கம் வந்தாலும் என்னையே குத்திப் பேன்... என் கற்போட விளை யாடாதே... போ! போயிடு...!''

வான்மதி சட்டென்று அழுது விட்டதால் மற்றொரு டேக் எடுக்க வேண்டி வந்தது. ✱

**நாட்டு நடப்பு விடைகள்:**

(1) 25;
(2) அ.தி.மு.க.
(3) ராதாகிருஷ்ணன்
(4) ஸ்ரீரங்கம்
(5) கைர்னார்
(6) 417
(7) வித்யாசாகர்
(8) பிரேசில்;
(9) 60
(10) நடராஜன்


ப்ளாண்டி
BY DEAN YOUNG & STAN DRAKE
இது யாருக்குப் பிடிக்கும்னு எனக்குத் தெரியும்.
ஹேய் பப்பி! இந்த எலும்புத் துண்ட உனக்காகத் தர்றேன். இந்தா வாங்கிக்க.
நீ தந்ததும் அவசரமா போறதபாரு! எங்க போகும்?
எனக்கு அவசரமா கொஞ்சம் ஹோம்வொர்க் பண்ணவேண்டியதிருக்கு. நான் வர்றேன்.
எனக்கும் அவசரம் தான். புக்ல இருந்து ரிப்போர்ட் எடுக்க வேண்டியதிருக்கு.
நானும் போறேன். அவசரமா கேட்டரிங் சம்பந்தப்பட்ட அக்கவுண்டஸ் எல்லாம் பார்க்கணும்.
எனக்குக் கூடதான் அவசரம். நானும் போறேன்.
கொர்... கொர்...
YOUNG

# வைரக் கொலை

கேசவ் லாலைத் தீர்த்துக் கட்டுவதற்கு சென்ற ஆறுமாசமாக தாமோ ஆயத்தம் செய்து வருகிறான். ஒத்திகைகூட செய்து வருகிறான்.

கேசவ் லால் காட்பாடியில் பிரபலமான மனேக்மல் ஜுவல்லர்ஸில் வேலை பார்க்கிறார். ரொம்ப வருடங்களாக.

மாதம் இரு முறை வெள்ளிக்கிழமைகளில் அவர் ஒரு பொட்டலம் வைரங்களைத் தமது கோட் உள்பாக்கெட்டில் அடக்கமாகப் போட்டு ரயிலில் பெங்களூர் புறப்படுவார்.

அங்கே ஈபிடி டயமண்ட் வொர்க்ஸில் வைரங்களை சமர்ப்பிப்பார்.

நகைகளில் வைரங்களை அவர்கள் அழகாகப் பதித்துக் கொடுப்பார்கள்.

ஞாயிறில் ரயில் ஏறி ஊருக்கு அதைக் கொணர்ந்து விடுவார்.

இப்படி இவர் செய்யும் இந்த விஷயம் சந்தர்ப்ப வசமாக தாமோவின் காதுகளில் விழுந்தது.

அன்றைக்கிருந்து அரிப்பு ஏற்பட ஆரம்பித்தது.

ஆறு மாத யோசனைகள்.

ஆயத்தங்கள்!

எப்படியும் கேசவை தீர்த்துக் கட்டி அந்த வைரங்களை அபகரிக்க வேண்டும்.

இதற்கு அவன் போட்டது பெரிய திட்டம்.

கேசவின் நடவடிக்கை ஒவ்வொன்றையும் கவனித்தான்.

அவருக்குத் தெரியாமலேயே அவரைப் பின்தொடர்ந்தான்.

அவர் போகும் இடங்களுக்கு எல்லாம் போனான்.

அவர் வீட்டையும் அதனுள்ளே அவர் நடவடிக்கைகளையும் வெகுகாலம் கவனித்தான்.

என்ன சாப்பிடுகிறார்? எவ்வளவு நேரம் சாப்பிடுகிறார்? என்ன பத்திரிகை படிக்கிறார்? எதில் அவருக்கு சுவாரஸ்யம்?

கேசவுடைய நடை, பேச்சு, சேஷ்டைகள், அத்தனை விஷயத்

புஷ்பா தங்கதுரை



தையும் அப்படியே மனப்பாடம் பண்ணினான்.

கேசவின் உடை, அவருடைய பீடாக்கடை, துணிக் கடை, மருந்துக் கடை...

அடேயப்பா! ஒரு பிஎச்.டி. ஆராய்ச்சி போல...

இந்த அளவு ஆராய்ச்சிதான் கேசவ் பற்றி மற்றவர்க்குத் தெரியாத ஒரு விஷயத்தை தாமோவுக்குத் தெரிய வைத்தது.

கேசவ் ஒரு ரேஸ் பிரியர்!

இப்படி சகல ஆய்வுகளையும் ஒன்று விடாமல் பண்ணிவிட்டுத்தான், தாமோ இந்தக் கொலைத் திட்டத்தில் இறங்கினான்.

அதற்கான வசதியுள்ள நாளை எதிர்பார்த்திருந்தான்.

அன்று வெள்ளிக்கிழமை பிரமாதமாக வாய்த்தது! ஆகாயம் கனத்துப் போய் இருட்டைக்கொண்டுவிட்டது.

அந்த வேல்முருகன் சந்தில் தாமோ ஒரு காரேஜ் வைத்திருந்தான். பேருக்கு அது காரேஜ்! அது அவனது ஒரே தொழில் அல்ல!

அதன் பின்புற வாசலில் அன்று ஆவலாகக் காத்திருந்தான்.

ரயிலைப் பிடிக்கப் போகும்

வழக்கமான ஜனங்கள் அந்த குறுக்குச் சந்தைத்தான் உபயோகிப்பார்கள்.

நிறுவனத்தை விட்டுப் புறப்படும் கேசவும் அந்தச் சந்தைத்தான் உபயோகிப்பான்.

அன்று...

சொல்லி வைத்தாற்போல் இருட்டும் வேளையில் மழை பட பட என்று விழுந்தது.

தாமோவுக்கு 'கதம் கதம்' என்று அடித்தது. சரியான சூழ்நிலை! கேசவ் வருவாரா?

காலடி கேட்டது! வழக்கமான கேசவின் காலடி. தூறலுக்குத் தலையில் ஒரு கைக்குட்டை போட்டு சூட்கேசுடன் வந்து கொண்டிருந்தார்.

சந்து காலியாக இருந்தது. அவன் காரேஜ் ஒன்றுதான் அந்தச் சந்தில் வாசலோடு இருந்தது.

'துண்டினால் மறைத்த கட்டையுடன் கேசவைப் பின் தொடர்ந்தான்.

இரண்டு அடிகள்தான்.

சத்தமே எழவில்லை.

கேசவை அணுகிவிட்டான்.

திரும்பவும் முன்னும் பின்னும் ஒரு பார்வை! கட்டையை வெளியே எடுத்தான். கட்டையில் ரப்பர் ட்யூப்பை இறுக்கச் சுற்றி இருந்தான்..

அதை ஓங்கித் தூக்கினான்.

கேசவின் தலை மீது ஒரு போடு! பொட்டில் பார்த்து அடித்தான்.

கேசவ் திரும்பவில்லை! முனகவும் இல்லை.

ரிப்பேருக்கு வந்திருந்த காரின் பின் ஸீட்டில் 'தம்' பிடித்து ஏற்றிப் படுக்க வைத்தான்.

மூச்சு இருக்கிறதா! தொட்டுப் பார்த்தான். எல்லாம் நிசப்தம்! ஆள் எப்போதோ கைலாசம் போய்விட்டான்.

அவசரமாகக் கையைச் செலுத்தி அவனது கோட் உட்புறப் பையைப் பார்த்தான்.

எதிர்பார்த்த பொட்டலம் இருந்தது. கனத்த பொட்டலம்.

கேசவின் சூட்கேசும் அதன் அருகே அவரது கைக்குட்டையும் கிடந்தன.

கேசவின் சூட்கேஸோடு வாசல்புறம் வந்தான். வாசல் கதவைப் பூட்டினான். ஸ்டேஷன் நோக்கிப் புறப்பட்டான்.

இருட்டு குளிரும் தூறலும் மண்டி இருந்தது. வழியில் பேப்பர்காரப் பையன் ஓடிவந்தான். கேசவிடம் பழகியவன். தூறலில் நனைந்தவன் நிமிர்ந்து பார்க்காமலேயே —ஸார்! பெங்களூர் வண்டி வந்து கிட்டிருக்கு. சீக்கிரம் போங்க! என்று சொன்னான்.

நல்லவேளை! ஒரு சாட்சி ஏற்படுத்தியாயிற்று.

தாமோ தன்னையே பாராட்டிக் கொண்டான். வேஷம் போட்டதில் அசப்பில் கேசவ் போல இருந்தான்.

ஸ்டேஷனில் டிக்கெட்காரரைத் தாண்டும்போது, வேண்டுமென்றே கைக்குட்டையை எடுத்து

## நான் ஆணை



எடை குறைவாக அரிசி, சர்க்கரை போடும் ரேஷன் கடை ஊழியரை...

ஈரம் துடைப்பது போல் முகத்தை மறைத்தான்.

முதல் வகுப்பில் ஏறினான். உள்ளே நல்ல ஏஸி குளிர்! கூட்டமே இல்லை. ஆட்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தார்கள்.

ஒரு தனி சன்னலில் அமர்ந்து சூட்கேசை மேலே வைத்தான்.

கோட்டுக்குள் தொட்டுப் பார்த்தான். வைரங்கள் அப்படியே இருந்தன. இதுதான் முக்கியம்! சூட்கேஸ் எக்கேடு கெட்டால் என்ன?

ரயில் ஊதியது. அவசரத்தில் யாரோ ஏறி உள்ளே வந்தார்கள்! அவன் அருகில் உட்கார்ந்ததும் ஒரு பெண்மணி என்று தெரிந்தது. முப்பது இருக்கும். அழகு சொட்டியது. மேலே பெட்டியை வைக்கும்போது, மார்புகள் சுயரூபமாகத் தெரிந்தன.

அவளது பக்கம் அவன் திரும்பவில்லை.

அவளும் உதாசீனமாக இருந்தாள்.

தாமோவின் மனம் ரயிலை விட ஓடியது. நாளை உடனே ஊர் திரும்ப வேண்டும்! காரேஜ்ஜில் இருக்கும் கேசவின் சடலத்தை நாளை இரவு எப்படியாவது அப்புறப்படுத்த வேண்டும்! முட்காட்டில் கொண்டுபோய் குழி தோண்டிப் புதைத்துவிட வேண்டும்! அதற்குத் திட்டம் ரெடி!

பெங்களூர் வந்தது.

ஸ்டேஷன் முழுதும் வெளிச்சங்கள் தகதகத்தன.

தாமோ எழுந்து சூட்கேசை அள்ளினான். போர்ட்டர்களை விலக்கிக் கொண்டு வெளியே இறங்கினான்.

நிம்மதியாக நடக்க ஆரம்பித்தான்.

பிளாட்பாரத்தில் பெட்டிகள் நீளமாக நின்றன.

பரவலான கூட்டம் மெள்ள நடந்து சென்றது.

அவன் பதட்டப்படவில்லை. கூட்டத்தோடு சென்றான்.

ஏதோ குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். 'மிஸ்டர், மிஸ்டர்,' என்று அந்த அழகுப் பெண் மற்றவர்களைக் கடந்து அவனை நோக்கி வந்தாள்.

—ஸார்! என்னுடைய பெட்டியை நீங்க எடுத்துக்கிட்டிருக்கீங்க! என்றாள்.

சற்றும் அவள் தாக்குதலை எதிர்பாராததால் —'நோ நோ' என்று சற்று ஆத்திரமாகவே அதைச் சொன்னான்.

—நோ! மிஸ்டர்! அது என் பெட்டிதான்! கொடுங்க இப்படி...

அவள் கத்தினாள்.

குரல் கேட்டு, அங்கே இருந்த போலீஸ் ஒருவர் அருகில் வந்தார்.

—என்ன மேடம்! என்ன சங்கதி? என்று கேட்டார்.

—இவர் கொண்டு போகிறது என் பெட்டி!

—இல்லை மேடம்! இது என் பெட்டிதான். இந்தப் பெட்டியைத் தானே நான் கொண்டு வந்தேன்! என்றான் தாமோ.

—அது உங்க பெட்டி இல்லை!

டால்...



சரியாக மணலை அளந்து அளந்து ஆற்றில் கொட்டச் சொல்வேன்.

—எஸ். ஸ்ரீநிவாசன்

இதுதான் உங்க பெட்டி!

அந்தப் பெண் தன் கையில் இருந்த பெட்டியைக் காட்டினாள். இரண்டும் ஒரே ரக சூட்கேஸ்கள்! கலர்கூட ஒன்றேதான்.

போலீசார் இடையே புகுந்தார். —ஏம்மா தொந்திரவு! ரெண்டு பெட்டியையும் திறந்திடுவோம்...

கூட்டத்தை விட்டு ஒதுங்கிப் போனார்கள்.

டக் டக்கென்று ஒரு பெட்டி திறக்கப்பட்டது. ஸாரியும் துணியும் உள்ளே இருந்தன. அதன் கைப் பிடிப்பும் மழமழ என்று இருந்தது.

அவனது பெட்டியும் திறக்கப்பட்டது! அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. ஆனால் திறந்ததும், அவனும் திடுக்கிட்டான். போலீசும் திடுக்கிட்டது.

உள்ளே ஏராள நகைகள் குவிந்திருந்தன. அவை ஒரு ஒழுங்கில் இல்லை. ஏதோ பரபரப்பில் அள்ளிப் போட்டு வந்திருப்பதாகத் தோன்றியது.

அத்தனை நகைகளுக்கும் மேல் ஒரு வலுவான அரிவாள்! அதில் ரத்தம் குழம்பாகப் படிந்திருந்தது. நரை மயிர்களும் அதில் ஒட்டியிருந்தன.

தாமோவுக்குப் பக்கென்று அடித்தது.

அதிர்ச்சிகள் அவன் உடம்பைப் படபடத்துவிட்டுப் போன பின் நினைவுகள் மீண்டும் வந்தன.

நரை மயிர்... ஜுவல்லரி நிறுவனத்து மனேக் மல்லின் தலை மயிர் இது! அவரைப் பலமுறை பார்த்திருக்கிறான்... —இந்த நகை... இந்த அரிவாள்...! ஓ... கேசவ் ஒரு ரேஸ் பிரியன்... நிறைய இழந்திருக்கிறான்... இனி வாழ வழியில்லாமல் மனேக் மல்லை வெட்டிவிட்டு, கடையிலிருந்து நகைகளை திருடிக் கொண்டு புறப்பட்டிருக்கிறான்... அப்படி வந்தவனைத்தான் தாமோ கொலை செய்துவிட்டான்... இரண்டு கொலை... இரண்டு கொலையாளிகள்!

தாமோவின் கண்களில் அத்தனை பீதியும் அவனை மீறி வந்து விட்டது!

முகம் காகிதம் போல வெளுத்தது. போலீஸ்காரர் அவனையே பார்த்தார். அவன் கையைப் பிடித்தார்.

—வாங்க ஸ்டேஷனுக்கு! என்றார்.

''எல்லாத்தையும் சென்சார்ல வெட்டிட்டாங்களாம்.''

—கிருபா





''எக்ஸ்ரே வேண்டாம்! ஃபோட்டோ எடுத்தாப் போதும்.''

—ஜின்னா

# இன்னொரு மனம்

பாளையம் சப்-கோர்ட் முன் அவர்கள் கூடினார்கள். எல்லோர் முகத்திலும் சோகம் கப்பியிருந்தது. அம்மணி மட்டும் வெள்ளைச் சீலையால் முகத்தை மூடிக் கொண்டு சிமிட்டி பெஞ்சு மேல் உட்கார்ந்திருந்தாள்.

நாழியாக ஆக வக்கீல்கள் வரத் தொடங்கிவிட்டார்கள். கையில் ஃபைல்களுடன் தங்களுக்குப் பின்னால் வரும் குமாஸ்தாக்களிடம் ஏதோ விசாரித்துக் கொண்டார்கள். அன்றைய வழக்குப் பற்றியதாக இருக்கக்கூடும்.

கோர்ட் பாருக்குள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று தெரிந்துவரப் போன தனபால் திரும்பி வந்தான். யாரும் எதுவும் கேட்டுக் கொள்ளவில்லை.

''அய்யனவிக நின்னுட்டே இருந்தா எப்படிங்கோ. உள்ளார வந்து உட்காரலாமுள்ளோ?''

''ஒட்கார்றது இருக்கட்டும் தனபாலு. ஏதாவது ருஜு கெடச்சுதா?'' உப்பிலியப்பன் ஆவலாய்க் கேட்டார்.

''அது என்னமுங்கோ. சின்ராசுக்குத் தூக்குத் தண்டனைதான் கெடைக்கும்னு பேசிக்கிறாங்கங்கோ.'' இதைக் கேட்டதும் அம்மணியின் மனசு பரபரத்தது. வழக்கை எடுத்து நடத்தும் வக்கீல் யோகநாதனும் அங்கே வந்தார். அம்மணி எழுந்து கொண்டாள்.

இரா.மணிகண்டன்

''என்ன உப்பிலி. எல்லோரும் வந்துட்டீங்களா?''

''ஆமாமுங்கோ,'' உப்பிலியப்பன் குரலில் சோரம் போய் இருந்தது.

''அப்போய்...!'' அம்மணி எதையோ சொல்ல வாயெடுத்தாள்.

''என்ன அம்மணி?''

''நாஞ் சித்த நாழி சின்ராசோட தனியாப் பேசோணுமுங்க.''

''அடிச் செருப்பால. உன்ற புருஷங்காரன குத்திக் கொன்னவனோட தனியா பேசோனுமுங்கிறியே. துப்புகெட்ட நாயி.''

உப்பிலியப்பனுக்குத் தன் மகள்மேல் பொறுக்க முடியாத கோபம். கோர்ட் வளாகம் என்பதால் அடக்கிக் கொண்டார். அம்மணி பதைபதைத்தாள்.

வக்கீல்தான் பேசினார்.

''அம்மணி!''

''ஏனுங்க அய்யா?''

''நான் சொன்னதெல்லாம் ஞாபகம் வெச்சுக்க. சொல்லித் தந்த மாதிரியே சொல்லிடணும்.''

''ம்... ம்...''

கோர்ட் கூடியது.

''அம்மணி என்ற அம்மிணி! அம்மிணி! அம்மிணி!''

கோர்ட் குமாஸ்தா கூப்பிட்டதும் அம்மணிக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது. முந்தானையில் வாயை அழுத்தி அடக்கிக் கொண்டாள். கூண்டில் ஏறி லேசாக நிமிர்ந்து பார்த்தாள். எதிர்க் கூண்டில் சின்ராஜ். 'இந்த நிமிசமே பூமி வெடித்து என்னை விழுங்கிக் கொள்ளக் கூடாதா' என்று அம்மணி எண்ணினாள்.

ஜட்ஜ் விசாரணையை ஆரம்பித்துவிட்டார்.

''உன் பெயர் என்னம்மா?''

''அம்மிணிங்கோ.''

''கொலை செய்யப்பட்ட சண்முகம் உனக்கு என்ன வேண்டும்?''

''என்ற வூட்டுக்காரருங்கய்யா.''

''இந்த சின்ராஜ்தான் உன் புருஷனக் கொன்னாரா?''

அம்மிணி ஒருமுறை சின்ராஜைப் பார்த்தாள். 'உண்மையை ஒத்துக் கொள்ளப் போகிறேன்' என்ற பொருளில். 'வேண்டாம்' என்ற பாவனையில் அவன் முகம் கெஞ்சியது. கோர்ட்டில் எல்லோர் கவனமும் அம்மணிமேல் இருந்தது. அம்மணி மௌனமாக இருந்தாள்.

''சொல்லும்மா!'' என்ற



நீதிபதி காதை அவள் பக்கம் திருப் பிக் கேட்டார்.

''ஆமாமுங்க.'' இதைச் சொல்வதற்குள் அவள் திணறித் தான் போனாள்.

''சின்ராசுதாங்க கொன் னாரு.'' ஒரு யுகம் கழிந்ததுபோல் அந்த நிமிஷம் சென்றது.

''சரி நீங்கள் போகலாம்.'' அம்மணியை அனுப்பிவிட் டார். அம்மணி கோர்ட் வளாகத்தி லிருந்து பிரமை பிடித்தவளாக ''பொய் சொல்லி விட்டேன் பொய் சொல்லிவிட்டேன்...'' என்று சொல் லிக் கொண்டே வீட்டுக்குப் போனாள்.

நீதிபதி தீர்ப்பை வாசித்தார்.

''முன் விரோதம் காரண மாக சண்முகத்தைச் சின்ராஜ்தான் கொலை செய்தார் என்பது சந் தேகத்திற்கு இடமின்றி நிரூபண மாகிவிட்டது. கத்தியில் இருந்த கைரேகையும் சண்முகத்தின் மனைவி அம்மணி சொன்ன சாட்சியமும் அதை உறுதிபடுத்துகின்றன. குற்ற வாளி கொலை செய்ததைத் தானே ஒப்புக் கொண்டதால், அவருக்கு இந்த நீதிமன்றம் குறைந்தபட்சம் ஆயுள் தண்டனை விதித்துத் தீர்ப் பளிக்கிறது.''

நீதிபதி எழுந்து சென்றதும் கோர்ட் கலைந்தது. அம்மணி வீட் டிற்குப்போய் அழத் தொடங்கிவிட் டாள். துக்கம் தீரும்வரை அழட் டும் என்று உப்பிலியப்பனும் விட்டு விட்டார்.

அன்று மாலை சின்ராஜ் அம் மணியைப் பார்க்க விரும்புவதாக ஆள் வந்து கூட்டிப் போனான். சின்ராஜ் சிறைக் கம்பிகளுக்குப் பின் னால் நின்றிருந்தான். ஆயுள் தண் டனை பெற்ற கைதி என்ற துயரம் எதுவும் இல்லாமல் பேசினான்.

''அம்மிணி! உன்ன நான் பார்க்கோணுமுன்னு சொன்னது எதுக்குத் தெரியுமா?''

''தெரியாதுங்கோ!''

''உன்றகிட்ட மன்னிப்புக் கேட்கத்தான்.''

அம்மணி ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

''என்ற கிட்ட நீங்க எதுக்குங்க மன்னிப்புக் கேட்கோணும். உங்களப் பார்த்தா எனக்கு என்னமோ பயமா இருக்குங்க. நான் உண்மைய அல்லோரிட்டையும் சொல்லிடப் போறேனுங்க.''

''அம்மிணி...!''

''ஆமாமுங்கோ. என்ற வூட்டுக்காரரு சந்தேகப்பட்டு என்ன தெனந்தெனஞ் சித்ரவத பண்ணினாரு. சிகரெட்டால என்ன சுட்டாரு. அல்லாத்துக்கும் நான் பொறுத்துக்கிட்டேன். அன்னைக்கு என் புள்ளைய, 'இது எவனுக்குடி பொறந்துச்சு. சொல்லுடி. அல்லாட்டி இத குத்திக் கொன்னுடுவேண்ணு' கத்திய உருவிக்கிட்டு கொல்லப் போனாரு. அப்ப நான் அவருகிட்ட இருந்து கத்தியப் புடுங்க, சண்டை போட்டதில அது தவறிப்போயி அவர் வகுத்துல குத்திடிச்சுன்னு உண்மைய சொல்லிடப் போறேன்.''

மனசுக்குள் அடக்கி வைத்திருந்த அத்தனையையும் கொட்டித் தீர்த்தாள்.

''அந்த சமயத்துல எங்க வூட்டுக்கு வந்த நீங்க, அந்தப் பழிய ஏத்துக்கிட்டீங்க. அதுதான் எனக்குப் புரியல. வேண்டாங்க. தப்பு செய்யாத நீங்க தண்டனை அனுபவிக்கக் கூடாது.''

''அம்மிணி. தப்பு பண்ணுனது நான்தா. அதுக்குத்தா இந்த தண்டனை.''

''அய்யோ எனக்குத் தலை சுத்துதுங்கோ.''

''அம்மிணி. நீ நெனைக்கிற மாதிரி நான் நல்லவனில்ல. உன்ற புருஷன் இந்த மாதிரி நடந்துக்

பெயர்: வி. சீனுவாசன்.

வயது: 23.

தொழில்: படத்தைப் பாருங்களேன்.

நேரம்: காலை 7.30 மணிக்கு ஒரு ரவுண்டு; மாலை 3 மணிக்கு 2வது ரவுண்டு.

வருமானம்: சுமார் ரூ. 30 முதல் 45 வரை.

## தெரியாத பெயர்



## தெரியாத விவரம்

சொந்த ஊர்: கோவில்பட்டி.

வீடு: வாடகை வீடு (ரூ. 300) (ஓட்டேரியில்).

சினிமா: பிடிக்காது.

அனுபவம்: கடந்த இரண்டு வருடமாக.

வாடிக்கையாளர்கள்: நடைபாதை வியாபாரிகள்.

தகவல்: எஸ்.ஜி.
படம்: எம்.டி.




நிரஞ்சனின் சிரிப்புக்கு வயது 1.
மாதங்கிக்கு 6.

படம்: என். ராமசாமி

கிட்டதுக்கு நான்தான் காரணம்.''

''நீங்க சொல்றதும் எனக்குப் புரியலீங்க.''

''அம்மிணி! சின்ன வயசில இருந்தே நான் உன்ன விரும்பினேன். நாம ஒண்ணாவே வெளையாண்டிருக்கோம். நீ என்னோட சிரிச்சுப் பேசுனதை வெச்சு உனக்கும் என்மேல விருப்பம்னு நெனச்சிக்கிட்டேன். திடீர்ன்னு உனக்கும் சண்முகத்துக்கும் கண்ணாலமானத என்னால தாங்கிக்க முடியல. பணத்துக்கு ஆசைப்பட்டுதா நீ அப்புடிப் பண்ணிட்டேன்னு தப்பு கணக்குப் போட்டுட்டேன். எனக்குப் பைத்தியம் பிடிச்சுப் போச்சு. உன் மேல வெறுப்பு. ஒரு துவேஷம். உன்னைப் பழிவாங்க முடிவு பண்ணுனேன். அணு அணுவா சித்ரவதைப் படுத்தணும்னு நெனச்சேன். உன்ற புருஷன் மனசுல சந்தேகத்தை கொஞ்சம் கொஞ்சமா வளர்த்து விட்டேன். அவன் உன்னை கொடுமைப்படுத்தும்போது, அது ஆரம்பத்துல எனக்கு இன்பமா இருந்திச்சு. உன்னோட மனசும், உடம்பும் சின்னாபின்னமாவதைப் பாத்து நான் ஆனந்தப்பட்டேன்.

நாள் ஆக ஆக உன்னோட வூட்டுக்காரன் வெறியும் உன்ற கதறலும் அதிகமாப் போச்சு. 'அடப்பாவி, தப்பு செஞ்சிட்டியே'ன்னு என்னோட இன்னொரு மனசு குத்திக் காட்டிச்சு. உங்க ரெண்டு பேருகிட்டையும் உண்மையை சொல்லி அந்தக் கொடுமையை நிறுத்தணும், மன்னிப்புக் கேட்கணும்னுதான் நான் அன்னைக்கு உங்க வூட்டுக்கு வந்தேன். ஆனா விதி வேற மாதிரி விளையாண்டிடுச்சு. உன்ற புருஷன குத்தின கத்தியோட நீ நின்னிருந்த. இத்தனைக்கும் நான்தான் காரணம். இதுக்கு நான்தான் தண்டனை அனுபவிக்கணும்னு முடிவு பண்ணுனேன். எனக்கு நானே கொடுத்துக்கிட்ட தண்டனைதான் இது. தூக்கு கெடச்சிருந்தா இன்னும் சந்தோசப்பட்டிருப்பேன். சண்முகம் ரொம்ப நல்லவன். அம்மிணி என்ன மன்னிப்பையா?''

சொல்லிவிட்டு அந்தப் பக்கம் திரும்பிக் கொண்டான். அம்மணி பிரக்ஞையே இல்லாதவள் போல் அங்கிருந்து கிளம்பினாள். சண்முகத்தின் வாரிசை தழுவிக் கொள்வது தான் தனக்கு இப்போதைக்கு ஆறுதல் என்ற எண்ணம் அவளுள் எழுந்தது.



''ஒரு நிமிஷம்கூட பார்க்காம இருக்க முடியாதாம்...''

–பாலன்



'சமாதானக் கொடி.'

–மாலதி நீலமேகம்

# உன்னைப் பற்றிப் பெருமைப்படு!

அன்புள்ள தம்பு,

அமைச்சரவையில் இருந்த
ரு மனிதரைச் சந்தித்
தன். நல்ல வெள்ளை
டை; வெள்ளைப் பல்.
க குலுக்கினார். பிறகு
ரல்கள், எனது கைவிரல்
மாதிரங்கள் பத்திரமாக
ருக்கிறதா என்று சோதித்
க் கொண்டேன்.

காரணம், அவர் மீது 43
ற்றங்கள் இருக்கின்றன.
ரு கொலை செய்த குற்
ம் உட்பட.

இப்படிப்பட்ட மனிதர்
ர் உலா வருகிறார்கள்
பாது வாழ்வில். நம்மால்
ரணித்துக் கொள்ள முடிவ
ல்லை.

வேலை வாங்கித்தர நேர
பாக பணம் லஞ்சமாகக்
ட்டவர்; பல்கலைக்கழ
ம் என்ற பெயரில் படிப்பு
சால்லித்தர பல லட்சங்
ள் வாங்குபவர்; காட்டில்
ங்களை எல்லாம் வெட்டி
ணம் சம்பாதிப்பவர் —
வர்களெல்லாம் காரில்
ருகிறார்கள் கல்யாண
ட்டிற்கு. அவர்களுக்கு மரி
தை; முதல் வரிசையில்
தலிடம் உட்கார. காலில்
ழுகிறார்கள் மணமக்கள்!

இவர் சாராயம் விற்று
டியைக் கெடுத்தவர்; அது
ம் கள்ளச்சாராயம். இவ
க் கேட்டு அரசில் பெரிய
விகள் அளிக்கப்படுகின்
ன.

எப்படி இப்படிப்பட்ட
ல் மனிதர்களெல்லாம்
ரிய மனிதர்களாக
டை ஏறுகிறார்கள்? உல
கம் அவர்களை ஏற்றுக்
கொள்கிறது?

நாம் எல்லோரும் ஒரு பொய் விளையாட்டு விளையாடுகிறோம். அவன் திருடன் என்று தெரிகிறது. இருந்தாலும் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு கை குலுக்குகிறோம்.

'ஊரைக் கெடுத்த உத்தமி' என்று தெரிகிறது. இருந்தாலும் புன்னகையுடன் கைகூப்பி வீட்டுக்குள் அழைத்துச் செல்கிறோம்.

இப்படி போலித்தனமே வாழ்க்கையாகிவிட்டது. ஊர்மக்கள் போலி நாடகம் ஆடுகிறார்கள். விவஸ்தை கெட்டவர்கள்.

உனக்கும் இப்படி குறுக்கு வழியில் சம்பாதித்தால் என்ன என்று தோன்றுகிறது! ஆசை அடிக்கடி எழுகிறது.

மறந்தும் போலி வாழ்க்கை நடத்தாதே! நீ அசல். ஒரிஜினல் திருநெல்வேலி அல்வா.

அவர்களுக்கெல்லாம் அவர்கள் சந்ததிகளுக்கெல்லாம் காலம் என்ன வைத்திருக்கிறது என்று அவர்கள் அறிய மாட்டார்கள்.

ஏனெனில் இவ்வுலகில் சத்தியம், நேர்மை, சமத்துவம், சுதந்திரம் என்று சில விஷயங்கள் மாறா உண்மைகள்! அவற்றுடன் விளையாடுபவர்கள் அதற்கு ஒரு விலை கொடுத்துத்தான் ஆகவேண்டும். ஏனெனில் இப் பிரபஞ்சம் ஒரு நெறிமுறையில்தான் இயங்குகிறது. அந்த நெறிமுறைதான் சத்தியம், நேர்மை, அகிம்சை.

நீ ஓர் அசல்!

அசலாக வாழ்ந்துவிடு;

உன்னைப் பற்றிப் பெருமைப்படு.

நேர்வழியில் நில். நேர்வழியில் செல்.

சபலம் உன்னைத் தொட வேண்டாம்.

—டாக்டர்
எம்.எஸ். உதயமூர்த்தி










# எம்.ஜி.ஆர். எழுதிய கடிதம்

பற்றிய துணுக்குகளையும் பெறுவதற்காக ஒரு விளம்பரம் செய்திருந்தாராம். அப்படி வந்த பல நினைவுப் பொருட்களில் 1948ம் ஆண்டு, எம்.ஜி.ஆர். தன் கைப்பட எழுதிய ஒரு கடிதத்தைக் காட்டினார். பி.ஜி.எம். செல்வராஜ் என்கிற நண்பருக்கு எம்.ஜி.ஆர். எழுதிய பதில் கடிதம்.

அப்போது அவர் எழுதிய அந்தக் கடிதம், இப்போதும் சினிமாவில் நடிக்க வாய்ப்பு தேடி அலைபவர்களுக்குப் பொருந்தும் வகையில் உள்ளது. குமுதம் வாசகர்களுக்காக, செல்வராஜ் அவர்களின் ஒப்புதலோடு இந்தக் கடிதத்தை கொடுத்தார் விஜயன்.

எம்.ஜி.ராமசந்தர். கேம்ப் கோவை

நாள்: 19.2.48

அன்புள்ள சகோதரர் B.G. M.S. அவர்கட்கு, நலம். நலங்காண ஆவல். கடிதம் கிடைத்தது மகிழ்ச்சி.

தங்களை இதற்குமுன் சந்தித்ததுண்டா என்று நன்கு நினைவில்லை. ஆனால் கடிதத்திலுள்ள தங்கள் முகம் மட்டும் அறிமுகமானதாகத்தான் தெரிகிறது. அது எப்படியோ இருக்கட்டும். என் மனதிலுள்ள சில விஷயங்களை உங்களுக்கு கட்டாயம் எழுத வேண்டியிருப்பதற்காக உண்மையில் வருத்தமேயாயினும் தங்கள் கடிதத்திலிருந்து எனக்குண்டான கடமை என்னை எழுதும்படி தைரியப் படுத்துகிறது.

சோதரா! தங்களுடைய கடிதத்திலிருந்து தங்களுடைய



வாழ்க்கை கௌரவத்துடன் மனிதனாக வாழத் தகுதியுள்ள சௌகர்யங்களுடன் கூடிய ஒன்றாக இருக்குமென்று தெரிகிறது.

முதலாவது, சினிமாவிலிருக்கும் எல்லா நடிக நடிகையர்களும் உயர்வானவர்கள். நிறையப் பண வசதியுள்ளவர்கள், கருணையுள்ளவர்கள், சுயநலமற்றவர்கள் என்று எந்த நிமிடத்திலும் தவறிக்கூட நினைத்துவிட, நம்பிவிடக் கூடாதென்பது என் எச்சரிக்கை.

அன்பரே! தாங்கள் சினிமாவில் நடிக்க வேண்டுமென்று விரும்புவதற்கு அடிப்படையான காரணங்கள் என்னென்ன? பணத்திற்கா? புகழிற்கா?? கலைக்கா???

**பணத்தை** உத்தேசித்தாயின் தற்கால (தமிழ்) சினிமா உலகத்தில் மிகச் சிலரைத் தவிர மற்ற எல்லோரும் பரிதாபப்படத்தக்க நிலையில்தான் பணத்தைப் பெறுகிறார்கள் என்பதை என் அனுபவத்திலிருந்து நன்கு அறிந்திருப்பதால் அதை உத்தேசித்து சினிமாவில் சேரவிரும்புவது சரியல்ல.

**புகழை** உத்தேசித்தாயின் எந்தப் புதிய நடிகனும் சீக்கிரத்தில் (அதாவது சில விசித்திரமான காரணங்களால் அல்லாமல்) புகழடைந்ததில்லை. என் சரித்திர அனுபவம் (நான் சினிமாவில் நடிக்க ஆரம்பித்து குறைந்தது 12 வருடங்களாகின்றன) உங்களுக்குப் பாடத் தெரிந்திருப்பின் ஒருவேளை சீக்கிரத்தில் புகழடையலாம். (ஆனால் அதுவும் இரண்டாம் பட்சம்தான்.)

**கலையை** உத்தேசித்தாயின் எப்படிப்பட்டது கலையென்று இதுவரை தீர்மானிக்கப்படவே இல்லை. ஏனெனில் சில படங்கள் பாட்டிற்காகவும் சில சண்டைக்காகவும் சில தந்திரக் காட்சிகள் நிறைந்ததற்காகவும் இன்னும் இப்படிப்பட்ட வெவ்வேறு காரணங்களைக் கொண்டும் நன்கு ஓடுகிறது. ஆனால் யாரும் இம்மாதிரி காரணங்களைக் கொண்டு வெற்றியடையும் படங்களை கலை நுணுக்கம் வாய்ந்த படங்கள் என்று ஒத்துக் கொள்வதே இல்லை.

சினிமாவில் சொல்லுவதுபோல் டெக்னிக் நன்றாக இருக்கிறதென்று சொல்லப்பட்ட, நினைக்கப்பட்ட படங்கள் பெட்டியில் தூங்குகிறது. இதற்குக் காரணம் மக்களின் ருசி கோளாறா? அல்லது எடுக்கப்படும் (கலையென்று சொல்லும்) முறையின் கோளாறா? இவ்விரண்டில் எந்த முடிவுக்கு வந்தாலும் தற்சமயம் நம்மால் கலையைக் காண முடிவதில்லை.

ஆக, நான் நினைத்த காரணங்கள் எதுவும் எந்தவிதத்திலும் தங்கள் சினிமா பிரவேசத்துக்குப் பொருத்தமே இல்லை. ஆனால் நான் எந்தவிதத்தில் தங்களுக்கு உதவமுடியுமென்றால் தங்களுக்குத் தெரிந்த பணவசதியுள்ளவர்கள் படமெடுக்க முயன்றால் தங்களை நடிக்க வைக்க, தாங்கள் வெற்றியடைய நான் உதவியாயிருக்க முடியும்.

ஆனால் தாங்கள் கதையைத் தேர்ந்தெடுக்குமுன் தங்களுக்குப் பொருத்தமான வேடமுள்ள கதைதானா என்பதை நன்கு ஆலோசித்துத் தீர்மானித்த பிறகே கதையை முடிவு செய்ய வேண்டும். நடிப்பென்பது ஓரளவு ஒருவர் சொல்லிக் கொடுக்க வேண்டியதுதான் என்றாலும் அது இயற்கையாகவே ஒவ்வொருவரிடமும் இருக்கத்தான் செய்கிறது. தாங்கள் ஒவ்வொரு நாளும் காலையிலிருந்து இரவு வரை எத்தனைவிதமான உணர்ச்சிகளுடன் கூடிய மனிதர்களையும் நம்

மன உணர்ச்சிகளை நிமிடத்திற்கு நிமிடம் மாற்றக்கூடிய நிகழ்ச்சிகளையும் காண்கிறீர்கள்.

ஓர் உதாரணம்: ஒரு குழந்தை விளையாட்டின் மேல் உண்டான ஆர்வமிகுதியால் தெருவின் குறுக்கே ஓடுகிறது. அதே சமயம் தெருவில் வேகமாக லாரி வந்துவிடுகிறது. உடனே நீங்கள் உங்களையும் மறந்து கூச்சலிடுகிறீர்கள். அல்லது பயத்தினால் தூண்டப்பட்டு குழந்தையைக் காப்பாற்ற ஓடுகிறீர்கள். இதைப் போன்ற ஒவ்வொரு நிகழ்ச்சியும் நடிப்பின் (நடிப்புக் கலையின்) ஒவ்வொரு பகுதியேதான். ஆகையால், அன்பரே! (நடிப்பின் ஓரளவு கூடத் தெரிந்து கொண்டிராத) என் போன்றோரிடம் கற்றுக்கொள்ள முயலுவதைவிட, தாங்கள் காணும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மனதில் பதிய வைத்து அந்தந்த நிகழ்ச்சிகளில் ஈடுபட்டவர்களின் உணர்ச்சிகளைப் பார்த்து குறித்துக் கொண்டு தனியாகக் கண்ணாடியின் முன் நின்று பழகி (அதாவது தாங்கள் கற்பனை செய்யும் சம்பவத்திற்கும் தாங்கள் நடிப்பதற்கும் பொருத்தமுண்டா? தாங்கள் நேரில் கண்ட முகபாவத்திற்கும் தற்சமயம் தாங்கள் செய்து பார்க்கும் பாவத்திற்கும் பொருத்தமுண்டா என்பதை) பார்த்துக் கொண்டால் நாளடைவில் நடிப்பில் நிச்சயம் வெற்றி யடையலாம். இத்துடன் முக்கியமானது, ஒழுக்கம்.

இந்த ஒழுக்கத்தை தற்கால சினிமா உலகில் எல்லோரிடமும் காண முடியவில்லை. அதுமட்டுமல்ல... ஒழுக்கம் என்பது வெறும் கேலிக்கூத்து என்றுகூட நினைக்கும், பேசும், நடக்கும் நடிக நடிகையர்களும் இருக்கிறார்கள் என்பதை நடிகர் என்ற முறையில் தலைகுனிவுடன் வெட்கத்துடன் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. ஆனாலும் ஆர்வமுள்ள நேர்மையுள்ள தங்களைப் போன்ற வாலிபர்கள் நடக்கத் தீர்மானித்தால் தற்காலம் உள்ள இந்த இழிவான நிலையை மாற்றி நிச்சயம் வெற்றி காண முடியும். ஆகவே தாங்கள் சினிமாவில் நுழைவதன் முன் ஒழுக்கத்தைப் பற்றி நன்கு உணர்ந்து தாங்கள் எங்கிருந்தாலும் எந்த வேலையிலிருந்தாலும் அதை வாழ்க்கையின் ஒரு பகுதியாக்கிக் கொள்ளச் சிறிதும் தவறக் கூடாது.

ஆகையால் தாங்கள் தயவு செய்து நன்கு யோசித்து சினிமா நுழைவைத் தீர்மானிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். சிலர் பணத்தை வாங்கிக் கொண்டு சினிமாவில் சேர்த்து விடுவதாகச் சொல்லுவார்கள். அப்படிப்பட்ட அன்பர்களிடம் தாங்களோ தங்களைப் போன்ற நண்பர்களோ சிக்காமல் பார்த்துக் கொள்ளத் தவறவேண்டாம்.

—தகவல் படங்கள்: செல்லப்பா



# 1942 எ க்ரைம் ஸ்டோரி

—வெ.ப. சுப்பிரமணிய முதலியார்

> 1942'ம் ஆண்டு வெளிவந்த தமிழ்க் கதைகளின் தொகுப்பில் இக்கதையும் ஒன்று. நாற்பத்திரண்டு வருடங்களுக்கு முன்னால் எழுதப்பட்ட கிரைம் கதையின் சுவையை இப்போதும் உணர முடிகிறது.

வயிர வர்த்தகத்திற்குப் பேர் போனதனால் வழக்கமான பழைய பெயர் மாறி வயிரபுரமென வழங்கும் பெரிய நகரிலே பங்களாக்கள் மிகுந்துள்ள பாகத்திலே அநேக ஏக்கர்கள் அடங்கிய மிக விசாலமான தோட்டத்தில் அமைந்த பெரிய பங்களா ஒன்று உண்டு. அதனினும் பெரிய பங்களா அந்தப் பக்கத்தில் இல்லை. அதில், சில காலத்துக்கு முன்பு வசித்தவர்கள் சிலர் திரவியச் சேதமும், சிலர் உயிர்ச் சேதமும் தற்செயலாகத் தொடர்ந்து அடைந்தனர். மேற்கூறிய காரணத்தினால் ஒருவரும் குடியிருக்க வருவாரில்லாமல் அந்தப் பங்களா பாழாய்க் கிடந்தது.

ஒருநாள் காலை ஒன்பது மணிக்கு ஒரு லாரி அந்தப் பங்களா முகப்பில் வந்து நின்றது. அதில் நெருக்கமாக நிரப்பப்பட்டிருந்த கட்டில்கள், சோபாக்கள், மேஜைகள், நாற்காலிகள், உடுப்புப் பெட்டிகள் குளிக்குந் தொட்டிகள் முதலிய குடியிருப்போர்க்கு வேண்டிய பல தட்டுமுட்டுச் சாமான்களை லாரி ஓட்டியும் அவனுடன் வந்த வேலைக்காரனும் பங்களாவுக்குள்ளே கொண்டு போய்ச் சேர்த்தார்கள். முன்னதாகவே வாடகை கொடுக்கப்பட்டிருந்ததனால் லாரி தாமதித்து நில்லாமல் திரும்பிப் போய்விட்டது. வேலைக்காரன் கட்டட முழுவதும் பெருக்கிச் சுத்தஞ் செய்து, இருக்கத்தக்க இடங்களில் சாமான்களைச் சேர்த்து ஒழுங்குப்படுத்தி வைத்துவிட்டு ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான்.

லாரி போய் நெடுநேரமாகு முன்னே, அங்கே பல பதினாயிர ரூபாய் விலை பெறுமான பெரிய ரோல்ஸ் ராய்ஸ் மோட்டார் வண்டி ஒன்று அந்தப் பங்களாப் படிப்பகத்தில் வந்து நின்றது. அதிலிருந்து பேரழகுடைய மாதர் இருவர் இறங்கி உள்ளே போனார்கள். ஒருத்தி நடுவயசு கடவாதவளும், மற்றொருத்தி சற்றேறக்குறையப் பதினாறு பருவமானவளுமாயிருந்ததையும் இருவர் முகச் சாயலொற்றுமையையும் பார்த்தவர்கள், அவர்கள் தாயும் மகளுமென்று சற்றும் சந்தேகமின்றித் தெரிந்து கொள்வார்கள். அவர்

கள் அணிந்திருந்த பெருவிலை பெறும் ஆடையாபரணங்கள், அவர்கள் பெருஞ் செல்வப் பெரு மாட்டிகளென்று எடுத்துப் பேசும் படி இருந்தன.

தங்களைக் கண்டதும் எழுந்து நின்ற வேலைக்காரனிடம் சில வேலைகள் செய்யும்படி சொல்லி விட்டு, அவன் தங்களுக்காகச் சுத் திப்படுத்தி வைத்திருந்த அறைக் குள்ளே அவர்கள் சென்றார்கள்.

வேலைக்காரன் ஒருவனா யிருந்தாலும் அவன் அந்த மாதர் களுக்கு அவசியமான எல்லா வேலை களையும் செய்யத் தெரிந்தவனா யிருந்தான். அவன் அங்கு வந்த மோட்டார் வண்டியைப் பங்களா வின் பின்புறத்துக் கேட்டு வாசற் பக்கத்திலிருந்த மோட்டார்ப் புரை யில் ஓட்டிக் கொண்டு போய்விட்டு அந்தப் புரையைப் பூட்டித் தன் எசமானிகளுக்கும் தனக்கும் வேண் டிய உணவுப் பொருள்களைச் சமீ பத்தில் இருந்த சாப்பாட்டு விடுதி யில் வாங்கிவரப் போனான்.

மாலை அஞ்சு மணிக்கு மாதர்கள் இருவரும் தங்கள் மோட் டார் வண்டியில் ஏறி வெளியே புறப்பட்டுப் போனார்கள். பக்கத் துப் பங்களாவாசிகள் அம்மாதர் களுடைய நடையுடைபாவனைகள் புதுமையாயிருந்ததையும், அவர்கள் எவருடனும் கலந்துகொள்ளாமல் பிரத்தியேகமாக இருக்கப் பிரியப் படுபவர்களாகத் தோன்றியதையும் கவனித்து, 'அவர்கள் யார்? எங் கிருந்து வந்தார்கள்? எதற்காக வந் தார்கள்? தங்கள் செல்வ நிலைக்குத்

பேரழகுடைய மாதர் இருவர்



தக்கபடி பல வேலைக்காரர்கள் இல்லாமல் ஒரு வேலைக்காரனுடன் இருப்பானேன்? யாரும் பழக இடங்கொடாமல் இருப்பானேன்?' என்பவைகளைத் தெரிய ஆவலுள்ளவர்களாயிருந்தார்கள்.

மாலை அஞ்சு மணிக்கு வெளியே போனவர்கள், இரவு ஒன்பது மணியான பிறகு திரும்பி வந்தார்கள்.

அவர்கள் இருந்த பங்களாவுக்கு எதிர் பங்களாவிலிருந்த இருபது பிராயமுள்ள இளைஞன் ஒரு நாள் அவர்கள் வெளியே போகும்போது பார்த்து இளையவளுடைய அழகில் ஈடுபட்டு மோகம் தலைக்கேறி, அவர்கள் எங்கே போய் வருகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பியிருந்தான்.

அப்படி இருக்கும்போது ஒரு நாள், மிகவும் மனோகரமாயிருந்த மாலை நேரத்திலே, பொழுது மயங்குந் தருணத்திலே இளையவள் முந்திய நாட்களிற்போல மூத்தவள் துணையாகப் போகாமல் தனியே தன் மோட்டார் வண்டியைத்தானே ஓட்டிக்கொண்டு போவதை அந்த இளைஞன் காணவே, அவள் போகுமிடத்தை அறியத் தீவிரமான ஆவலுடையவனானான். அதிர்ஷ்டவசமாக ஒரு வாடகை மோட்டார் வண்டி வரக்கண்டு அதிலே தாவியேறி வண்டிக்காரனிடம் முந்திய வண்டிக்குப் பிந்தித் தொடர்ந்து போகும்படி சொன்னான். சிறிது நேரம் சென்றபின் முந்திய வண்டி ஒரு பெரிய வயிர வியாபாரியின் மாளிகை வாசலில் நின்றது. வாலிபன் அந்த வண்டி அங்கு நின்ற காரணம் அறியானாய்ப் பலவாறு சிந்தனை செய்வானானான். 'இவளுக்கு அவனிடத்திலே என்ன காரியம்? காதல் காரணமாயிருக்குமா? இராது. இவள் இளைய கட்டழகி; அவன் முதிய குரூபி. பெரும் செல்வமுடையளாதலால் பணத்துக்கு ஆசைப்பட்டு அவனிடம் வரமாட்டாள். வேறு யாது காரணமென்று தெரிய முயல்வேன்' என்று கருதி, ஒருவரும் அறியாதபடி ஒதுங்கிச் சென்று, அவளும் அந்த வியாபாரியும் பேசுவது கேட்கும்படியான தூரத்திலே ஒளிந்து நின்று ஒட்டுக் கேட்பானானான்.

மாது: உங்களிடத்துள்ள வயிர நகைகளில் நான் தெரிந்தெடுத்து விலை முடிவு செய்து வேறு யாருக்கும் விற்று விடாமல் வைத்திருக்கும்படி சொல்லிப் போனேன். அந்த வயிர மாலையை வாங்க வந்திருக்கிறேன்.

வியாபாரி: அப்படியே வைத்திருக்கிறேன். வாங்கிக் கொண்டு போகலாம்.

மாது: உடனே வாங்க முடியாது; என் தாய் வியாதியாய்ப் படுத்திருக்கிறாள்; அவர்களிடம் காட்டி அவர்கள் ஒப்புக்கொண்ட பின் வாங்க வேண்டும். நீங்கள் அந்த மாலையை எடுத்துக்கொண்டு என்னுடன் வாருங்கள். அதை அவர்களிடம் காட்டிக் கிரயத்தைத் தந்து உங்களை என் வண்டியிலேயே திரும்ப அனுப்பி விடுகிறேன்.

வியாபாரி: தங்கள் இஷ்டப்படி செய்யச் சித்தமா இருக்கிறேன்.

இவ்வாறு இவர்கள் இங்கே பேசிக் கொண்டிருந்தபோது தன் மகளோடு புறப்படாமல் பங்களாவில் தங்கி இருந்த தாய், சிறிது தூரத்திலே இருந்த பிரபல வைத்தியர் ஒருவரை ஒரு வாடகை மோட்டார் வண்டியிலே போய்ப் பார்த்தாள். அவர், அவர்களுடைய விலையுயர்ந்த நகை உடைகளைக் கண்டு மிகுந்த மரியாதையுடன் வரவேற்று, ''அம்மணி தாங்கள் வந்த காரியம் என்ன?'' என்று கேட்

---

''ஒண்ணு பெரிய வீட்டுக்கு, இ
னொண்ணு சின்ன வீட்டுக்கு.''

— சீர்காழி வி. ரேவ

டார். அவள், ''என் கணவர் என் பங்களாவில் இருக்கிறார். அவர் அசாதாரணமான ஒருவகைப் பைத்திய நோய் கொண்டவர். அவரிடமிருந்த வயிர மாலையை நான் வாங்கி வைத்துக்கொண்டு திருப்பிக் கொடுக்கவில்லையென்று பல முறை இரைந்து சொல்லி என்னையும் என் மகளையும் உறங்க விடுகிறாரில்லை. யாரேனும் அந்நியரைக் கண்டால் சிறிது தெளிவுற்றுப் புத்தி சுவாதீனமுள்ளவரைப் போலப் பேசி, தாம் பைத்தியக்காரர் அல்லவென்று சொல்லுவார். நீங்கள் சிகிச்சை செய்து குணப்படுத்த வேண்டும். தாங்கள் தனியாய்ப் பார்ப்பது நல்லது. என்னைக் கண்டால் கோபம் கொள்வார்,'' என்று சொன்னாள்.

அவர், ''அம்மா, இதற்காக இவ்வளவு சிரமப்பட்டு நீங்கள் இங்கே வந்திருக்க வேண்டாமே. இந்த விவரத்தை டெலிபோனில் தெரிவித்திருந்தால் நான் வந்து வேண்டியதைச் செய்திருப்பேனே,'' என்று சொல்லி அவள் வந்த வாடகை மோட்டார் வண்டியை அனுப்பி விட்டுத் தம் சொந்த மோட்டார் வண்டியில் அவளுடன் புறப்பட்டார்.

இதற்கு முன் அவள் மகள் வயிர வர்த்தகனுடன் பங்களாவுக்கு வந்து அங்கே பல பத்திரிகைகளும் சில கதைப் புத்தகங்களும் வைத்திருந்த மேஜைப் பக்கத்திலே மெத்தையிட்டிருந்த நாற்காலியில் அவனை அமரச் செய்து அவனிடமிருந்த வயிர மாலையை வாங்கித் தன் தாயிடம் காட்டி வருவதாகச் சொல்லிப் போனாள். போனவள் பத்து நிமிடஞ் சென்றதும் வராததனால் அவன் பொறுமை இழந்து மன வருத்தங் கொள்ளும் சமயத்தில் வைத்தியருடன் வந்த தாய், அவருக்கு அவனிருக்கும் அறையைக் காட்டி அவனைப் பார்க்கும்படி சொல்லிவிட்டுத் தன் அறைக்குள்ளே போனாள்.



வைத்தியர் அவனிடம் போய், ''உமக்கு என்ன நோய்? அது செய்யுங் குணங்கள் என்ன?'' என்று கேட்டார். அவ்வாறு கேட்கவே அவன் பிரமித்து, ''என்னை ஏன் இப்படிக் கேட்கிறீர்? உமக்குப் பைத்தியம் பிடித்து இருக்கிறதா? எனக்கு யாதொன்று வியாதியும் இல்லை. உமக்கு இங்கு என்ன வேலை?'' என்று மாறிக் கேட்டான். வைத்தியர் அந்நியரைக் கண்டால் அவனுக்கு அறிவு சிறிது தெளியுமென்று கேட்டிருந்தவராதலால், கடகடவெனச் சிரித்து, அவனைத் திரும்பவுங் கேள்வி கேட்பாராய், ''நேற்று ராத்திரி நன்றாய்த் தூங்கினீரா? என்ன உணவுகள் உண்டீர்?'' என்றார், எனவே, அவன் கோபமுண்டு எரிச்சலுடன் இரைந்து, ''நீயும் உன் மருந்தும் நாசமாய்ப் போக! நான் நோயாளியன்று!'' என்றான்.

இவ்வாறு கூறிய அந்தச் சமயத்தில், அவன் மனத்தில், ''வஞ்சிக்கப்பட்டுவிட்டோமோ'' என்ற சந்தேகம் ஜனிக்க, ''ஓ! என் வயிர மாலை! ஆ! என் வயிர மாலை! ஐயோ! போய்விட்டது. அவள் எங்கே போனாள்?'' என்று அலறினான். அவன் அவ்வாறு அலறவும், அபார விலையுடைய ஆபரணமிழந்த ஏக்கத்தால் உள்ளபடியே பைத்தியக்காரன் முகம் போலாய்விட்டது. அவன் முகத்தின் அலங்கோலத் தோற்றமும் வைத்தியருக்கு அவன் பைத்தியக்காரனென்ற எண்ணத்தை உறுதிப்படுத்தியது. உடனே அவர், ''நான் கொடுக்கும் மருந்தை நீர்

சில நாள் உட்கொண்டு, நான் சொல்லுகிறபடி பத்தியமான உணவுகளை உண்டு வந்தால் உமக்குக் குணமாய்விடும். பதறாதேயும்'' என்று அமைதியாகச் சொன்னார்.

அந்தக் கேட்டு அவன், அடக்க முடியாத கோபங்கொண்டு ஆவேசத்துடன் எழுந்து, ''மரியாதையில்லாமல் என்னிடம் ஏன் வலிய வந்தாய்? உன் பாழான மருந்து யாருக்கு வேணும்? எனக்கு உன்னுடைய கேடுகெட்ட வைத்தியஞ் செய்யும்படி நான் கேட்டுக் கொண்டேனா? நான் நோயாளியுமல்ல, பைத்தியக்காரனுமல்ல,'' என்று சொல்லிவிட்டு, ''என் வயிர மாலை! என் வயிர மாலை! என்னை ஏமாற்றி விட்டாள்!'' என்று கதறினான்.

வைத்தியர், பலத்த தம் கைகளினால் அவனை உறுதியாகப் பிடித்துப் பக்கத்தில் இருந்த சோபாவில் இருத்தினார். அவன் திமிறி எழ அவர் திரும்பப் பிடித்து இருத்த, இவ்வாறாக இருவரும் மல்லாடிக் கொண்டிருக்கும்போது, தாயும் மகளும் வயிர மாலையை எடுத்துக் கொண்டு எவரும் அறியாமல் பங்களாப் பின்புறமாகப் போய், முன்னமே அவர்கள் வேலைக்காரன் அவர்கள் கற்பனைப்படி பின்பக்கத்துக் கேட்டு வாசலருகே ஆயத்தமாக நிறுத்தி வைத்துக் காத்துக் கொண்டிருந்த ரோல்ஸ்ராய்ஸ் வண்டியில் ஏறிப் போய்விட்டார்கள். சிறிது நேரம் சென்ற பின்புதான் வைத்தியரும் வர்த்தகனும் வயிர மாலையுடன் மாதூர்கள் மறைவாய்ப் போய்விட்ட விவரந் தெரிந்து வருந்தலுற்றார்கள்.

''கேவலம் வைத்தியந் தெரியாத ஒரு பெண் ''வைத்தியரெனப் பேர்பெற்ற நான் எனக்குரிய வைத்தியத் தொழில் செய்தலில் ஏமாறும்படி செய்து விட்டாளே?'' என்று வைத்தியர் வெட்கமும் விசனமும் அடைந்தார். வர்த்தகன், ''நெடுங்காலம் எத்தனையோ கோடி ரூபாய் பெறுமான இரத்தினங்களையும் இரத்தின ஆபரணங்களையும் எத்தனையோ பேரிடம் ஏமாறாமல் வாங்கியும் விற்றும் பெரு லாபம் பெற்ற நான், இன்று ஒரு சிறிய பெண்ணின் உபாயத்தால் பெரிய அபாயத்துக்குள்ளாகிப் பெரு நஷ்டமுற்றேனே!'' என்று மனம் உடைந்து வருத்தம் அடைந்தான். இளைஞன் தன் மனத்தைக் கவர்ந்த மாது, வயிர மாலையைக் கவர்ந்து போனாளென்று தெரிந்தபோது, ''இதன் முன் அவள் அழகைப்போல ஆச்சரியமானது ஒன்றுமில்லையென்றிருந்தேன்; இப்போது அதனினும் அதிக ஆச்சரியமானது அவள் அறிவென்று தெரியலானேன்'' என்று எண்ணினான்.

—நன்றி: அல்லயன்ஸ் வெளியீடான 'கதைக் கோவை' கதையின் பெயர் 'பருவயிர மணிமாலை'


நிறுவிய ஆசிரியர்
எஸ்.ஏ.பி.
நிர்வாக ஆசிரியர்
டாக்டர். எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்
பொறுப்பாசிரியர்
சுஜாதா
பதிப்பாளர்
பி.வி. பார்த்தசாரதி
துணை ஆசிரியர்
லேனா தமிழ்வாணன்
உதவி ஆசிரியர்
ப்ரியா கல்யாணராமன்
நிர்வாக இயக்குநர்
பி. வரதராசன்
நிதி மேலாளர்
டி.ஈ. கிருஷ்ணமாச்சாரி
அச்சிட்டவர்
ஜெ. ஸ்ரீதர்
வடிவமைப்பு ஆலோசகர்
டிராட்ஸ்கி மருது
தலைமை நிருபர்
பால்யூ
ஆசிரியர் குழு
இரா. மணிகண்டன், ரஞ்சன், கிருஷ்ணா டாவின்ஸி







டாக்டர். ராதாகிருஷ்ணன்
கன்கார்டியா பல்கலைக்கழகம்,
கனடா.

சில நாட்களுக்கு முன்பு காஞ்சீபுரத்தில் இருக்கும் என் டாக்டர் நண்பர் ஒருவரைப் பார்க்கச் சென்றேன். அறுவை சிகிச்சையில் பெரிய நிபுணர். என்னிடம் பேசிக் கொண்டிருக்கும் போது சொன்னார்.

''சார் என்னுடைய பேரன் ஐந்தாம் வகுப்பு ஒரு காஞ்சீபுரம் பள்ளியில் படிக்கிறான். ஒரு நாள் பள்ளிக் கூடத்தில் இருந்து வந்து தாத்தா கம்ப்யூட்டர் என்றால் என்ன என்று உங்களால் திட்டவட்டமாக வரையறுத்துக் கூற முடியுமா– என்றான். நான் அசந்து விட்டேன்.''

''ஏன் அசந்து விட்டீர்கள்?'' என்றேன்.

''கம்ப்யூட்டர் என்றால் ஒட்டு மொத்தமாகத்தான் எனக்குத் தெரியும். எப்படி சார் அதற்கு இலக்ஷணம் கூற முடியும்? நீங்கள்தான் கம்ப்யூட்டர் படித்திருக்கிறீர்கள் பதில் சொல்லுங்கள். நான் புரிந்து கொள்ளும் வகையில் சொல்ல வேண்டும்,'' என்றார்.

# நான்தான் சக்ரவர்த்தி

## - கர்ட் வானகட்



2081ம் ஆண்டு.

சமத்துவம் என்பது கடைசியில் சாதிக்கப்பட்டு விட்டது. கடவுளின் கீழ், சட்டத்தின் முன், ஏன் எல்லாவிதங்களிலுமே எல்லோருமே சமம். ஒருவரை விட ஒருவர் அறிவு ஜீவியாகவோ ஒருவரை விட ஒருவர் அழகானவராகவோ இல்லவே இல்லை. இதெல்லாம் 211, 212, 213 அரசியல் சாசன சட்டத் திருத்தங்களும், அமெரிக்கச் சலுகை அதிகாரிகளின் தொடர் கண்காணிப்பினாலுமே சாதிக்க முடிந்தது.

இருந்தும், சில சின்ன விஷயங்களில் சிக்கல்கள் ஏற்படாமல் இல்லை. ஏப்ரல் மாதத்தில் வசந்த

தமிழில்:

ப்ரியா கல்யாணராமன்

காலம் ஏன் வராது என்பது என்று இன்னும் மக்களைக் குழப்புகிறது. சற்று ஈரமான அந்த மாதத்தில் தான் இரக்கமே இல்லாமல் சலுகை அதிகாரிகளின் ஆட்கள் 14 வயது ஹாரிஸனை இழுத்துப் போனார்கள்.

ஹாரிஸனின் அப்பா ஜார்ஜும், அம்மா ஹேசலும் ஓரளவுக்கு மேல் யோசிக்கும் திறம் இழந்ததால், இந்தத் துயரம் கூட அவர்களைப் பெரிதாகப் பாதிக்கவில்லை.

சராசரி அறிவுத் திறன்தான் ஹேசலுக்கு இருந்தது. அவள் சிந்தனை என்பது சின்னச் சிதறல்கள். அவ்வளவுதான். அதற்கு மேல் அவளால் யோசிக்க முடியாது. ஜார்ஜுக்குச் சற்றுக் கூடுதலான அறிவுத் திறன். அதனால் அவன் காதில், மூளையைச் சமயங்களில் கொஞ்சம் மந்தமாக்கும் ரேடியோ பொருத்தப்பட்டிருந்தது. அவன் அதை எப்போதும் மாட்டி இருக்க வேண்டும் என்பது சட்டம். அந்த ரேடியோ, அரசு அலைவரிசைக்கு டியூன் செய்யப்பட்டிருந்தது. அதனால், ஒவ்வொரு 20 நிமிடங்களுக்கு ஒரு முறை டிரான்ஸ்மீட்டர் ஏதாவது ஒலியை அனுப்பி, ஜார்ஜ் போன்ற அறிவு ஜீவிகள் தம் அறிவின் பயனால் ஏதாவது முறையற்ற சலுகை பெற்றுவிடாமல் தடுத்துக் கொண்டிருக்கும்.

இப்போது ஜார்ஜும் ஹேசலும் டி.வி. பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஹேசலின் கன்னத்தில் கண்ணீர்க் கோடுகள். ஆனால், அவள் இப்போது எதற்காக அழுதாள் என்பதே அவளுக்கு மறந்துவிட்டது. டி.வி.யில் பாலே நடனம் ஒரு முடிவுக்கு வந்திருந்தது.

ஜார்ஜின் மூளையில் மணி அடித்தது. அலார ஒலி கேட்டு அலறும் திருடனைப்போல் ஜார்ஜின் எண்ணங்கள் ஒரு வினாடி அலறின.

''நடனம் நல்லா இருந்தது இல்ல?'' என்றாள் ஹேசல்.

''ம்?''

''டி.வி. டான்ஸ்... நல்லா இருந்தது.''

''ம்.'' அவன் நடனத்தை பற்றி நினைக்க முயன்றான். அ[illegible] அப்படி ஒன்றும் பிரமாதமாய்ப் ப[illegible] வில்லை. யார் ஆடி இருந்தாலு[illegible] இப்படித் தான் இருந்திருக்கப் போ[illegible]றது. நளினம் குறைய கற்கள், மர[illegible]துகள்கள் போன்றவை நிறைந்[illegible] பைகளை அவர்கள் சுமந்திருந்தா[illegible]கள். தங்கள் அழகு வெளிப்படாம[illegible] இருக்க முகமூடியால் முகத்[illegible] மறைத்திருந்தார்கள். இதனா[illegible] யாரும் அவர்களுடைய அழகில் மய[illegible]கவோ, நளினத்தில் மனதைப் ப[illegible] கொடுக்கவோ முடியாது. ஆடுபவ[illegible]களுக்கு இதுபோன்ற முட்டுக்கட்டை[illegible]கள் கூடாது என்று லேசாக நினைக்[illegible] ஆரம்பித்தான் ஜார்ஜ். ஆனால்[illegible] அவன் சிந்தனை ஓட்டம் காது[illegible] ரேடியோவின் ஓசையால் தகர்ந்தது.

ஜார்ஜ் லேசாகத் துடித்தான். ஆடிக்கொண்டிருந்த எட்டு பேரில் இரண்டு ஆட்டக்காரிகளும் அதே போல் செய்தார்கள்.

ஜார்ஜின் லேசான துடிப்பை ஹேசல் பார்த்தாள். அவளுக்கு




இரண்டு படங்களுக்கும் குறைந்தபட்சம்

அறிவு குறைவு என்பதால் ஜார்ஜ் போல் மன ஊனமாக்கும் கட்டாயம் ஏதுமில்லை. ஜார்ஜின் ரேடியோ ஓசை என்ன என்பதை தெரிந்து கொள்ள முனைந்தாள். அவள் கேட்டதற்கு, 'பேனாவால் பால் பாட்டிலை இடிக்கும் ஓசை,'' என்றான்.

''வித்தியாசமான ஓசையெல்லாம் கேட்கிறது, வினோதமா இருக்கும் இல்ல. அதுவும் அவங்களுக்குனு தோணுது பாருங்க,'' என்றாள் லேசான பொறாமையுடன்.

''நான் டயானா மாதிரி தலைவியா இருந்தா என்ன செய்வேன் தெரியுமா? ஞாயிற்றுக்கிழமை தோறும் கோயில் மணி ஓசை மட்டும் ஒலிக்கச் செய்வேன். மத்ததை கௌரவிச்ச மாதிரி இருக்குமில்ல,'' என்றாள் ஹேசல்.

''வெறும் மணி ஓசை?''

''ம், கணீர் கணீர்னு அடிக்க வைப்பேன். நான் நல்ல தலைவியா இருப்பேனில்ல?''

''எல்லாரையும் போலத் தான் இருப்பே.''

''யார் கண்டா. சராசரியை விட சிறப்பா இருக்கலாம்.''

''இருக்கலாம்.'' ஜெயிலில் இருக்கும் சராசரி அல்லாத தன் மகன் ஹாரிஸனைப் பற்றி அவன் நினைத்துக் கொண்டான். ஆனால், அவன் மண்டையில் ஒலித்த 21 துப்பாக்கி மரியாதை வெடி ஓசை எண்ணத்தைத் தடுத்தது.

''ஐயோ, பயங்கர சத்தம்,'' என்று அலறினான்.

சப்தம் அவனை ஆட்டி வைத்துவிட்டது. உடல் வெளுத்து நடுங்கிப் போனான். கண்களில் கண்ணீர் குளம் கட்டிவிட்டது. எட்டு ஆட்டக்காரிகளில் கீழே விழுந்த இரண்டு பெண்கள் கூடத் தலையைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

''பார்க்க ரொம்ப டயர்டாத் தெரியறீங்க. அப்படியே காலை நீட்டி சோஃபாவில் படுங்க. உங்க திறமையை ஊனமாகக் கட்டி இருக்கற பையைத் தலைகாணியில் வெச்சுக்கலாம் பாருங்க,'' என்றாள். அவன் கழுத்தைச் சுற்றித் தொங்கும் 47 பவுண்டு எடை கொண்ட கேன்வாஸ் பையைத்தான் அவள் குறிப்பிட்டாள்.

''போய் சுமையைக் கொஞ்சம் கீழே நகர்த்தித் தான் வையுங்களேன். கொஞ்ச நேரம் நீங்க எனக்குச் சமமானவரா இல்லாட்டிப் பரவாயில்லை,'' என்றாள்.

கையால் பையை அளந்து பார்த்தான். ''பரவாயில்லை. பழகிப் போச்சு. இது ஒரு சுமையாவே தோணறதில்லை. என்னோட ஒரு பகுதியாகவே இது ஆயிடுச்சு.''

''கொஞ்சம் நாளாவே ரொம்ப அலுத்துச் சலித்துப் போயிட்ட மாதிரி இருக்கீங்க. அந்தப் பையோட கீழ்ப் பக்கம் சின்ன ஓட்டை போட்டு சில ஈயக்குண்டுகளை எடுத்துட்டா என்ன? கொஞ்சம்... கொஞ்சம் எடுத்தாக்கூடப் போதும்.''

''வெளியே எடுக்கற ஒவ்வொரு குண்டுக்கும் ரெண்டு வருஷ




,தியாசங்கள் உள்ளன. விடை: 34'ம் பக்கம்.

ஜெயில் தண்டனையும் இரண்டா யிரம் டாலர் ஃபைனும் கட்டணும், தேவையா?'' என்றான் ஜார்ஜ்.

''வீட்டுக்கு வரும்போது எடுத் தாப் போதுங்கறேன். வெளியேதான் மத்தவங்களோட போட்டி கூடாது, சமனப்படுத்தணும்னு இதையெல் லாம் கட்டிக்கிட்டு இருக்கணும். வீட் டில் என்ன?''

''நான் அப்படி செஞ்சா, உடனே மத்தவங்களும் செய்ய ஆரம் பிச்சுடுவாங்க. இப்படியே போனா, கடைசியில் பழையபடி எல்லோரும் எல்லோருடனும் போட்டி போடற அந்த இருண்ட காலத்துக்கே திரும் பப் போயிருவோம், உனக்கு அதில் சம்மதமா?''

''ஐயோ, அதை வெறுக்க றேன்.''

''ம், அதுதான். சட்டத்தை ஏமாத்த ஆரம்பிச்சா உடனே சமு தாயத்துக்கு என்ன ஆகும்? யோசிச் சுப் பாரு.''

ஹேசல் பதில் சொல்லி இருக்காவிட்டால், ஜார்ஜாலும் சொல்ல முடியாமல் போயிருக்கும். அவன் மண்டையுள் தான் சைரன் ஒலித்து விட்டதே!

அது தெரியாமல் ஹேசல், ''சமுதாயமே பாழாயிடும்னு நினைக் கறேன்.'' என்றாள்.

''என்ன?'' என்றான் ஜார்ஜ் ஒன்றும் புரியாமல்.

''சமுதாயத்தைப் பத்திப் பேசிக்கிட்டிருந்தோமே,'' என்றாள் அவளும் சற்றுக் குழம்பி.

''அப்படியா?'' என்றான் ஜார்ஜ்.

திடீர் செய்தி அறிக்கைக்காக டி.வி. நிகழ்ச்சி தடைபட்டது. எல்லா அறிவிப்பாளர்களையும் போல் இந்த அறிவிப்பாளரும் மரபுத் தனமாய் முதலில் பேச வேண்டி இருந்ததால், வழக்கம்போல் செய்தி அறிக்கை எதைப் பற்றி என்றே புரியாமல் இருந்தது. அரை நிமிடம் முயன்று பெருத்த ஆரவாரத்துடன், ''சகோ தர, சகோதரிகளே,'' என்று சொல்ல முயன்ற அறிவிப்பாளர், கடைசியில் முயற்சியைக் கைவிட்டு அறிக்கையை ஒரு நடன மாதுவிடம் படிக்கக் கொடுத்தான்.

''பரவாயில்லை. நல்லா முயற்சி பண்ணினான். அதுவே பெரிசு. கடவுள் அவனுக்குக் கொடுத் திருக்கற திறமையை முடிந்தவரை சிறப்பா வெளிப்படுத்த நல்ல முயற்சி. இவ்வளவு கஷ்டப்பட்டு வாசிக்க முயற்சி செஞ்சதுக்கு சம் பளத்தைக் கூட்டித் தரணும்,'' என் றாள் ஹேசல்.

நடன மாது செய்தி அறிக் கையைப் படிக்க ஆரம்பித்தாள். முழுமையாக மறையும்படி முகமூடி எல்லாம் அணிந்ததிலிருந்தே, அவள் ஒரு பேரழகியாக இருக்க வேண்டும் என்பதை யூகிக்க முடியும். தன் அதீத செயல்திறனை முடக்கிச் சமனப்படுத்த அவள் அணிந்திருந்த பைகள், 200 பவுண்டு ஆண்கள் அணியும் அளவு பெரிதாக இருந்தன. இதிலிருந்தே அவள் நளினமும் கவர்ச்சியும் பொருந்திய வள் என்பதும் புரிந்தது.

பெண்கள் பேசக் கூடாத தொனியில் அவள் பேச ஆரம்பித்து விட்டதால், மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, தன் ஜில் குரலை சாதா ரணமாக மாற்றிக்கொண்டு மேலே படிக்க ஆரம்பித்தாள்.

''அரசைக் கவிழ்க்க சதி செய் ததாகச் சந்தேகத்தின் பேரில் குற் றம் சுமத்தப்பட்ட ஹாரிஸன் பெர் ஜான், வயது 14, ஜெயிலிலிருந்து தப்பி விட்டான். அவன் ஒரு மேதாவி; விளையாட்டு வீரன். அதி பயங்கரமானவன்.''

---

ஸாரி, பூனை பால் குடிக்கப் போயிருக்கிறது.

''அந்த பூனைக்குட்டி பணக்கார வீட்டுல வளருதுன்னு நெனைக் கிறேன்.''

''எப்படி?''

''அவங்க அம்மாவை 'மம் மியாவ்'ன்னு கூப்புடுறத வச்சுத்தான்.''

— ஏ.எஸ். யோகானந்தம்

போலீசார் எடுத்த ஹாரிஸ னின் புகைப்படம் தலைகீழாகவும் பக்கவாட்டிலுமாக டி.வி. திரையில் காட்டப்பட்டது. இன்ச்களும், அடிக்கணக்குகளும் குறிக்கப்பட்ட காட்போர்ட் பின்னணியுடன் புகைப்படம் காட்டப்பட்டதால் அவன் ஏழடி உயரம் என்பது துல்லியமாகத் தெரிந்தது.

அவன் அணிந்திருந்த திறமையை முடமாக்கும், கவச குண்டலங்களைப் போல் வேறு ஒருவருமே அணிந்திருக்க முடியாது. மூளையை முடக்கும் சின்ன காது ரேடியோவிற்குப் பதிலாக பெரிய இயர்போன் அணிந்திருந்தான். கனமான லென்ஸ் பொருத்திய கண்ணாடி அணிந்திருந்தான். இந்தக் கண்ணாடி அவனை அரைக் குருடாக ஆக்கியது மட்டுமல்லாமல் அவ்வப்போது தலைவலியையும் கொடுத்தது. அவன் உடம்பில் ஆங்காங்கே இரும்புப் பட்டைகள் தொங்கின. பொதுவாக அதிபலசாலிகளுக்குக் கொடுக்கப்படும் ஊனமாக்கும் உடைகளில் ஓர் ஒழுங்கு இருக்கும். ஆனால், இவன் என்னவோ குப்பைத் தொட்டியிலிருந்து எழுந்து வந்தவன் போல் இருந்தான். 300 பவுண்ட் எடையை அவன் சுமந்திருந்தான்.

அவன் அழகைக் குறைத்துக் காட்ட, மூக்கின் மேல் சின்ன சிவப்புப் பந்தும், வெண் பற்களை மறைக்க கருப்புக் குப்பிகளையும் மாட்ட வேண்டும்; புருவத்தை மழிக்க வேண்டும் என்றெல்லாம் சலுகை அதிகாரிகள் கட்டளை இட்டிருந்தார்கள்.

''இந்தப் பையனைப் பார்த்தால், கண்டிப்பாக அவனுடன் எந்த வித உடன்பாட்டிலும் இறங்காதீர்கள். எச்சரிக்கை,'' என்றாள் நடன மாது.

கதவு பெயர்க்கப்படும் ஓசை கேட்டது. அதிர்ச்சி கலந்த ஆரவாரக் கத்தல்கள் டி.வி.யிலிருந்து கேட்டன. காட்டப்பட்ட ஹாரிஸனின் புகைப்படம் நில நடுக்கத்தில் ஆடுவதுபோல் ஆடியது.

ஜார்ஜ் அந்த நிலநடுக்கத்தைப் புரிந்து கொண்டான். எத்தனை முறை அவன் வீடே இப்படி அதிர்ந்திருக்கிறது!

''கடவுளே, அது ஹாரிஸனா?'' என்று அரற்றினான் ஜார்ஜ்.

அவன் மூளையில் கேட்ட வண்டிகள் மோதிக் கொள்ளும் க்ரீச் ஒலியில், அவன் எண்ணம் தகர்ந்தது.

அவனால் கண் விழித்துப் பார்க்க முடிந்தபோது, ஹாரிஸனின் புகைப்படம் மறைந்து, அந்த இடத்தில் நிஜ ஹாரிசன் திரையை நிரப்பிக்கொண்டு நின்றான்.

ஓசையெழுப்பிக் கொண்டு, பூதாகரமாய், கோமாளித்தனமாய் அவன் நின்று கொண்டிருந்தான் ஸ்டூடியோவின் நடுவில். அவன் பெயர்த்த ஸ்டூடியோ கதவின் கைப்பிடி இன்னும் அவன் கைகளில் இருந்தது. நடன மாதுக்கள், இசைக் கலைஞர்கள், அறிவிப்பாளர்கள், டெக்னீஷியன்கள் எல்லோரும் பயத்துடன் அவன் முன் மண்டியிட்டனர், சாவை எதிர்பார்த்து.

''நான்தான் சக்கரவர்த்தி. புரிகிறதா? நானே சக்கரவர்த்தி! எல்லோரும் என் கட்டளைக்கு அடிபணிய வேண்டும் உடனே,'' என்று கத்திய ஹாரிசன் கால்களைத் தட்டினான். ஸ்டூடியோவே அதிர்ந்தது.

''கை, கால்கள் முடக்கப்பட்டு நான் நின்றாலும், என்னைப் போன்ற ஒரு பேரரசன் இதுவரை பிறந்ததில்லை. நான் என்ன நினைக்கிறேனோ அதுவாக மாறும் விதத்தைப் பாருங்கள்.''

ஈரப் பேப்பரைக் கிழிப்பது போல் தன் ஊனமாக்கும் உடைகளைக் கிழித்தான். 5000 பவுண்ட் எடையைத் தாங்கும் என்று உத்திரவாதம் பெற்ற இரும்புப் பட்டைகளையே மிக அலட்சியமாக உரித்தான். அவை கீழே விழுந்தன.

தலைக் கவசமும், இயர்போனும், கண்ணாடியும் அவிழ்ந்த வேகத்தில் சுவரில் பட்டுச் சிதறின. மூக்கு நுனிச் சிவப்புப் பந்தையும் தூக்கிப் போட்டான். எமனும் அதிசயிக்கும் மனிதனாய் நின்றான்.

பயத்தால் கூனிக் குறுகி நிற்கும் ஆட்களைப் பார்த்து, ''இப்

போது நான் என் பட்டத்து அரசியைத் தேர்ந்தெடுக்கப் போகிறேன்,'' என்றான். தொடர்ந்து, ''முதலில் எழத் துணியும் பெண்ணே என்னையும், சிம்மாசனத்தையும் அடையும் உரிமை பெறுகிறாள்,'' என்று அறிவித்தான்.

ஒரு நிமிடத்தில் ஒரு நடன மாது எழுந்து நாணல்போல் ஒடிந்து ஒயிலாய் நடந்து வந்தாள்.

ஹாரிஸன் அவளுடைய மூளையை மந்தமாக்கும் கருவியை நீக்கினான். நளினமாக அவளுடைய உடலைத் தழுவிய ஊனமாக்கும் கருவிகளையும் அகற்றினான். கடைசியில், அவளுடைய முகமூடியைக் கழற்றினான்.

கண்களைக் கூசச் செய்யும் அழகியாய் அவள் நின்றாள்.

''நடனம் என்றால் என்னவென்று மக்களுக்குக் காட்டுவோமா?'' என்றபடி அவள் கைகளைப் பற்றினான். இசைக்காகக் குரல் கொடுத்தான்.

இசைக் கலைஞர்கள் தங்கள் நாற்காலியில் ஒண்டிக் கொண்டார்கள். அவர்களின் கருவிகளையும் நீக்கினான் ஹாரிசன். ''உங்களால் முடிந்தவரை சிறப்பாக வாசியுங்கள். உங்களைப் பிரபுக்களாகவும், ஜமீன்தார்களாகவும் ஆக்குகிறேன்,'' என்றான்.

இசை முழங்கியது. சொல்லும்படியாய் இல்லை. மோசமாய் இருந்தது. இரண்டு இசைக் கலைஞர்களைத் தூக்கிப் பிடித்த ஹாரிஸன் அவர்களை ஆட்டி வைத்தபடி தனக்கு எப்படி இசை வேண்டுமோ அப்படிப் பாடிக் காட்டினான். பிறகு பொத்தென்று அவர்களை இருக்கையில் தள்ளினான்.

மீண்டும் வாசிக்கப்பட்ட இசையில் கொஞ்சம் முன்னேற்றம் தெரிந்தது.

ஹாரிஸனும் அவன் அரசியும், சில வினாடிகள் பாடலுடன் தங்கள் இதயத் துடிப்பைக் கலப்பது போல் மெய்மறந்து கேட்டார்கள்.

பிறகு, அவளுடைய மெல்லிடையில் தன் பெரிய கைகளைக்



''உங்க படத்துக்கு எந்த அடிப்படையில் விருது கிடைத்தது?''

''தாலி செண்டிமெண்ட் இல்லாத ஒரே தமிழ்ப் படம்ங்கிற அடிப்படையில்தான்!''

உ. ராஜாஜி

---

கோர்த்து, ஆடத் தொடங்கினான். சந்தோஷமும் நளினமும் வெடித்துச் சிதற ஆடத் தொடங்கினார்கள்.

சட்ட திட்டங்கள் மட்டுமல்ல, புவி ஈர்ப்பு சக்தியும் அங்கே பொடிப் பொடியாகியது.

அவர்கள் சுற்றினார்கள், சுழன்றார்கள், பின்னினார்கள், பிணைந்தார்கள், குதித்தார்கள்.

சந்திரனில் மான்போல் பாய்ந்து துள்ளினார்கள்.

ஸ்டூடியோவின் மேல் சுவர் 30 அடி உயரம் இருந்தது. ஆனால் அவர்களின் ஒவ்வொரு குதியலும் மேல் சுவருக்கு அருகே அவர்களைக் கொண்டு வந்தது. அவர்கள் அதை முத்தமிட முனைந்தார்கள். முத்தமிட்டார்கள்.

அன்பாலும், மனோசக்தியாலும் புவி ஈர்ப்பு சக்தியை சமனப் படுத்தி காற்றில் மிதந்தார்கள். அப்படியே ஒருவரை ஒருவர் கட்டிப் பிடித்து நீண்ட முத்தமிட்டுக் கொண்டார்கள்.

அப்போதுதான் சலுகை அதி

காரிகளின் தலைவி டயானா உள்ளே வந்தாள். கையில் டபிள் பேரல் 10காஜ் குழல் துப்பாக்கி. இரு முறை சுட்டாள். அரசனும் அரசியும் தரையைத் தொடும் முன்பே இறந்து விட்டனர்.

துப்பாக்கியின் குண்டுகளை நிறைத்துக் கொண்டு, பாட்டுக் கலைஞர்களைக் குறி பார்த்தாள். ஊனமாக்கும் உடையை அவர்கள் மீண்டும் அணிந்துகொள்ள பத்தே விநாடிகள் டயம் தருவதாகச் சொன் னாள்.

ஜார்ஜ், வீட்டு டெலிவிஷன் டியூப் அப்போதுதான் எரிந்து போயிற்று. அதைப் பற்றி கமெண்ட் அடித்த ஹேசல், ஜார்ஜ் பக்கம் திரும்பினாள். ஜார்ஜ் அங்கு இல்லை. பியர் டின் எடுத்து வர சமையல் அறைக்குப் போயிருந்தான்.

ஜார்ஜ், பியர் டின்னுடன் வந்தான். மூளையின் ஓசைக்கு ஒரு நிமிடம் அதிர்ந்து பின் அமைதி யாய் உட்கார்ந்தான்.

ஹேசல் கண்களைத் துடைத் துக் கொள்ளுவதைப் பார்த்து, ''அழுதியா என்ன?'' என்றான்.

''ம்.''

''எதுக்கு?''

''மறந்து போயிட்டேன். டி.வி.யில் ஏதோ சோகமான நிகழ்ச் சியைக் காட்டினாங்க.''

''என்னது?''

''ஏதோ, என் மனசுல குழப் பமா இருக்கு.''

''துக்கமான விஷயத்தை யெல்லாம் மறந்துடு,'' என்றான் ஜார்ஜ்.

''எப்பவும் அப்படித்தானே பண்ணுவேன்,'' என்றாள்.

''அதுதான் நல்லப் பொண் ணுக்கு அடையாளம்,'' என்றான் அவன்.

லேசாகத் துடித்தான் ஜார்ஜ். துப்பாக்கியிலிருந்து வெடித்த ஓசை, அவன் மண்டையுள்.

''ஓசை பயங்கரமா இருந்த துனு நினைக்கிறேன்,'' என்றாள் அவள்.

''ம், அழுத்தமாகவே சொல்லு.''

''ஓ, இந்தத் தடவை ஓசை பயங்கரமானதுதான்,'' என்றாள் ஹேசல்.

**Harrison Bergeren– Kurt Vonnegut**
**(The golden age of Science fiction an anthology என்ற புத்தகத்திலிருந்து)**



''முகத்துல கொஞ்சம் மெதுவா தண்ணி பீச்சி அடிக்கக் கூடாது களா...?''

! ! !

– ஜூனியர் தே